

# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

## ஓஷோ

4

கவிதா வெளியீடு

# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

**பாகம் - 4**

ஓஷோ

தமிழில் :
சி. எஸ். தேவநாதன்

Since 1976

**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

**PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 4 (Tamil)**



Originally published in English under the title:
**Yoga : The Alpha and the Omega, Volume - 4**


For more information : www.osho.com
A Comprehensive multilingual web site featuring Osho's meditations, books and tapes and an online tour of Osho International Meditation Resort.

| | | |
|---|---|---|
| Translated by | : | **C. S. Devanathan** |
| Coordination by | : | **Ma. Dhyan Indu** |
| Publishing Editor | : | **S. Chockalingam** |
| First Edition | : | 2004 |
| Second Edition | : | August, 2012 |
| Third Edition | : | 2019 |
| Pages | : | **304** |
| Price | : | **Rs. 300/-** |
| Printed a | : | Sree Durga Printers, Chennai |

Published by : 
**KAVITHA PUBLICATION**
8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

## ஆசிரியரைப் பற்றி...

பகவான் ரஜ்னீஷ் பேசுகிறார் - தம்முடைய மவுனத்தின் வழியே பேசுகிறார்.

இந்நூல் அவருடைய இருப்புணர்வில் இருந்து எழும் அமைதியான இசையின் அற்புதக் காட்சியாகும். அவருடைய வார்த்தைகளே அதைச் சுட்டிக்காட்ட முடியும். அவரது சொற்பொழிவுகளிலுள்ள நுட்பமான அடுக்குகளை விளக்குவது கடினம்.

நான் முயற்சிக்கிறேன்

அவர் நிகழ்த்துகிறார், நானும் நீங்களும் நிகழ்கிறோம், அறிந்திராத ஒன்றை நோக்கித் துணிவுடன் செயல்படுகிறோம். கவனமாய் கேட்பது நிகழ்கிறது. முதலில் காதுகளாலும், பிறகு வயிறு, அதன் பிறகு முழுமை யான இருப்புணர்வின் மூலமும். அவருடைய வார்த்தைகள் அவர் முன்னிலையில் இருப்பதற்கும், அவருடன் பகிர்ந்து கொள்வதற்கும் ஒரு சாக்கு. எனினும், அந்தக் காட்சி நிலைபேறுடையது.

கனல்போல் ஒளிவிடும் அறிவு, குளுமையான பரிவு இவற்றின் சேர்க்கையாயிருக்கிறார் அவர். எல்லா இருமைகளும் அவருள் இரண்டறக் கலந்து விடுகின்றன, ஒன்று மட்டுமே தங்கியிருக்கிறது. அவர் அறிவார், தாம் அறிந்ததை ஒவ்வொரு கணத்திலும் தமது அசைவுகளில், நடைப்பாங்கில், நறுமணத்தில் வெளிப்படுத்துகிறார். அவருடைய இருப்புணர்வு அவரது வார்த்தைகளுக்கு அதிகாரமளிக்கிறது.

அவர் சிரித்தாலும், கருத்தூன்றியிருந்தாலும், கடுமையாயிருந்தாலும் அவற்றுள் எதனுடனும் சம்பந்தப்படாதவராகவே இருக்கிறார். எப்போதும் அசைந்து கொண்டிருக்கிற நீர் அல்லது திரவத்தின் அமைப்புப் பகுதிகளை, அசைவற்றிருக்கும் ஏதோவொன்றினை, நிலையாய் சுடர்விட்டெரியும் இன்றியமையாத ஒன்றினை ஒருவர் அங்கே உணர முடியும்.

பகவான் ரஜ்னீஷும், அவருடைய படைப்பும் பெருவிருப்பம் கொண்ட எவருக்கும் பயனளிப்பதாயிருக்கும்.

அவர் வேண்டி அழைக்கிறார், அவரால் வேறுவிதமாய் நடந்து கொள்ள முடியாது. இவ்வுரைகளின் மூலம் நீங்கள் அவரை உள்வாங்கிக் கொள்ள விரும்பினால், வரிகளினிடையேயும், வார்த்தைகளினிடை யேயும் அவரை நீங்கள் காண்பீர்கள். நீங்கள் பெருவிருப்பு கொண்டவ ராயின் புனே (இந்தியா)யிலுள்ள ஆசிரமத்தில் அவரைக் காணலாம்.

பகவான் ஸ்ரீ ரஜ்னீஷ் அவர்களிடம் நான் முதல் முறையாய் வந்தபோது என்னைச் சொறசொறப்பான கருங்கல் துண்டுபோல் உணர்ந்திருந்தேன், அவர் மட்டுமே உள்ளில் மறைந்து கிடக்கும் சிற்பத்தைப் பார்க்க முடியும்.

பகவானின் சீடராய் இருப்பது ஒரு ஸென்னின் கோனில் (Kcan) வசிக்கிற மாதிரி. அது, 'நான் யார்?' என்கிற மிகப்பெரிய புதிருக்குள் மனம் நுழைவதைப் போன்றது. மிகக்கடினமான அதே சமயம் முக்கியமான முயற்சி. அடியாழத்தில் இருக்கும் அன்பின் வலி. நான் உள்ளே இடம் பெறுவதற்குள் என்னைக் கொன்றுவிடும் என்பதை அறிவேன். வளர்கிறது பெருவிருப்பம்...

அது ஒரு தற்கொலை முயற்சியாயிருக்கிறது, மரணத்தைக் கொல்லும் தற்கொலை, நான் அருமையாய் வைத்திருக்கும் அணிகலன்களை அழித்துப் போடும் தற்கொலை. அது என்னை உரித்து உண்மை, மென்மை, தூய்மை இவற்றுடன் விட்டுச் செல்லும். அவருடைய சுத்தியல் அன்பு, அவருடைய சிற்றுளி அன்பு.

நான் எந்த வகையிலும் மாறாதிருப்பது போல் தெரிந்தாலும் நிறையவே மாறிப்போனேன். அனைத்துத் துன்பங்களும், தாங்கொணா மன வேதனையும் எனக்காகக் காத்திருக்கும் ஆட்டத்தில் தங்களுக்கும் பங்களிப்பேன் என்று. ஆனால், நான் அதைப் பற்றியெல்லாம் கவலை கொள்ள முடியாது. இறப்பதே என்றாலும் அது எனக்கு மகிழ்ச்சி யளிப்பதாயிருக்கும்.

இந்த பத்து விளக்கங்களில் பதஞ்சலி முனிவர் யோகா பற்றிப் பேசுகிறார். பதஞ்சலி பேசுகிறார் என்று நான் சொன்னேன்.

பகவான் ஒரு வெற்றிடம், நிகழவிரும்புகிற எதற்கும் அவர் இடமளிக்கிறார். அவ்ருடைய போதனைகள் அவரைச் சுற்றியுள்ளவற்றைப் போல் காரணம் காட்டி விளக்க இயலாதவை, புதிரானவை. அவர் சொல்கிறார் 'வாழ்க்கை தன்னைத்தானே தாங்குகிறது. உங்கள் சுமையை ஏன் வாழ்க்கையிடம் விட்டு விடக்கூடாது?' என்று.

அவர் நீரோட்டத்தில் சுமந்து செல்லப்படுகிறவர், அவரே நீரோட்டமாயிருக்கிறார். நாம் செய்ய வேண்டியதெல்லாம் நம்பிக்கையோடு அந்த நீரோட்டத்தில் குதித்து, அது நம்மைக் கொண்டு செல்ல இடமளிப்பதுதான்.

இங்கே நான் செய்யக் கூடியதெல்லாம் பயன்பெற்றதற்கான நன்றியுணர்வை வெளிப்படுத்துவது மட்டுமே. இவையெல்லாம் எப்படி நிகழ்ந்தன!

இனி... பதஞ்சலி தொடர்கிறார்.

மா யோக சுதா

# பொருளடக்கம்

# சூத்திரங்கள்

கிரியா யோகம் நடைமுறைக்கேற்ற ஆயத்தயோகம். அது தன்னொழுக்க முறைகளில் கண்டிப்பு, தன்னையறிதல், இறைவனிடம் சரணாகதி அடைதல் இவற்றை கொண்டது.

கிரியா யோக பயிற்சி துன்பத்தை குறைத்து, சமாதி நிலைக்கு கூட்டி செல்கிறது.

விழிப்புணர்வின்மை, தற்பெருமை கொள்ளல், கவர்ச்சி, வாழ்வில்பற்று, மரணபயம் இவையே துயரங்களுக்கு காரணம்.

இவையனைத்தும் செயலற்று இருந்தாலும் வலுவிழந்து போனாலும், மாறுதட்குட்பட்டாலும், விரிவடைந்தாலும், விழிப்புணர்வுவின்மையின் மூலமே துன்பத்திற்கு காரணமான மற்றவையும் இயக்கம் பெறுகின்றன.

பொதுவாக மனித இனத்தை இரண்டு அடிப்படை வகைகளில் பிரிக்க முடியும். ஒன்று சாடிஸ்ட் *(Sadist)* மற்றொன்று மாஸோகிஸ்ட் *(Masochist)*. சாடிஸ்ட் மற்றவர்களைத் துன்புறுத்தி மகிழ்ச்சி அடைகிறவர். மாசோகிஸ்ட் தன்னைத்தானே துன்புறுத்திக் கொண்டு மகிழ்ச்சி அடைபவர். சாடிஸ்ட் அரசியல் பக்கம் ஈர்க்கப்பட்டவராய் இருப்பார். அங்கே மற்றவர்களைத் துன்புறுத்தக்கூடிய சாத்தியம், வாய்ப்பு இருக்கிறது. அல்லது அவர் விஞ்ஞான ஆராய்ச்சியில் குறிப்பாக மருத்துவ ஆராய்ச்சியில் ஈர்க்கப்படுவார். அங்கே பரிசோதனை என்ற பெயரில் அப்பாவி விலங்குகளையும், நோயாளிகளையும், செத்துப்போன, உயிரோடுள்ள உடல்களையும் துன்புறுத்த முடிகிறதே.

அரசியல் தனக்குக் கொஞ்சம் அதிகப்படியாய் தெரிந்தாலும், தான் ஆராய்ச்சியில் ஈடுபடுமளவு புத்திசாலியில்லை என்று பட்டாலும் அவர் (சாடிஸ்ட்) பள்ளிக்கூட ஆசிரியராகிவிடுவார், சின்னக் குழந்தைகளைத் துன்புறுத்துவார். ஆனால் தெரிந்தோ தெரியாமலோ அவர் எப்போதுமே துன்புறுத்தக் கூடிய சூழ்நிலையை நோக்கியே சென்று கொண்டிருப்பார். நாட்டின் பெயரால், சமூகம், புரட்சி, சத்தியம் இவற்றில் ஒன்றின் பெயரால், சீர்திருத்தம் என்ற பெயரால் யாரையேனும் துன்புறுத்துகிற வாய்ப்பை அவர் தேடிக் கொண்டிருப்பார்.

சாடிஸ்ட்கள் மதத்தின் பக்கம் அவ்வளவாய் ஈர்க்கப்படுகிறதில்லை. மற்றொரு வகையினரான மாஸோகிஸ்டுகள் மதத்தின் பக்கம் ஈர்க்கப் பட்டவர்கள். அவர்களால் தங்களைத் தாங்களே வதைத்துக் கொள்ள முடியும். அவர்கள் பெரிய மகாத்மாக்களாகவும், புனிதர்களாகவும் ஆகிவிடுகிறார்கள். தங்களைத் தாங்களே வதைத்துக் கொள்வதால் அவர்கள் சமுதாயத்தால் மதிக்கப் படுகிறார்கள்.

ஒரு முழுமையான சாடிஸ்ட் அரசியலை நோக்கிச் செல்கிற மாதிரி ஒரு முழுமையான மாஸோச்சிஸ்ட் எப்போதும் மதத்தை நோக்கியே சென்று கொண்டிருப்பார்.

சாடிஸ்டின் மதம் அரசியல், மாஸோகிஸ்ட்டின் அரசியல் மதம். ஆனால் மாஸோகிஸ்ட் உறுதியற்றவராயிருந்தால் ஏதேனும் ஒரு கிளை வழிப்பாதையைக் கண்டறிகிறார். ஒரு கலைஞராகவோ, ஓவியராகவோ, கவிஞராகவோ வந்து விடுகிறார்.

கவிதை, இலக்கியம், ஓவியம் இவற்றில் ஏதேனும் ஒன்றின் பெயரால் தன்னை வதைத்துக் கொள்ள இடமளிக்கிறார்.

புகழ்பெற்ற டச்சு நாட்டு ஓவியர் வின்செண்ட் வான்காக் பற்றி நீங்கள் கட்டாயம் கேள்விப்பட்டிருப்பீர்கள். அவர் மிகச் சரியான மாஸோகிஸ்ட். அவர் இந்தியாவில் பிறந்திருந்தால் மகாத்மாகாந்தியாய் இருந்திருப்பார். அவரிடம் பெரிய அளவில் பணம் இருந்ததில்லை. தொடர்ந்து ஜீவிப்ப தற்குத் தேவையான பணத்தை அவருடைய சகோதரர் கொடுத்து வந்தார். வாரத்தில் ஏழு நாட்களில் மூன்று நாட்கள் மட்டுமே அவர் சாப்பிடுவார். மற்ற நான்கு நாட்களிலும் ஓவியம் வரைவதற்காக உண்ணாமல் இருந்து விடுவார்.

அவருக்கு ஒரு பெண்ணிடம் காதல் இருந்தது. ஆனால் அந்தப் பெண்ணின் தந்தையோ அவளைப் பார்ப்பதற்குக் கூட அவரை அனுமதிக்கவில்லை. எனவே, அவர் தன்னுடைய கையை எரியும் நெருப்பில் வலுக்கட்டாயமாய் திணித்துக் கொண்டு, 'நீர் அவள்ளைப் பார்க்க எனக்கு அனுமதி வழங்கும் வரை என்னுடைய கையைத் தீயில் வைத்துக் கொண்டிருப்பேன்' என்றார். தன்னுடைய கையை அவர் நெருப்பில் பொசுக்கிக் கொண்டார்.

ஒரு விலைமாது அவரிடம் சொன்னாள் 'உமது காதுகள் மிகவும் அழகானவை' என்று. காரணம் அழகென்று பாராட்டும் படியாய் அவருடைய முகத்தில் வேறெதுவும் இருக்கவில்லை. அவலட்சணம் பிடித்த மனிதர்களில் அவரும் ஒருவர், அவருடைய முகத்தின் பகுதிகள் அருவருக்கும்படியாய் இருந்தன. அவரைப்பற்றி ஏதும் சொல்ல முடியாத நிலையில்தான் அவருடைய காதுகள் அழகானவை என்று அந்த விலைமாது சொல்லியிருக்க வேண்டும். அவர் வீட்டுக்குத் திரும்பியதும், தன்னுடைய காதுகளில் ஒன்றை வெட்டி எடுத்துக்கொண்டு, இரத்தம் சொட்டச் சொட்ட அவளிடம் திரும்பிச் சென்றார். ''நீ அதை ரொம்பவும் விரும்பினாயல்லவா, அதை நான் உனக்கு வெகுமதியாய் கொடுக்கிறேன், வைத்துக்கொள்'' என்று அந்தக் காதை அவளிடம் தந்தார்.

பிரான்சின் மிகக் கடுமையான வெப்பமுள்ள ஏர்ல்ஸ் பகுதியில் இருந்து கொண்டு அவர் ஓவியம் வரைந்தார். அது சூரியன் வெப்பத்தை வெகுமதியாய் வழங்கும் கோடைக்காலம் 'வெயில் அதிகமா இருக்கு, நீ வெந்துதான் போவாய்' என்று எல்லாரும் அவரிடம் சொன்னார்கள். ஆனால், சூரியன் உக்கிரமடையும் உச்சி வேளையில்தான் அவர் வயற்காட்டில் நின்று கொண்டு ஓவியம் வரைவார். இருபதே நாட்களில் அவருக்குப் பைத்தியம் பிடித்தமாதிரி ஆகிவிட்டது. இளமையில் முப்பத்து மூன்று முப்பத்துநான்கு வயதிலேயே அவர் தற்கொலை செய்து கொண்டார்.

ஆக, ஓவியம், கலை அழகு இவற்றின் பெயரால் உங்களை நீங்கள் வதைத்துக் கொள்ள முடியும்.

கடவுளின் பெயரால், பிரார்த்தனை என்கிறபெயரால் சாதனை (பயிற்சி)யின் பெயரால் உங்களை நீங்கள் வதைத்துக் கொள்ள முடியும். முட்களின் மீதோ ஆணிப்படுக்கையிலோ படுப்பது, மாதக் கணக்கில் பட்டினி கிடப்பது என்று இவ்வகை இந்தியாவில் ஆதிக்கம் பெற்றிருப்பதை நீங்கள் காணமுடியும். பத்து ஆண்டுகளுக்கும் தூக்கமின்றிக் கிடப்ப வரை நீங்கள் காண்பீர்கள். அவர்கள் நின்ற நிலையிலோ உறக்கத்துடன் போராடிக் கொண்டோ இருப்பார்கள். ஆண்டுக்கணக்காக ஒரே அங்கஸ்திதி (posture) யில் நின்று கொண்டிருப்பவர்களும் உண்டு. அங்க அசைவுகளை மாற்றிக் கொள்ளாமல் அப்படியே இருப்பார்கள், அவர்களுடைய கால்கள் கிட்டத்தட்ட மரித்துப்போன மாதிரி.

ஒற்றைக் கையை ஆகாயத்தை நோக்கி உயர்த்தியபடி இருப்ப வர்களும் உண்டு. இரத்த ஓட்டம் இல்லாது கைமுழுதும் வெறும் எலும்புகளாய் உயிரற்றுப் போயிருக்கும். உடல்நலம் மோசமாகி விட்ட இவர்களுக்கு சிகிச்சை தேவைப்படும். ஆனால், ஆயிரக்கணக்கானவர்கள் இவர்கள் பால் ஈர்க்கப்பட்டு விடுகிறார்கள்.

இட்லர், ஸ்டாலின், மாசேதுங் இப்படியான அரசியல்வாதிகள் எல்லா ருமே சிகிச்சைக்குட்படுத்தப்பட வேண்டியவர்கள் தாம். உங்களுடைய மகாத்மாக்களுக்கும் கூட சிகிச்சை தேவைப்படும். தன்னையோ மற்றவர் களையோ துன்புறுத்துகிற ஒருவர் நலக் குறைவானவர் தாம். யாரையேனும் துன்புறுத்துவதில் விருப்பம் கொண்டவர் முழுக்க முழுக்க நோய்க்குறி கொண்டவரேயாவார்.

நீங்கள் ஆரோக்கியமாயிருக்கும்போது யாரையும் துன்புறுத்த விரும்பமாட்டீர்கள், உங்களையும் துன்புறுத்திக்கொள்ள மாட்டீர்கள். ஆரோக்கியத்தில் மகிழ்ச்சி அடைவீர்கள். ஆரோக்கியமாய் இருக்கும்போது பரமசுகமாய் உணர்வீர்கள். மற்றவர்களையும் மகிழ்ச்சியில் ஆழ்த்தி விடுவீர்கள். உங்களுக்குள்ளிருக்கும் போற்றுதலுக்குரியவை மற்றவர் களிடமும் போய்ச் சேருவதை விரும்புவீர்கள். இப்பிரபஞ்சம் முழுதுக்கும் அது போய்ச் சேர வேண்டும் என்கிற விருப்பம் கொண்டு விடுவீர்கள். உங்களுக்குள் பரமசுகம் கரைபுரண்டோடும். ஆரோக்கியம் என்கிற உயிர்ச்சக்தி கொண்டாடப்பட வேண்டியது. நோயுற்றிருக்கும் நிலையோ மற்றவர்களை அல்லது உங்களை வதைக்கக் கூடியதாகும்.

பதஞ்சலி பற்றிப் பேசுவதற்கு முன் நான் ஏன் இதைச் சொல்கிறேன் என்றால் பதஞ்சலி எப்போதுமே மாஸோகிஸ்டுகளால் விமர்சிக்கப் பட்டவர்.

ஆனால், பதஞ்சலி பற்றி நான் சொல்வது எதுவாயினும் அது மற்றவர்களுடைய வியாக்கியானத்தில் இருந்து வேறுபட்டதாகவே இருக்கும். நான் மாஸோகிஸ்டோ, சாடிஸ்டோ அல்ல.

நான் என்னை கொண்டாடுபவன், நீயும் என் வழியில் பங்கு பெற வேண்டுமென நான் விரும்புகிறேன்.

பதஞ்சலி பற்றிய என்னுடைய வியாக்கியானம் முந்தைய வியாக்கியானங்களிலிருந்து வேறுபட்டது. வேறுபாடான அடிப்படை கொண்டது. பதஞ்சலியே விளக்கவுரை தந்தால் எப்படியிருக்குமோ அப்படியானது என்னுடைய விளக்கவுரை.

அவர் சாடிஸ்டோ மாஸோசிஸ்டோ அல்ல. அவர் அகப்பிணி ஏதுமற்ற முழுமையான ஆள். அவர் உளவியல் சார்ந்த பிரச்சினைகளோ ஆட்டிப்படைக்கும் எண்ணங்களோ *(Obsessions)* இல்லாதவர். அவர் பூரண நலமுடையவர். அவர் சொன்னது எதுவாயினும் அதை மூன்று வழிகளில் விவரிக்க முடியும். ஒரு சாடிஸ்ட் அதைக் கண்டு கொண்டிருப்பது அரிது. காரணம் சாடிஸ்டுகளுக்கு மதத்தில் ஆர்வமில்லை. மாசேதுங்கோ, அடால்ஃப் இட்லரோ அல்லது ஜோசப் ஸ்டாலினோ பதஞ்சலிபால் ஆர்வமுற்றதாய் நீங்கள் கற்பனை செய்து பார்க்கவும் முடியாது. மாஸோகிஸ்டுகள் மதத்தில் ஆர்வம் உள்ளவர்கள். அவர்கள் பதஞ்சலிக்கு வியாக்கியானம் செய்ததுடன் தங்களுடைய பண்பையும் ஏற்றி விட்டிருக்கிறார்கள். அவர்கள் எதைச் சொல்லியிருந்தாலும் அது பதஞ்சலி கூறிய செய்தியை திரித்துச் சொல்வதாகவே இருக்கும். அவர்கள் அதை முழுமையாய் நாசப் படுத்தி விட்டிருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகு, இப்போது அந்த விளக்கவுரைகள் உங்களுக்கும் பதஞ்சலிக்கும் இடையில் பெருஞ்சுவராய் எழும்பி நிற்கிறது. அது வளர்ந்து கொண்டே போகிறது.

பெருமளவு விமர்சனத்துக்குள்ளான விஷயங்களுள் பதஞ்சலி சூத்திரமும் ஒன்று. அந்தச் சூத்திரங்கள் பொருட் செறிவுள்ளவை, தனிச் சிறப்பைத் தன்னுள் கொண்டவை. தங்கள் மீது விமர்சனம் செய்யக் கூடிய ஒரு பதஞ்சலியை ஒருவர் எங்கே கண்டறிவது? எந்த விதத்திலும் பிணியற்ற ஒருவரை எங்கே கண்டறிவது? காரணம் பிணியே ஒருவருடைய பண்பாய் நடத்தையாகி விடக்கூடும். அது குறித்து நீங்கள் ஒன்றும் செய்வதற்கில்லை.

ஒன்றை விளக்கும் போது அந்த விளக்கத்தில் நீங்கள் இருக்கிறீர்கள், அங்கே நீங்கள் இருந்தாக வேண்டும், விளக்கம் தர வேறு வழியில்லை, இதுவரை சொல்லப்படாதவற்றை நான் சொல்லப் போகிறேன், மற்ற வியாக்கியானங்களிலிருந்து நான் வேறுபடுவதை நீங்கள் காண்பீர்கள்.

நான் மாஸோகிஸ்டோ சாடிஸ்டோ அல்ல என்கிற உண்மையை நினைவில் கொள்ளுங்கள். என்னைத் துன்புறுத்திக் கொள்வதற்காக நான்

மதத்தை அடையவில்லை. உண்மையில் நான் ஒரு போதும் மதத்தை வந்தடையவில்லை என்பது தான் விஷயம். என்னை நான் பயன்படுத்திக் கொள்கிறபோது அனுபவிக்கிறபோது அதில் எதிர்பாராத விதமாய் மதம் நேர்ந்து விடுகிறது. மத நம்பிக்கை உள்ளவர்கள் கடைப்பிடிக்கிற எதையும் நான் கடைப்பிடிக்கவில்லை. அந்தவகைத் தேடல் ஒருபோதும் என்னுள் இருந்ததில்லை.

ஓர் ஆழ்ந்த ஏற்புத் தன்மையுடன் நான் வாழ்கிறேன்.

என்னுடைய இருப்பையும், என்னையும் நான் ஏற்கிறேன். அதை மாற்றிக் கொள்கிற மனநிலை எனக்கு ஒரு போதும் இருந்ததில்லை. என்னை எந்த அளவுக்கு ஏற்கிறேனோ அந்த அளவுக்கு என்னுடைய இருப்பையும் (existence) நான் ஏற்கிறேன். ஓர் ஆழ்ந்த அமைதி என்மீது இறங்கி வருகிறது. அந்தப் பரம சுகத்தில் மதம் என்னுள் நேர்ந்து விடுகிறது (இறைவன் மீது நம்பிக்கை கொள்ளல்), ஆக, நான் அந்த வார்த்தை கூறும் வழக்கமான மத நம்பிக்கை கொண்டவனல்லன். நீங்கள் அதற்கு இணை யான ஒன்றைக் கண்டறிய விரும்பினால் மதத்துக்கு வெளியே தேட வேண்டும்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கிரேக்கத்தில் பிறந்த ஒரு மனிதனுடன் ஆழ்ந்த ஒற்றுமை இருப்பதாய் நான் உணர்கிறேன். அவர் பெயர் எபிகுரஸ் (Epicurus). அவர் இறை நம்பிக்கை உடையவர் என்று யாரும் எண்ணவில்லை. இதுவரை பிறந்தவர்களிலேயே மிகப்பெரிய நாத்திகர், *இயற்பொருள் வாதம் செய்பவர் (materialist) என்று தான் அவரைப் பற்றி மக்கள் நினைத்தார்கள். அவர் மதநம்பிக்கை உள்ள மனிதனுக்கு நேர் எதிரிடை என்பது அவர்களுடைய நினைப்பு. ஆனால், என்னுடைய கண்ணோட்டத்தில் அப்படியில்லை. எபிகுரஸ் இயல்பிலேயே இறை நம்பிக்கை உடையவர்தாம். 'இயல்பிலேயே இறை நம்பிக்கை' என்கிற வார்த்தையை நினைவில் கொள்ளுங்கள், மதம் அவருக்கு நேர்ந்தது, சம்பவித்தது. அதனால் தான் மக்கள் அவரைக் கவனிக்காமல் இருந்து விட்டார்கள். காரணம் அவர் எதையும் தேடிச் செல்லவில்லை, கண்டுபிடிக்க முயற்சிக்கவில்லை. 'உண்டு, களித்து (குடித்து) உல்லாச மாயிரு'. இதுதான் இயற்பொருள் வாதிகளின் மனோபாவம்.

எபிகுரஸ் உண்மையிலேயே கட்டுதிட்டங்களுடன் நெறிமுறை தவறாமல் வாழ்ந்தவர். இதுவரை எவரும் வாழ்ந்திராத எளிமை கொண்ட வாழ்க்கை அது. ஒரு மகாவீரரோ புத்தரோ கூட அத்தனை எளிய, கடினமான வாழ்க்கையை வாழ்ந்திருக்க மாட்டார்கள். காரணம் அவர்களுடைய எளிமைத் தன்மை பண்படுத்திக் கொள்ளப்பட்ட ஒன்று. அவர்கள்

*இயற்பொருள் வாதம் - காணும் பொருளே உண்மை என்னும் வாதம்

அதற்காகப் பாடுபட்டார்கள், அது ஒரு முயற்சியாகவே அமைந்தது. அவர்கள் அதைப்பற்றி திட்டமிட்டார்கள். அவசியமில்லாதவற்றைக் கைவிட்டார்கள். எளிமையாய் இருப்பதற்காகத் தங்களை அவர்கள் சட்டதிட்டங்களுக்கு உட்படுத்திக் கொண்டார்கள்.

'எங்கே கட்டுதிட்டங்கள் இருக்கிறதோ அங்கே சிக்கலும் இருக்கும்'

பின்புலத்தில் ஒரு போராட்டம், அந்தப் போராட்டம் எப்போதும் இருந்து வந்தது. மகாவீரர் நிர்வாணமாய் எல்லாவற்றையும் துறந்தவரா யிருந்தார். துறப்பதும் விலகிநிற்பதும் இயல்பானதாகாது.

எபிகுரஸ் ஒரு சிறிய தோட்டத்தில் வசித்து வந்தார். அந்தத் தோட்டம் எபிகுரஸ் தோட்டம் என்றே அறியப்பட்டது. அரிஸ்டாட்டிலைப் போலவோ பிளேட்டோவைப் போலவோ ஒரு கல்விக் கழகத்தை அவர் நடத்திக் கொண்டிருக்கவில்லை, தோட்டம் வைத்திருந்தார் அவ்வளவு தான். அது எளிமையாகவும், அழகாகவும் இருந்தது. ஒரு கல்விக் கழகத்தைவிட தோட்டம் இயல்பானதில்லையா. அந்தத் தோட்டத்தில் சில நண்பர்களுடன் அவர் வசித்து வந்தார். அவர்கள் தோட்டத்தில் வேலை செய்வதைத் தவிரக் குறிப்பாக வேறெதையும் செய்து கொண்டிருக்கவில்லை. வாழ்வதற்குப் போதுமான அளவு அவர்களிடம் இருந்தது.

ஒரு முறை அரசன் அவரைக் காண வந்ததாயும், அவர் சொகுசாக வாழ்பவர் என்று அவன் நினைத்துக் கொண்டதாயும் சொல்லப்பட்டது. காரணம் 'உண்பது குடிப்பது உல்லாசமாயிருப்பது' என்கிற குறிக்கோளைப் பின்பற்றியவர் அவர். ''சொகுசாக சுகபோகத்தில் திளைப்பவர்களை நான் காணப்போகிறேன்'' என்று அந்த அரசன் நினைத்துக் கொண்டான். ஆனால், அங்கே சென்றபோது எளிமையான தோற்றமுடைய சிலர் தோட்டத்தில் வேலை செய்து கொண்டும், மரங்களுக்கு நீர்பாய்ச்சிக் கொண்டும் இருப்பதைக் கண்டான். நாள் முழுதும் அவர்கள் வேலை செய்து கொண்டு இருந்தார்கள். தங்கள் வாழ்க்கைக்குத் தேவையானவற்றை மட்டுமே அவர்கள் உடைமைகளாய் வைத்துக் கொண்டிருந்தனர்.

பொழுது சாயும் வேளையில் அவர்கள் இரவு உணவு உட்கொண்டபோது வெண்ணெய் கூட அவர்களிடம் இல்லை. வெறும் ரொட்டியும் சிறிதளவு பாலுமே உட்கொண்டனர். ஆனால், விருந்துச் சாப்பாடுபோல் அனுபவித்துச் சாப்பிட்டனர்.

சாப்பாட்டுக்குப் பிறகு அவர்கள் ஆடிப்பாடவும் செய்தார்கள். தங்களுடைய பிரபஞ்ச இருப்புக்கு நன்றி சொல்வதுடன், அவர்களுடைய அந்த நாள் நிறைவு பெற்றது. அரசன் அழுதேவிட்டான், காரணம் எபிகுரஸ் பற்றி எப்போதுமே தன் மனதுக்குள் நிந்தித்துக் கொண்டிருந்தவன் அவன்.

'உண்டு குடித்து உல்லாசமாயிரு' என்று நீங்கள் சொல்வதன் பொருள் என்ன?' அரசன் கேட்டான்.

எபிகுரஸ் சொன்னார், ''நீர்தான் பார்த்தீரே. இருபத்துநான்கு மணிநேரமும் நாங்கள் மகிழ்ச்சியாயிருக்கிறோம். நீர் மகிழ்ச்சியாய் இருக்க விரும்பினால் எளிமையாயிருக்க வேண்டும். காரணம், நீங்கள் எத்தனைக்கு சிக்கலாயிருக்கிறீர்களோ (புரிந்து கொள்வதற்குக் கடினமாய்) அத்தனைக்கு மகிழ்ச்சியற்றவராகி விடுகிறீர்கள். உங்கள் வாழ்க்கை நிறைய சிக்கல்களைக் கொண்டதாயின் நிறைய துன்பங்களை அது தோற்றுவிக்கும். நாங்கள் கடவுளை நாடிச் செல்வதால் எளிமையாயிருக்கவில்லை, எளிமை மகிழ்ச்சியளிப்பதால் எளிமையாயிருக்கிறோம்.''

அரசன் சொன்னான், ''நான் சில வெகுமதிகளை உங்களுக்கு அனுப்பி வைக்க விரும்புவேன். உங்களுடைய தோட்டத்துக்கோ, உங்களோடு இருப்பவர்களுக்கோ என்ன வேண்டும் சொல்லுங்கள்'' என்று. எபிகுரஸ் யோசித்துவிட்டுச் சொன்னார். ''எங்களுக்கு வேறெதும் தேவையென்று தோன்றவில்லை. தங்களுடைய உணர்ச்சிகளைப் புண்படுத்துவதாய் எண்ணவேண்டாம். தாங்கள் பெரிய அரசர், தங்களால் எதையும் கொடுக்க முடியும். கொஞ்சம் வெண்ணெயும் உப்பும் கொடுத்து அனுப்புங்கள் போதும்'' என்று. அத்தனை எளிய, ஆடம்பரமில்லாத மனிதர் அவர்!

இத்தகைய எளிமையில் மதம் இயல்பாகவே நேர்ந்துவிடுகிறது.

நீங்கள் கடவுளைப் பற்றி நினைப்பதில்லை, அதற்குத் தேவையும் இல்லை, வாழ்க்கையே கடவுளாகிவிடுகிறது. நீங்கள் ஆகாயத்தை நோக்கி வழிபாடு செய்தால் அது அபத்தம். நாள் முழுதும் காலையிலிருந்து மாலைவரை உங்கள் வாழ்தலே ஒரு வழிபாடுதான். உருகிக் கேட்பது ஒரு மனோபாவம், அதை நீங்கள் வாழ்கிறீர்கள், செய்வதில்லை.

எபிகுரஸ் பதஞ்சலியைப் பற்றி அறிந்திருக்கக்கூடும். என்னால் அவரைப் புரிந்துகொள்ள முடிகிறது. அவர் எதைக் கருத்தில் கொண்டிருந்தாரோ அதை நான் உணர்கிறேன். நீங்கள் குழப்பமுற்று விடக்கூடாதென்பதற்குத்தான் இதையெல்லாம் நான் உங்களுக்குச் சொல்கிறேன். காரணம் முற்றிலும் மாறானதைச் சொல்கிற விளக்கங்களும் இருக்கின்றன.

> 'கிரியா யோகம் நடைமுறைக்கேற்ற, ஆயத்தயோகம் ஆகும். அது தன்னொழுக்க முறைகளில் கண்டிப்பாய் இருத்தல் (austerity), தன்னை யறிதல் மற்றும் இறைவனிடம் சரணாகதி அடைதல் இவற்றைக் கொண்டு உருவாக்கப்பட்டது.

முதல் வார்த்தை 'தன்னொழுக்க முறைகளில் கண்டிப்பு.' மாஸோகிஸ்டுகள் இந்தக் கண்டிப்பான ஒழுக்கமுறையை 'சுய-வதை' (*self-torture*) யாக மாற்றிவிட்டனர். நீங்கள் உடலைத் துன்புறுத்தும் அளவுக்கு ஆன்மா சார்ந்தவராகிவிடலாம் என்று அவர்கள் நினைக்கி றார்கள். இதுதான் மாஸோகிஸ்டின் புரிதல் ஆகும்.

உடலைத் துன்புறுத்துவது ஒரு செயல் முறையாகாது. துன்புறுத்துதல் ஒரு வன்முறைப் பிரயோகம். வன்முறை ஒருபோதும் மதநம்பிக்கையாக முடியாது. யார்ரோ ஒருவருடைய உடம்பைத் துன்புறுத்துவதற்கும் உங்களுடைய உடம்பைத் துன்புறுத்திக் கொள்வதற்கும் என்ன வேறுபாடு? உங்களுடைய உடம்புகூட வேறானதுதான். உங்கள் உடம்பு கொஞ்சம் அண்மையிலும் மற்றொருவருடைய உடம்பு சற்று தொலைவிலும் இருக்கிறது, அவ்வளவுதான். உங்களுடையது அருகில் இருக்கிற காரணத் தால் அது உங்களுடைய வன்முறைக்குப் பலியாகியது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் மக்கள் அதுதான் கடவுளை அடைவதற்கான வழிமுறை என்ற தவறான கருத்தில் தங்கள் உடலை வருத்திக் கொள்கிறார்கள்.

முதலாவது, கடவுள் ஓர் உடம்பை உங்களுக்குக் கொடுத்தது ஏன்? உங்கள் உடம்பை வதைத்துக் கொள்வதற்கான ஆயுதங்களை அவர் உங்களுக்கு வழங்கவில்லை. மாறாக, அதை அனுபவித்து மகிழ வேண்டும் என்று புலன்களையும், புலனுணர்வுகளையும் அவர் கொடுத்தார் என்பதே உண்மை. உங்களை அதி நுட்ப உணர்வுடையவராக அவர் உருவாக்கினார், காரணம் நுட்ப உணர்வின் மூலம் அறிநிலை (*awareness*) வளர்கிறது. உங்கள் உடம்பை நீங்கள் துன்புறுத்தினால் மேலும் மேலும் உணர்வற்ற வராகி விடுவீர்கள். முட்படுக்கையில் படுத்தீர்களானால் கொஞ்சம் கொஞ்சமாய் (காலப்போக்கில்) உணர்வற்றவராகி விடுவீர்கள். உடம்பு தொட்டறியும் உணர்வை இழக்காவிட்டால் நீங்கள் எப்படி தொடர்ந்து முட்களைச் சகித்துக் கொள்ள முடியும்? தன்னுடைய நுட்ப உணர்வை இழக்கும் விதமாய் உடம்பு மரத்துப் போகும்.

நீங்கள் கடுமையான வெயிலில் தொடர்ந்து நின்றால் உணர்வற்றுப் போவதன் மூலம் உடம்பு தன்னைக் காத்துக் கொள்ளும். நீங்கள் இமயமலையில் பனி கொட்டும்போது நிர்வாணமாய் அமர்ந்திருந்தால் கொஞ்சம் கொஞ்சமாய் அந்தக் குளிர்ச்சியில் உங்கள் உடம்பு நுட்ப உணர்வை இழக்கும். அது மரத்துப் போய்விடும்.

மரத்துப் போன உடம்பை வைத்துக்கொண்டு பிரபஞ்ச இருப்பின் நற்பயனை எப்படி அடைவீர்கள்? இடைவிடாமல் ஒவ்வொரு கணத்திலும் உங்கள்மீது வர்ஷிக்கப்படுகிற நன்மைகளை எப்படி உணர்வீர்கள். பிரபஞ்சம் வழங்கும் இலட்சோப லட்ச நலன்களை எப்படிக் கணக்கிடு வீர்கள்? உண்மையில் சமயம் சார்ந்த மனிதனாவதற்கு இன்னும் கூடுதலான

நுட்ப உணர்வு உங்களுக்குத் தேவைப்படும். காரணம், எந்த அளவு நுட்ப உணர்வுடையவராயிருக்கிறீர்களோ அந்த அளவுக்கு எங்கும் நிறைந் திருக்கும் தெய்விகத்தைக் காண்பீர்கள்.

'ஊடுருவும் கண்ணாக வேண்டும் உங்கள் நுட்ப உணர்வு'

நீங்கள் முழுமையான நுட்ப உணர்வைக் கொண்டுவிடுகிறபோது, உங்களைத் தொடுகிற மென்காற்றின் ஸ்பரிசம் ஒரு செய்தியை உங்களுக்கு வழங்கும். உங்களுடைய நுட்ப உணர்வின் காரணமாய் காற்றிலாடும் ஒரு சாதாரண இலையும் கூட அற்புதக் காட்சியாகும்.

'உங்கள் கண்ணில் படுகிற கூழாங்கல்லும் மின்னொளிவீசும் கோஹினூர் வைரமாகும்'

அது உங்களுடைய நுட்ப உணர்வைப் பொறுத்தது.

உங்கள் நுட்ப உணர்வு அதிகரித்தால் வாழ்க்கையும் மிகுதியாகும், நுட்ப உணர்வு குறைந்தால் வாழ்க்கை முக்கியத்துவமற்றதாகிவிடும். உங்கள் உடம்பு உணர்வற்று மரம் போலாகிவிட்டால் வாழ்க்கை இல்லையென்றாகிவிடும். புதைகுழிக்கு முன்னதாகவே போனவர்தாம். மாஸோகிஸ்டுகள் அதைத்தான் செய்தார்கள். சாதனை, உடலையும் நுட்ப உணர்வையும் மரத்துப் போகச் செய்யும் முயற்சியாகிவிடுகிறது. நீங்கள் செல்வத்தை குவிக்க வேண்டுமென்றால் உங்களுடைய நுட்ப உணர்வை அதைப்பற்றிக் கொஞ்சமும் கவலைப்படாமல் ஒரு கொலைகாரனைப் போல் ஆகவேண்டியிருக்கும். நீங்கள் சேர்த்துக் கொண்டே போவீர்கள், மற்றவர்கள் செத்துக் கொண்டிருப்பார்கள். நீங்கள் மேலும் மேலும் பணக்காரராக அவர்கள் தங்கள் வாழ்க்கையை இழந்து விட்டிருப்பார்கள். செல்வந்தன் உணர்வற்றவனாகிவிட வேண்டும், இல்லையேல், செல்வந்த னாயிருக்க முடியாது. உணர்விருந்தால் அவனால் சுரண்ட முடியாது - அது இயலாததாகி விடும்.

மிகப்பெரிய பணக்காரனொருவனைப் பற்றி நான் கேள்விப்பட் டிருக்கிறேன். முல்லா நஸ்ருத்தீன் அவனைக் காணச் சென்றார். தாம் நடத்திக் கொண்டிருக்கும் திக்கற்றோர் இல்லத்துக்கு கொஞ்சம் நன்கொடை வேண்டியே அவர் சென்றது.

பணக்காரன் சொன்னான், ''ரொம்ப சரி நஸ்ருத்தீன், நான் ஒரு நிபந்தனை வைத்திருக்கிறேன் அதைப்பூர்த்தி செய்ய வேண்டும். என் கண்களில் ஒன்று போலியானது மற்றொன்று அசலானது. எந்தக் கண் போலி எந்தக் கண் அசல் என்ற நீர் சொல்லிவிட்டால் நான் உமக்கு நன்கொடை வழங்குகிறேன்'' என்று.

நஸ்ருத்தீன் அவனுடைய கண்களைக் கூர்ந்து பார்த்துவிட்டுச் சொன்னார், ''இடது கண் அசல், வலது கண் போலி'' என்று. பணக்காரன் வியப்புடன் கேட்டான் 'உம்மால் எப்படிச் சொல்ல முடிந்தது' என்று. அவர் சொன்னார், ''வலது கண்ணில் கொஞ்சம் போல் பரிவும், பளபளப்பும் தெரிகிறது! அதனால் தான் சொன்னேன் அது போலி என்று. நுட்ப உணர்வு இருந்தால் ஒருவன் பணக்காரனாக முடியாது.''

உங்கள் உடம்பைப் கொன்று போட இரண்டு வழிகள் இருக்கின்றன. ஒன்று: மாஸோகிஸ்ட் உடம்பைத் துன்புறுத்திக் கொள்வது. மற்றொன்று: பணத்தையும் தேவையற்ற பொருள்களையும் சேர்த்துக் கொண்டே போவது. கொஞ்சம் கொஞ்சமாய் அவன் சேர்க்கிற குப்பைகளே தடையாகி அவனை இப்படியப்படி நகரவொட்டாமல் செய்துவிடும். அவனால் பார்க்க முடியாது, கேட்கவோ சுவைக்கவோ முடியாது, ஏன் முகரவும் முடியாது.

'எளிய வாழ்க்கை என்றாலே சிக்கலற்ற வாழ்க்கைதான்'

அது ஒன்றும் வறுமையை வளர்ப்பதாகாது.

எளிமையான வாழ்க்கை என்பது ஆழ்ந்த புரிதலுடன் கூடிய வாழ்க்கையாகும். அது ஒன்றும் திருத்தம் செய்கிறதல்ல. அது ஏழ்மை அடைவதற்கான பயிற்சியுமாகாது. நீங்கள் ஏழையாயிருப்பதற்குப் பயிற்சி செய்ய முடியும். ஆனால் அந்தப் பயிற்சியின் மூலம் உங்கள் புலன்கள் கடினப்பட்டு விடும். நீங்கள் எதைப் பயிற்சி செய்தாலும அது உங்களைக் கடினப்படுத்தி விடும், மென்மைத் தன்மையும், இளக்கத்தன்மையும் தொலைந்து போகும். அப்போது ஒரு குழந்தையைப் போல் எளிதில் வளையத்தக்கவராயிருக்க மாட்டீர்கள். ஒரு முதியவரைப்போல் விறைப் புற்று விடுவீர்கள். லாட்ஸு கூறுவார்: ''விறைப்புத் தன்மை மரணம், இளக்கத் தன்மைதான் வாழ்க்கை'' என்று. எளிமையான வாழ்க்கை ஒன்றும் ஏழ்மையான வாழ்க்கையாய் செய்துகொள்ள வேண்டியது அல்ல. வறுமையை உங்கள் குறிக்கோளாக்கிக் கொண்டுவிடாதீர்கள்.

உங்கள் உடலும் மனமும் பளுவற்றதாய், எளிமையாய் இருந்து விட்டால் பிரபஞ்ச இருப்பில் நீங்கள் ஊடுருவிச் செல்வதும் எளிதா யிருக்கும். பளுவை இறக்கி வைத்துவிட்டால் மெய்ப்பொருளுடன் நீங்கள் நேரடித் தொடர்பு கொண்டவராவீர்கள். பளுவை இறக்கிவைக்காவிட்டால் உங்களால் வரமுடியாது. ஒரு பணக்காரன் எப்போதும் தன்னுடைய வங்கிக் கணக்கை இப்படித்தான் வைத்துக் கொண்டிருப்பது.

இங்கிலாந்து அரசி எலிசபெத்தை உங்களுக்குத் தெரியுந்தானே? கையுறை இல்லாமல் அவர் யாரோடும் கைகுலுக்குவதில்லை, யாரையும்

தொடமாட்டார். மனிதத் தொடுகை (touch) கூட சில நேரங்களில் அசுத்தமாகிவிடுகிறது, அருவருப்பாய் தெரிகிறது. உறையிடப்பட்ட அரசி, அரசன்!

மத்தியகால ஐரோப்பாவில் அரசர்களுக்கும், அரசியர்க்கும் இரண்டு கால்கள் இல்லை என்றே கருதப்பட்டது. காரணம் அவர்களை யாரும் மறைக்கப்படாமல் பார்த்ததில்லை. அவர்களுக்கு ஒற்றைக்கால் மட்டும் இருக்கும் என்று கருத்து நிலவியது. அவர்கள் தொலைவிலேயே வாழ்ந்து கொண்டிருந்ததால் மனிதப் பிறவிகளாயிருக்க முடியாது என்றும் கருதப்பட்டது.

அகந்தை எப்போதும் தொலைவிலேயே இருக்க முயல்கிறது. அந்தத் தொலைவு உங்களைத் தொடு உணர்ச்சியற்றவராக்கி விடுகிறது. சாலையில் விளையாடும் ஒரு குழந்தையிடம் நீங்கள் நெருங்கவோ, தொடவோ முடியாது. நீங்கள் மிகவும் நெருங்கிச் சென்று ஒரு மரத்தைத் தழுவ முடியாது. உங்களால் வாழ்க்கைக்கு மிக அருகில் செல்ல முடியாது. வேண்டுமானால் நீங்கள் வாழ்க்கையை விட மட்டுமீறியவராய் சொல்லிக் கொள்ளலாம், அதி முக்கியமானவர் என்று பாசாங்கு செய்யலாம். தொலைவு தோற்றுவிக்கப்பட வேண்டும், அதன் பிறகுதான் வாழ்க்கையை விட நான் பெரியவன்' என்ற பாவனையை நீங்கள் மேற்கொள்ள முடியும்.

பதஞ்சலி தன்னொழுக்க முறையில் கண்டிப்பாய் இருப்பது (austerity) பற்றிப் பேசும்போது 'எளிமையாய் இருங்கள், அதை நய மேம்பாடு (cultivate) செய்ய வேண்டாம்' என்கிறார் (நய மேம்பாடு - பண்படுத்துதல்)

நான் ஒருவரை அறிவேன். அவர் வசிக்கும் கிராமத்தின் வழியாய் நான் போக நேர்ந்தது. அப்போது என்னுடைய காரோட்டி சொன்னான், 'உங்கள் நண்பர் இங்கே, கிராமத்துக்கு வெளியில் வசிக்கிறார்' என்று. 'அப்படியா, நல்லது. நான் அவரைப் போய்ப் பார்க்கிறேன். இப்போது அவர் எப்படி இருக்கிறார் என்று தெரிந்துகொள்ள வேண்டும்' என்றேன். அவர் ஒரு சமணர்த் துறவி.

நான் அவருடைய வீட்டை அடைந்ததும் அவர் உள்ளே ஆடையில்லாமல் நடப்பதை சன்னல் வழியே பார்த்தேன்.

சமணத்துறவிகள் ஐந்து நிலைகள் வைத்திருக்கிறார்கள். கொஞ்சம் கொஞ்சமாய் எளிமையை வளர்த்துக் கொள்கிறார்கள். ஐந்தாவது நிலையில், கடைசியில் அவர்கள் நிர்வாணமாகி விடுகிறார்கள். முதலில் மூன்று சமாசாரங்களை ஆடையாய் அணிகிறார்கள். பிறகு இரண்டு, பிறகு ஒன்று என்றாகி கடைசியில் அதுவும் கைவிடப்படும். அதுதான் எளிமை யின் உயர்ந்த கொள்கை, முடிவான குறிக்கோள். தூக்கிச் செல்லவோ, தாங்கி நிற்கவோ எதுவுமில்லை.

'சுமையில்லை, உடையில்லை, பொருளில்லை சுமந்து செல்ல எதுவுமில்லை'

ஆனால், எனக்குத் தெரிந்த வரை இவர் இரண்டாவது நிலையில் இருந்தார். அப்படியானால் இவர் எதற்கு நிர்வாணப்படுத்திக் கொண்டிருப்பது?

நான் வாசற்கதவைத் தட்டினேன். அவர் கதவைத் திறந்தார். ஆனால் இப்போது ஒரு லுங்கியைச் சுற்றிக் கொண்டிருந்தார். எனவே நான் கேட்டேன் 'இப்போது உங்களைச் சன்னல் வழியாய் பார்த்தேன் ஆடையில்லாமல் இருந்தீர்களே' என்று. அவர் சொன்னார் 'ஆமாம், நான் அதற்குப் பயிற்சி செய்து கொண்டிருக்கிறேன், கடைசி நிலைக்கான பயிற்சி. முதலில் வீட்டுக்குள் அவ்வாறு இருந்து பழக்கப்படுத்திக் கொள்கிறேன், பிறகு நண்பர்களுடன், பிறகு கிராமத்துக்குச் செல்வேன். கொஞ்சம் கொஞ்சமாய் இந்த உலகமெங்கும். நான் பயிற்சிசெய்ய வேண்டும். இவ்வுலகில் ஆடையில்லாமல் இருப்பதற்குத் துணிச்சல் வேண்டும், கூச்சத்தைவிட வேண்டும் எப்படியும் அதற்கெல்லாம் ஐந்து வருடம் ஆகவிடும்' என்று

நான் அவரிடம் சொன்னேன் 'நீங்கள் ஒரு சர்க்கஸில் சேர்ந்துவிடுவது நல்லது. நிர்வாணமாயிருக்கலாம் ஆனால் நிர்வானத்தை பயிற்சி செய்வது எளிதல்ல. திட்டமிட்டு செயல்படுகிறீர்கள். நீங்கள் தந்திரக்காரர், புத்தி சாதுர்யத்துடன் படிப்படியாய் செல்கிறீர்கள். உண்மையில் நீங்கள் ஒருபோதும் நிர்வாணமாக முடியாது. பயிற்சி செய்கிற நிழகிக் கொள்கிற நிர்வாணம் திரும்பவும் உடுத்திக்கொண்ட மாதிரிதான்.

''நீங்கள் ஒரு குழந்தையைப் போல் உணரமுடிந்தால் வெகு எளிதாய் உடைகளை வீசி எறிந்துவிட்டு இவ்வுலகில் நடமாடிக் கொண்டிருப்பீர்கள். மக்கள் நகைப்பார்களே என்ற அச்சமா? அவர்கள் சிரித்தால் சிரித்து விட்டுப் போகட்டும், நீங்கள் அவர்களோடு சேர்ந்து சிரித்துவிட்டுப் போங்கள். அவர்கள் உங்களைக் கேலி செய்வார்கள். கேலிக்கிடமாகிற போதுதான் அகந்தை அழிகிறது.

அது நல்லதுதான், அவர்கள் உங்களுக்கு ஒத்தாசை செய்கிறார்கள். ஆனால் இந்த ஐந்து வருடப் பயிற்சியின் மூலம் எது முழுமையான பொருளோ அதை நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். நிர்வாணம் என்பது ஒரு குழந்தையின் களங்கமற்ற தன்மையைக் கொண்டிருக்க வேண்டும். மறைவின்றி இருப்பதற்குப் பயிற்சி தேவையில்லை. புரிதல் (under standing) இருந்தால் போதும். பயிற்சியின் வழியே புரிதலுக்கு மாற்று ஒன்றைத் தான் நீங்கள் கண்டறிகிறீர்கள். களங்கமின்மை என்பது மனம்

சார்ந்ததல்ல, அது உங்களுடைய பகுத்தறிவிலோ, மதிப்பீட்டிலோ அடங்குவதுமல்ல, களங்கமற்ற தன்மை இதயத்தால் உணரப்பட வேண்டியது.

எளிமையை நீங்கள் பயிற்சியின் மூலம் அடையமுடியாது. பாருங்கள், வாழ்க்கை எத்தனைக்கு சிக்கலாகி விடுகிறதோ அத்தனைக்கு உங்களுடைய நுட்ப உணர்வு குறைந்துவிடும். உங்களுடைய நுட்ப உணர்வு குறைந்துவிட்டால் நேர்த்தியை இழந்து, கடவுட் தன்மையில் இருந்து வெகு தொலைவு சென்று விடுவீர்கள். எந்த அளவுக்கு உங்களுடைய நுட்ப உணர்வு அதிகரிக்கிறதோ அந்த அளவுக்கு நெருங்கிச் செல்வீர்கள். உங்கள் வாழ்நிலையின் மூலாதாரத்தை நீங்கள் உணரக்கூடிய ஒருநாள் வரும். அப்போது நீங்கள் அங்கே இருக்கமாட்டீர்கள். நீங்கள் அறியும் திறனாய் (sensibility) நுட்ப உணர்வாய் (sensitivity) ஆகிவிடுவீர்கள். சரியாகச் சொன்னால் 'தெரிநிலை'யாயிருப்பீர்கள்.

அப்போது - எல்லாமே அழகாகிவிட்டிருக்கும், இயக்கம் பெற்றிருக்கும். உயிரற்றதென்றோ செயலற்றதென்றோ எதுவும் இருக்காது. ஒவ்வொன்றிலும் பிரக்ஞைதான். உண்மையில் உயிருடையது என்றோ உயிரற்றது என்றோ எதுவும் இல்லை. ஒவ்வொன்றும் பிரக்ஞையாயிருக்கிறது. பிரக்ஞையற்றது (unconscious) என்று எதுவுமில்லை. உங்களுடைய நுட்ப உணர்வில் இந்த உலகம் மாறுகிறது. முடிவாய் நுட்ப உணர்வு தன்னுடைய முழுமையை, உச்ச கட்டத்தை அடைகிறபோது உலகம் மறைந்துவிடுகிறது. கடவுள் மட்டும் இருப்பார், ஆனால் கடவுள் காணப்படுவதில்லை, நுட்ப உணர்வே காணப்படும். எதுவும் மிச்சமில்லை எதையும் வைத்துக் கொண்டிருக்கவில்லை என்று உணர்கிறபோது அங்கே கடவுள் இருப்பார். கடவுள் எப்போதும் இருக்கிறார், நீங்கள் தாம் நுட்ப உணர்வு கொண்டிருக்கவில்லை.

என்னைப் பொறுத்தவரை 'தன்னொழுக்க முறைகளில் கண்டிப்பாயிருப்பது (austerity) எளிமையான வாழ்க்கையாய் தெரிகிறது. அந்த வாழ்க்கை புரிதலுடன் கூடியதாயிருக்கும். நீங்கள் குடிசையில் வசிக்கத் தேவையில்லை, ஆடையற்றவராயிருக்க அவசியமில்லை.

'நீங்கள் இந்த வாழ்க்கையை எளிமையோடு வாழமுடியும், புரிதலோடும்'

வறுமை உதவாது ஆனால் புரிதல் உதவும். உங்கள் மீது வறுமையை நீங்கள் திணிக்க முடியும், உங்களை அழுக்காக்கிக் கொள்ளமுடியும். ஆனால், அது பயன்படாது.

மேற்கத்திய ஹிப்பிகளும், இதர வகையினரும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். இந்தியா நீண்ட காலமாய் செய்து கொண்டிருக்கும் அதே தவற்றைத்தான் அவர்கள் மீண்டும் செய்து கொண்டிருப்பது. இந்தியா

தனது கடந்த காலத்தில் அத்தனை வகை 'ஹப்பி'களையும் பார்த்தாகி விட்டது. அவர்கள் தங்களால் முடிந்த அளவு தூய்மையற்றவர்களாய் வாழ்ந்து விட்டிருக்கிறார்கள். எளிமை என்கிற பெயரால் துறவு என்கிற பெயரால் அவர்கள் குளிக்காமல் இருந்து விடுவார்கள். 'ஏன் தொல்லை? உடம்பை எதற்காக அலங்கரித்துக் கொள்வது?' என்ற எண்ணம் அவர்களுக்கு.

சமணத்துறவிகள் குளிப்பதில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா? உங்களால் அவர்களுக்குப் பக்கத்தில் உட்கார முடியாது. அப்படியொரு முடைநாற்றம் வீசும். அவர்கள் பல் தேய்ப்பதில்லை. அவர்களிடம் நீங்கள் பேச முடியாது. ஒரு கெட்ட வீச்சமடிக்கும், அவர்களுடைய வாயிலிருந்து துர்நாற்றம் வந்து கொண்டிருக்கும். இதைத்தான் அவர்கள் எளிய வாழ்க்கையென்று எண்ணிக் கொள்கிறார்கள். குளிப்பதும் சுத்தம் செய்து கொள்வதும் கூட *பொருள் முதல்வாதக் கொள்கையுள்ளவர்கள் (materialist) செய்கிற காரியம் என்று அவர்கள் சொல்கிறார்கள். இத்தகைய மனோபாவம் முட்டாள்தனத்தின் ஒரு முனையில் இருந்து மற்றொரு முனைக்குச் செல்வதன்றி வேறேயென்ன?

இருபத்துநான்கு மணிநேரத்தையும் தங்கள் உடம்புக்கே ஒதுக்கு கிறவர்களும் இருக்கிறார்கள். கண்ணாடி முன் நின்று மணிக்கணக்கில் வீணடிக்கிற பெண்களை நீங்கள் பார்த்திருப்பீர்கள். இதுவும் ஒரு முட்டாள் தனந்தான். உடம்பின் ஒரு பகுதிக்கே அத்தனை கவனம் செலுத்த வேண்டுமா, அத்தனை நேரம் செலவழிக்க வேண்டுமா? தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டியது தான். ஆனால் அதுவே தொடர்கதையாய் நாள் முழுக்கத் தொடர்ந்து விடக்கூடாது. அது கருத்தாவேசமாகி (obsession) விடும். உடலைச் சுத்தமாக வைத்துக்கொள்வது நல்லதுதான். ஆனால் சுத்தம் கருத்தாவேசமானால் சித்தப் பிரமையாகிவிடும்தானே.

தொடர்ந்து தங்கள் உடம்பை அலங்கரித்தபடி இருப்பவர்கள் உண்டு. உலகின் சரிபாதித் தொழிற்சாலைகள் உடல் அலங்காரப் பொருள்கள். பவுடர், சோப், நறுமணப் பொருள் தயாரிப்பில் ஈடுபட்டுள்ளன.

சுத்தமாயிருப்பது நல்ல விஷயந்தான். ஆனால் அதுவே கருத்தாவேசமாகிவிடக் கூடாது. மேற்கிலும் இப்போது மறுமுனையிலும் மக்கள் மனதை அது ஆட்டுவித்துக் கொண்டிருக்கிறது. ஹிப்பிகள் உடல், உடை, சுத்தம் பற்றியெல்லாம் கவலைப்படுவதில்லை. அவர்கள் தூய்மை யற்றிருக்கிறார்கள், தூய்மையற்றிருப்பதும் ஒரு மதமாகிறது. அழுக்கா யிருப்பதன் மூலமும் ஏதோ ஒன்றை அடைய முடிகிறது! வாழ்வின்

* காணும் பொருளே உண்மை என்று வாதிப்பவர்

நேர்த்திகள் பற்றிய உணர்வு அவர்களுக்குக் கொஞ்சமும் இல்லையென்றே சொல்ல வேண்டும்.

நீங்கள் மிகுதியும் உணர்வற்றவராகிவிட்டால் போதைப் பொருள்கள் முக்கியமாகிவிடும். உணர்வைப் பெற இரசாயன மருந்துகள் வேண்டியிருக்கும். எளிமையானவரோ அத்தகைய மருந்துகள் எதுவும் இல்லாமலே நுட்ப உணர்வுடையவராயிருப்பார்.

மற்றவர்கள் போதை மருந்தில் அடையும் அனுபவத்தை அவர் தம்முடைய நுட்ப உணர்வில் அடைந்து விடுகிறார்.

நீங்கள் போதை மருந்து உபயோகித்தால் சாதாரண மரமும் விசுவரூபம் பெற்றுவிடும். ஆயிரக்கணக்கான இலைகள் உள்ள மரத்தில் ஒவ்வோர் இலையும் ஓர் ஒப்பற்ற உலகமாகிவிடும். ஒவ்வொரு பூவும் ஒளியுமிழும் பட்டகமாகி (prism) விடும்.

அந்த மரத்தை நீங்கள் பலமுறை கடந்து சென்றிருப்பீர்கள். ஒருமுறையும் திரும்பிப் பாராமல், திடுதிப்பென்று அது ஒரு கனவாய், பெருமகிழ்ச்சியாய், வண்ணங்கள் காட்டும் வானவில்லாய் மாறி விட்டிருக்கும். இது போதைமருந்தில்லாமல் நுட்ப உணர்வுடைய ஒருவனுக்குக் கிடைக்கிற காட்சிதான். போதை மருந்தை உபயோகிக்கிறீர்களென்றால் அந்த அளவுக்கு நீங்கள் கடினப்பட்டு விட்டீர்கள், மந்தமடைந்தீர்கள், மரத்துப் போனீர்கள் என்றாகிறது. உங்கள் உடம்பின் மீது ஓர் இரசாயனத் தாக்குதல் தேவைப்பட்டிருக்கிறது. அப்போது சில கணங்களுக்கு மட்டும் சன்னல் திறக்க, வாழ்வின் கவிதையை நீங்கள் பார்க்கிறது. மீண்டும் சன்னல் மூடிக் கொள்ளும் அதிக அளவில் போதை மருந்து தேவைப்படும். போதை மருந்துகள் பலனளிக்காமல் போகிற கணமும் வரவே செய்கிறது.

நீங்கள் எந்த அளவு நுட்ப உணர்வுடையவராயிருக்க முடிகிறதோ அந்த அளவு எளிமை பற்றிய புரிதல் உள்ளவராயிருப்பீர்கள். நீங்கள் எளிமையாயிருக்கிறபோது எல்லாமே நேர்த்தியாய் அமைந்துவிடும். எப்போது நீங்கள் சிக்கல் பிடித்தவராகிறீர்களோ அப்போதே பிரச்சினைக் குரியவருமாகி விடுகிறீர்கள். நிறையவே குழப்பங்களைத் தோற்றுவித்து ஒரு குழப்பநிலைக்குக் காரணமாவீர்கள்.

பைத்தியக்கார ஆசைகளில்லாமல், அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்ட ஓர் எளிய வாழ்க்கை வாழுங்கள். உங்களுக்கு உணவு தேவை, உடை தேவை, உறைவிடம் தேவை. அத்தோடு முடிந்தது. உங்களை நேசிக்கவும், உங்களால் நேசிக்கப்படவும் யாரேனும் தேவைப் படுவார். நேசம், உணவு, வசிப்பிடம் - கடினமில்லை, ஆனால் நீங்களோ

இலட்சோபலட்சம் ஆசைகளைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்கு ரோல்ஸ்ராய்ஸ் கார் தேவைப்பட்டால் அப்போது துன்பங்கள் குதித் தெழும். உங்களுக்கு அரண்மனை போன்ற மாளிகை தேவைப் படுமானால், சராசரிப் பெண்ணிடம் நீங்கள் திருப்தியடையவில்லை யென்றால், ஒரு மிஸ். உலக அழகி தேவைப்படும் - எல்லா உலக அழகிகளும் உயிரோடில்லை என்று வைத்துக்கொள்வோம் - உங்கள் தேவை சாத்தியமற்ற ஒன்றாகிவிடும்.

'நான் மாளிகை வாசியாகிறபோது அமைதியாய் இருப்பேன்' என்று வாழ்வதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே போவீர்கள். ஆனால், அதேசமயம், வாழ்க்கை உங்கள் பிடியிலிருந்து நழுவிவிட்டிருக்கும்.

'நீங்கள் மாளிகையின் பின்னால் ஓடிக்கொண்டே, அமைதியாய் அமர்வது எப்படி என்பதை மறந்து போவீர்கள்'

பேரார்வம் உடைய எல்லாருக்கும் இப்படி ஆகிறதுதான் - அவர்கள் ஓடிக்கொண்டேயிருக்கிறார்கள்.

ஓடுவது அவர்களுடைய வாழ்க்கை முறையாகிவிடுகிறது. ஒரு தருணத்தில் வெற்றிக்ரமாய் அதை அடைந்தபின்னும், ஓடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களால் நிறுத்தமுடிவதில்லை. நாள் முழுவதும் சிந்தித்துக் கொண்டே இருப்பவர்களுக்கு அவர் நினைத்தாலும் சிந்தனையை நிறுத்தமுடியாமல் போகும்.

அன்று ஏதோ செய்யவேண்டும் என்ற தீர்மானத்துடன் முல்லா நஸ்ருத்தீன் வீட்டுக்குச் சென்றார். அதை மறந்து விடக்கூடாது என்பதற்காய் ஞாபகமாய் தன்னுடைய ஆடையில் ஒரு முடிச்சும் போட்டுக் கொண்டார். வீட்டுக்குள் போனதும் அது மறந்துபோய் மிகவும் கவலை கொண்டவ ரானார். 'முடிச்சு இருக்கு ஆனா, எதுக்காகப் போட்ட முடிச்சு?' மனிதர் மண்டையைப் பிய்த்துக் கொண்டார்.

'இப்போது படுக்கச் செல்லுங்கள், நாளை பார்ப்போம்' என்று சொல்லிவிட்டார். அவருடைய மனைவி. 'இல்லை, அது ரொம்பவும் முக்கியம். நான் அதை இன்றிரவே செய்துவிடத் தீர்மானித்திருந்தேன். எந்தக் காரணத்துக்காகவும் நான் ஒதுக்கிவிட முடியாது' என்றார் அவர். 'நீ போய்த் தூங்கு' என்று மனைவியை அனுப்பிவிட்டார். நள்ளிரவில் கடிகாரம் இரண்டு மணி அடித்தபோது அவருக்கு ஞாபகம் வந்துவிட்டது. சீக்கிரமே படுக்கச் சென்றுவிட வேண்டும் என்பதுதான் அவர் தீர்மானித்திருந்தது. அந்த முடிச்சும் அதற்காகப் போட்ட முடிச்சுதான்.

பேரார்வம் உடைய எல்லாருக்கும் இது நடக்கிறது தான். அவர்கள் மிகவே விரும்பி நிற்பார்கள், ஆயினும் தங்கள் குறிக்கோளை அடைகிற போது, எதை அடைவதற்காக அங்கே சென்றோம் என்பதே அவர்களுக்கு மறந்துவிடும். அவர்கள் அடைய விரும்பியது அநேகம். வாழ்க்கையை ஆரவாரமின்றி, அவசரமில்லாமல், அனுபவித்து மகிழ்வோம் என்று அவர்கள் நினைட்டிருந்தாலும் கூட, தற்போதைய வாழ்வின் வடிவமைப்பும் ஒட்டுமொத்த நிலைமையும் ஓய்வாயிருக்க இடமளிக்காது. அமைதியாய் மகிழ்ச்சியை அடைகாத்துக் கொண்டிருக்கவிடாது.

நிறைவான வாழ்க்கையைப் பெறும் உயர்ந்த நோக்கத்துடன் ஓடிக் கொண்டிருக்கிற போது நீங்கள் அத்தனை சீக்கிரம் நின்றுவிட இயலாது. ஓடுதல் உங்களுடைய இருப்புணர்வு (being) ஆயிற்று. நீங்கள் நிற்க விரும்பினால் அதற்கு இதுவே தருணம். இதுவே அந்தக் கணம், அது இன்னொரு நாளில் இல்லை.

தேவைகள் எளியவை. ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையை எல்லோராலும் வாழ முடியும். உணவைச் சுவைத்து மகிழ அது அதிக மதிப்பும் நேர்த்தியும் உடையதாயிருக்க வேண்டுமென்பதில்லை. உங்கள் நாக்கு சுவையறியக் கூடியதாயிருந்தால் போதும். நேர்த்தியான உணவை நீங்கள் தேடிக்கொள்ள முடிகிறபோது அதைச் சுவைத்து மகிழும் திறனை இழந்து விடுவீர்கள். அந்தக் கணத்திலேயே அனுபவித்துவிடுங்கள். நீங்கள் சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டிருந்தபோது (alive) அனுபவித்து விடுங்கள். அதை வீணடிக்காதீர்கள், தள்ளிப் போடாதீர்கள்.

எதிலும் மிகையின்றி எளிமையாய் வாழ்கிறவனுக்கு, 'இந்த நாள் தன்னளவில் போதுமானது, நாளைய பொழுது தன்னைத்தானே பார்த்துக்கொள்ளும்'. இயேசு கூறுவார்: மீண்டும் மீண்டும் - லில்லி (அல்லி)ப் பூக்களைப் பாருங்கள், அவை எத்தனை அழகானவை! அவை நாளைய பொழுதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. சாலமன் பேரரசன் கூட தம்முடைய வாழ்வின் மகத்தான தருணங்களிலும் அந்த எளிமை யான லில்லி மலர்களைப் போல் அத்தனை சிறப்பாய் இருந்ததில்லை. பறவைகளைப் பாருங்கள், அவை பரவசமாய் இருக்கின்றன. இந்தக் கணத்தில் இப்பிரபஞ்சம் முழுதுமே கொண்டாடிக் கொண்டிருக்கிறது, உங்களைத் தவிர.

மனிதனிடம் மட்டும் என்ன இடர்ப்பாடு? சில குறிப்பிட்ட நிபந்தனைகளைப் பூர்த்தி செய்தபின்பே தான் மகிழ்ச்சியைப் பெறமுடியும் என்று நினைக்கிறான், அது தான் தொல்லை. உண்மையில் வாழ்க்கையை அனுபவித்து மகிழ எந்த நிபந்தனையுதம் பூர்த்தி செய்யப்பட வேண்டியதில்லை. ஆனால் மனிதனோ சில நிபந்தனைகளைப் பூர்த்தி செய்தபின்பே

தான் வாழ்க்கையை அனுபவித்து மகிழமுடியும் என்று நினைக்கிறான். இந்த மனம் புரிந்துகொள்ள முடியாத அளவு கடினமானது, சிக்கலானது.

'எளிய மனமோ கிடைப்பது எதுவாயினும் அதில் மகிழ்ச்சி காண்கிறது அதை அனுபவிக்கிறது'

எளிய வாழ்க்கையில் பூர்த்தி செய்யப்பட வேண்டியதாய் எந்த நிபந்தனையும் இல்லை. உங்களால் இந்தக் கணத்தைப் பயன்படுத்திக் கொள்ள முடியுமெனில் அடுத்த கணத்தில் அது முடிகிறதுதான். உங்கள் திறன் அதிகரிக்கிறது. அது எத்தனைக்குப் பெரிதாகிறதோ, எத்தனைக்கு உயர்கிறதோ அத்தனைக்கு அது எல்லையற்றதாகிறது.

நீங்கள் அடைகிற அந்த எல்லையற்றப் பெருவெளியே கடவுள். ஏதோ ஓர் இடத்தில் உங்களுக்காக அவர் காத்திருப்பதில்லை. உங்களுக்காகக் காத்திருக்கும் நேரத்தில் அவர் சலிப்புற்று விடுவார், தற்கொலை செய்து கொண்டு விடுமளவுக்கு.

கடவுள் ஒரு நபரல்ல. அவர் குறிக்கோளுமல்ல. இங்கே, இந்தக் கணத்தில் வாழ்க்கையை அனுபவிப்பதற்கான வழி முறைதான் அவர்.

எந்தக் காரணத்துக்காகவுமின்றி பரமசுகத்தில் திளைக்கும் மனோ பாவமே கடவுள். நீங்கள் காரணமில்லாமல் துன்பப்படுகிறீர்கள். அதுதான் சிக்கலுற்ற - புரிந்து கொள்வதற்குக் கடினமான மனம்.

ஒரு நாள், மரணமுற்ற செல்வந்தனொருவனின் சவ ஊர்வலத்தில் கலந்து கொண்டிருந்த முல்லா நஸ்ருத்தீனை நான் கண்டேன். ஒட்டு மொத்த நகரமும் ஊர்வலத்தில் போய்க் கொண்டிருந்தது. முல்லா நஸ்ருத்தீன் ரொம்பவே கண்ணீர்விட்டுக் கதறிக் கொண்டிருந்தார்.

'நஸ்ருத்தீன் என்ன விஷயம்? அந்தப் பணக்காரருக்கு நீர் எந்த விதத்திலாவது உறவா?' என்று நான் அவரிடம் கேட்டேன்.

'இல்லை' என்றார் அவர்.

'அப்படியானால் நீர் ஏன் அழுவது?'

'நான் அவருக்கு உறவுக் காரனாயில்லையே, அதனால்தான்'.

மக்கள் தங்கள் உறவை நினைத்து அழுகிறார்கள். உறவாயில்லை என்றாலும் அழுகிறார்கள். அவர்கள் ஏற்ற நிலை எதுவாயினும் அது குறித்து அழவே செய்கிறார்கள். மக்கள் எவ்வித காரணமுமின்றி துன்பப்படு கிறார்கள். உண்மையில் ஏதோ ஒரு காரணத்துக்காகத் துன்புறுகிற மனிதன் எவனையும் நான் கண்டதில்லை. நீங்கள் அதைத் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். காரணமில்லாமல் மகிழ்ச்சியற்றிருப்பது உங்களுக்கே அபத்தமாய் படுவதால் அதைத் தோற்றுவித்துக் கொண்டது. நீங்கள் பகுத்தறிந்து உங்களுடைய மதி நுட்பத்தால் கண்டுபிடிக்கிறீர்கள். சிறந்த

கண்டுபிடிப்பாளர் நீங்கள். ஒரு காரணத்தைக் கண்டறிந்தபோது, தோற்று வித்தபோது ஏதோ தொல்லை நீங்கினாற் போல் இருக்கிறது. அப்போது யாரும் நீங்கள் காரணமின்றித் துன்பப்படுவதாய் சொல்ல முடியாதல்லவா.

உண்மை, நிலைமை இதுதான். துன்பத்திற்கும் காரணமில்லை, சுகத்திற்கும் காரணமில்லை. அது உங்கள் மனோபாவத்தைப் பொறுத்தது என்பதே சரி. சூழ்நிலை எதுவாயினும், பொருத்தமற்றது என்றாலும் நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க விரும்பினால் அது உங்களால் முடிகிறதுதான். மகிழ்ந்திருப்பது ஒரு திறன், எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் உங்களால் மகிழ்ச்சியாயிருக்க முடியும்.

திபெத்தியரான மார்பா ஒரு சிறந்த மறை ஞானி. மார்பாவிடம், 'நீங்கள் மரணமடைந்ததும் சொர்க்கத்திற்குப் போவதை உறுதியாய் நம்புகிறீர்களா?' என்று கேட்டார் ஒருவர். 'சந்தேகம் இல்லாமல்' என்றார் அவர். அந்த மனிதர் கேட்டார், ஆனால் எப்படி அத்தனை நிச்சயமாய் சொல்கிறீர்கள்? ''நீங்களாக சாகவும் இல்லை, கடவுள் மனதில் என்ன இருக்கிறது என்று தெரிந்து கொண்டிருக்கவும் இல்லை'' என்று. மார்பா சொன்னார், ''கடவுள் மனதில் என்ன இருக்கும் என்பது பற்றியெல்லாம் நான் கவலைப்படவில்லை. அது அவருடைய வேலை. என்னுடைய மனத்தளவில் நான் உறுதியாய் இருக்கிறேன்'' என்று.

''நான் எங்கிருந்தாலும் மகிழ்ச்சியாய் இருப்பேன்.அந்த இடமே எனக்குச் சொர்க்கம், எனவே சொர்க்கம் நரகம் என்கிற வித்தியாசமெல்லாம் எனக்கில்லை'' என்றார் அவர்.

அடால்ஃப் இட்லரைப் பற்றி ஓர் அருமையான குட்டிக் கதையை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். 'சோதிடத்தில் சிறந்த ஒரு யூதப் பெண்மணி பற்றித் தமது நண்பர்கள் மூலம் அவர் அறிந்திருந்தார். அவர் யூதப் பெண்மணி என்பதால் இட்லருக்குச் சிறிது தயக்கம். ஆனாலும், அவர் மனதுக்குள் ஓர் எண்ணம் சுழன்று அவரைத் தூங்கவொட்டாமல் செய்தது. ''அவள் யூதப் பெண்ணாய் இருந்தால் என்ன, எதிர்காலத்தை அவளால் கணிக்க முடியும் என்கிறபோது கேட்டுப் பார்த்துவிட வேண்டியதுதான்.' அந்தப் பெண்மணி இரகசியமாய் அழைத்து வரப்பட்டாள்.

இட்லர் அவளிடம் கேட்டார் 'எனக்கு மரணம் எப்போது சம்ப விக்கும்?' என்று. அந்தப் பெண்மணி கண்களை மூடி, ஆழ்ந்த சிந்தனையில் இருந்துவிட்டுச் சொன்னாள், 'ஒரு யூத விடுமுறை நாளில்' என்று. 'நீ என்ன சொல்றே, என்ன விடுமுறை?' இட்லர் கேட்டார். அவள் சொன்னாள் ''அது உமக்குப் பொருத்தமில்லாத மாதிரி தெரியலாம். ஆனால், நீர் என்றைக்கு இறக்கிறீரோ அது யூதர்களின் விடுமுறை நாள்தானே''

மார்பர் சொன்னது ''கடவுள் மனதில் என்ன இருக்கிறது என்பது பொருத்தமில்லாத விஷயம். நான் எங்கே போனாலும் அது சொர்க்க மாகிவிடும். காரணம் எதுவும் இல்லாமலே மகிழ்ச்சி அடைகிறவன் நான்.''

எளிமையாய் வாழ்கிற எவனும் அறிவான், 'மகிழ்ச்சி வாழ்க்கையின் இயல்பு' என்பதை நீங்கள் மகிழ்ச்சியாயிருக்கக் காரணம் எதுவும் தேவையில்லை.

வாழ்க்கை மகிழ்ச்சியானது. வாழ்க்கையே பரம சுகம். ஆனால் இது எளிமையானவர்க்கே சாத்தியமான ஒன்று. பொருள்களைத் தேடிக் குவித் துக் கொண்டிருப்பவன் எப்போதுமே அந்தப் பொருளகளில் தான் மகிழ்ச் சியைக் காண்கிறான். மாளிகைகளும், செல்வமும், சாதனங்களுமே தனக்கு மகிழ்ச்சியளிப்பதாய் அவன் எண்ணிக் கொள்கிறான். வளமைகள் ஒரு போதும் பிரச்சினையல்ல, வளமையைக் காண முயலும் மனிதனின் மனோபாவந்தான் பிரச்சினை. ''இவையெல்லாம் எனக்குக் கிடைக்கா விட்டால் நான் மகிழ்ச்சியாய் இருக்க முடியாது'' என்கிற மனோபாவம். வாழ்க்கை எளிமையானது, தன்னிடம் இருப்பது எதுவாயினும் தான் மகிழ்ச்சியாயிருக்க முடியும் என்பதை எளிய, ஆடம்பரமற்ற மனிதன் தெரிந்து ,கொள்கிறான். அவன் எது காரணம் பற்றியும் அதை (மகிழ்ச்சி)த் தள்ளிப்போட வேண்டிய அவசியம் இல்லை.

எளிமை அப்போது புரியவரும்; விருப்பங்கள் பித்துக்கொளித் தனமானவை, தேவைகள் இயல்பானவை என்பது. உணவு, உறைவிடம், அன்பு... உன்னுடைய வாழ்வின் முழு சக்தியையும் தேவைக்கு கொண்டு வா, நீ மகிழ்ச்சியாக இருப்பாய்.

மகிழ்ச்சியுள்ள ஒருவனால் சமய ஈடுபாடு கொள்ளாமல் வேறு எவ்விதமாகவும் இருக்க முடியாது. மகிழ்ச்சியற்றவனுக்கோ சமயத்திற்கோ எதிராகவன்றி வேறு எவ்விதமாயும் இருக்க முடியாது. அவன் பிரார்த் திக்கிறான், கோயிலுக்குப் போகிறான் என்பது முக்கியமல்ல. மகிழ்ச்சியற்ற ஒருவனின் பிரார்த்தனை எப்படியிருக்கும்? அவனுடைய பிரார்த்தனையில் கடுமையான குற்றச்சாட்டு இருக்கும். ஒரு மனத் தாங்கல், கோபம் என்று அதனைச் சொல்லலாம். பிரார்த்தனை என்பது நன்றி பாராட்டுவதாயிருக்க வேண்டுமே தவிர குற்றச்சாட்டாயிருக்கக் கூடாது.

மகிழ்ச்சியான மனிதனே நன்றியுடையவனாய் இருக்க முடியும். அவனுடைய இதயம் முழுதும் நன்றியால் நிரம்பி அழுது புலம்பும், அவனது கண்கள் நீர்சொரியும், அவன் வேண்டிக் கேட்காமலே கடவுள் அவனுக்கு நிறையக் கொடுத்து விட்டிருக்கிறார். உங்களுக்கு வாழ்வைக் கொடுத்ததன் மூலமே கடவுள் நிறையக் கொடுத்திருக்கிறார். மூச்சுவிடுகிற ஒவ்வொரு கணமும் மகிழ்ச்சிக்குரியது. வாழ்வின் பேரின்ப நிலையை மகிழ்ச்சியற்றவரால் கண்டுகொள்ள முடியாது.

ஆக ஒன்றை நினைவு கொள்ளுங்கள். நீங்கள் எத்தனைக்குப் பொருள்களின் தொடர்பைப் பெற்றிருக்கிறீர்களோ அத்தனைக்கு மகிழ்ச்சிக் குறைவானவராகி விடுகிறீர்கள். நீங்கள் எந்த அளவு மகிழ்ச்சியற்றுப் போகிறீர்களோ அந்த அளவுக்கு தெய்விகத்திலிருந்து, வழிபாட்டிலிருந்து, நன்றி பாராட்டுவதிலிருந்து விலகிவிடுகிறீர்கள். எளிமையாயிருங்கள். அவசியமானவற்றுடன் வாழுங்கள், ஆசைகளை மறந்துவிடுங்கள். அவை மனிதன் கற்பனைகள், ஏரியில் தோன்றி மறையும் சிற்றலைகள். அவை உங்கள் அமைதியைக் கலைக்குமே தவிர ஒருபோதும் உங்களுக்கு நிறைவளிக்கப் போகிறதில்லை.

எளிமை, சுயத்தை அறிதல், கடவுளிடம் சரணடைதல். அவை ஒன்றோடொன்று இணைக்கப் பெற்றவை. நீங்கள் எளிமையாய் இருந்தால் உங்களைக் கருத்தூன்றிக் கவனிக்க முடியும். சிக்கலுள்ள மனிதனோ தன்னை உற்றுக் கவனிக்க முடியாத அளவுக்கு தனக்குத்தானே உடன் பாடற்றவனாயிருக்கிறான். அவனைச் சுற்றிலும் எண்ணற்ற பொருள்கள், ஆசைகள், எண்ணங்கள். அவன் எப்போதும் கூட்ட நெரிசலில் இருப்பவன். அதனால் தன்னை அறிவது அவனுக்குக் கடினமான விஷயம்.

எளிய மனிதனுக்கோ உண்பது, உறங்குவது, உறவு கொள்வது அவ்வளவு தான் எல்லாமும். அவனுக்குக் கவனிக்கவும் கண்டறியவும் கணிசமாய் நேரம் இருக்கிறது. ஆற்றல் இருக்கிறது. அவன் மகிழ்ச்சியாய் இருக்கிறான். நன்றாய் சாப்பிடுவதில் அவனுடைய பசி தீர்கிறது. நேசிப்பதன் மூலம் அவனுடைய உயிரின் வேட்கையும் நிறைவு செய்யப்படுகிறது. அப்புறம் என்ன செய்வதாம்? அவன் அப்படியே அமர்ந்து, கண்களை மூடித் தன்னுள்ளிருக்கும் ஜீவன் மீது கவனம் செலுத்துகிறான்.

எளிமையானவற்றுக்கென்று ஒரு பண்பு உண்டு. நீங்கள் அவற்றைச் செய்து கொண்டிருக்கும்போதே உங்களையும் நீங்கள் ஆராய்ந்தறிய முடியும். சிக்கலானவை என்றால் புரிந்து கொள்வதில் மனதுக்கு சிரமம். அது ரொம்பவும் சிக்கலில் அகப்படும், சிதறுண்டு போகும், தன்னை அறிதல் சாத்தியமற்றதாகிவிடும்.

பதஞ்சலியின் தன்னறிவு பெறுதலும், குருட்ஜீவின் தன்னினைவு பெறுதலும், புத்தரின் சரியான சிந்தனையும், இயேசு கருத்தில் கொண்ட எச்சரிக்கை உணர்வும், ஜே.கே. சுட்டிக்காட்டும் விழிப்புணர்வும் வெவ் வேறாகாது.

இதற்குமேல் செய்வதற்கு ஒன்றுமில்லை இந்த நாளின் வேலைகள் முடிந்தன என்கிறபோது உங்கள் ஆற்றல் என்னவாகிறது? இப்போது - பலவற்றிலும் அகப்படுத்தப்பட்ட உங்கள் ஆற்றல் தாழ்ந்த நிலையில் உள்ளது. ஆற்றலுக்கு பலவிதமான வேலைகள் உள்ளன. நீங்கள்

ஒருபோதும் தேவையான ஆற்றலைப் பெற்றிருப்பதில்லை. ஆற்றல் இல்லாமல் விழிப்புணர்வு இல்லை.

விழிப்புணர்வு என்பது ஆற்றலின் நுட்பமான உருமாற்றமே - போதிய அளவு ஆற்றல் நிரம்பி வழியாவிடில் நீங்கள் விழிப்போடிருக்க முடியாது. எளிமையான சிந்தனையும் அமைதியும் நிறைந்த மனிதனிடம் ஆற்றல் பெருமளவில் எஞ்சியிருக்கும். அந்த ஆற்றலை வைத்துக் கொண்டு என்ன செய்வது? செய்ய முடிந்ததையெல்லாம் செய்தாகிவிட்டது. நாளின் முடிவில் நீங்கள் அமைதியாய் அமர்ந்து கொண்டிருக்கிறீர்கள். ஆற்றல் உயர்ந்து உயர்ந்து நுட்பமான அடுக்குகளில் நுழைகிறது. அவை பெருந்திரளாய் சேர்ந்து ஆற்றல் மிக்க கோபுரம் அல்லது தூண் ஆகிறது. இப்போது உங்களை நீங்கள் ஆய்ந்தறிய முடியும். உங்கள் உணர்வுகளின், எண்ணங்களின் மிகச்சிறிய வேறுபாடுகளையும் நீங்கள் கவனத்தில் கொள்வீர்கள்.

'...தன்னை அறிதலும், கடவுளிடம் சரணடைதலும்.'

எளிமை தன்னை அறிய வகை செய்யும். தன்னை அறிதல் தன் முனைப்பின்மை (egolessness) க்கு வகை செய்யும். காரணம், அங்கே நீங்கள் இருப்பதில்லை. எந்த அளவுக்கு உங்களை அறிகிறீர்களோ அந்த அளவுக்கு 'நான்' முக்கியத்துவமிழக்கும். அறிய வேண்டியதை அறியாத வர்கள்தாம் இருந்து கொண்டிருப்பது. அறிந்துகொள்ளும் திறனும், தெரிந்து கொள்ளும் ஆற்றலும் உடையவர்கள் (ஞானிகள்)இருப்பதில்லை. அவர்கள் விரிந்து பரந்த வானத்தைப் போல் வெட்ட வெளியாகி விடுகிறார்கள். நீங்கள் புத்தாவான ஒருவருக்குள் நுழைந்து பார்த்தால் அவரை நீங்கள் எங்கும் காண்பதில்லை. எல்லையற்ற வெளியில் யார் இருப்பது? எனக்குள் நீங்கள் நுழைந்து பார்த்தால் என்னை அங்கே காண மாட்டீர்கள். ஒரு வெற்றிடம், பெரிய வானம், முழுமையான சுதந்திரம் உங்களுக்கு. என்மீது நீங்கள் இடறிவிழுவதில்லை, காரணம் நான் அங்கு இல்லையே.

எத்தனைக்கு உங்கள் விழிப்புணர்வு உள்ளில் அதிகரிக்கிறதோ அத்தனைக்கு நீங்கள் அங்கே இருப்பதில்லை. அது எப்போதும் சரிவிகிதத்தில் உள்ளது. நீங்கள் எந்த அளவு விழிப்புணர்வற்றவரா யிருக்கிறீர்களோ அத்தனைக்கு உங்களுடைய முக்கியத்துவம் இழக்கப் பட்டு விடுகிறது. நீங்கள் முழுமையான விழிப்புணர்வு கொண்டுவிட்டால் அற்றவராவீர்கள். முழு ஆற்றலும் விழிப்புணர்வாகும், தன் முனைப் படைய எதுவும் மிச்சமிருக்காது.

ஒரு பாம்பு தன்னுடைய பழைய சட்டையை உதறிவிடுவதைப் போல் அகந்தையும் உதறப்படுகிறது. அது மரித்துப்போனதால் தான் கிடப்பது, யார்

வேண்டுமானாலும் அதை எடுக்க முடியும். பிறகு - கடவுளிடம் சரணாகதி ஏற்படுகிறது. நீங்கள் கடவுளிடம் சரணடைய நீங்களே தடையா யிருக்கிறீர்கள்.

மக்கள் என்னிடம் வந்து 'நான் சரணடைய விரும்புகிறேன்' என்கிறார்கள். அது சாத்தியமில்லை. நீங்கள் எப்படிச் சரணடைய முடியும்? நீங்கள் தாம் விட்டுக் கொடுக்கும் தன்மையாயிருந்தால் சரண் புகுவதும் இருக்கும். நீங்கள் ஒரு முடிவுக்கு (cease) வந்து விடுகிறபோது சரணாகதி நிகழும். ஆக, உங்களால் சரணடைய முடியாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்கள் பங்குக்கு நீங்கள் முயற்சித்தாலும் அது சாத்திய மில்லை. உங்களால் ஒரு காரியம் செய்ய முடியும், பதஞ்சலி சொல்கிற மாதிரி ஆடம்பரமில்லாமல் எளிமையாயிருங்கள், தன்னொழுக்க முறை களில் கண்டிப்பாயிருங்கள். அப்போது நிறைய ஆற்றல் எஞ்சியிருக்கும், அதுவே தன்னிச்சையாய் விழிப்புணர்வாகும்.

விழிப்புணர்வு உள்ள இடத்தில் நீங்கள் இருப்பதில்லை. திடீரென்று சரணாகதி நிகழ்கிறது. உங்கள் பங்குக்கு நீங்கள் எதுவும் செய்யாமலே அது நிகழ்ந்து விடுகிறது. ஆம், நீங்கள் எதுவும் செய்யாத நிலையில் சரணாகதி நிகழ்ந்துவிட்டது. கடவுளிடம் சரணடைவது என்பது தன் முனைப் பில்லாமல் இருப்பதாகும். உங்கள் பங்குக்கு எதுவும் செய்யவில்லை, எந்த முயற்சியுமில்லை. முயற்சி இருந்தால் அது சரணாகதி ஆகாது.

சரணாகதி என்பது மெய்யுணர்வு, மெய்யாக உணர்தல், நீங்கள் அறிநிலை (aware) யில் இருக்கும்போது, சுவாலை கொழுந்து விட்டெரியும் போது திடீரென்று அங்கே இருள் நீங்கப் பெறுவதை நீங்கள் உணர்கிறீர்கள். உங்கள் சரணாகதி ஒரு வெளிப்படுத்துகை (revelation) ஆகும். திடீரென்று நீங்கள் திகைப்புற்று விடுகிறீர்கள், அங்கே நீங்கள் இல்லை, கடவுள் இருக்கிறார். உங்களுடைய இன்மையே அவருடைய இருப்பு ஆகிறது. உங்களுடைய இருத்தலில் துன்பம் இருக்கிறது. உங்கள் இருப்பில் எதுவும் சாத்தியமில்லை, உங்களுடைய இன்மையில் முடிவற்ற முழுமை சாத்தியமாகும். எளிமை, தன்னை அறிதல், கடவுளிடம் சரணடைதல் இவை ஒன்றோடொன்று தொடர்புடையவை.

**கிரியாயோகம் பயில்வதால் துன்பம் குறைகிறது, அது சமாதி நிலைக்குக் கொண்டு செல்கிறது.**

இம்மூன்று நடவடிக்கைகளும் துன்பத்தைக் குறைத்து உங்களை சமாதி நிலைக்கு வழி நடத்தும்.

'அதுவே இறுதி நிலை அதற்கப்பால் எதுவுமில்லை'

*நீங்கள் கடவுளிடம் சரணடைந்ததும் கடவுளாகவே ஆகிவிடுகிறீர்கள் அதுதான் சமாதி என்பது.*

> விழிப்புணர்வின்மை, தற்பெருமை கொள்ளுதல்,
> கவர்ச்சியூட்டும் செயல்கள், வெறுப்புகள், வாழ்வில் பற்று,
> மரணபயம் இவையே துன்பங்களுக்குக் காரணம்.

*உண்மையில் தன் முனைப்பு (ego) மட்டுமே கூட காரணமாகும். தன் முனைப்பைத் தொடரும் மற்றயவை எல்லாம் வெறும் நிழல்தான். விழிப்புணர்வு இல்லையென்றால் 'நான்' என்கிற முனைப்புதான். அறியாதவரைக்குந்தான் உங்கள் இருப்பை நீங்கள் உணர்வது. நீங்கள் இருட்டில் (மனத்தெளிவற்று) இருக்கிறீர்கள், உங்களை நேர்படக் கண்டதில்லை, ஆனாலும் நீங்கள் இருப்பதாய் நினைத்துக் கொள்கிறீர்கள். தன் முனைப்பு, பயனற்றவற்றில் கவர்ச்சி, வெறுப்புகள் - ஆவலின் மறுமுனை - வாழ்வில் பற்று, மரணபயம் என்று வகைவகையாய் துன்பங்களை இது தோற்றுவிக்கிறது.*

*'வாழ்க்கை இன்னதென்று தெரியாமலே வாழ்வை நீங்கள் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள்'*

*நீங்கள் அறிந்துகொண்டுவிட்டால் பற்றுதல் இல்லை. வாழ்க்கை சாசுவதமானது என்கிறபோது இதில் பற்றிக் கொள்கிற நிலை எதற்கு? அது போய்க் கொண்டேயிருக்கும், ஒருபோதும் நிற்பதில்லை. நீங்கள் பற்றிக் கொள்வதன் மூலம் தேவையில்லாமல் உங்களைத் தொல்லைக்குள்ளாக்கிக் கொள்கிறீர்கள். ஆறு முன்பே கடலை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறது. அதை நீங்கள் வேறுபிடித்துக் கொள்ளுகிற மாதிரிதான் இதுவும். நீங்கள் அதைத் தள்ள வேண்டியதில்லை. தேவையில்லாமலே துன்பத்தை நீங்கள் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். கடலை நோக்கி ஆற்றை உந்தித் தள்ளு வதன் மூலம் உங்களை நீங்கள் தியாகியாய் எண்ணிக் கொள்வீர்கள்.*

*'ஆறு தன் பாட்டுக்கு ஓடிக் கொண்டிருக்கிறது அதன் அமைதியைக் குலைக்காதீர்கள்'*

*நீங்கள் அதைச் செய்ய வேண்டாம். நீங்கள் கடலுக்குச் செல்ல விரும்பினால் ஆற்றின் ஒரு பகுதியாகி விடுங்கள், ஆறு உங்களைத் தன் வயமாக்கிக் கொண்டு செல்லும். ஆற்றுக்கு நீங்கள் உதவ வேண்டியதில்லை, ஆனால், அதைத்தான் செய்து கொண்டிருக்கிறீர்கள்.*

*வாழ்க்கை தங்கு தடையின்றி ஓடிக் கொண்டிருக்கிறது, அதற்கு எதுவும் அவசியமில்லை. இங்கே வந்து பிறப்பதற்காய் நீங்கள் என்ன செய்தீர்கள்? இருப்பதற்காக நீங்கள் செய்தது என்ன? நீங்கள் ஏதேனும் செய்திருக்கிறீர்களா? இல்லை என்கிறபோது கவலை எதற்கு? வாழ்க்கை தனக்கே உரிய விதத்தில் போய்க் கொண்டிருக்கிறது. முட்டாள்கள்*

துன்பங்களைத் தோற்றுவித்துக் கொள்கிறார்கள். சூழ்நிலை இப்படி இருக்கிறது.

நான் கேட்டிருக்கிறேன்: முன்னொரு காலத்தில் பெருஞ்செல்வம் படைத்த அரசனொருவன் இரதத்தில் போய்க் கொண்டிருந்தான், வழியில் சாலையோரமாய் ஏழை முதியவன் ஒருவன் தலையில் பெரிய மூட்டையைச் சுமந்து தள்ளாடுவதைக் கண்டான். அரசனுக்கு இரக்க வுணர்ச்சி மேலோங்கியது. ''முதியவரே வாரும்! வந்து என் பக்கத்தில் அமர்ந்து கொள்ளும், நீர் விரும்பிய இடத்தில் இறக்கி விடுகிறேன்'' என்றான். முதியவன் இரதத்தை நோக்கிச் சென்றான். ஆனால், மூட்டையை இன்னும் தலையிலேயே சுமந்து கொண்டிருந்தான். அரசன் சொன்னான், ''உமக்கென்ன பைத்தியமா? ஏன் உம்முடைய சுமையைக் கீழிறக்கி வைக்கக் கூடாது?'' என்று. அவன் சொன்னான், ''நான் இரதத்தில் ஏறினால் இரதத் துக்கும் குதிரைகளுக்கும் பாரம் அதிகரித்துவிடும். அப்போது என்னுடைய மூட்டை ஒரு கூடுதல் சுமையாகும். வேண்டாம் அரசே, என் சுமையை நானே வைத்துக் கொள்கிறேன்.''

உங்களுடைய சுமையை நீங்கள் தலையிலேயே சுமந்து கொண்டிருந்தாலும், இரதத்தில் இறக்கி வைத்தாலும் குதிரைகளுக்கு இரண்டும் ஒன்றுதான். எல்லாவற்றையும் அவை தாம் சுமக்கப் போகின்றன.

வாழ்க்கை தன்னைத்தானே எடுத்துச் செல்கிறது. உங்களுடைய சுமைகளை ஏன் வாழ்க்கையில் இறக்கி வைக்கவில்லை? நீங்கள் வாழ்க்கையைப் பற்றிக் கொள்ளுகிறபோது மரணபயம் வருகிறது. அங்கே மரணமும் இல்லை, மரணபயமும் இல்லை, வாழ்க்கையை நீங்கள் உறுதியாய் பற்றிக் கொள்ள முனைகிறபோது தான் மரணம் வருகிறது, மரண பயமும் வருகிறது. மரண பயம் மரணத்தைத் தோற்றுவித்து விடுகிறது. இல்லையேல் மரணமும் இல்லை, பயமும் இல்லை.

வாழ்க்கை முடிவற்றது. யாரும் மரணமடைந்தது கிடையாது. மரணமடையப் போவதும் கிடையாது. எது இருக்கிறதோ அது இருக்கும், பிரபஞ்சத்தில் எப்போதும் இருந்து கொண்டிருக்கும். எதுவும் பிரபஞ்சத்துக் கப்பால் போக முடிவதில்லை.

பிரபஞ்ச இருப்பில் உள்ளே வருவதுமில்லை, வெளியே செல்வதுமில்லை. முழுவதும் பிரபஞ்சந்தான். மனநிலை மாறினாலும், வடிவங்கள் மாறினாலும், பெயர்கள் மாறினாலும் எல்லாமும் இருந்து கொண்டிருக்கின்றன.

இந்துக்கள் அதைத்தான் 'நாமரூபம்' என்கிறார்கள். ஒரு வழியில் வடிவங்களும் பெயர்களும் மாறுகின்றன. இன்னொரு வழியில் எல்லாமும்

இருக்கின்றன. இங்கே இலட்சோபலட்சம் முறை இருந்திருக்கிறீர்கள், இருப்பீர்கள். நீங்கள் எப்போதைக்குமாய் இங்கே இருப்பீர்கள். வாழ்க்கை நிலைபேறுடையது. உண்மையில் உங்கள் பெயர்தான் ஒரே மாதிரி இருப்பதில்லை. அதே முகமும், அதே உடலும் உங்களுக்கில்லாது போகலாம். அது முக்கியமில்லை. கடலின் அலைகள் வரும்போகும், மீண்டும் வரும் போகும். அந்த அலைகளைப் போலத்தான் இங்கே நீங்கள் இருப்பதும்,

*'வடிவங்கள் மாறும் மாறாது கடல் மறையாது அலைகள்'*

> விழிப்புணர்வின்மை, தற்பெருமை, கவர்ச்சிகள்,
> வெறுப்புகள், வாழ்வின் மீதான பற்று, மரணபயம் இவற்றால்
> விளைகிறது துன்பங்கள். அவை செயலடங்கிக் கிடந்தாலும்,
> வலுவிழந்து போனாலும், மாறுதலுக்குட் பட்டாலும்,
> விரிவடைந்தாலும், விழிப்புணர்வின்மையின் மூலமே
> துன்பத்திற்குக் காரணமான மற்றவையும் இயக்கம்
> பெறுகின்றன.

துன்பத்துக்கான காரணங்கள் பல வடிவங்களில் இருக்கும். அவை விதைகளின் வடிவில் இருக்கக்கூடும். உங்கள் துன்பத்தை நீங்கள் செயல் அடங்கி இருக்கும். ஒரு விதையின் வடிவில் எடுத்துச் செல்லுங்கள். நீங்கள் அதை அறியாமல் இருக்கலாம், ஆனால் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் மண் பதமாயிருந்து, விதைக்குத் தண்ணீரும் சூரிய ஒளியும் கிடைக்கு மெனில் அது முளைத்துவிடும்.

ஆக, ஆண்டுக்கணக்கில் உங்களைப் பேராசையற்றவராய் நீங்கள் எண்ணிக் கொண்டாலும், திடீரென்று ஒரு நாள் சரியான தருணம் வாய்க்கிறபோது பேராசை இருப்பது தெரிய வரும். நீங்கள் அறிந்து கொள்ள முடியாத அளவுக்கு விதைகள் ரொம்பவும் பலவீனமாயிருந்தன. உங்கள் அடியாழத்தில் தேடிப் பார்த்தாலன்றி அவை அங்கேயிருப்பதை நீங்கள் காணமுடியாது.

சிலநேரம் அவற்றின் வடிவம் மாறிமாறிக் காணப்படலாம். சில நேரங்களில் மகிழ்ச்சியாயும், சில நேரங்களில் மகிழ்ச்சியுற்றும் காணப் படுகிறீர்கள் அல்லவா. ஆனால் வெறுப்பும், அன்பும் ஒரே ஆற்றலின் மாறுபட்ட நட்புகள் (*phenomena*) தாம். சில சமயம் அவை தம்முடைய முழுமையான வடிவில் இருக்கும்.

நீங்கள் தற்கொலைக்கு முனையுமளவு மனச் சோர்வடைகிறபோதும், தலை கால் புரியாத மகிழ்ச்சியில் பைத்தியம் பிடித்த மாதிரி உணர்கிற

போதும் அவை தங்களுடைய முழுமையான வடிவில் இருக்கும். இந்த வடிவங்களனைத்தும் கவனிக்கப்பட வேண்டியவை. பதஞ்சலி சொல்கிறார், 'நீங்கள் விழிப்புணர்வோடில்லை'. விழிப்புணர்வற்ற காரணத்தால் தான் இவை இருக்கின்றன.

முதலில், மேற்பரப்பில் நடப்பதை அறிந்திருங்கள். பேராசை, கோபம், வெறுப்பு, பிறகு அடியாழத்துக்குப் போங்கள், மாறுபட்ட நடப்பை உங்களால் உணரமுடியும் (இரண்டுமே ஒன்று சேர்ந்திருக்கும்). இன்னும் ஆழத்துக்குப் போய், இன்னும் விழிப்புணர்வு பெறுகிறபோது உங்களுக்குள் ஒரு பலவீனமான நடப்பை உணர்வீர்கள். அது நிழல்போன்று இருக்கும், ஆனால் எந்த நேரத்திலும் ஒரு பொருளாய் வடிவம் பெற்று விடும். புனிதமான ஒருவனுக்கும் அப்படித்தான் ஆகிறது. சென்ற கணத்தில் புனிதமாயிருந்தவன். ஓர் அழகிய பெண்ணின் வருகையில் அத்தனை புனிதத்தையும் இழந்துவிடுகிறான். எல்லாம் ஒரு கணத்தில், அது வலுவற்ற உருவில் இருந்திருக்கும் அல்லது ஒரு விதையின் வடிவில் இருந்திருக்கக் கூடும். விதையின் வடிவத்தை அது முளைக்காத வரை, அறிவது கடினம், அதற்கு முழுமையான அறிவில் விழிப்புணர்வு தேவைப்படும்.

### பதஞ்சலியின் திட்டமிட்ட முறை விழிப்புணர்வு:

மேலும் மேலும் விழிப்போடிருத்தல். நீங்கள் ஆடம்பரமற்று, எளிமையாய் இருந்தால் அதிக விழிப்புடன் இருப்பீர்கள். நீங்கள் கூடிய விழிப்புணர்வு கொள்வதும், தன்னை அறிவதும் சாத்தியந்தான். தன்னை அறிகிற போது சுயம் (ஒருவருடைய தனித்தன்மை, தான் என்பது) நழுவி, சரணாகதி அடைந்ததாய் உணர்வீர்கள். சரணாகதி என்பது சரியான பாதையில் செல்வதன்றி வேறேயென்ன?

○

# 2. நீங்கள் ஏற்கனவே அதுவாயிருக்கிறீர்கள்

முதல் கேள்வி:

அகந்தை இல்லாதபோதுதான் சரணாகதி நிகழ்கிறது என்று நீங்கள் நேற்று கூறினீர்கள், ஆனால் எங்களிடம் அகந்தைகள் இருக்கின்றன. நாங்கள் எப்படி சரணாகதி அடையமுடியும்?

உங்களிடம் 'நான்' என்கிற அகந்தை இருக்கிறது. உங்களால் சரணாகதியை நோக்கிச் செல்ல முடியாது. உண்மையில் நீங்களே உங்களுக்குத் தடையாயிருக்கிறபோது எதைச் செய்தாலும் அது தவறாகிவிடும். அது குறித்து நீங்கள் எதுவும் செய்வதற்கில்லை. நீங்கள் எதையுமே செய்யாமல், விழிப்புணர்வு கொண்டவராய் இருங்கள் போதும். இது ஓர் உள்ளார்ந்த இயந்திர நுட்பம், நீங்கள் செல்வது எதுவானாலும் அது அகந்தையில் செய்யப்படுவது. நீங்கள் எதையும் செய்யாமல் இருந்து விடுகிறபோது, சாட்சி பாவத்தில் நின்று விடுகிறபோது உங்களின் அகந்தையற்ற பகுதி செயல்படத் தொடங்கும்.

'அகந்தை செய்கிறது அகந்தையின்மை சாட்சியாகிறது'

அகந்தையால் எதையும் செய்யாமல் இருக்க முடியாது. நீங்கள் சரண்புக எண்ணி எதையேனும் செய்தால்கூட அது அகந்தையை வலுப் படுத்தவே செய்யும். உங்கள் சரணாகதியிலும் தற்பெருமை நுட்பமாய் இடம் பெற்றிருக்கும். நீங்கள் சொல்வீர்கள், 'நான் சரணடைந்தேன்' என்று. உங்கள் சரணாகதியை உறுதிப்படுத்த முனைவீர்கள். 'அது உண்மையல்ல' என்று யாரேனும் சொன்னால் நீங்கள் கோபமுற்று அவரைப் புண் படுத்துவீர்கள். அங்கே சரணடைய முயற்சிப்பது அகந்தை. அகந்தையால் எதையும் செய்யமுடியாது. அகந்தையால் செய்ய முடியாத ஒன்று சும்மா இருப்பது, சாட்சி பாவத்தில் இருப்பது.

எனவே, அமைதியாய் இருந்து, செயல்படுபவரைக் கவனியுங்கள். அதைக் கையாள முயற்சிக்காதீர்கள். நீங்கள் கையாள முற்படும் கணத்தில் அகந்தை மீண்டும் வந்தடையும். அது குறித்து செய்யக் கூடியது ஒன்றுமில்லை. அகந்தை தோற்றுவிக்கும் துன்பத்துக்கும், அகந்தையால் உறுதிப்படுத்தப்பட்ட பொய்யான சந்தோஷங்களுக்கும், வெகுமதி களுக்கும் ஒருவர் சாட்சியாயிருந்து விட வேண்டியது தான். செய்யப் பட்டவை இந்த உலகிலாயினும், இன்னோர் உலகிலாயினும், ஆன்மா சார்ந்ததோ, தெய்விகமோ, உடல் சார்ந்ததோ உட்பட்ட பகுதி எதுவாயினும் செய்பவரிடத்தில் (goer) அகந்தை இருக்கும்.

நீங்கள் எதையாவது செய்ய வேண்டும் என்று கருதிக் கொள்ளப் படவில்லை, அப்படி எதையேனும் நீங்கள் செய்யத் தொடங்கினால் முக்கிய விஷயத்தையே முழுமையாய் தவறவிட்டு விடுவீர்கள். அங்கே எதையும் செய்யாமல் சும்மா கவனித்து, அறிந்து கொள்வதோடு இருந்தால் போதும். 'அகந்தையை எப்படி விடுவது? யார் விடுவது? யாரை யார் விடுவது' என்றெல்லாம் கேட்டுக் கொண்டிராதீர்கள். நீங்கள் எதையும் செய்யாமல் இருக்கும்போது, சாட்சி பாவத்தில் இருக்கும் பகுதி சட்டென்று விலகிவிட, ஓர் இடைவெளி உண்டாகும். செய்பவர் செய்தபடி இருக்க, நோக்குபவர்

நோக்கியபடியே இருப்பார். திடீரென்று நீங்கள் ஒரு புதிய ஒளியாய், பெரும் பாக்கியத்தால் நிரப்பப் பெறுவீர்கள். நீங்கள் 'நான்' என்கிற அகந்தையல்ல; நீங்கள், ஒருபோதும் அகந்தையாயிருந்ததில்லை. அதில் நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தது எத்தனை முட்டாள்தனம்!

தங்கள் அகந்தையை நிரப்பிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்ட வர்கள் இருக்கிறார்கள். தங்கள் அகந்தையை விட்டுவிட முயற்சிப்ப வர்களும் இருக்கிறார்கள். இருவகையினருமே தவறானவர்கள் தாம். சாட்சி பாவம் மேலெழுகிற போது நீங்கள் ஆட்டத்தை முழுக்க முழுக்கப் பார்த்துக் கொண்டிருப்பதோடு சரி. அங்கே நிறைவேற்றப்பட வேண்டியதென்றோ, கைவிடப்பட வேண்டியாதன்றோ எதுவும் இல்லை. அகந்தை எவ்வகைப் பொருளாலும் ஆக்கப்பட்டதல்ல. கனவுகளைச் செய்வதில் பயன்படுத்தப் பட்டது எதுவோ, அதுவே இதிலும் பயன் படுத்தப்பட்டது. அது ஓர் உருவகம், காற்றுக்குமிழி, உங்களுக்குள் இருக்கும் வெப்பமூச்சு வேறெதுவும் அல்ல. நீங்கள் அதை விடத் தேவையில்லை. காரணம், அதை விடுவது அல்லது எப்படி விடுவது என்று கேட்பதன் மூலம் நீங்கள் அதில் நம்பிக்கை வைக்கிறீர்கள். இன்னமும் அதைப்பற்றிக் கொண்டிருக்கிறீர்கள்.

ஒரு 'ஸென்' குரு காலையில் எழுந்ததும், தன் சீடரிடம் சொன்னார் 'ராத்திரி' நான் ஒரு கனவு கண்டேன். தயவு செய்து அதன் அர்த்தத்தை நீ எனக்குச் சொல்வாயா?' என்று. சீடர் சொன்னார், 'கொஞ்சம் பொறுங்கள். நான் குளிர்ந்த நீர் கொண்டு வருவேன், நீங்கள் முகம் கழுவிக் கொள்ளலாம்' என்றார். அவர் தண்ணீர் கொண்டுவரச் சென்று, திரும்பி வந்தார். குரு முகம் கழுவிக்கொண்டார். அந்த நேரத்தில் பக்கமாய் சென்ற இன்னொரு சீடரை அழைத்து, 'கவனமாய்க் கேள். நேற்றிரவு நான் ஒரு கனவு கண்டேன். அதன் பொருளை எனக்கு நீ விளக்கிச் சொல்வாயா?' என்று கேட்டார்.

குரு முகம் கழுவிக் கொண்டுவிட்டதைக் கண்ட சீடர் கூறினார், 'பொறுங்கள், உங்களுக்கு ஒரு கோப்பை தேநீர் கொண்டுவந்து விடுகிறேன் என்று. அவர் கோப்பையில் தேநீர் கொண்டு வந்தார். தேநீரை வாங்கி உறிஞ்சிய குரு சிரித்ததுடன், தம்முடைய சீடர்களை ஆசீர்வதித்தார். 'நல்ல காரியம் செய்தீர்கள். என்னுடைய கனவுக்குப் பொருள் சொல்லியிருந்தால் இந்த ஆசிரமத்தைவிட்டே உங்களைத் தூக்கியெறிந்திருப்பேன். ஏன் தெரியுமா, ஒரு கனவு கலைந்து, அது கனவு என்று தெரிகிறபோது அதற்குப் பொருள் தேடுவதில் அர்த்தமேயில்லை. அதற்குப் பொருள் தேடுவது நீங்கள் இன்னமும் அதில் (கனவு) ஆழ்ந்திருப்பதையே காட்டும். அது பொருள் பொதிந்தது (substantiate) என்றே இன்னமும் நீங்கள் கருதிக் கொள்கிறீர்கள்.

அதனால்தான் கிழக்கத்தியர்களாகிய நாம் கனவுகளின் பொருள் பற்றிக் கவலைப்படுவதில்லை. அதன் மெய்ம்மை குறித்த விவாதித்திலும் ஈடுபடுவதில்லை. ஃப்ராய்டுக்கு நான்கு அல்லது ஐந்து ஆயிரம் ஆண்டுக்கு

முன் கனவுகளின் மெய்ம்மையில், நிகழ்வுகளில் கிழக்கு தற்செயலாய் தடுக்கி விழுந்தது. தவறாய் கணித்துச் செயல்பட்டுக் கொண்டிருந்தது. நாம்தான் முதலில் பிரக்ஞை (consciousness) யை மூன்று பகுதிகளாய் - விழித்தல், கனவுகாணல், ஆழ்ந்து உறங்குதல் என்று பிரித்தது.

நம்மைப் பொறுத்தவரை கனவென்றால் அது கனவுதான். அதில் பொருளேதும் இல்லை. அதற்குப் பொருள் தேடி நாம் அலட்டிக் கொள்வதுமில்லை. கனவு கண்டவர் அதிலிருந்து விழித்தெழுகிறார், அவ்வளவே, நீங்கள் முன்னதாகவே விழித்துக் கொண்டுவிட்டால் முகம் தழுவிக் கொள்வது நல்லது. ஸிக்மண்ட் ஃப்ராய்டின் மனநோய் பற்றிய காரணங்களைவிட குளிர்ந்த நீர் நிரம்பவே உதவக் கூடும். நீங்கள் எழுந்துவிட்டிருந்தால் மதிப்பற்ற, தேவையற்ற மற்றவைகளைவிட ஒரு கோப்பை தேநீர் சிறந்ததாகும். குடித்துத் தீருங்கள்.

முதலில் கனவு என்பதே பொய்யானது. அப்படியிருக்க நீங்கள் அதற்குப் பொருள் காணத் தொடங்குகிறீர்கள். உங்களுடைய பொருத்த மான விளக்கத்தின் மூலம் புதிதாய் ஒரு மெய்ம்மையை அது பெற்று விடுகிறது. அது மீண்டும் பொருள் பொதிந்ததாகிறது. கனவில்தான் என்றில்லை. உங்கள் வாழ்க்கை நெடுகிலும் அப்படித்தான்.

இந்த வாழ்க்கையே ஒரு கனவு, இதற்கு விளக்கமும் வேண்டுமோ?'

இது ஒரு கனவென்று நொந்து கொண்டால் போதும். அதைவிட்டு நீங்கள் வெளிவர வேண்டும்.

ஆமாம், காலையில் ஒரு கனவில் இருந்து எப்படி வெளி வருகி றீர்கள்? நீங்கள் எப்போதாவது அதைக் கருத்தூன்றிக் கவனித்தது உண்டா? கவனித்திருந்தால் அகந்தையில் இருந்து எப்படி வெளிவருவதென்பதை அறிவீர்கள். காலையில் ஒரு கனவு அல்லது உறக்கத்தில் இருந்து நீங்கள் வெளிவருகிறீர்கள்? ஒரு கணத்துக்குமுன் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தீர்கள், அப்போது திடீரென்று பறவைகள் எழுப்பும் சப்தத்தை, பால்காரன் கதவைத் தட்டும் ஒலியை, வேலைக்காரி வந்து தரையைத் துடைத்துச் சுத்தம் செய்வதை காலையின் இரைச்சல்களைக் கேட்டீர்கள். என்ன நிகழ்கிறது? நீங்கள் மிகவும் விழிப்படைகிறீர்கள். ஒரு கணத்துக்கு முன்னால் கொஞ்ச மும் விழிப்புணர்வின்றி ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தீர்கள். அப்போது திடீரென்று பறவைகள், பால்காரன், வேலையாள், குழந்தைகளிடம் விவாதம் செய்யும் மனைவி, எதிர்ப்புகாட்டும் குழந்தைகள். ஆனாலும் எழுந்துகொள்ளத் தயாரில்லை.

அடுத்தடுத்து, நிகழ்வுகள் பிரக்ஞையை உண்டு பண்ணவும் நீங்கள் சுறுசுறுப்பாகிறீர்கள். ஆனாலும், அரைத் தூக்கத்தில் அப்படி இப்படிப் புரண்டு படிக்கிறீர்கள். கண்களை மூடி குட்டித் தூக்கம் போடுகிறீர்கள். பாதி தூக்கம் பாதிமுழிப்பில் இருந்தபடி நடப்பவற்றைக் கவனித்துக்

கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் விழிப்புற்ற பின் தூக்கம் தொடர்வதில்லை. உங்கள் தெரிநிலையில் (awareness) கனவுகள் மறைந்துவிடும்.

விழித்திருக்கும் நிலையிலும் அதுவே செய்யப்பட வேண்டியது: அதிகம் கவனியுங்கள், அதிகமாய் உணருங்கள். நீங்கள் குளித்துக் கொண்டிருந்தால் உங்கள் மீது வழிந்தோடும் நீரை, நீரின் ஸ்பரிசத்தை உணருங்கள், உங்களால் முடிந்த அளவு அனுபவித்து உணருங்கள். அந்த முழுமையான விழிப்புணர்வு உங்களை அகந்தையிலிருந்து வெளியே கொண்டுவரும், நீங்கள் ஒரு சாட்சியாகி விடுவீர்கள். நீங்கள் உணவருந்திக் கொண்டிருந்தால் உண்ணுங்கள். மனதை அங்குமிங்கும் அலையவிடாமல், நுட்ப உணர்வுடன் சுவைத்து உண்ணுங்கள். உறக்கமென்கிற கடலில் இருந்து அடுத்தடுத்து ஏதோவென்று மேலெழும். நீங்கள் அதிக எச்சரிக்கையும், விழிப்புணர்வும் அடைவீர்கள்.

உங்களுடைய விழிப்புணர்வில் கனவேதுமில்லை, அகந்தையு மில்லை. அது ஒரு செயலின் பகுதியல்ல, தெரிநிலையின் பகுதி.

அந்த வேறுபாடு நினைவில் கொள்ளப்பட வேண்டும். விழிப்புணர்வு என்பது ஒரு செயலல்ல, அதை நீங்கள் செய்ய முடியாது. நீங்கள் விழிப்போடு இருக்க முடியும், அது உங்கள் இருப்புணர்வின் ஒரு பகுதி. எனவே இன்னும் உணருங்கள், இன்னும் நுகருங்கள், இன்னும் கவனமாய் கேளுங்கள், தொட்டுணருங்கள். மிகுதியாய் நுட்ப உணர்வு கொள்ளுங்கள். திடுதிப்பென உறக்கத்தில் இருந்து எதுவோ எழுகிறது, அங்கே அகந்தை இல்லை, உங்களை நீங்கள் ஒப்படைத்து (சரணடைதல்)க் கொண்டீர்கள்.

எப்பொழுதும் சரணடைபவர் எவருமில்லை. ஒருவர் திடுதிப்பென்று கணப்பொழுதில் சரணடைந்து விடுகிறார். கடவுளிடம், பூரணத்திடம் சரணடைகிறார். நான் என்கிற அகந்தை அற்றால்தான் சரணாகதி. 'நான்' இருக்கும்வரை அது இல்லை. நீங்களே உங்களுக்குத் தடையாயிருக்கும் போது சரணாகதி எப்படி நிகழும்? உங்களைத் திண்மையாய் (stuff)க் கொண்டல்லவா அந்தத் தடை உருவானது. எனவே 'நான் எப்படிச் சரணடைவது?' என்று என்னைக் கேட்காதீர்கள். இது அகந்தையுடன் கேட்ப தாகும். அகந்தையின்மை அல்லது சரணாகதி பற்றி நான் பேசும்போது உங்களுடைய அகந்தை அதில் மேலும் பேராசை கொள்கிறது.

'நான் முயற்சி செய்து பெற்றதல்லவா இப்போதைய நிலை' என்று நீங்கள் எண்ணமிடுவீர்கள். அத்தகைய நிலையை இதுவரை அடைந் திராவிடில் அதை முயன்று அடைவேன். இந்தச் சரணாகதி என்னைவிட்டு எங்கே போய்விடும்? அது எங்கிருந்தாலும் எப்படியாவது அதை நான் கொண்டு வருவேன். அகந்தை கேட்கிறது 'அதை எப்படிச் செய்வது? என்று.

உலகிலேயே மிகச் சிறந்த தொழில் வல்லுநர் இந்த அகந்தைதான். அது செய்நுட்ப அறிவில் வாழ்கிறது. அகந்தையே சகல தொழில்நுட்பங்

களுக்கும் அடிப்படையாய் விளங்குகிறது. கிழக்கில் தொழில்நுட்பம் வளரவில்லையென்றால் அதற்குக் காரணம் அங்குள்ள மக்கள் அகந்தை பற்றிய எச்சரிக்கையோடு இருப்பதுதான். எது அகந்தையின் மூல காரணமோ அது துண்டிக்கப்பட்டு விடுகிறது. அவர்கள் வாழ்வது சரணாகதி வாழ்க்கை.

உங்கள் வாழ்க்கை ஒப்படைத்துக் கொள்ளப்பட்ட வாழ்க்கை யென்றால் நீங்கள் எப்படித் தொழில்வல்லுநர், தொழில் நுட்ப வல்லுந ராவது? அப்போது எல்லாவற்றையும் வாழ்க்கையிடம் விட்டுவிட்டு நீங்கள் நோக்கமின்றித்திரிவீர்கள். எதைச் செய்வது எப்படிச் செய்வது என்றெல் லாம் உங்களைத் தொல்லைக்குள்ளாக்கிக் கொள்ளமாட்டீர்கள்.

மேற்கு தொழில் நுட்பத்தில் நிபுணத்துவம் பெற்றுவிட்டது. அதற்குக் காரணம் மேற்கு உள்ளார்ந்த அடிப்படையாய் அகந்தையைக் கொண் டிருக்கிறது. அகந்தையை ஊட்டி வளர்க்கவும், பாதுகாக்கவும் அது முயற்சக்கிறது. தொழில் நுட்பத்தின் முழுகட்டுமானமும் அகந்தையின் அடிப்படையில் அமைந்தது. அகந்தையைக் கைவிட்டால் ஒட்டுமொத்த தொழில்நுட்ப அமைப்பையும் கைவிட வேண்டியதுதான்.

அப்போது அது கடவுளால் படைக்கப்பட்டதாகிவிடும். கிறிஸ்து வர்கள் நினைப்பது போல் கடவுள் இன்னும் தன்னுடைய படைப்பை முடித்துக் கொண்டு விடவில்லை. அவர் ஆறு நாட்களில் முடித்துவிட்டு, ஏழாவது நாளில் ஓய்வுகொள்வார் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

கடவுள் படைப்பதை நிறுத்திக் கொண்டு விடவில்லை. படைப்பு ஒரு தொடர் செயல், அது தொடர்கிறது. அது முடிவதில்லை. ஒவ்வொரு கணத்திலும் கடவுள் படைத்துக் கொண்டிருக்கிறார். உண்மையில் - கடவுள் படைத்துக் கொண்டிருக்கிறார் என்பது தவறு. கடவுளே படைப்பா யிருக்கிறார் படைப்புத்திறனாய், தொடர்செயலாய்,

'படைப்புக்கில்லை தொடக்கமும், முடிவும், அது சாசுவதமானது'

ஆனால், மனிதன் அகந்தையோடு கடவுளுக்கு எதிராய் நிற்கிறான். பிறகு - இயற்கையை வெல்லும் முயற்சியைத் தொடங்குகிறான். இயற்கையைச் சிதைக்கும் வன்முறையில் ஈடுபடுகிறான். தொழில் நுட்பம் மொத்தமுமே வன்முறைதான். சரணாகதியிலோ நீங்கள் அன்பில் வாழ்கிறீர்கள், தொழில் நுட்பமெனில் வன்முறை கொண்டுவிடுவீர்கள். ஒட்டு மொத்த இயற்கையையும் உங்கள் வன்முறையால் சிதைத்துவிட முயற்சிக்கிறீர்கள், அதன் அடிப்படையாய் 'நான்' என்கிற அகந்தை இருக்கிறது.

'எப்படி?' என்று கேட்காதீர்கள். என்னைப் புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள், முக்கிய விஷயத்தைக் கண்டுகொள்ள முயலுங்கள். அதற் கொன்றும் பெரிய அளவில் அறிவுத்திறன் தேவைப்படாது. விஷயத்தைக் கண்டு கொள்வதற்குத் தேவையான அறிவு எல்லாரிடமும் இருக்கிறது.

முக்கிய விஷயத்தைக் கண்டு கொள்வதோடு, அந்த அந்தப்பார்வை (vision), புரிதல், கண்டுணரும் திறன் (perception) இவற்றுடன் வாழ முயலுங்கள், அவ்வளவுதான்.

அகந்தையின் வழிகளைக் கவனியுங்கள், நீங்கள் வெறுமனே கவனித்திருப்பவர்தான், செய்பவரல்லர். ஒரு போதும் செய்பவராகி விடாதீர்கள். நீங்கள் எச்சரிக்கையாயில்லாவிட்டால் கவனித்திருப்பவருக்கும் செய்பவருக்கும் இடையில் உள்ள தொலைவு ரொம்பவாயிருக்காது. உங்களுக்குப் பக்கமாகவே செய்பவர் இருக்கிறார். நீங்கள் கவனிப்பவரிலிருந்து செய்பவருக்கு நழுவி விடுவீர்கள். 'நான்' என்கிற அகந்தையில் உருவானவர் நீங்கள். செய்பவரில் இருந்து கவனித்திருப்பவருக்கு நழுவிப் போங்கள் சரணடைந்தவராவீர்கள், அதற்கு மேலும் உங்களிடம் அகந்தை இருக்காது.

**இரண்டாவது கேள்வி:**

**'பிரக்ஞையின் உச்சியில் நீங்கள் இருக்கிறீர்கள். உங்களால் கொண்டாட முடியும். நீங்கள் கொண்டாடிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் அந்தக் கொண்டாட்டத்தில் ஒரு பாமரன் எப்படி உங்களுடன் பங்கு பற்ற முடியும்?'**

யாரும் சாதாரணமானவர்களல்லர். நீங்கள் சாதாரணமானவர் என்று யார் சொன்னது? நீங்கள் சாதாரணமானவர் என்ற கருத்தை எங்கிருந்து பெற்றீர்கள்? எல்லாருமே சிறப்புத்தன்மை உடையவர்தாம், குறிப்பிடத்தக்கவர்தாம். கடவுள் ஒரு போதும் சாதாரணமானவர்களைப் படைக்கவில்லை. அவரால் எப்படிச் சாதாரணர்களைப் படைக்க முடியும்? ஒவ்வொருவரும் விசேஷமானவர்தாம், மெச்சத்தகுந்தவர்தாம், ஆனால் அது குறித்து நீங்கள் கர்வப்பட வேண்டியதில்லை. நீங்கள் சிறப்பானவராயிருப்பதற்குக் கடவுள்தான் காரணம், நீங்களல்ல.

'முழுமையில் இருந்து வந்த நீங்கள் முழுமையில் தான் இன்னமும் வேர்விட்டிருக்கிறீர்கள்.'

முழுமை அசாதாரணமானது, ஒப்பிடற்கரியது. நீங்களும் ஒப்பற்றவர் தாம். ஆனால், எல்லாமதங்களும் (மதங்கள் என்று அழைக்கப்படுகின்றன) உங்களைச் சாதாரணமாய் உணர வைக்கவே முயல்கின்றன. உங்களுடைய அகந்தையைத் தூண்டிவிட இது ஒரு தந்திரம். இதனைப் புரிந்து கொள்ளுங்கள்: உங்களைச் சாதாரணர் என்று யாரேனும் சொல்கிற தருணத்தில் 'நாம் சிறப்பானவராகிவிட வேண்டும்' என்ற விருப்பத்தை உங்களுள் அவர் தோற்றுவித்து விடுகிறார். காரணம் உங்களைத் தாழ்வாக நீங்கள் உணர்ந்து கொண்டிருப்பதுதான்.

என்றோ ஒருநாள் ஒருவர் இங்கே வந்தார். என்னிடம், வாழ்வின் நோக்கம் என்ன? ஒரு சிறந்த நோக்கம் இல்லாமல் நான் எப்படி வாழ்வது? சிறந்த நோக்கம் இருந்தால்தானே வாழ்க்கை குறிப்பிடத்தக்கதாயிருக்கும்.

சிறந்த நோக்கம் இல்லாவிட்டால் வாழ்க்கை அப்போது அர்த்த மற்றதாகிவிடும் இல்லையா?' என்று கேட்டார். அவருடைய கேள்வி இதுதான், 'எந்தவொரு சிறந்த நோக்கத்துக்காகக் கடவுள் என்னைப் படைத் தார்? எதைச் செய்வதற்காக இந்த உலகத்துக்கு நான் அனுப்பப்பட்டேன்?' இது அகந்தையின் கேள்வி, இதைத்தான் அகந்தை கேட்கிறது. அவன் சாதாரணமாய் உணர்கிறான், சிறப்பாக எதுவுமில்லை. அப்போது ஒருவன் எப்படி வாழ முடியும்?

நீங்கள் சுயமதிப்பீடுகளின் உச்சத்தில் இருக்கவேண்டும், அப்போது வாழ்க்கை குறிப்பிடத்தக்கதாகும்.

'வாழ்க்கை தனிச்சிறப்பு வாய்ந்ததுதான் நோக்கம் எதுவும் இல்லாவிடினும்'

ஒரு பாடலைப்போல், நடனத்தைப்போல் நோக்கமற்ற தனிச்சிறப்பு! ஒரு பூ மாதிரி - அது பூப்பதில் எந்த நோக்கமுமில்லை, அது தனிப்பட்ட யாருக்காகவும் பூக்கிறதில்லை. மனித நடமாட்டமில்லாத சாலையிலும் பூக்கள் பூத்துக் கொண்டு தானிருக்கும். அதன் வாசம் காற்றில் பரவி நிற்கும். எவ்வித நோக்கமுமில்லாவிட்டாலும், எவராலும் முகர்ந்து பார்க்கப்படா விட்டாலும் பூப்பதில் இருக்கிறது சிறப்பு.

ஆனால் நீங்களோ சாதாரணமானவர் என்று போதிக்கப்பட் டிருக்கிறீர்கள். 'சிறந்த கவிஞராகி விடுங்கள், சிறந்த ஓவியராகி விடுங்கள். மாபெரும் தலைவராய், அரசியல் வாதியாய், மகானாய் உருவெடுங்கள். 'நீ உதவாக்கரை, மண்மீது ஒரு புழு' என்று மதங்கள் உங்களைப் பழித்துரைக்கின்றன. ''குறிப்பிடும்படியாய் இல்லாவிட்டாலும் வந்து காட்டுங்கள். உங்களுடைய மனவலிமையை நிரூபிக்கிறவிதமாய் கடவு ளின் முன்னிலையில் வந்து காட்டுங்கள்'' என்று மதங்கள் சொல்லும். ஆனால் நான் சொல்வேன் இது சுத்த அபத்தம் என்று இந்த மதங்க ளெல்லாம் மதத்துக்கு எதிரானவற்றையே பேசிக் கொண்டிருக்கின்றன.

எதையும் நிரூபிக்கிற அவசியம் உங்களுக்கில்லை. கடவுள் உங்களை உற்பத்தி செய்திருக்கும் நிகழ்வே (phenomenon) போதுமானது. நீங்கள் அங்கீகரிக்கப்பட்டீர்கள். கடவுள் உங்களைப் பெற்றெடுத்திருக்கிறார், அதுவே போதுமானது. அதற்குமேல் நீங்கள் நிரூபிக்க வேண்டுமாம். நீங்கள் சிறந்த ஓவியராகத் தேவையில்லை, சிறந்த தலைவராகவோ, மகானாகவோ தேவையில்லை. சிறந்தவராக வேண்டும் என்கிற அவசியம் இல்லை, காரணம் முன்பே நீங்கள் சிறந்தவராய் இருக்கிறீர்கள். நான் அழுத்தந் திருத்தமாய்ச் சொல்வேன், நீங்கள் என்னவாக வேண்டுமோ அதுவாக முன்பே இருக்கிறீர்கள்.

நீங்கள் அதைத் தெளிவாய் புரிந்து கொண்டிருக்கவில்லை என்பதை நான் அறிவேன். உங்களுடைய மெய்ம்மையை (reality) நீங்கள் எதிர்

கொண்டிருக்க மாட்டீர்கள் என்பதையும் நான் அறிவேன். உங்களுக்குள் பார்வையைச் செலுத்தி அங்குள்ள சாம்ராஜ்யத்தை நீங்கள் கண்டு கொள்ளவில்லை என்பதும் நான் அறிந்ததுதான். சக்கரவர்த்தியாக முயலும் ஒரு பிச்சைக்காரனாய் உங்களை நீங்கள் கருதிக் கொண்டிருக்கலாம். ஆனால், நீங்கள் முன்பே சக்கரவர்த்தியாயிருப்பதை நான் காண்கிறேன்.

கொண்டாட்டத்தைத் தள்ளிப்போட அவசியமில்லை. இப்போது, இந்தக் கணத்திலேயே நீங்கள் கொண்டாட முடியும். வேறென்ன வேண்டும்? கொண்டாடுவதற்கு வாழ்க்கை தேவை, அதை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். வேறென்ன தேவைப்படும் உங்களுக்கு? நீங்கள் மகுடம் சூட்டப்பட்டு, ஒரு பொன் மாளிகையில் அடைபட்டிருக்கும் நிலையில் கொண்டாடுவீர்களா? உண்மையில் அப்போது அது சத்திய மற்றதாகிவிடும். பேரரசன் ஒருவன் சிரித்தபடி வீதியில் ஆடிப்பாடிக் கொண்டிருப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? இல்லை, நடைப் பாங்குகள் ஒழுங்குமுறை.. என்று கூண்டில் அடைபட்டு, சிறைப்பட்டுக் கிடப்பான் அவன்.

மலைகளின் ஆழப்பகுதிகளில் வாழும் ஆதிவாசிகளின் வாழ்க்கையைக் கண்டு தாம் பொறாமை மிகக் கொண்டதாய் பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் ஏதோவோர் இடத்தில் குறிப்பிட்டிருக்கிறார். அவர்களின் ஆட்டத்தைக் கண்டபோது ஒவ்வொருவரும் ஒரு பேரரசனைப்போல் இருந்தனராம். அவர்கள் மணிமகுடம் தரித்திருக்கவில்லை, ஆனால் தழைகளாலும் பூக்களாலும் அதைச் செய்து கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு பெண்மணியும் ஒரு ராணியைப் போலிருந்தாள். அவர்களிடம் கோகினூர் வைரங்களில்லை. ஆனால் அவர்கள் வைத்திருந்தது எதுவாயினும் அது இணையற்றதுதான் அவர்களுக்கு. இரவு முழுக்க ஆடிக்களித்து, ஆட்டக் களத்திலேயே அவர்கள் உறக்கம் கொண்டனர். காலையில் மீண்டும் வேலைக்குச் சென்றனர். நாள் முழுக்க உழைத்தபின் ஆடுவ தற்கும், கொண்டாடுவதற்கும் அவர்கள் தயாராயினர். ரஸ்ஸல் கூறுவார், 'அன்று நான் உண்மையிலேயே பொறாமையுற்றேன். என்னால் அதைச் செய்ய முடியவில்லையே' என்று.

ஏதோவென்று தவறாகிப் போனது. ஏதோவொன்று உங்களுக்குள் விரக்தியை அளிக்கிறது. உங்களால் ஆடமுடியாது, பாட முடியாது, ஏதோவென்று தடுத்து நிறுத்துகிறது.

முடமான வாழ்க்கையை நீங்கள் வாழ்கிறீர்கள். அதன் அர்த்தம் ஒருபோதும் நீங்கள் முடங்கிக் கிடக்க வேண்டுமென்பதாகாது, ஆனால், நீங்கள் முடமான வாழ்க்கையே வாழ்வது. சிறிதும் இயலாத வாழ்க்கையாகவே அது இருக்கிறது. உங்களைச் சாதாரணமாகவே கருதிக் கொண்டிருந்தால் நீங்கள் எப்படிக் கொண்டாட முடியும்? உங்களிடம் தனிப்பட்டதாய்ச் சொல்ல எதுவும் இல்லை. ஆனால், கொண்டாடுவதற்குச் சிறப்பாக ஏதேனும் இருக்க வேண்டுமென்று உங்களுக்கு யார் சொன்னது?

உண்மையில், சிறந்த ஒன்றின் பின்னே நீங்கள் செல்கிறபோது ஆடுவது உங்களுக்கு மிகவும் சிரமமாகிவிடும்.

சாதாரணமாயிருங்கள். சாதாரணத் தன்மையில் தவறாக எதுவும் இல்லை. சாதாரணத் தன்மையில் தான் நீங்கள் குறிப்பிடத்தக்கவராவது: எப்போது கொண்டாடுவது என்பது பற்றியெல்லாம் கவலை வேண்டிய தில்லை. அதற்கான நிபந்தகைளைப் பூர்த்தி செய்வது பற்றிக் கவலைப் பட்டுக் கொண்டிருந்தால் நீங்கள் ஒருபோதும் கொண்டாடப் போவதில்லை, பிச்சைக்காரனாகத்தான் செத்து மடிவீர்கள். ஏன் இப்போதே கொண்டாடக் கூடாது? உங்களுக்கு என்ன குறைச்சல்? இதுதான் எனது குறிப்புரை: 'நீங்கள் இப்போதே தொடங்க முடியுமெனில், திடுமென்று ஆற்றலே பெருகிவரும். நீங்கள் எந்த அளவுக்கு ஆடுகிறீர்களோ அந்த அளவுக்குப் பெருகும், நீங்கள் ஆற்றல்மிக்கவராவீர்கள்.

நிபந்தனைகளைப் பூர்த்தி செய்தாக வேண்டிய நிலை அகந்தையில் தானேயன்றி வாழ்க்கையில் அல்ல. பறவைகளால் மிகச் சாதாரண பறவைகளால் ஆடவும், பாடவும் முடிகிறது. விதிவிலக்கான பறவைகள் என்று எவையேனும் பாடியாடுவதை நீங்கள் எப்போதாவது பார்த்திருக் கிறீர்களா? முதலில் ரவி சங்கராகவோ, யஹுதிமெனுஹினாகவோ தாங்கள் இருந்திருக்க வேண்டுமென்று அவை வருந்தி வேண்டுகின்றனவா? மிகச்சிறந்த பாடகராவதற்கு இசைக் கல்லூரிக்குச் செல்லவேண்டும், அப்போதுதான் பாட முடியும் என்று வேண்டிக் கேட்கின்றனவா? அவை எளிதாய் ஆடிப்பாடுகின்றன எவ்வித பயிற்சியும் இல்லாமல்.

கொண்டாடும் திறனுடனே மனிதன் பிறந்தான்.

'பறவைகள் கூடப் பாட முடிகிறதே, உங்களால் முடியாதா?'

ஆனால், நீங்கள் அனாவசியத் தடைகளை ஏற்படுத்திக் கொண்டீர்கள், ஒரு தடை ஓட்டத்தை *(hurdle race)* அல்லவா அதன் மூலம் துவங்கிவிட்டீர்கள். அங்கே தடைகள் இருந்திருக்கவில்லை. நீங்களே தடைகளை ஏற்படுத்திவிட்டு "அவற்றைத் தாண்டிக் கடவாமல் எப்படி நாங்கள் ஆடுவது?" என்று கேட்கிறீர்கள்.

உங்களுக்கு எதிராய் நீங்கள் நிற்கிறீர்கள். உங்களுக்கு நீங்களே பகையாகிறீர்கள். உலகின் உபதேசிகள் எல்லாம் உங்களைச் சாதாரணர் என்கிறபோது, கொண்டாடுவதற்கு எப்படித் துணிவீர்கள்? நீங்கள் பொறுத் திருக்க வேண்டும். முதலில் புத்தாவாகிவிடுங்கள். முதலில் இயேசு வாகிடுங்கள், ஒரு முகமதுவாகி விடுங்கள். பிறகு உங்களால் அது முடியும்.

ஆனால், இந்த நிலை அதற்கு நேர் மாறானது. உங்களால் ஆடமுடியுமென்றால் நீங்கள் முன்பே புத்தாவாக இருப்பீர்கள். உங்களால் கொண்டாட முடியுமெனில் நீங்கள் முகமதுதான். நீங்கள் பரம சுகத்தில் இருக்க முடிந்தால் முன்பே இயேசுதான். எதிரிடையானது உண்மையானது.

எதிரிடையானது என்றாலே தவறான தர்க்கம். அது சொல்கிறது; முதலில் புத்தாவாகிடுங்கள், பிறகு உங்களால் கொண்டாட முடியும்' என்று. ஆனால், கொண்டாடாமல் எப்படி புத்தராவீர்கள்? நான் சொல்கிறேன். 'கொண்டாடுங்கள், எல்லா புத்தாக்களையும் மறந்து விடுங்கள். உங்களுடைய துல்லியமான கொண்டாட்டத்தில் நீங்களே புத்தராகிவிடக் காண்பீர்கள்.'

ஸென் மறைஞானிகள் சொல்கிறார்கள் 'புத்தா ஒரு தடை. அவரை மறந்து விடுங்கள்' என்று. போதிதர்மர் தன்னுடைய சீடர்களுக்குச் சொல்வதுண்டு, ''நீங்கள் புத்தருடைய பெயரைச் சொல்கிற போதெல்லாம் உடனே உங்கள் வாயைக் கழுவி விடுங்கள். அது அசுத்தமானது. அந்த வார்த்தையே அசுத்தமானது'' என்று. போதிதர்மரும் புத்தருடைய சீடராய் இருந்தவர்தான். அவர் சொல்வது சரிதான். 'புத்தா' என்கிற வார்த்தையில் இருந்து சிலைகளை, சிறந்த கொள்கைகளை உங்களால் உருவாக்க முடியும். அதன்பிறகு நீங்கள் புத்தராக பல பிறவிகள் காத்திருக்கும்படி ஆகும். அதற்குப் பிறகே கொண்டாடுவீர்கள். அது நடக்கிற காரியமில்லை.

லின் சி என்கிற ஸென் துறவி தன்னுடைய சீடர்களுக்குச் சொல்வார், ''நீங்கள் தியானத்தில் செல்கிறபோது, புத்தர் எதிர்ப்பட்டால் அவரை இரண்டு துண்டாய் வெட்டி வீழ்த்துங்கள். ஒரு கணமும் அவருக்கு இடமளியாதீர்கள். இல்லையேல் அவர் உங்களைப் பற்றிக் கொள்வார், அவரே தடையாகி விடுவார்'' என்று. ஒரு சீடர் கேட்டார், ''நான் தியானத்தில் இருக்கும்போது புத்தர் வந்து விடுகிறார். புத்தாக்களிடம் புத்தர் வருவார், கிறிஸ்துவர்களிடம் இயேசு வருகிற மாதிரி. அது உண்மையான புத்தர் அல்லர், அவரை எங்கும் காணமுடிவதில்லை. அப்படியிருக்கிறான் அவரை எப்படி வெட்டிப் போடுவது? எனக்கு எங்கிருந்து கத்தி கிடைக்கும்?'' என்று. குரு சொல்வார் ''உன்னுடைய புத்தரை நீ எங்கிருந்து பெற்றாய், கற்பனையில் இருந்துதானே. அங்கிருந்தே கத்தியையும் பெற்று புத்தரை இரண்டு துண்டுகளாய் வெட்டிப்போடு. உன் வழியில் போய்க் கொண்டே இரு.''

இதனை நினைவில் கொள்ளுங்கள். விழிப்பூட்டுகிறவர்களின் உபதேசங்களையெல்லாம் ஒரே வார்த்தையில் சுருக்கிச் சொல்லிவிடலாம். அந்த வார்த்தை, 'நீ எதுவாக முடியுமோ அதுவாக முன்பே இருக்கிறாய்' என்பதுதான். அதனை முழுதுமாய் உணர்ந்துகொள்ள நீங்கள் பல பிறவிகள் எடுக்க வேண்டியிருக்கும். ஆனால், ஒரு நிமிடமும் இழக்கப்படாதவாறு நீங்கள் கவனத்தோடு இருக்கவேண்டும். 'நீ அதுவாக இருக்கிறாய்' என்கிறார் ஸ்வேதகேது. நீங்கள் முன்பே அதுவாக இருக்கிறீர்கள் என்கிறபோது மீண்டும் உயர்தன்மைக்கு உரித்தாகிற அவசியம் இல்லை.

ஒரு நிலையில் இருந்து இன்னொரு நிலையை அடைகிற முயற்சி மாயை சார்ந்தது (ஏமாற்றுத்தன்மை). நீங்கள் சரியாக இருக்கிறீர்கள்,

சரிசெய்ய வேண்டியதில்லை. ஆனால், உபதேசிகள், ''நீங்கள் சாதாரண மானவர்கள் என்றும், தனிச்சிறப்பு அடைதற்கான விருப்பத்தைத் தோற்றுவித்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்கிறார்கள். அவர்கள் உங்களைத் தாழ்வாக உணரச் சொல்கிறார்கள். அவர்களால் தோற்று விக்கப்பட்ட தாழ்வுமனப்பான்மையை நீங்கள் இறுகப்பற்றிக் கொண்டு விடுகிறீர்கள்; அவர்களையுந்தான். அப்போது மேலான நிலையை எப்படி அடைவது என்பது பற்றி அவர்கள் உங்களுக்குப் போதிக்கிறார்கள்.

முதலில் உங்களுக்குள் ஒரு குற்ற உணர்வை உண்டு பண்ணு கிறார்கள். நீங்கள் பயனற்றவர் என்று பழித்துக் கூறுவதன் மூலம் அந்தக் காரியத்தை அவர்கள் செய்துவிடுவார்கள். பிறகு - குற்றமில்லாத வழியை உங்களுக்குக் காட்டுவிக்கிறார்கள்.

நான் சொல்கிறேன் நீங்கள் முன்பே அதுவாக இருக்கிறீர்கள் என்று. எல்லாமும் ஆயத்த நிலையில் உள்ளன. விருந்தைத் தொடங்குங்கள், கொண்டாடுங்கள். உங்கள் மனமோ, ''ஆனால் நான் தயாராகக் கொஞ்சம் அவகாசம் வேண்டும்'' என்கிறது. அதற்காகவே காத்திருந்தது போல் உபதேசிகள் அந்தக் கால இடைவெளியில் பிரவேசித்து விடுகிறார்கள். அந்த இடைவெளியின் வழியே அவர்கள் உங்களுடைய இருப்புணர்வில் புகுந்து உங்களைச் சர்வநாசம் செய்து விடுகிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள் ''சரிதான், அவகாசம் தேவைததான். நீங்கள் இப்போதே எப்படிக் கொண்டாட முடியும்? தயாராக மனதுக்குப் பயிற்சி அளியுங்கள்''' என்று.

''பலவற்றைத் தூக்கி எறிய வேண்டியிருக்கும், பலவற்றை அபி விருத்தி செய்து கொள்ளும்படி இருக்கும். உங்களுக்கு நீண்ட கால பயிற்சியும், கட்டுப்பாடும் தேவைப்படும்.''

''கொண்டாடுவதற்கான தகுதியைப் பெற நீங்கள் பல பிறவிகள் எடுக்க வேண்டியிருக்கும். இப்போதே எப்படிக் கொண்டாட முடியும்?'' என் பார்கள். அவ்விதமாய் உங்களுடைய உணர்வை அவர்கள் கிளறி விடுவார்கள். அப்போது நீங்கள் தணிவுற்றுச் சொல்ல முடியும் ''ரொம்ப சரி, நீண்ட காலம் தான் பிரச்சினையென்றால், இப்போது இந்நேரம் பிரச் சினையில்லை. நாங்கள் எதைச் செய்து கொண்டிருக்கிறோமோ அதைத் தொடர்ந்து செய்வோம்'' என்று.

'வானவில்லைப் போன்று வண்ணமயமான ஒருநாள் உங்கள் வாழ்விலும் வரும். நீங்கள் ஆடத்தான் போகிறீர்கள்'

இடைப்பட்ட நேரத்தில் நீங்கள் துன்புறக் கூடும், இடைப்பட்ட அந்த நேரத்தில் சுய வதை (self torture) யில் நீங்கள் மகிழ்ச்சியடையக் கூடும். நீங்கள் துன்புறுவது என்று தீர்மானித்துவிட்டால் அது பற்றிய தத்துவங்களை

உருவாக்கிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. 'நான் துன்புறுவதில் மகிழ்ச்சி அடைகிறேன்' என்று சொல்லிக் கொண்டாலே போதும். 'இப்போதே நான் எப்படித் துன்புறுவது?' என்று எவரும் கேட்காமல் இருப்பது வியப்பை அளிக்கிறது. ஒரு கட்டுப்பாடு தேவை, பயிற்சி தேவை. நான் பதஞ்சலிகளிடம் செல்வேன், மிகச்சிறந்த குருமார்களிடம் கேட்பேன், அவ்விதமாய் துன்புற்றிருப்பது எப்படி என்பதைக் கற்றுக் கொள்வேன்.

துன்புறுவதற்காகவே 'நீங்கள் பிறந்தீர்கள், துன்புறுவதற்குப் பயிற்சி தேவையில்லை என்று தோன்றுகிறது. அப்படியிருக்க ஏன் பரம சுகத்துக்கு மட்டும் பயிற்சி தேவைப்படுகிறதாம்! அவை இரண்டுமே ஒரு நாணயத்தின் இருபக்கங்கள். பயிற்சியில்லாமலே நீங்கள் துன்புற்றிருக்க முடியுமென்றால் பயிற்சியில்லாமல் சுகப்பட்டிருக்கவும் முடியுமே. இயல்பாயிருங்கள், கட்டுத் தளர்ந்தவராய் (loose), விஷயானுபவம் உடையவராயிருங்கள்.

'ஏன் காத்திருப்பது, இப்போதே தொடங்கிவிடுங்கள்'

சரியாக அடிபோடத் தெரியாவிட்டாலும் ஆடத் தொடங்குங்கள்.

உங்கள் நடனம் கலைத்திறனோடு கூடியதாயிருக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. கலைக்குப் பயிற்சி தேவைப்படும். என்னைப் பொறுத்தவரை ஆடுவதற்கு மனோபாவம் போதும். சரியான அடிமுறை களை (steps) நீங்கள் தெரிந்து கொண்டிருக்கவில்லை யென்றாலும் உங்கள் ஆட முடியும். உங்களால் ஆட முடியும் என்றால் அடி முறைகள் பற்றி என்ன கவலை? ஆட்டம் அந்த அளவில் போதுமானதுதான். அதில் உங்கள் ஆற்றல் பெருகியோடும். அது தன்னளவில் கலையாயிருந்துவிட்டால் சரி. தன்னளவில் அதுவே போதுமானது என்றால் வேறென்ன தேவை?

எனவே, நீங்கள் பிரக்ஞையின் உச்சத்தில் இருப்பதாய் என்னிடம் சொல்லாதீர்கள். நீங்கள் எங்கேயிருக்கிறீர்கள், எங்கே இருப்பதாய் எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்?

'உங்கள் கனவில் இருக்கிறது உங்களுடைய பள்ளத்தாக்கு'

உங்கள் இருட்டுக்குக் காரணம் நீங்கள் கண்ணை மூடிக் கொண்டிருப்பது தான். இல்லையேல் நான் இருக்கும் இடத்தில் நீங்கள் இருந்திருப்பீர்கள். நீங்கள் பள்ளத்தாக்கில் இருக்கிறீர்கள், நான் மலை முகட்டில் இருக்கிறேன் என்பதல்ல அது. நான் மலை முகட்டில் இருப்பது போல் நீங்களுந்தான் மலைமுகட்டில் இருக்கிறீர்கள். ஆனால் பள்ளத் தாக்கைப் பற்றியே கனவு காண்கிறீர்கள். நான் புனேயில் இருக்கிறேன், நீங்களும் புனேயில் இருக்கிறீர்கள். ஆனால் உறக்கத்தில் விழுந்ததுமே இலண்டன், நியூயார்க், கொல்கத்தா என்று கனவுகாணத் தொடங்கி விடுகிறீர்கள், ஆயிரக்கணக்கான இடங்களுக்குச் சென்று பார்க்கிறீர்கள். நான் எங்கும் செல்வதில்லை, உறக்கத்தில் புனேயில் தான் இருக்கிறேன். ஆனால் நீங்களோ குறிப்பிட்ட நோக்கமின்றி ஊர் சுற்றுகிறீர்கள்.

கண்களை மூடிய நிலையில் நீங்களும் நானிருக்கும் அதே முகட்டில் இருக்கிறீர்கள். 'ரொம்பவும் இருட்டாயிருக்கிறது' என்று சொல்கிறீர்கள்; நான் வெளிச்சத்தைப் பற்றிப் பேசுகிறபோது நீங்கள் ''ஒரு மலையுச்சியில் ஏதோ ஓர் இடத்தில் நீங்கள் இருக்க வேண்டும். நாங்கள் இருட்டில் வாழும் சாதாரணர்கள்'' என்கிறீர்கள். ஆனால், அதே மலை முகட்டில் கண்களை மூடிய நிலையில் நீங்கள் அமர்ந்து இருப்பதை நான் பார்க்கிறேன். உங்கள் உறக்கத்தில் இருந்து தட்டியெழுப்பப்படுகிறபோது அறிவீர்கள், பள்ளத்தாக்கு ஒரு போதும் இருந்திருக்கவில்லை என்பதை.

'அங்கே இருளென்பது கிடையாது உங்கள் கண்கள்தான் மூடியிருந்தன'

ஸென் குருமார்கள் செய்வது நன்றாகவேயிருக்கிறது. அவர்கள் ஒரு பிரம்பு வைத்துக் கொண்டு தங்கள் சீடர்களை அடிக்கிறார்கள். அந்தப் பிரம்பு தலைமீது இறங்கும்போது மாணவன் கண்களைத் திறந்தபடி சிரிப்பான். தானும் அதே மலை முகட்டில் இருப்பதை அவன் ஒரு போதும் அறிந்திருக்கவில்லை. தான் காண்பது ஒரு கனவாயிருக்கும் அவனுக்கு.

விழிப்போடு இருங்கள், நீங்கள் விழிப்போடு இருக்க விரும்பினால் கொண்டாட்டம் அதற்கு உதவியாயிருக்கும். 'கொண்டாடுங்கள் என்று சொல்லும்போது நான் கருதிக்கொள்வது என்ன? நீங்கள் எதைச் செய்தாலும் அதை ஒரு கடமையாய் செய்யாமல், அன்போடு செய்யுங்கள். அதை ஒரு சுமையாய் கொள்ளாதீர்கள், கொண்டாட்டமாய் செய்யுங்கள். இதுவே நான் குறிக்கும் கருத்து. தொங்கிய முகத்துடன், தெளிவற்றவராய், உணர்வற்ற நிலையில் ஒரு கடமையாய் கருதிக் கொண்டு நீங்கள் உண்ண முடியும். உணர்வில்லாமல், சுவையறியாமல் கடனேயென்று உணவை அள்ளி விழுங்க முடியும்.

'இது வாழ்க்கை, இதன் வழியில் வாழுங்கள் இது குறித்த உணர்ச்சியற்றவராயிருந்து விடாதீர்கள்.'

இந்தியர்கள் சொல்வார்கள் 'அனம் ப்ரமன்' என்று. உணவே ப்ரமன். இது கொண்டாட்டம். நீங்கள் ப்ரமனை உண்கிறீர்கள். உங்கள் உணவின் வழியே கடவுளை நீங்கள் உள்ளே தள்ளுகிறீர்கள். கடவுள் மட்டுந்தான் இருப்பது. நீங்கள் ஷவருக்கடியில் நிற்கிறபோது கடவுள்தான் குளிப்பது, காரணம், கடவுள் மட்டுமே இருப்பது. நீங்கள் காலையில் நடைப் பயிற்சி செய்யும் போது நடப்பது கடவுள்தான். காற்றிலும் கடவுள், மரங்களிலும் கடவுள் எல்லாவற்றிலும் இருக்கிறது கடவுட் தன்மை. அப்படியிருக்க ஏதோ ஒரு பளுவைச் சுமக்கிற மாதிரி எதற்காகத் தொங்கிய முகத்துடன், தெளிவற்ற நிலையில் வாழ்ந்து கொண்டிருப்பது?

'கொண்டாடுங்கள்' என்று நான் சொல்கிற போது எல்லாவற்றையும் நுட்பமாய் உணர்ந்துதான் சொல்கிறேன்.

'வாழ்க்கையில் நடனம் ஓர் அங்கமாய் இருக்கக் கூடாது, நடனமே வாழ்க்கையாகி விட வேண்டும்.'

நீங்கள் உலவி வரவும், நடனமாடவும் முடியும்.

வாழ்க்கை உங்களுக்குள் பிரவேசிக்க இடமளியுங்கள், இன்னும் அறிபவராய், இன்னும் உணர்பவராய், ஒளிவுமறைவற்றவராய், குறை காணல் முதலியவற்றுக்கு உள்ளாகக் கூடியவராய் (vulnerable) இருங்கள்.

மிகச் சிறியனவென்றாலும் அதிசயிக்கத்தக்கவைகள் உண்டு உங்களைச் சுற்றிலும். ஒரு சின்னக் குழந்தையைக் கவனியுங்கள். அவனை ஒரு தோட்டத்தில் விட்டு, கவனித்துக் கொண்டிருங்கள். அதுவே உங்கள் செயல் முறையாயும் இருக்கட்டும். அது புதுமையானது, வியக்கத்தக்கது. இந்த வண்ணத்துப் பூச்சியைப் பிடிக்க ஓடுவது, அந்த மலரைக் கையில் அகப்படுத்திக் கொள்ள ஓடுவது, சேற்றை அளைவது, மணலில் புரள்வது என்று எல்லாவிதத்திலும்.

'கடவுட் தன்மை ஸ்பரிசித்துக் கொண்டிருக்கிறது குழந்தையை'

உங்களால் வியப்புணர்வுடன் வாழ முடியுமெனில் நீங்கள் கொண்டாடுவதற்கான திறனும் பெற்றிருப்பீர்கள். அறிதலைக் காட்டிலும் வியத்தல் சிறப்பு. வாழ்க்கை ஒரு வியப்பு. அது உங்களை தொடர்ந்து வியப்பிலாழ்த்திக் கொண்டிருக்கிறது. ஆம், வாழ்க்கை ஒரு வியப்பு தான்.

'ஒவ்வொரு கணமும் புதியது உங்களால் ஊகித்தறிய முடியாதது'.

முயன்று பாருங்கள், மனப்பூர்வமாய் முயற்சி செய்யுங்கள். ஒருமுறை முயல்வதால் நீங்கள் எதையும் இழந்துவிடப் போவதில்லை. முயன்றால் எதையும் உங்களால் அடையமுடியும். ஆனால் நீங்கள் துன்பத்திற்கு அடிமையாயிருக்கிறீர்கள். அது ஏதோ மதிப்பும் உயர்வும் உடையதுபோல் அதை இறுகப்பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய பிடிப்பை கவனியுங்கள்.

நான் சொன்னதுபோல் இரண்டு வகை மனிதர்கள் இருக்கிறார்கள், கொடுஞ் செயல் மூலம் இயற்கைக்குப் புறம்பாய் இன்புறுகிறவர்கள் (sadists), தனக்குத்தானே கொடுமை செய்து வலியில் இன்புறும் மனநிலை உடையவர்கள் (masochists) என்று. ஸாடிஸ்ட்கள் பிறருக்குக் கொடுமை செய்து இன்பம் காண்கிறார்கள். மஸோகிஸ்டுகள் தன்னைத் தானே துன்புறுத்தி இன்பம் காண்பவர்கள். யாரோ கேட்டார்கள் ''மக்கள் ஏன் இப்படி அடுத்தவரை அல்லது தங்களைத் துன்புறுத்திக் கொண்டிருப்பது? வாழ்க்கையில் ஏன் அத்தனை எரிச்சல், வன்முறை?'' என்று.

அது ஒரு எதிர்மறையான நிலை. உங்களால் மகிழ்ச்சியாயிருக்க முடியவில்லையென்பதால் சித்திரவதையில் இறங்குகிறீர்கள். நீங்கள் வதைக்கவும் வதைபடவும் வன்முறையில் ஈடுபடவும் காரணம் உங்களால்

நேசிக்க முடியாமல் போனதுதான். பரிவு காட்டுவது எப்படி என்று தெரியாத காரணத்தால் தான் நீங்கள் துன்புறுத்தி மகிழ்வது. கவனமற்ற (unalert) மனதில் ஆற்றல் வன்முறையாய் உருவெடுக்கிறது. கவனமுள்ள மனதில் அதே ஆற்றல் இரக்கமாய் வடிவெடுக்கிறது. உறக்க நிலையில் அதே ஆற்றல் சித்திரவதையாய் இடம் பெறுகிறது. நீங்கள் விழித்திருக்கும் நிலையில் அந்த ஆற்றல் அன்பாகி விடுகிறது. உங்களுக்கும் மற்றும் எல்லோருக்கும் அப்படித்தான்.

வாழ்க்கை ஒரு வாய்ப்பை உங்களுக்கு வழங்குகிறது. ஆனால் ஆயிரம் காரணங்கள் இருக்கின்றன ஏதோவென்று தவறாகிவிடுவதற்கு.

நீங்கள் எப்போதேனும் கவனித்திருக்கிறீர்களா ஒருவர் துன்புற்றிருக்கையில் உங்களில் தோன்றுவது அன்பா, இரக்கமா என்று. அது அன்பின் நேரடி இனப்பிரிவு (Kind) ஆகாது. ஆனால் நீங்கள் இரக்கம் காட்டுகிறீர்கள். யாரேனும் மகிழ்ச்சியில், பரமசுகத்துடன் (bliss) கொண்டாடிக் கொண்டிருந்தால் நீங்கள் பொறாமை கொள்கிறீர்கள், மோசமாய் உணர்கிறீர்கள். மகிழ்ச்சியாயிருப்பவர் மீது இரக்கம் காட்டுவது கடினம். ஒருவர் மகிழ்ச்சியாயிருப்பதைக் கண்டு உங்களால் மனநிறைவு கொள்ள முடியுமோ? யாராவது மகிழ்ச்சியற்றிருப்பதைக் காணும்போது உங்களுக்கு நிறைவாயிருக்கும். 'குறைந்த பட்சம் நாம் மகிழ்ச்சியற்ற நிலையில் இல்லை, நம்முடைய கை ஓங்கியிருக்கிறது' என்று எண்ணிக் கொள்வீர்கள், இரக்கப்படுவீர்கள்.

பிறந்த குழந்தை ஒவ்வொன்றாய், எல்லாவற்றையும் கற்றுக் கொள்ளத் தொடங்குகிறது. சற்று முன்பாகவோ பின்பாகவோ அது கண்டுகொள்கிறது, தான் மகிழ்ச்சியற்றிருக்கும் போது ஒட்டு மொத்த குடும்பத்தின் கவனத்தையும் தன் பக்கம் ஈர்க்க முடியும் என்பதை. அவன் முக்கிய இடம் பெற்றுவிடுகிறான், எல்லாருக்கும் அவன் மீது இரக்கம் ஏற்படுகிறது, அவனிடம் அன்பு காட்டுகிறார்கள். அவன் மகிழ்ச்சியாய் ஆரோக்கியமாய் இருந்தால் எல்லாமும் நிறைவாய் தெரிகிறது, அவனைப் பற்றி யாரும் கவலைப்பட மாட்டார்கள். அவனுக்குக் காய்ச்சல் வந்து நோய்ப் படுக்கையில் கிடந்தால் ஒட்டுமொத்த குடும்பமும் அவன் மீது இரக்கம் கொண்டு விடுகிறது. குழந்தைக்கு நோயுற்றிருப்பதும், துன்பப் படுவதும் விரும்பத்தக்கதாய் படுகிறது. ஆடிப்பாடி சுறுசுறுப்பாயிருப்பது மோசமாய் தெரிகிறது. இவ்விதமாய், குழந்தை கற்றுக் கொள்வதுபோல், நீங்களும் கற்றுக் கொள்கிறீர்கள்.

என்னைப் பொறுத்தவரை குழந்தை குறித்துக் கும்மாளமிடுகிற போது குடும்பமும் மகிழ்ச்சியில் கூத்தாட வேண்டும். குழந்தை நோயுற்றால் அதைக் கவனித்துக் கொள்ள வேண்டுமே தவிர அதனிடம் இரக்கம் செலுத்தக் கூடாது. கவனிப்பு சரி, இரக்கம் தவறு. அன்பின்றி, பாராமுகமாய்

நடந்து கொள்வது மேலோட்டமாய் பார்க்கும் போது கடினமாய் தெரியலாம். குழந்தை நோயுற்றிருக்கும் நிலையில் பரிவு காட்டாமல் இருப்பதாவென்று. குழந்தையைக் கவனித்துக் கொள்ளுங்கள், மருந்து கொடுங்கள் ஆனால் விருப்பு வெறுப்பற்றவராய் (indifferent) இருங்கள்.

உங்களுடைய இரக்கம், பரிவு இவற்றின் மூலம் குழந்தையை நீங்கள் எப்போதைக்குமாய் சீரழியச் செய்து விடுகிறீர்கள். அவன் துன்பத்தைப் பற்றிக் கொள்வான், துன்பம் முக்கியத்துவம் கொண்டு விடுகிறது. அவன் ஆடிபாடி, மகிழ்ச்சியுடன் கூச்சலிட்டு வீட்டைச் சுற்றி வருகிற போதெல்லாம் எல்லாரும் எதிர்ப்பு காட்டுவீர்கள். அந்தக் கணத்தில் அவனோடு கொண்டாடி மகிழுங்கள். ஒட்டு மொத்த உலகமும் வேறாகிவிடும்.

ஆனால், இந்த நிமிடம் வரை சமூகம் சரியில்லாத வழியில் நடந்து கொண்டிருக்கிறது, அதே வழியைத் தொடர்ந்து கொண்டிருக்கிறது. அதனால்தான் நீங்கள் துன்பத்தைப் பற்றிக் கொண்டிருப்பது. நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள், ''சாதாரணர்களாகிய எங்களுக்கு இந்தக் கணத்தில் இங்கே, இப்போதே கொண்டாடுவது எப்படிச் சாத்தியமாகும்'' என்று. இல்லை, அது சாத்தியமில்லைதான். நீங்கள் கொண்டாடுவதற்கு யாரும் இடமளிக்க வில்லையே. உங்கள் மனதில் உங்களுடைய பெற்றோர்கள் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறார்கள். உங்களது மரணத்தறுவாயிலும் உங்கள் தந்தையும் தாயும் உங்களைத் தொடர்ந்தபடி இருக்கிறார்கள். அவர்களுடைய மரணத்துக்குப் பிறகும் கூட அவர்கள் உங்களைத் தொடர்வார்கள். அவர்கள் தங்களைப் போலவே உங்களையும் பாழடித்து விடுகிறார்கள். ஒட்டு மொத்த அமைப்புமே தவறானது, உளவியல் ரீதியில் தவறாகிப் போனது. அதற்குக் காரணங்களும் உண்டு. அதனால் தான் தவறான ஒன்று தொடர்கிறபோது அதைத்தடுத்து நிறுத்த முடிவதில்லை. அது சாத்தியமற்றதாய் தோன்றுகிறது.

உண்மையில், அதற்குக் காரணங்கள் இருக்கின்றன. ஒரு தந்தை தமக்கென்று காரணங்கள் வைத்திருக்கிறார். அவர் செய்தித்தாள் படித்துக் கொண்டிருக்கும் போது குழந்தை குதித்து, கும்மாளமிட்டு, சிரிக்கிறது. ஆனால் அந்தத் தந்தை புரிதலுள்ளவராய் இருக்க வேண்டும். ஒரு செய்தித்தாளுக்கு என்ன பெறுமானம் இருக்க முடியும். நீங்கள் அதை அமைதியாய் படித்து முடிக்க இயலும். ஆனாலும் அதிலிருந்து நீங்கள் பெறக் கூடியது என்ன? செய்தித்தாளை வீசியெறியுங்கள். ஆனால் அந்தத் தந்தை அரசியலிலோ தொழில் துறையிலோ இருந்தால் நடப்புகள் பற்றி அறியவேண்டிய அவசியம் அவருக்கு இருக்கும். அவர் செல்வம், தகுதி இவற்றுக்கான பேராவல் கொண்டவராயிருக்கிறார், செய்தித்தாள் அவருடைய பேராவலின் ஒரு பகுதியாகி விடுகிறது. உயர்ந்த நோக்கம் கொண்டவர்களும், குறிக்கோளை அடைய முயல்பவர்களும் உலகத்தை

அறிந்து கொள்ள வேண்டியிருக்கும். குழந்தை அவர்களுக்கு அமைதியைக் குலைப்பதாய் தெரியும்.

உணவு சமைத்துக் கொண்டிருக்கும் தாயிடம் கேள்விகள் கேட்டுக் கொண்டும் குதித்துக் கொண்டிருக்கிறது குழந்தை, அவள் அதை எதிர்கொள்கிறாள். பிரச்சினைகள் அனேகம். தாய் சமைத்தாக வேண்டும். ஆனால் அவற்றிலும் பார்க்கக் குழந்தைக்குத்தான் முந்துரிமை அளிக்கப்பட வேண்டியது.

'குழந்தையே உலகமாகிவிடும் குழந்தையே நாளைய பொழுதுமாகும் குழந்தையிடம் இருந்தே உருவாகப் போகிறது புதியதோர் மனித இனம்'

அவனே முதன்மையானவன், முந்துரிமை அவனுக்குத்தான். செய்தித்தாள்களை பிறகு படித்துக் கொள்ள முடியும். படிக்காவிட்டாலும் பெரிதாய் ஒன்றும் இழப்பு ஏற்பட்டுவிடாது. தினமும் அதே அபத்தந்தான். இடங்கள் மாறும், பெயர்கள் மாறும். மற்றபடி அதே உதவாக்கரை சமாசாரங்கள்தாம் தொடர்கின்றன. செய்தித்தாள் கிறுக்கானது.

உணவு கொஞ்சம் தாமதமாய் தயாராகலாம். ஆனால், அந்தக் குழந்தையின் எதையும் அறிந்துகொள்ள வேண்டும் என்கிற ஆவல் தாமதப்பட்டு விடக்கூடாது காரணம் இப்போதுள்ள அவனுடைய மனநிலை மீண்டும் வருமென்று சொல்ல முடியாது. இந்த நேரம் அவன் ஆர்வத்துடன் இருக்கிறான், எதையேனும் செய்யக் கூடும்.

ஆனால், தங்கள் குழந்தைகளோடு குழந்தையாய் குதித்துக் கும்மாள மிடுகிற, தரையில் உருண்டு புரள்கிற தாய்களைப் பார்த்திருக்கிறீர்களா? தாய்மார்கள் கருத்தூன்றியவர்கள், தந்தையரோ ஆழ்ந்து சிந்திப்பதில் அவர்களை மிஞ்சியவர்கள். தங்களுடைய உலகத்தை அவர்கள் தோளில் சுமந்து கொண்டிருப்பார்கள். குழந்தையோ முற்றிலும் வேறான உலகத்தில் வாழ்வது. நீங்கள் அவனை உங்களுடைய கவலை நிரம்பிய, துன்பகரமான வாழ்க்கையில் வலுக்கட்டாயமாய் நுழைக்கப் பார்க்கிறீர்கள். வியப்பும், புதுமையும் பண்பாய்க் கொண்டு அவன் வளர முடியும், அந்தப் பண்பு இங்கே, இக்கணத்தில் இருக்கிறது.

நான் இதைத்தான் உண்மையான புரட்சி என்பேன். வேறெந்தப் புரட்சியும் மனிதனுக்கு உதவப் போகிறதில்லை. ரஷ்ய, சீன, பிரெஞ்சுப் புரட்சி என்று நடந்த எதுவும் அவனுக்கு உதவிடவில்லை. அடிப்படையில் பெற்றோர் - குழந்தை அமைப்பு (pattern) அப்படியே தான் தொடர்கிறது. அதற்குக் காரணம் இருக்கிறது. ஒரு பொதுவுடைமை உலகை நீங்கள் உருவாக்கலாம். ஆனால் முதலாளித்துவ உலகுக்கும் அதற்கும் அதிக வித்தியாசமிருக்காது.

மேற்பரப்பில்தான் குறிப்புச் சீட்டுகள் (labels) வேறுபடும். ஒரு சமதர்ம உலகை நீங்கள் படைக்க முடியும், ஒரு காந்திய உலகை நீங்கள்

தோற்றுவிக்க முடியும். ஆனால் அதிலொன்றும் வித்தியாசமிருக்காது. காரணம், அடிப்படையான மாற்றம் என்பது தாய் தந்தை மற்றும் குழந்தைக் கிடையில் நிகழ வேண்டியது. பெற்றோர்களுக்கும் குழந்தைக்கும் ஏதோவோர் இடத்தில் இணைப்பு இருக்கிறது. அந்த இணைப்பு - தொடர்பு வளையம் மாற்றப்படாவிடில் உலகம் பழைய தடத்திலேயேதான் போய்க் கொண்டிருக்கும்.

நான் இதனைச் சொல்லும்போது துன்புறுதலுக்குச் சமாதானம் என்ற கருத்தில் சொல்லவில்லை. நான் கொடுக்கிற விளக்கத்தைக் கொண்டு நீங்கள் விழிப்படைய முடியும். எனவே, உங்கள் மனதுக்குள், 'இப்போ என்னத்தைச் செய்ய முடியுமாம். நான் முன்னாடியே நாற்பதில் (ஐம்பதில், அறுபதில்) இருக்கிறேன், என்னுடைய பெற்றோர்களும் செத்துப் போயா யிற்று. அவர்கள் உயிரோடு இருந்தாலும் என்னால் கடந்த காலத்தை நடந்து முடிந்ததைத் தலைகீழாய் மாற்ற முடியாது. நான் இருக்கிறபடிக்குத் தான் வாழ வேண்டியிருக்கும் என்று சொல்லிக் கொண்டிருக்காதீர்கள். இல்லை, இதை நீங்கள் புரிந்து கொண்டுவிட்டால் சுலபமாய் இதிலிருந்து விடுபட முடியும். அதை அப்படியே பற்றிக் கொண்டிருக்க அவசியமில்லை.

நீங்கள் மீண்டும் ஒரு குழந்தையாக முடியும். இயேசு சரியாய்ச் சொன்னார் ''சிறு குழந்தைகளைப் போன்றவர்கள்தாம் என் தேவனின் ராஜ்யத்தில் பிரவேசிக்க முடியும்'' என்று. ரொம்ப சரி! யார் சிறு குழந்தைகளைப் போன்றவர்களோ அவர்கள்...

இதுதான் புரட்சி, முழுமையான மாற்றத்தை ஏற்படுத்துவது: ஒவ்வொருவரையும் ஒரு சிறிய குழந்தை போலாக்குவது. உடம்பு வளர்ச்சி காணலாம், ஆனால், பிரக்ஞை (consciousness) யின் தன்மை தீங்கு விளைவிக்கும் எண்ணம் இல்லாததாய், தூய்மையாய் ஒரு குழந்தை யினுடையதைப் போல் இருக்கவேண்டும்.

நீங்கள் இருக்க வேண்டிய இடத்தில்தான் இருந்து கொண்டிருக் கிறீர்கள்.

'எங்கே இருக்கவேண்டுமென்று முயற்சி செய்தீர்களோ அங்கேதான் இருப்பது'

கொஞ்சம் முயற்சி செய்தால் நீங்கள் பற்றிக் கொண்டிருக்கும் துன்பத்திலிருந்து வெளியே வந்துவிட முடியும்.

உங்களைத் துன்பத்தில் முதலீடு செய்யாதீர்கள், கொண்டாட்டத்தில் முதலீடு செய்யுங்கள். நீங்கள் -

'வாழ்க்கையை நோக்கி ஓரடி வைத்தால் வாழ்க்கை ஆயிரம் அடிகள் வைக்கும் உங்களை நோக்கி'

நீங்கள் பற்றியிருக்கும் துன்பத்தில் இருந்து வெளியே ஓரடி எடுத்து வையுங்கள். மனம் உங்களை பின்னோக்கி இழுத்துச் செல்லும். மனதைப் பொருட்படுத்தாமல் மனதிடம் சொல்லுங்கள்' பொறு, நான் போதும் போதும் என்கிற அளவுக்கு உன்னோடு வாழ்ந்தாயிற்று, இப்போது என்னை மனம் இல்லாதவனாய் வாழ விடு' என்று. அதைத்தான் செய்கிறது குழந்தை: மனதுக்கு வெளியில் வாழ்கிறது அல்லது மனம் இல்லாமல் வாழ்கிறது.

**மூன்றாவது கேள்வி:**

**ஏன் சில நேரங்களில், நுட்ப உணர்வு இருந்தும், ஓர் எதிர்மறையான மனோபாவம் என்னுள் வளர்கிறது?**

எதிர்மறை நேர்மறை மனோபாவம் இரண்டுமே வளரும். நீங்கள் மிகப்பெரிய அளவில் மகிழ்ச்சியாயிருக்க விரும்பினால் அருகருகாய் மகிழ்ச்சியின்மையும் பெரிய அளவில் வளரும். எதிர்மறையான ஒன்று வளரவேண்டாம் என்று நீங்கள் விரும்பினால் நேர்மறையானதையும் நீங்கள் நீக்கித்தானாக வேண்டும். இதுதானே நடக்கிறது. கோபப்படாமல் இருக்கும்படி நீங்கள் கற்பிக்கப்பட்டிருப்பீர்கள். உங்களால் கோபப்பட முடியாது போனால் பிரிவின் நிலையும் மோசமாகிவிடும். ஆம், பிரிவு காட்டவும் முடியாமல் போய்விடுவீர்கள். நீங்கள் வெறுக்கக் கூடாது என்று கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள், ஆனால் நேசம் துயர்ப்படும். ஆம், உங்க ளுடைய நேசிக்கும் வல்லமை அதனால் போய்விடும். இதுதான் சிககல்.

நேசமும் வெறுப்பும் சேர்ந்தே வளர்பவை. உண்மையில் அவை இரண்டு செயல்களல்ல. மொழி உங்களிடம் தவறான எண்ணப் பதிவை உண்டு பண்ணிவிடுகிறது. 'விருப்பு' 'வெறுப்பு' என இரண்டு வார்த்தை களை நாம் பயன்படுத்தியிருக்கக் கூடாது. 'விருப்பு வெறுப்பு' என்று ஒரே வார்த்தையாய் பயன்படுத்தியிருக்க வேண்டும். இரண்டுக்குமிடையில் வார்த்தைகளை இணைக்கும் குறி (-) கூட இருக்கக் கூடாது. காரணம் அதுகூட அவை இரண்டெனக் காட்டும்.

'வெளிச்சம் இருட்டு இரண்டும் ஒன்றே வாழ்க்கை மரணம் இரண்டும் ஒன்றே'

அன்பு வளரும் போதே வெறுக்கும் திறனும் வளர்கிறது. இதுதான் மனித மனத்தின் பிரச்சினை.

ஆக, இரண்டு சாத்தியங்கள் மட்டுமே உள்ளன. ஒன்று, அன்புடன் வெறுப்பும் கூடவே வளர இடமளிப்பது அல்லது வெறுப்புடன் அன்பையும் கொன்று போடுவது. இதுவரை இரண்டாவது மாற்றுதான் தெரிவு செய்யப்பட்டிருக்கிறது. மதங்கள் யாவும் இரண்டாவது மாற்றையே தெரிவு செய்திருக்கின்றன. அன்பை இழந்தாவது வெறுப்பை வீழ்த்த வேண்டும், கோபத்தை வெட்டிச் சாய்க்க வேண்டும். எனவேதான் அவர்கள் அன்பைப்பற்றிய போதனை செய்யும்போது 'வெறுக்காதே' என்று

சொல்வது. அவர்களுடைய அன்பு உண்மையற்றது, அது வெறும் பேச்சளவில்தான்.

வாழ்க்கை இப்படி இருக்கிறது - எதிரிடையானவை சேர்ந்திருக்கின்றன. வாழ்க்கை ஒரு சுழலச்சுடன் இருக்க முடியாது, ஒருமிதத்தாய் இரண்டு சுழலச்சுகள் அதற்குத் தேவைப்படும். மின்சாரத்தில் நேர்முனை எதிர்முனை, ஆண் பெண் மாதிரி. ஆண் மட்டுமே உள்ள உலகை உங்களால் சிந்திக்க முடியுமா? அது செயலற்ற உலகமாகத்தான் இருக்கும். ஆணும் பெண்ணும் ஒன்றாய் இயங்கும் இரண்டு சுழலச்சுகள். உண்மையில் சொல்லப் போனால் ஆண் என்பதும் பெண் என்பதும் அத்தனை சரியாகாது. அவற்றுக்கிடையில் இணைப்புக்குறி (-) இல்லாமல் ஆண் பெண் என்று சொல்லுங்கள். அவை சேர்ந்தே இருக்கின்றன.

வெறுப்பு அன்பின் பகுதியாய் இருக்குமெனில் அதில் தவறேதுமில்லை. இதுவே என்னுடைய கற்பித்தல். கோபம் பரிவின் ஒரு பகுதியாயிருக்குமெனில் அதில் தவறேதுமில்லை. அது நேர்த்தியானது. புத்தர் உங்களிடம் கோபம் கொள்வதை நீங்கள் விரும்பமாட்டீர்களா? அது ஒரு வகையில் ஆசி, கருணை மாதிரிதானே. புத்தர் உங்களிடம் கோபப்படுகிறார். பரிவின் முழுமையில் கோபமும் இனியதாகிறது.

அன்பில் வளருங்கள், வெறுப்பையும் வளர விடுங்கள். அது உங்களுடைய அன்பின் பகுதியாயிருக்கட்டும். நான் உங்களிடம் சொல்கிறேன் அன்பு செய்வது போலவே வெறுக்கவும் செய்யுங்கள் என்று. அங்கே ஆற்றல் புறமாற்றமும் *(transfiguration)* இயல்பு மாற்றமும் *(transformation)* அடையும். உங்கள் வெறுப்பும் அன்பைப்போல் ஒரே தன்மையைக் கொண்டிருப்பதால் மிகவும் இனியதாகிறது. சில நேரங்களில் ஒருவர் கோபப்பட வேண்டியிருக்கும். நீங்கள் உண்மையிலேயே பரிவு கொண்டவராயிருந்தால் உங்கள் பரிவுடன் கோபத்தையும் பயன்படுத்துங்கள்.

உண்மையில் எதிரெதிர்க் கொள்கை நிலைகள் (polarities) உண்டு என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதற்கோர் இணக்கத்தை ஏற்படுத்துவது எப்படி? பழைய முறை அவற்றைத் துண்டுகளாக்கி விடுவதுதான். வெறுப்பைக் கைவிட்டு, அன்பு செய்ய முயற்சிப்பது. அப்போது அன்பு உண்மையற்றதாகிவிடும் காரணம் அங்கே ஆற்றல் இருப்பதில்லை. அன்பைக் குறித்து நீங்கள் மிகவும் அஞ்சுவீர்கள் காரணம் அன்பு வளரும் போது கூடவே வெறுப்பும் உடனடியாய் வளர்ந்து விடுமே. வெறுப்புக்குறித்த அச்சம் வளர அன்பு இயக்க வகையில் அடக்கி வைக்கப்பட்டதாகி விடும். அப்போது அன்பைப் பற்றி நீங்கள் பேசுவீர்கள். ஆனால், உண்மையிலேயே அன்பு செய்ய மாட்டீர்கள். அன்பு வார்த்தையாகிவிடும், வாய்மொழியாகிவிடும் அதில் உயிர்ப்பு இருக்காது, உண்மை இருக்காது.

நான் வெறுக்க வேண்டுமென்று கூறவில்லை. அன்பு செய்யுங்கள் என்று தான் கூறுகிறேன். நீங்கள் அன்பில் வளரும்போது கூடவே வெறுப்பும் வளர்ந்து விடுவது உண்மை. அது பற்றிக் கவலைப்படாதீர்கள். நீங்கள் அன்பில் வளர்ந்து கொண்டே போங்கள், வெறுப்பை அன்பு முற்றிலும் தன் வயப்படுத்திக் கொள்ளும். வெறுப்பைப் பிரதிபலிக்காமல் ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு அன்பு மகத்தானது. பரிவு பெரியது மிகப் பெரியது. ஓரளவிலான கோபத்தை அது உட்கிரகித்துக் கொண்டுவிடும். அது விரும்பத்தக்கது, உண்மையில் பரிவு கோபமில்லாவிடில் உப்பு இல்லாத உணவு போலாகிவிடும். அது உப்பற்றுப் போனால் சலிப்பூட்டுவதாகிவிடும்.

எப்போதுமே நேர்மறையானதுடன் எதிர்மறையானதும் கூடவே வளரும். உதாரணமாய் - ''உங்களுடைய உடம்பின் இடது பக்கம் தவறாகி விட்டிருக்கிறது அதை வளர விடாதீர்கள். வலது பக்கம் மட்டுமே சரியா யிருக்கிறது அதை வளரவிடுங்கள் இடது பக்கத்தை அடக்கி முழுதுமாய் நீக்கிவிடுங்கள்'' என்று சொல்கிற ஒரு சமூகம் இருந்தால் என்ன நேரிடும்? ஒன்று, நீங்க்ள் முடமாகி விடுவீர்கள், இடது பக்கத்தை வளரவிடாமல், செய்வதால் வலது பக்கமும் வளராமல் போய்விடும், அவை சேர்ந்தே வளர்கிறவை. நீங்கள் சிறிய உருவம் படைத்தவராகி (pigmy) விடுவீர்கள் அல்லது பாசாங்கு செய்து ஏமாற்றுபவராகி விடுவீர்கள். உங்களுடைய இடது பக்கத்தை மறைத்துக் கொண்டு 'எனக்கு வலப்பாகம் மட்டுமே இருக்கிறது' என்பீர்கள். நீங்கள் மதப்பற்றுள்ள மனிதர்களைப்போல் பாசாங்குக்காரராய், நம்பத்தகாதவராய், நடமாடும் புளுகு மூட்டையாகி விடுவீர்கள்.

மதத்தில் பெரும் நம்பிக்கை கொண்டதாய் சொல்லிக் கொள்பவர் களில் நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது பேர் கடைந்தெடுத்த பொய்யர்கள் தாம். அவர்கள் எதைச் செய்தாலும் சற்றும் பொருத்தமற்றதாய் இருக்குமே யன்றி அதில் உண்மை இருக்காது. தாங்கள் வெறுப்பதில்லை, என்றும், அன்பு செய்வதாயும் அவர்கள், சொல்கிறார்கள். அது சாத்தியமற்றது. பிரபஞ்ச இருப்பு (existence) பற்றிய கணக்கியலுக்கு எதிரிடையானது. அவர்கள பொய்யர்களாகத்தான் இருக்கவேண்டும். அவர்களுடைய தனிப்பட்ட சங்கதிகளை ஆழ்ந்து பரிசீலனை செய்ய அவசியமில்லை. அது அமைப்புக்கு எதிரானது, சாத்தியமற்றது. தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் பேர் பாசாங்கு செய்து ஏமாற்றுபவர்களையும், ஒரு சதவிகிதம் பேர் எளிமையானவராயும் இருக்கிறார்கள்.

இந்த தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் பேரும் புத்திக் கூர்மை, அறிவு உடையவர்கள். அவர்கள் இரண்டு பக்கமும் வளர்ந்தாலும் இடது

பக்கத்தை மறைக்கிறவர்கள். இடது பக்கத்தை மறைத்துக் கொண்டு வலது பக்கத்தைப் பற்றி மட்டுமே பேசுகிறவர்கள். அவர்கள் வலது பக்கத்தை உலகுக்குக் காண்பிக்கிறார்கள், இடது பக்கம் அவர்களுடைய அந்தரங்க உலகமாகி விடுகிறது. அவர்களுடைய வீட்டுக்குப் புழக் கடைக் கதவு இருக்கிறது. அவர்கள் முன்புற வாசலில் ஒருவிதமாயும், பின்புறத்தில் இன்னொரு விதமாயும் இருக்கிறார்கள். அந்த ஒரு சதவிகிதத்தினர் கபடற்றவர்களாய், எளிமையானவர்களாய் வாய்ஜாலமோ அறிவுத்திறனோ அற்றவர்களாய் தந்திரமேதும் இல்லாதவர்களாய் சிறிய உருவம் உடையவர்களாய் (pigmics) இருந்து விடுகிறார்கள்.

நான் மத நம்பிக்கையுள்ளவர்களில் இருவகையினரை சந்தித்திருக்கிறேன். தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத்தினர் பாசாங்குக் காரர்கள், ஒரு சதவிகிதத்தினர் சிறிய உருவம் உடையவர்கள். பெரிய அளவிலான முழு தொகுப்புமே பயனற்றது, கடினமானது, அபத்தமானது. நீங்கள் அப்படியாக வேண்டுமென்று நான் விரும்பமாட்டேன், நீங்கள் உருவில் சிறியவராவதையும் (pigmy) விரும்பமாட்டேன். உங்களுடைய முழுமையான உயரத்தை நீங்கள் அடைய வேண்டும். ஆனால் எதிர்மறைக்கும், நேர்மறைக்கும் தடையற்றிருக்கும் போதுதான் அது சாத்தியம். இரண்டுமே உங்களுடைய சிறகுகள்.

*'ஒற்றைச் சிறகுடன் எந்தப் பறவையேனும் பறக்க முடியுமா?'*

நீங்கள் எப்படி ஒற்றைக் காலுடன் நடப்பீர்கள்? வாழ்வின் ஒவ்வோர் அடுக்கிலும் அதேதான் எவ்வித மாற்றமுமில்லாமல்; இரண்டு அவசியப் படும். எதிரிடைநிலையில் இறுக்கத்தையும், இயக்கத்துக்கான சாத்தியத் தையும் அது வழங்குகிறது. அவை ஒன்றுக்கொன்று முற்றிலும் எதிரானதாய் தோன்றலாம். ஆனால் நிறைவு செய்யும் தன்மை (complementary) கொண்டவை.

உண்மையில் அவை எதிரிடையானவை அல்ல, எதிரெதிர் முனைகள் (poles) கொண்டவை, அவ்வளவே. அவை வளர்ச்சியில் ஒன்றுக்கொன்று உதவும். உங்களுடைய உச்ச அளவு உயரத்துக்கு நீங்கள் வளர வேண்டு மென்று நான் விரும்புகிறேன், எவ்விதத்திலும் நீங்கள் பாசாங்குக் காரர்களாய் இருப்பதை விரும்பவில்லை. உண்மையானவராய் இருங்கள்.

உங்களுக்கு என்னுடைய செய்தி இதுதான்: அன்பு மகத்தானது. வெறுப்பைப் பற்றி நீங்கள் கவலைப்பட அவசியமில்லாத அளவுக்கு அது மகத்தானது. வெறுப்பும் ஒரு பகுதியாய் அதனுடன் இருந்துவிட்டுப் போகட்டும், அதுவும் வளரட்டும். அது உங்கள் ருசிக்கு உப்பாய் இருக்கும். பரிவு மிகப்பெரிது, அந்த அகன்ற பெரும் வானத்தின் ஒரு மூலையில்

கோபமும் இருந்துவிட்டுப் போகட்டுமே. அதிலொன்றும் தவறாகிவிடாது. கோபம் பரிவின் ஒரு பகுதியாய் இருக்கலாம், பரிவோடு இல்லாமல் அது தனித்து இருந்துவிடக் கூடாது. வெறுப்பு அன்பின் ஒரு பகுதியாய், மரணம் வாழ்வின் ஒரு பகுதியாய், வேதனை மகிழ்ச்சியின் ஒரு பகுதியாய் துன்பம் கொண்டாட்டத்தின் ஒரு பகுதியாய் (பாக்கியத்தின் பகுதியாயும்), இருள் ஒளியின் ஒரு பகுதியாய் இருக்கவேண்டும். அப்போது எதுவும் தவறாகிவிடாது, அறமுறை விதியை மீறுவதும் (sin) ஒழுக்கத்தின் ஒரு பகுதியாய் இருக்கவேண்டும்.

உயர்ந்தவராயிருங்கள். உங்களுடைய உச்ச அளவு உயரத்துக்கு எழுங்கள். உருவில் சிறியவராய் இருந்து விடாதீர்கள். நீங்கள் குள்ளர்களாய் இருந்துவிட்டால் நிறைவாய் உணர முடியாமல், கடவுளுக்கெதிராய் குறைப்பட்டுக் கொண்டிருப்பீர்கள். அச்சம் சிறிதும் இன்றி உங்களுடைய உயரத்துக்கு எழுங்கள். எதிர்மறையானதும் உங்களுடன் எழக்கூடும். அதுவும் அழகுதான். எதிர்மறை ஒரு பகுதி, நிறைவு செய்யும் தன்மை உடையது, ஆனால், அந்த எதிர்மறை நேர்மறையின் ஒரு பகுதியாய் இருந்துவிட வேண்டும். ஒன்றைப் புரிந்துகொள்ளுங்கள், எதிர்மறையே முழுமையாகிவிடாது, நேர்மறையும் எதிர்மறையின் ஒரு பகுதியாகிவிடாது.

வாழ்க்கை எப்படி மரணத்தின் ஒரு பகுதியாகும்? மரணம் என்பது ஓர் இன்மை (absence). வெளிச்சம் எப்படி இருட்டின் ஒரு பகுதியாகும்? இருட்டு என்பது வெளிச்சம் இல்லாமையன்றி வேறேயென்ன? ஆனால், வெளிச்சம் இருட்டை விழுங்கிவிடுகிறது.

வெளியே பாருங்கள் - சூரியன் உதயமாகியிருக்கிறது. மரங்களில் ஒளி வர்ஷிக்கிறது. மரங்களுக்குக் கீழே வெளிச்சக் கீற்றுகளும், நிழல் துண்டங்களிலும், எதுவும் தவறாகிவிட்டிருக்கவில்லை.

களைத்துப்போன பயணி ஒருவன் அந்த மரத்தடியில் வந்தமர்கிறான், தங்குகிறான். மரத்துக்கு வெளியே வெப்பம், மரத்துக்குக் கீழே குளிர்ச்சி, மரத்தின் கீழே உள்ள அந்த நிழலும் ஒரு பகுதி.

எதிர்மறையான எல்லாமும் நேர்மறையின் பகுதியாயிருக்க விடுங்கள். நேர்மறையின் இருப்பில் எதிர்மறை இல்லாததாக தான் மாறும் இது சாத்தியமே.

எனக்கும் இப்படி ஆகியிருக்கிறது. அதனால்தான் என்னைப் புரிந்துகொள்வது கடினமாய் தெரிவது. நான் இரு முனைகளில் ஒன்றில் இருக்க வேண்டுமென்று நீங்கள் விரும்புவீர்கள், நானோ இரண்டுமாய் இருக்கிறேன். ஆனால், எனக்கு நேரிட்டது போலவே உங்களுக்கும் நேரிடும், சரியான அளவில் இயங்கிக் கொண்டிருக்கிற எல்லாருக்குமே இது

நிகழ்கிறதுதான். நான் எதையும் ஏற்றுக் கொள்ள மறுப்பதில்லை, காரணம், தொடக்கத்தில் இருந்தே இது என்னுடைய ஆழ்ந்த கவனிப்புக் குரியதாயிருக்கிறது. நீங்கள் ஏதேனும் ஒன்றை மறுத்தால் ஒருபோதும் உங்களால் முழுமையடைய முடியாது. அந்த ஒன்று தவறவிடப் பட்டதாகவே இருக்கும்.

என்னைப் பொறுத்தவரை எதையும் மறுக்காமல் எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டுவிட வேண்டும் என்பது ஆழ்ந்த கவனத்துக்குரியதாயிற்று.

வாழ்க்கை ஓர் ஒற்றை இசைக் குறிப்பாய் இருந்துவிடக் கூடாது. அதுவே இசையாயிருக்க வேண்டும். ஒற்றைக் குறிப்பு எத்தனை நேர்த்தியானதாயினும் சலிப்படையச் செய்துவிடும். பல குறிப்புகள் வெவ்வேறான பல குறிப்புகள் ஒத்திசைவு (*harmony*) பெறுகிறபோது ரொம்பவும் இனியதாகிவிடும். இனிமை என்பது நேர்மறையிலும் இல்லை, எதிர்மறையிலும் இல்லை, ஒத்திசைவில் இருக்கிறது. மீண்டும் சொல்வேன்; நேர்த்தியானதென்பது உண்மையிலும் இல்லை, பொய்ம்மை யிலும் இல்லை. அது பிரிவிலும் இல்லை, கோபத்திலும் இல்லை. நேர்த்தி இனிமை எல்லாம் இசைவில் (*unity*) இருக்கிறது. எங்கே எதிரிடை யானவை நேருக்கு நேர் சந்திக்கின்றனவோ அங்கே கடவுளின் ஆலயம் இருக்கிறது. எங்கே முரண்பாடுகள் பொருந்துகின்றனவோ அங்கே கோபுரம் உருவாகும். அது படிப்படியாய் ஏற்றப்பெறும் இசையொலி யாகும்.

**இறுதிக் கேள்வி:**

> **நுட்ப உணர்வோடு இருப்பதுதான் சமயம் சார்ந்து இருப்பது என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால், நுட்ப உணர்வு என்னைச் சிற்றின்பத்தை நோக்கி இட்டுச் செல்வதாய் எனக்குப் படுகிறது. எனக்கு என்ன வழி?**

பிறகென்ன. ஆசைகளுக்கு இடம் கொடுத்து அனுபவியுங்கள். உங்கள் இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுங்கள். வாழ்க்கையைப் பற்றிய அச்சம் எதற்கு? ஏன் தற்கொலைக்கு முனைவது? விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதில் என்ன தவறு? சிற்றின்பத்தை நாடுவதில் என்ன தவறு?

நீங்கள் அப்படிக் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். இதைத்தான் நான் சொல்கிறேன். எளிதில் உணர்ச்சி வயப்படுகிற உங்கள் நிலை குறித்து நீங்கள் அஞ்சுகிறீர்கள், காரணம் நீங்கள் உணர்ச்சிமிக்கவராய் இருந்தால் பிறகு எல்லாமும் நுட்ப உணர்வுடன் வளரத் தொடங்கிவிடும். சிற்றின்பத்துக்கு ஆட்படுகிற நிலை வளரட்டும். அது அருமையான விஷயம், சிற்றின்பத்தை

நாடுவதால் எதுவும் தவறாகிவிடாது. மரித்துப் போன வனுக்கும் உயிருள்ள மனிதனுக்கும் என்ன வேறுபாடு? மரித்தவன் புலனுணர்வோடு இல்லை. நீங்கள் தொட்டால் அந்தத் தொடுகையை அவனால் உணரமுடியாது. நீங்கள் முத்தம் கொடுத்தால் அவன் பதிலுக்குக் கொடுக்கிறதில்லை.

ஓவியர் பிக்காஸோ பற்றி நான் கேள்விப்பட்ட ஒரு குட்டிக்கதை:

பிக்காஸோவின் ஓவியங்களை வியந்து பாராட்டிய பெண் ணொருத்தி ''நேற்று நான் ஒரு நண்பர் வீட்டுக்குச் சென்றிருந்தபோது உங்களுடைய உருவப்படத்தைக் கண்டேன். நான் பெரிதும் கவரப் பட்டேன், அது எனக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று. அந்தப் படத்தை முத்தமிட்டேன் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்'' என்றாள்.

பிக்காஸோ அவளைக் கூர்ந்து நோக்கியவாறு சொன்னார், 'சரிதான், அந்தப்படம் பதிலளித்ததா? உங்களைப் பதிலுக்கு முத்தமிட்டதா?' என்று.

'இதென்ன அபத்தம், படம் எப்படி பதிலளிக்கும்?' என்று கேட்டாள். அந்தப் பெண்மணி.

''அப்படின்னா அது நானில்லை. உயிரற்ற ஒன்று எப்படி நானாக இருக்க முடியும்?'' என்றார் பிக்காஸோ.

நீங்கள் உயிராக இருந்தால் உங்களுடைய புலன்கள் அவற்றின் முழுத்திறனுடன் இயங்கும். நீங்கள் புலன்கள் சார்ந்தவராய் இருப்பீர்கள். உண்ணும்போது சுவையறிகிறீர்கள். குளிக்கும் போது நீரின் குளுமையை உணர்கிறீர்கள். தோட்டத்தில் உலவும்போது நறுமணத்தை நுகர்வீர்கள்.

'ஒரு பெண் உங்களைக் கடந்து செல்லும்போது தென்றல் உங்களைக் கடந்து செல்லும்'

அப்படியென்றால் நீங்கள் உயிருடன் இருக்கிறீர்கள். அழகிய பெண்ணொருத்தி கடந்து செல்லும்போது உங்களுக்குள் எதுவும் நிகழவில்லையென்றால் நீங்கள் உயிரற்றவர்தான், உங்களை நீங்களே கொன்று விட்டீர்கள்.

சிற்றின்ப நாட்டமும் (Sensuality) எளிதில் உணர்ச்சி வயப்படுவதன் (sensitive) ஒரு பகுதியே. சிற்றின்பம் குறித்த அச்சத்தில் தான் மதங்கள் உணர்ச்சிமிக்க நிலை என்றாலே அஞ்சுகின்றன. நுட்ப உணர்வு என்பது விழிப்புணர்வு. எனவே, அவை அறிதலைப் பற்றியே பேசிக் கொண் டிருக்கின்றன. உங்களை உணர்ச்சி மிக்கவராயிருக்க அவை விடுவதில்லை. எனவே நீங்கள் உணர்வுடையவராயிருக்க முடிவதில்லை. அது வெறும் பேச்சுதான். அவற்றால் உங்களுக்கு எந்தச் சலுகையும் அளிக்க முடியாது.

உண்மையில் 'சலுகை' என்ற சொற்றொடரை அவை தாம் உருவாக்கியது. அந்தச் சொல்லிலேயே கண்டனக் குறிப்பும் இருக்கிறது. 'சலுகை' என்று சொல்லும் போதே நீங்கள் முன்பே கண்டனம் செய்யப்பட்டவராகி விடுகிறீர்கள்.

இதுதான் சிக்கல்: மதம் சார்ந்தவர்கள் சலுகைக்குக் கண்டனம் தெரிவிக்கிறார்கள். அவர்களே சலுகை என்ற சொல்லையும் உருவாக்கிய வர்கள். அவர்கள் தாம் சிற்றின்பத்தில் ஆட்படும் நிலைக்குக் கண்டனம் தெரிவிப்பதும், அவர்களே சிற்றின்பத்தைத் தோற்றுவித்ததும், அது எப்படி நேரிடுகிறது? உங்களுடைய புலன்களை அடக்கி வைத்துக் கொண்டே யிருந்தால் அந்த அடக்கி வைக்கப்பட்ட இயக்கமே சிற்றன்பத்துக்கு இடம் கொடுத்து அனுபவிக்கச் செய்கிறது. உண்மையில் விழிப்புள்ள மனிதன் மனிதன் விருப்பத்துக்கு அடி பணிவதில்லை. தினமும் நன்றாய் சாப்பிடுகிறவன் உணவில் ஆசை வைப்பதில்லை. தொடர்ந்து பட்டினி கிடக்கும் நிலையில் ஆசை உண்டாகிறது, அடிபணிய நேரிடுகிறது. விரதம் இருக்கிறவன் உணவு, உணவு, உணவைப் பற்றியே நினைத்துக் கொண் டிருப்பான். உணவு கருத்தாவேசமாகி விடுகிறது. அவன் இருபத்து நான்கு மணி நேரமும் உண்டபடி (எண்ணத்தில்) இருக்கிறான். விரதத்தை முடித்ததும் அதன் மறுமுனைக்குப் போய்விடுகிறான். ஒரு முனையில் பசி இன்னொரு முனையில் உண்ணுதல் இரண்டுமே உச்ச அளவில்.

இரண்டு நாட்களுக்கு முன்னால் ஒரு சந்நியாசி இங்கிலாந்தில் இருந்து வந்தார், தான் விரதம் இருப்பதை விரும்புவதாய் என்னிடம் சொன்னார். அவர் ஒருநாள் விட்டு ஒருநாள் மிகக் குறைந்த அளவே உண்டார். நான் அவரிடம் சொன்னேன், 'உண்ணாமை ரொம்பவும் ஆபத்தான விஷயமாகி விடும். சில நேரங்களில் ஒரு மருந்து மாதிரி அதைப் பயன்படுத்த வேண்டும். அதையே வாழ்க்கை முறையாக்கிக் கொண்டுவிடக் கூடாது. உண்ணாமை ஒரு போதும் வாழ்க்கை முறையாவதற்கில்லை என்று.

மூன்று நாட்கள் ஆளையே பார்க்க முடியவில்லை. 'எங்கே போயிருப்பார், என்ன ஆகியிருக்கும்?' நான் காத்திருந்தேன். மூன்று நாட்களுக்குப் பிறகு வந்தவர், ''எனக்கு உடல்நலம் இல்லாது போயிற்று. நீங்கள் உண்ணாமை பற்றிப் பேசினீர்கள், அது விரும்பத்தக்கதல்ல வென்று சொன்னீர்கள். எனவே நான் உண்ணும் இச்சையைப் பூர்த்தி செய்துகொள்ள நிறைய உண்ணலானேன்'' என்றார்.

எப்போதுமே இப்படித்தான் ஆகிறது. உண்ணாமையில் இருந்து மறுமுனையின் உச்சத்திற்கே போய்விடுகிறீர்கள். சரியாக நடுப்பகுதியில் எங்கோ ஓரிடத்தில் சரியான பொருள் (Right thing) இருக்கும்.

புத்தர் மீண்டும் மீண்டும் 'சரியான' என்ற வார்த்தையைத் தாம் கூறிய ஒவ்வொன்றுடனும் பயன்படுத்தியிருக்கிறார். சரியான உணவு, சரியான ஞாபக சக்தி, சரியான அறிவு, சரியான முயற்சி இப்படி. அவர் எதைச் சொன்னாலும் அத்துடன் 'சரியான' என்ற வார்த்தையைச் சேர்த்துக் கொள்வர். அவருடைய சீடர்கள் கேட்பதுண்டு. தாங்கள் 'சரியான' என்ற வார்த்தையை எதற்காக எப்போதும் இணைத்துக் கொள்வது? என்று. அவர் கூறுவார் ''காரணம் மக்கள் ஆபத்தானவர்கள், ஒன்று இந்த முனையில் இருப்பார்கள், அல்லது அந்த முனையில் இருப்பார்கள்.'' நீங்கள் உண்ணாமல் இருந்தால் உணவில் ஆசைவரும். நீங்கள் பிரும்மச்சர்யத்தில் இருந்தால் உடலுறவில் ஆசைவரும். நீங்கள் வலுக்கட்டாயமாய் உங்கள் மீது எதைத் திணித்தாலும் அவை கடைசியில் உங்களை ஆசையை நோக்கி உந்திச் செல்லும்.

உண்மையில் உணர்ச்சி வயப்படுகிற ஒருவன் வாழ்க்கையை நன்றாய் அனுபவிப்பான். அந்த அனுபவம் அவனை விருப்பு வெறுப்பு அற்றவனாக்கி அமைதிப்படுத்தும். அவனிடம் கருத்தாவேசம் இருக்காது. அவன் புலன்கள் சார்ந்தவனாய் (sensual) இருப்பான்.

நீங்கள் என்னைக் கேட்டால், ஒரு புத்தர் மற்றெவரையும் விட புலனுணர்வு மிக்கவனாயிருப்பார் என்பேன். புத்தர் மரங்களைக் கூர்ந்து பார்க்கிறபோது நீங்கள் காணக் கூடியதைவிட அதிக அளவில் வண்ணங் களைக் கண்டிருப்பார், அவருடைய கண்களின் நுட்ப உணர்வு கூடுதலா யிருக்கும். ஒரு புத்தா உண்ணும்போது உங்களைவிட கூடுதலாகவே அனுபவித்து உண்பார். காரணம் அவருக்குள் எல்லாமும் சரிவர இயங்கிக் கொண்டிருக்கின்றன. ஒரு புத்தாவை நீங்கள் கடந்து செல்லும்போது மிகச் சரியாக இயங்கும் ஒரு மோட்டார் காரின் ரீங்கரிப்பை (hunting) அவரிடமிருந்தும் நீங்கள் கேட்க முடியும். ஒவ்வொன்றும் எப்படி இயங்க வேண்டுமோ அப்படி நுட்பமாய் இயங்கிக் கொண்டிருக்கும். அவர் புலனுணர்வு உடையவராய், கூர்ந்து அறியும் திறன் மிக்கவராய் இருப்பார், ஆனால், மன விருப்பத்துக்கு அடிபணிகிற நிலை இருக்காது. மனம் போன போக்கில் போவதென்பது ஒரு நோய் மாதிரி, அது ஒரு சீரற்ற நிலை. அப்படி இருக்க நான் சொல்லவில்லை.

விரும்புங்கள், உங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொள்ளுங்கள்.

அதை உங்கள் மூளையில் ஏற்றி வைக்க வேண்டாம். அதைச் செய்வதைக் காட்டிலும் அது மோசமானது.

உங்களுக்கு உணவில் நாட்டம் இருந்தால் அதற்கு இடம் கொடுத்து அனுபவியுங்கள். மனதின் விருப்பத்துக்கு இடமளிப்பதன் மூலம் சரியான புலனுணர்வை அடைவீர்கள். அது முட்டாள்தனமானது என்று சொல்கிற பக்குவத்தை முதிர்ச்சியை அதன் மூலம் அடைவீர்கள்.

குருட்ஜீவ், தனக்கு பெர்ரி வகை பழமொன்றில் இருந்த விருப்பத்தைத் தெரிவித்ததை இங்கே நினைவுபடுத்தக் கொள்கிறேன். அது காகஸஸ் பிரதேசத்தில் காணப்படுகிற பழம், அவருக்கு எப்போதுமே ஒத்துக் கொள்ளாமல் போயிற்று. அதைச் சாப்பிட்டதுமே அவருக்கு வயிற்றுத் தொல்லை வந்துவிடும். வலி, துன்பம், வாந்தி என்று எதுவும் பாக்கியில்லை. ஆனால், அந்தப் பழத்தை அவர் விரும்பினார், அதைச் சாப்பிடாமல் இருப்பது அவருக்கு முடியாத காரியம்.

சில நாட்களுக்குப் பிறகு மீண்டும் மீண்டும் அதைச் சாப்பிடுவார். அவர் தெரிவிக்கிறார். ''என்னுடைய தந்தை ஒருநாள் என்னையும் தன்னோடு அழைத்துக் கொண்டு சந்தைக்குச் சென்றார். அந்தப் பழத்தை நிறையவே வாங்கினார். அவற்றை ஏன் அவர் வாங்கியது, எனக்கு வியப்பும், மகிழ்ச்சியுமாயிருந்தது. அவர் என்னிடம் சொன்னார் ஒருபோதும் அதைச் சாப்பிடக் கூடாது என்று''.

குருட்ஜீவிற்கு ஒன்பது வயதான போது அவருடைய தந்தை கையில் ஒரு பிரம்பை வைத்துக் கொண்டு, ''எல்லாப் பழத்தையும் நீயே சாப்பிடணும் இல்லேன்னா அடித்தே கொன்று விடுவேன்'' அவர் ரொம்பவும் ஆபத்தான ஆள். குருட்ஜீவ் கண்களில் நீர் வழிந்தோட அத்தனை பழத்தையும் தின்று வைத்தார். அவருக்கு வாந்தி ஏற்பட்டது. சுமார் மூன்று வாரங்களுக்கு வாந்தி, வயிற்றுப்போக்கு, காய்ச்சலில் அவதிப்பட்டார். அவர் சொன்னார் ''இப்போது எனக்கு அறுபது வயதான பிறகும் கூட அந்தப் பழத்தைப் பார்த்தால் என்னுடைய உடம்பு முழுக்க நடுக்க மெடுத்துவிடும்.'' இந்த மனவிருப்பம் உடலின் அடி ஆழ வேர் வரை செல்லும் அளவு ஒரு ஆழமான புரிதலை உண்டாக்கும்.

நான் உங்களுக்குச் சொல்கிறேன், 'மனதின் விருப்பத்துக்கு அடி பணிகிறவராயிருங்கள்' என்று. விருப்பத்துக்கு இடமளிப்பதில் எந்தத் தவறும் இல்லை, நீங்கள் உண்மையிலேயே இச்சை கொண்டிருந்தால் உங்களைத் தடுத்து நிறுத்தாதீர்கள், பக்குவத்துடன் அதிலிருந்து வெளியே வாருங்கள். இல்லையேல் அந்த விருப்பம், எண்ணம் தொடரும். எப்போதும் உங்களைச் சுற்றிவரும். அது ஓர் ஆவியாகிவிடும். பிரும்மச் சரிய உறுதி மேற்கொண்டவர்கள் எப்போதுமே பாலுறவுப் பேயினால் பீடிக்கப்படுகிறார்கள். ஏதாவது ஒரு வகையில் கட்டுப்பாட்டை மேற்

கொள்பவர்கள் மன விருப்பத்துக்கு அடிபணிந்து எல்லாக் கட்டுக்களையும், தடைகளையும் தகர்த்துக்கொண்டு கண்மூடித்தனமாய் அதில் புகுந்து விடுவார்கள்.

'வாழ்க்கை உங்களை இட்டுச் செல்லட்டும் எங்கு வேண்டுமானாலும்'

அது குறித்து அச்சப்படாதீர்கள் பயத்தைப் பற்றி மட்டுமே ஒருவர் பயப்படவேண்டும். ஊக்கமும் துணிவும் உடையவராய் இருங்கள். நான் உங்களுக்குச் சொல்கிறேன் சிற்றின்ப அனுபவமே காலப்போக்கில் உங்களை அமைதிப்படுத்தும்.

ஆனால் நான் நுட்ப உணர்வு பற்றிச் சொல்ல வேண்டியிருக்கிறது. அது உங்களை விருப்பத்துக்கு அடிபணியவைத்தாலும், சிற்றின்ப நாட்டத்தைத் தந்தாலும் சரியே, விருப்பம் சிற்றின்பம் பற்றியெல்லாம் நான் அஞ்சுவதில்லை. அவை குறித்த அச்சம் உங்கள் நுட்ப உணர்வை அழித்துவிடும். அது அழிந்தால் நீங்கள் தற்கொலை செய்து கொண்டாற் போலத்தான். நீங்கள் உணர்ச்சி மிக்கவராய் உள்ளவரையில் தான் உயிர்த்துடிப்பும், விழிப்புணர்வும். உங்களுடைய நுட்ப உணர்வு முழுமை அடைகிறபோது நீங்கள் தெய்விகத்தில் பிரவேசித்து விடுகிறீர்கள்.

○

# 3. உறக்கம், அடையாளம் காணல், இருமைத்தன்மை

5

விழிப்புணர்வின்மை தோன்றி மறைகிற ஒன்றை நிலைபேறான ஒன்றாகவும், தூய்மையற்றதை தூய்மையாயும், வேதனையளிக்கக் கூடியதை மகிழ்வளிப்பதாகவும், சுயமற்றதை சுயமாயும் புரிந்துகொள்ளும்.

6

தற்பெருமை கொள்ளல் காண்பவரை காணப்படுவதுடன் அடையாளப்படுத்தும்.

7

மகிழ்ச்சியைக் கொண்டுவரும் எதனுடனும் ஈர்ப்பும் அதன் வழியே இணைப்பும் உண்டாகிறது

8

வேதனையளிக்கிற எதனிடமும் வெறுப்பு ஏற்படுகிறது.

'அவித்யை' என்பது என்ன? இந்த வார்த்தைக்குப் பொருள் அறியாமை, ஆனால், அவித்யை சாதாரண அறியாமை அல்ல. அது ஆழமாய் புரிந்து கொள்ளப்பட வேண்டியது. அறியாமை என்றால் போதிய அளவு அறிவு இல்லாமல் இருப்பது. அவித்யை அறிவின்மை அல்ல. ஆனால் விழிப்புணர்வில்லாமை ஆகும். அறிவைப் பெறுவதன் மூலம் அறியாமையைப் படிப்படியாய் மறையச் செய்துவிட முடியும். எளிதான காரியம் அது. நினைவாற்றலைப் பயிற்றுவிக்கும் பிரச்சினை எனலாம். அறிவு எந்திரத்தனமானது, விழிப்புணர்வு எதுவும் தேவையில்லை. அவித்யை போதிய விழிப்புணர்வில்லாத நிலை ஆகும். ஒருவர் பிரக்ஞை (consciousness) யை நோக்கித்தானே மேலும் மேலும் செல்ல வேண்டுமே தவிர அறிவை நோக்கியல்ல. அப்போதுதான் அவித்யையை மறையச் செய்ய முடியும்.

குருட்ஜீவ் கூறுவார் அவித்யை என்பது, 'ஆன்மா சார்ந்த உறக்கம்' என்று. தான் உயிரோடிருப்பது ஏனென்று தெரியாமல் தான் மனிதன் இயங்குகிறான், வாழ்கிறான், மறைகிறான். தான் எங்கிருந்து வந்தோம், எங்கே செல்வோம், எதற்காக என்பதையும் அவன் அறியமாட்டான்.

குருட்ஜீவ் உறக்கம் என்கிறார், பதஞ்சலி அவித்யை என்கிறார், அவர்கள் இரு வேறு வார்த்தைகளைப் பயன்படுத்தியது ஒரே பொருளில் தான். நீங்கள் இருப்பது ஏனென்று அறியமாட்டீர்கள். இவ்வுலகில் உங்கள் இருப்பின் நோக்கம் என்னவென்று நீங்கள் அறியமாட்டீர்கள். இந்த உடம்பும், இத்தகைய எதிர்பார்ப்புகளும் எதற்கு? 'நாம் ஏன் இதைச் செய்கிறோம்' என்று தெரியாமலே பலவற்றையும் நீங்கள் செய்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் தாம் செய்பவர் என்பதையும் அறிவதில்லை. ஆழ்ந்த உறக்க நிலையில் செய்கிற மாதிரி எல்லாம் இங்கே நடந்து கொண்டிருக்கிறது. 'அவித்யை'யை நான் மாற்றிச் சொல்வதெனில் அறிதுயில் (Hypnosis) என்பேன்.

மனிதன் ஆழ்ந்த அறிதுயிலில் இருக்கிறான். நான் அறிதுயில் பற்றி ஆராய்ந்திருக்கிறேன். அதைப் பயன்படுத்தி இருக்கிறேன். மனிதனை அறிதுயில் நிலையில் இருந்து வெளியே கொண்டுவர அதைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். விழிப்பூட்டுகிற அனைத்துமே ஒருவகை அறிதுயில் நீக்கம்தான். எனவே, அறிதுயில் நிலை பற்றித் தெளிவாக புரிந்துகொள்ள வேண்டும். அப்போது தான் அதிலிருந்து நீங்கள் வெளியே

வர முடியும். ஒரு நோயைப் பற்றித் தெரிந்துகொண்டு, நோய் நிர்ணயம் செய்த பிற்பாடுதான் அதற்குச் சிகிச்சையளிக்க முடியும். அறிதுயில் ஒரு மனித உபாதை, அறிதுயில் நீக்கமே அதற்கு வழி.

ஒரு சமயம் நான் அறிதுயில் முயற்சியில் ஒருவருடன் செயல்பட்டேன். அந்த ஆள் திறமை மிக்க 'மீடியம்' (செயல்முறை ஊடகம், இடையீட்டாளர்) ஆவார். இவ்வுலகில் மூன்றில் ஒரு பங்கினர் முப்பத்து மூன்று சதவிகிதத்தினர் திறமையான 'மீடியம்' களாய் இருக்கிறார்கள். அவர்கள் அறிவுத்திறனும், கற்பனைத் திறனும், ஆக்கத் திறனும் கொண்டவர்கள். அந்த முப்பத்து மூன்று சதவிகிதத்தில் இருந்துதான் விஞ்ஞானிகளும், மிகச்சிறந்த கலைஞர்களும், கவிஞர்களும், ஓவியர் களும், இசை மேதைகளும் உருவானது.

ஒரு நபரை அறிதுயிலில் ஆழ்த்த முடியுமென்றால் அவர் நுட்ப உணர்வு கொண்டவராகவே இருப்பார். ஆனால், வதந்தியோ அதற்கு நேர்மறையானது. கொஞ்சம் முட்டாள்தனம் உள்ளவரைத்தான் அறி துயிலில் ஆழ்த்த முடியும் என்று மக்கள் நினைக்கிறார்கள். அது முற்றிலும் தவறு. ஒரு முட்டாளை அறிதுயிலில் ஆழ்த்துவது முடியாத காரியம் அவன் செவி சாய்க்கவோ, புரிந்து கொள்ளவோ மாட்டான், அவனால் கற்பனை செய்யவும் முடியாது. கற்பனையின் வலிமை மிக்க ஆற்றல் அவசியப்படும்.

பலவீனமான ஆளுமை கொண்டவர்களை மட்டுமே அறிதுயிலில் ஆழ்த்த முடியும் என்று மக்கள் நினைக்கிறார்கள். அது முற்றிலும் தவறு. வலிமைமிக்கவர்களை மட்டுமே அறிதுயிலில் ஆழ்த்த முடியும். சரி நுட்பமில்லாத (கருத்து வகையில்) ஒருவனிடம் உறுதிவாய்ந்த குணமுமிருக்காது. அவன் தன்னுள் மையம் கொள்வதில்லை. காரணம், அவனுள் மையம் (center) கிடையாது. உங்களுக்குள் ஏதோ ஒருவகை மையம் இருக்கவேண்டும், இல்லையேல் அறிதுயில் செயல்படாது. மையத்தில் இருந்துதானே அது செயல்படுவதும் உங்கள் இருப்புணர்வில் (being) பரவி நிற்பதும். பலவீனமானவன் எதிலும் உறுதியற்றவனா யிருப்பான், தன் மீதே அவனுக்கு நம்பிக்கை இருக்காது. அவனை அறிதுயிலில் ஆழ்த்துவது சாத்தியமில்லை.

நான் நிறைய பேருடன் செயல்பட்டு, கண்டறிந்த முடிவு இது. அறிதுயிலில் ஆழ்த்தப்படுகிற ஒருவரை அதிலிருந்து வெளியே கொண்டுவரவும் முடியும். அறிதுயிலில் ஆழ்த்தப்பட இயலாத ஒருவர் ஆன்மிகப் பாதையில் முன்னேறுவது சிரமம், காரணம் ஏணி இரண்டு வழிகளிலும் போகிறது. நீங்கள் அறிதுயிலில் ஆழ்த்தப்படுவது எளிதென்றால், நீங்கள் அறிதுயிலில் ஆழ்த்தப்படுகிறபோதும், அறிதுயில் நீக்கமடைகிற போதும் அதே ஏணியில் தான் செல்கிறீர்கள். செல்லும் திசைகள் வெவ்வேறு.

நான் ஆண்டுக்கணக்கில் ஓர் இளைஞனை ஆராய்ந்து கொண்டிருந்தேன். ஒரு நாள் அவனை அறிதுயிலில் ஆழ்த்தி, அவனிடம் அறிதுயிலுக்குப் பிற்பாடு வழங்கும் யோசனை உண்டாக்கும் கருத்தை (*post - hypnotic suggestion*) வழங்கினேன். நாளை சரியாக இதே நேரம் - காலை ஒன்பது மணிக்கு நீ என்னைப் பார்க்க வருகிறாய். நீ என்னைப் பார்ப்பதற்காக வரவேண்டும். தெளிவான காரணம் எதுவும் இல்லை, ஆனாலும் சரியாக ஒன்பது மணிக்கு என்னைப் பார்க்க நீ வரவேண்டும்' என்று அவனிடம் சொன்னேன். அவன் பிரக்ஞையற்ற நிலையில் இருந்தாலும் நான் சொன்னேன் ''நாளைக் காலை ஒன்பது மணிக்கு, சரியாக ஒன்பது மணிக்கு வந்ததும் என்னுடைய படுக்கை மீது குதிக்கிறாய், தலையணையை ஒனது நேசத்துக்குரியவராய் கருதிக் கொண்டு கட்டித் தழுவி முத்தமிடுகிறாய்'' என்று.

உண்மையில் அடுத்தநாள் ஒன்பது மணிக்குக் கால்மணி முன்பாக அவன் வந்தான்.

ஆனால், நான் என்னுடைய படுக்கை அறையில் இல்லை, அவனுக்காக வராந்தாவில் காத்திருந்தேன். அவன் வந்ததும் நான் கேட்டேன், 'நீ எதற்காக வந்திருக்கிறாய்' என்று. அவன் தன்னுடைய தோள்களைக் குலுக்கிக் கொண்டு சொன்னான், 'இப்படி தற்செயலா போயிட்டிருந்தேனா, உங்களைப் பார்க்கலாம்னு ஒரு யோசனை வந்திச்சு' என்று. 'அறிதுயிலுக்குப் பிந்தைய யோசனை' தன்னுள் வேலை செய்வதை அவன் அறியவில்லை. அவன் நியாயப்படுத்துகிற காரணத்தைத் தேடிக் கொண்டிருந்தான். அவன் சொன்னான், 'நான் இந்த வழியா போயிட்டிருந்தேன்' என்று.

நான் அவனிடம் கேட்டேன், ''நீ ஏன் இந்த வழியில் போய்க் கொண்டிருந்தது?' என்று. 'நீ ஒரு போதும் இப்படிப் போனதில்லை. இது உன்னுடைய வழியல்லவே. நீ என்னைப் பார்க்க வருவதற்கு விரும்பினாலன்றி நகரத்துக்கு வெளியே செல்ல முக்கியமாய் எதுவும் இருக்காதே' என்றேன். அவன், 'சும்மா காலையில் நடப்பதற்காக வந்தேன்'' என்றான். தான் எந்தக் காரணமுமின்றி வந்ததை அவனால் எண்ணிப் பார்க்க முடியவில்லை. இல்லையேல் தன் முனைப்பு தவிடு பொடியாகிற அனுபவம் ஏற்பட்டிருக்கும்.

'நீ என்ன பைத்தியமா?' அவன் நினைத்திருக்க வேண்டும். ஆனால், அவன் படபடப்புடன் துன்புற்றிருந்தான். ஏனென்றே தெரியாமல் சுற்றி வரப் பார்த்தான். அவன் தேடிக் கொண்டிருந்தது படுக்கையையும், தலையணையையுந்தான், படுக்கை அங்கே இருந்திருக்கவில்லை. நான் வேண்டுமென்றேதான் வெளியில் அமர்ந்து கொண்டது. நிமிடங்கள் செல்லவும், அவன் அமைதியற்றவனாய் காணப்பட்டான்.

நான் அவனிடம் கேட்டேன், 'ஏன் இப்படி நிம்மதியற்றவன் போல் காணப்படுகிறாய்? 'ஒழுங்காய் உட்காரக்கூட மாட்டேன் என்கிறாய், என்ன ஆச்சு?' என்று. அவன் சொன்னான், 'நேற்று ராத்திரி என்னால் தூங்கவே முடியவில்லை.' என்று. இன்னொரு விளக்கம். எப்படியாவது ஏற்றுக் கொள்ளத்தக்கக் காரணங்களை ஒருவர் கண்டுபிடித்துக் கொண்டாக வேண்டும், இல்லையோ பைத்தியம் மாதிரிதான். அப்போது மணி ஒன்பதாக ஐந்து நிமிடங்களே இருந்தது. அவன் சொன்னான், 'இங்கே ரொம்ப வெப்பமா இருக்கு' என்று. அது குளிர்காலம், அவன் காலையில் 'வாக்' (walk) போயிருக்கிறான், புழுக்கம் ஏற்படுவதில்லை. ரொம்ப வெப்பமா இருக்கு, நாம் உள்ளே போய்விடலாமே' என்றான். மீண்டும் ஒரு விளக்கம். 'அப்படி ஒன்றும் புழுக்கமாயில்லையே' என்று சொல்லி நான் அதைத் தவிர்க்க முயன்றேன்.

அப்போது திடீரென்று அவன் எழுந்து நின்றான். ஒன்பது மணிக்கு இரண்டு நிமிடங்களே இருந்தன. அவன் தன்னுடைய கடிகாரத்தைப் பார்த்தவாறு சொன்னான் 'எனக்கு ரொம்பக் களைப்பாயிருக்கு' என்று. நான் அவனைத் தடுப்பதற்கு முன்பாகவே அறைக்குள் பாய்ந்து சென்றான். நான் அவனைத் தொடர்ந்தேன். படுக்கையின் மீது குதித்தான், தலையணையை முத்தமிட்டுத் தழுவிக் கொண்டான். நான் அங்கே நின்றிருந்ததால் குழப்பமுற்றான்.

'நீ என்ன செஞ்சிட்டிருக்கே?' என்று நான் கேட்டதும், அழத் தொடங்கினான். 'எனக்குத் தெரியலை. ஆனா, நேற்று உங்களைவிட்டுச் சென்றதிலிருந்து இந்தத் தலையணை என்னுடைய மனதில் இருந்திட்டேருக்கு' என்றான். நான் அறிதுயிலில் ஆழ்த்திய போது தெரிவித்த கருத்து அது என்று அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. அவன் மேலும் சொன்னான், 'ராத்திரி கூட நான் தலையணையை தழுவி முத்தமிட்டதாய் கனவு கண்டேன். அதுவே என் உணர்வை ஆட்டிப்படைத்தது. ராத்திரி முழுக்க என்னால் தூங்க முடியவில்லை. இப்போ எப்படி வலி வேதனைலாம் குறைஞ்சதுன்னே தெரியலை.

உங்களுடைய ஒட்டு மொத்த வாழ்விலும் இப்படித்தான் இல்லையா? ஒரு தலையணையை நீங்கள் முத்தமிடாதிருக்கலாம், ஆனால் ஒரு பெண்ணை முத்தமிட்டிருக்கலாம். அதற்குக் காரணம் என்னவென்று அறிவீர்களா? அது அறிதுயில் மாதிரியான ஒன்றுதான். உங்களை யாரும் அறிதுயிலில் ஆழ்த்தவில்லை, இயற்கை உங்களை அறிதுயிலில் ஆழ்த்தியது. இயற்கையின் இந்த ஆற்றலை மாயை என்பார்கள் (ஏமாற்றுந்தன்மை), நீங்கள் மாயையில், ஆழ்ந்த உருவெளித் தோற்றத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் தூக்கத்தில் நடப்பவரைப் போல் வாழ்கிறீர்கள்.

ஏனென்று தெரியாமல் எதை யெதையோ செய்து கொண்டிருக்கிறீர்கள். காரணங்கள் எதுவாயினும் நீங்கள் விளக்க முற்படுகிற எதுவும் உண்மையான காரணமாகாது.

ஒரு பெண்ணைக் கண்டதும் காதல் கொள்கிறீர்கள், 'நான் காதல் கொண்டுவிட்டேன்' என்று சொல்கிறீர்கள். ஆனால், அதற்கான காரணத்தை உங்களால் கூற முடியுமா? ஏன் அப்படி நேர்ந்தது? நீங்கள் ஏதாவது காரணங்களைக் கண்டுபிடிப்பீர்கள். ''அவளுடைய கண்கள் அழகானவை, வடிவான மூக்கு, பளிங்குச் சிற்பம் மாதிரி முகம்'' என்று சொல்வீர்கள். நீங்கள் காரணங்களைக் கண்டுபிடிப்பீர்கள், ஆனால் அவை பகுத்தறிவுக் கேற்றவாறு கொடுக்கும் விளக்கங்களேயாகும்?

உண்மையில், உங்களுக்குத் தெரியாது, தெரியவில்லை என்பதைச் சொல்ல துணிவு கிடையாது. துணிவோடிருங்கள். உங்களை சூழ்ந்து கொண்டிருக்கும் மாயையிலிருந்து, உருவெளித் தோற்றத்தில் இருந்து உங்களால் விடுபட முடியும். பதஞ்சலி அதனை அவித்யை என்கிறார். அவித்யை என்றால் போதிய விழிப்புணர்வின்மை. போதிய விழிப்புணர் வில்லாத காரணத்தால்தான் இப்படியாகிறது.

அறிதுயிலில் என்ன நிகழ்கிறது? அறிதுயிலில் கர்த்தா (hypnotist) என்ன செய்கிறார் என்று நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? முதலில் அவர் கூறுவார், 'தளர்வாயிரு' என்று. திரும்பத்திரும்பக் கூறுவதும் 'தளர்வாயிரு... தளர்வாயிரு'' என்பதைத்தான். தளர்வாயிரு என்ற வார்த்தை ஒரு மந்திரம் போல் ஆகிவிடுகிறது. ஆழ்நிலைத் தியானத்தில் (Transcendental meditation) அதுதான் நடக்கிறது. ஒரு மந்திரத்தைத் திரும்பத்திரும்ப உச்சரிக் கிறீர்கள், அது உறக்கத்தைக் கொடுக்கிறது. அதனால்தான் ஆழ்நிலைத் தியானம் முக்கியத்துவம் பெற்றது. உறக்கமின்மையால் அவதிப்படுகிற வர்களுக்கு ஆழ்நிலை தியானம் மிகச்சிறந்த ஒன்று. அமெரிக்காவில் நிறையபேர் உறக்கமின்மையால் அவதிப்படுகிறார்கள். மகேஷ் யோகி அங்கே இருப்பது தற்செயலான நிகழ்வு அல்ல, அவர் அங்கு தேவை.

உறக்கமின்மையால் அவதிப்படுகிறவர்களுக்கு அமைதி ஊக்கிகள் (tranquilizers) தேவைப்படும். ஆழ்நிலைத் தியானம் அமைதி ஊக்கியேயன்றி வேறேயென்ன? ராம், ராம், ராம் என்கிற மாதிரி ஒரு குறிப்பிட்ட வார்த்தையைத் தொடர்ந்து உச்சரிக்கிறீர்கள். திரும்பத் திரும்ப ஒரே வார்த்தையை உச்சரித்தால் சலிப்பு ஏற்படும். அந்தச் சலிப்புதான் அத்தனை உறக்கத்துக்கும் அடித்தளமிடுவது. நீங்கள் சலிப்பாய் உணர்ந்ததும் உறங்கத் தயாராகிவிடுகிறீர்கள்.

அறிதுயிலில் ஆழ்த்துபவர், 'தளர்வாயிரு, தளர்வாயிரு' என்று திரும்பத் திரும்ப சொல்கிறார். அந்த வார்த்தை உங்களுடைய உடலையும், இருப்புணர்வையும் ஊடுருவுகிறது. அவர் மீண்டும் மீண்டும் சொல்லிய

படியே உங்களுடைய ஒத்துழைப்பை வேண்டுகிறார். நீங்கள் ஒத்துழைக் கிறீர்கள். கொஞ்சம் கொஞ்சமாய் தூக்கமாய் இருப்பது போல் உணர்கி றீர்கள். அப்போது அவர் சொல்கிறார், 'நீங்கள் உறக்கத்தில் விழுந்து விட்டீர்கள், ஆழ்ந்த உறக்கத்தில் விழுந்துவிட்டீர்கள்... விழுந்துவிட்டீர்கள்' என்று. அவர் மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருக்க நீங்கள் உறக்கத்திலாழ்ந்து விடுகிறீர்கள்.

இது மாறுபட்ட ஒருவகை உறக்கம். வழக்கமான உறக்கமல்ல, காரணம், இது தூண்டுதலில் வந்தது, யாரோ ஒருவரால் உங்களுக்குள் தூண்டப்பட்டது. இது மாறுபட்ட பண்புடையது. இதில் உள்ள முதல் வேறுபாடும் அடிப்படையானதும் உலகத்தாருக்கு நீங்கள் உறங்குகிறவராய் தெரிந்தாலும், உங்களை அறிதுயிலில் ஆழ்த்தியவருக்கல்ல. உங்களால் இப்போது எதையும் உற்றுக் கவனிக்கவோ, காது கொடுத்துக் கேட்கவோ முடியாது. ஒரு வெடி குண்டு வைத்தால் கூட அது உங்கள் அமைதியைக் கலைத்துவிடாது. இரயில்கள் ஓடும், விமானங்கள் பறக்கும் ஆனால், எதுவும் உங்களைக் குழப்பிவிடாது. உங்களால் எதையும் கேட்க முடியாது. நீங்கள் ஒட்டு மொத்த உலகுடனும் தொடர்பற்றவராய், உங்களை அறிதுயிலில் ஆழ்த்தியவருக்கு வெளிப்படையானவராயும் இருப்பீர்கள். அவர் ஏதேனும் கூறினால் அதை உடனடியாய் கவனித்துக் கேட்பீர்கள். அவரிடம் மட்டுமே உங்கள் கவனம் இருக்கும்.

அறிதுயிலில் ஆழ்த்துகிறவர் என்கிற ஒரு வழி மட்டுமே திறந்து விடப்பட்டு, மற்றவை மூடப்பட்டுவிடும். அவர் எதைச் சொன்னாலும் நீங்கள் நம்பி விடுவீர்கள். காரணம், உங்களுடைய அறிவு உறங்கி விட்டிருக்கும். அறிவுத் திறன் வேலை செய்வதில்லை. நீங்கள் எதைச் சொன்னாலும் நம்புகிற குழந்தை போலாகி விடுவதால், உங்களை அறிதுயிலில் ஆழ்த்தியவர் சொல்வதை நம்புகிறீர்கள். உங்களுடைய உணர்வு மனம் வேலை செய்வதில்லை. உணர்வற்ற மனம் மட்டுமே இயங்கும்.

'பிரக்ஞை உறங்கும்போது அபத்தமானதும் நம்பக் கூடியதாகிவிடும்'

நீங்கள் குதிரையாகி விட்டதாய் கர்த்தா (Hypnotist) சொன்னாலும் அதை மறுக்கமாட்டீர்கள். யார் மறுப்பது? ஆழ்ந்த உறக்கத்தில் நம்பிக்கை குறைவற்றதாயிருக்கும். 'இப்போ நீ குதிரையைப் போல் கனைக்கப் போகிறாய்' என்று அவர் சொன்னதும் நீங்கள் கனைப்பீர்கள். 'குதிரையைப் போல் தாவி ஓடு' என்று அவர் சொன்னால் நீங்கள் தாவி ஓடுவீர்கள்.

அறிதுயில் என்பது வழக்கமான உறக்கமன்று. சாதாரணமாய் உறங்கும் ஒருவரிடம் 'நீர் குதிரையாகிறீர்' என்று நீங்கள் சொல்ல முடியாது.

முதலாவது இடத்தில், அவர் தூங்காமல் இருந்தால் நீங்கள் சொல்வதைக் கேட்பார், இரண்டாவது இடத்தில் அவர் தூங்காமல் இருந்து

நீங்கள் சொல்வதைக் கேட்டாலும் அதனை அவர் நம்பமாட்டார். தமது கண்களைத் திறந்து சிரித்தபடி சொல்வார் 'உமக்கு என்ன பைத்தியமா? நீர் என்ன சொல்கிறீர், நான் குதிரையா?' என்று.

அறிதுயில் உறக்கத்தைத் தூண்டுகிறது. அதனை உறக்கம் என்பதைவிட போதையூட்டும் பொருள் எனலாம். நீங்கள் ஒரு போதைப் பொருளின் பிடியில் இருப்பீர்கள். அது பொருளளவில் வேதியியல் தன்மை கொண்டதல்ல, உடம்பின் அடியாழத்தில் வேதியியல் தன்மையை ஏற்படுத்துவதாகும்.

ஒரு குறிப்பிட்ட வார்த்தையைத் திரும்பத் திரும்பச் சொல்கிறபோது உடம்பில் வேதியியல் மாற்றம் ஏற்படும். அதனால்தான் மனித வரலாறு நெடுகிலும் மந்திரங்கள் ஆதிக்கம் செலுத்தி வந்திருக்கிறது. தொடர்ந்து உச்சரிக்கப்படும் குறிப்பிட்ட வார்த்தைகள் உடம்பின் வேதியியல் தன்மையையே மாற்றிவிடுகிறது. காரணம், ஒரு வார்த்தை என்பது வெறும் வார்த்தையல்ல. அது அதிர்வுகள் கொண்டது, அது மின்னாற்றலுக்குரிய நிகழ்வு. 'ராம்...ராம்...ராம்' என்கிற வார்த்தை உடம்பின் வேதியியல் தன்மையில் நுழைந்து அதிர்வுகளை உண்டு பண்ணும். அந்த அதிர்வுகள் வேதனை தணிப்பதாய், உணர்ச்சியை மட்டுப்படுத்துவதாய், கவலை கொள்ளும்போது ஆறுதலளிப்பதாயிருக்கும். தூங்காமல் இருக்கும் குழந்தைக்குத் தாய் பாடுகிற தாலாட்டு மாதிரி அது உங்களுக்குள் ஒரு ரீங்காரத்தை (*humming*) ச் செய்யும்.

தாலாட்டு எளிமையானது. ஓரிரு வரிகள் கொண்டது, தொடர்ந்து சொன்னதையே சொல்வது. தாய் தன்னுடைய குழந்தையை மார்புற அணைத்துக் கொள்ளும்போது அது உடனடியாய் விள்ளவை ஏற்படுத்தும் காரணம், அவளுடைய இதயத் துடிப்பும் இன்னொரு ரீங்காரமாகி விடுவதுதான். இதயத் துடிப்பும், தாலாட்டும் இணைந்து குழந்தையை உறங்கப் பண்ணும்.

மந்திரங்களிலும், இசைப்பாடலிலும் இதே தந்திரந்தான் இடம் பெறுகிறது. நன்றாய் தூண்டப்பட்ட உறக்கத்தை அவை உங்களுக்கு வழங்கும். நீங்கள் அதன்பிறகு புத்துணர்ச்சியோடு இருப்பதாய் உணர்வீர்கள். ஆனால், அதில் ஆன்மா சார்ந்ததாய் எதுவும் இல்லை. காரணம் ஆன்மிகம் என்பது கூடுதல் உணர்வுடையது, உணர்வுக் குறைவானதல்ல.

ஒரு கர்த்தாவை (*hypnotist*)க் கவனியுங்கள். அவர் என்ன செய்கிறார்?

அதையேதான் இயற்கையும் செய்கிறது. இயற்கை மிகச் சிறந்த கர்த்தா. அது உங்களுக்கு யோசனைகளைத் தெரிவிக்கும். அந்த யோசனைகள் உங்கள் உடம்பிலுள்ள உயிரணுக்களால் (*Chromosomes*)

எடுத்துச் செல்லப்படும். ஒற்றை உயிரணு ஒரு கோடி தகவல்களை உங்களுக்குக் கொண்டு வரும் என்று அறிவியலார் சொல்கிறார்கள். ஒரு குழந்தை கருக் கொள்ளப்படும் போது இரண்டு உயிரணுக்கள் (cell) சந்திக்கின்றன. ஒன்று தாயினுடையது, மற்றொன்று தந்தையினுடையது. இரண்டு உயிரணுக்கள் சந்திக்கின்றன. அவை மில்லியன் கணக்கில் தகவல்களைக் கொண்டு வருகின்றன. அவை விரிவான திட்டமாகும் (blue print). அந்தத் திட்டங்களின் அடிப்படையில் தான் ஒரு குழந்தை பிறக்கிறது. அவை பல்கிப் பெருகிக் கொண்டே போகும், அதுதான் உடம்பின் வளர்ச்சி.

கண்ணுக்குத் தெரியாத உயிரணுக்களால், மில்லியன் கணக்கானவ்வை களாய் உங்களுடைய முழு உடம்பும் உருவாக்கப்பட்டது. முழு மரத்துக்கான தகவலை எடுத்து வரும் விதை மாதிரி ஒவ்வோர் உயிரணுவும் தகவல்களை எடுத்து வரும். எவ்வகையான இலை வெளிவர வேண்டும். எவ்வகையான பூக்கள் வெளிப்பட வேண்டும். அவை சிவப்பு அல்லது நீலம் அல்லது மஞ்சள் நிறத்தில் இருக்க வேண்டும் என்பதெல்லாம் கொண்டது விதையின் தகவல்.

'ஒரு சிறிய விதை தன்னுள் வைத்திருக்கிறது மரத்தின் வாழ்வுக்கான முழுத் திட்டத்தையும்'

அந்த மரம் நான்காயிரம் ஆண்டுகள் வாழலாம். அந்த நான்காயிரம் ஆண்டுகளுக்கான சகலத்தையும் அந்தச் சிறியவிதை தன்னுள் கொண்டிருக்கும். எல்லாமே திட்டப்படிச் செய்து முடிக்கப்படுவதால் மரம் எதைப்பற்றியும் கவலைப்படத் தேவையிருக்காது. நீங்களும் விதைகளைச் சுமந்திருக்கிறீர்கள். ஒன்று உங்கள் தந்தையிடமிருந்தும், ஒன்று உங்கள் தாயிடமிருந்தும் பெறப்பட்டிருக்கும். இவ்விதமாய் இயற்கை உங்களுக்குள் பிரவேசிக்கும்.

உங்கள் உடம்பு இயற்கையில் இருந்து உருவானது. நீங்கள் எங்கிருந்தோ வந்தீர்கள். அந்த ஏதோ ஓர் இடம் கடவுள். உணர்வும் உணர்வற்ற நிலையும் சந்திக்கும் இடமாய் நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் உடம்பு ஆற்றல் மிக்கது, நீங்கள் ஏதாவது செய்தாலன்றி அதன் ஆதிக்கத்தில் தான் இருப்பீர்கள். யோகா வெற்றி கொள்ளும் வழியாகும். அது மட்டும் இல்லையென்றால் உடம்பின் ஆளுகைக்குட்பட்டு அடிமையாய் இருப்பீர்கள்.

அவித்யை என்பது அடிமைத்தனம். இயற்கை உங்களிடம் ஏற்படுத்திய அறிதுயிலின் அடிமைத்தனம். யோகா இந்த அடிமைத் தனத்தைக் கடந்து செல்கிறது, ஆசானாகிறது. இப்போது இந்தச் சூத்திரங்களை அறிந்து கொள்ள முயலுங்கள்.

சூத்திரம் என்றால் விதை. அது பல்வேறு பரிமாணங்களில் இருந்து வேலை செய்து, உங்களுக்குள் புரிதல் என்னும் மரமாய் உருவெடுக்கும். சூத்திரம் ஒரு செய்தியின் சுருக்கம். அந்த நாளில் அப்படித்தான் இருந்தது. பதஞ்சலி யோக சூத்திரங்களை உருவாக்கியபோது எழுத்து வடிவம் இல்லை. எல்லாமே நினைவில் இருத்தி வைக்கப்படும். அந்தக் காலத்தில் நீங்கள் சூத்திரங்களை உருவாக்க முடியுமேயன்றி பெரிய நூல்களாய் எழுத முடியாது. சூத்திரம் என்பது அறிவு பொதிந்த சிறு சொற்றொடர்களில், விதை போன்று இருக்கும். அதனால் எளிதில் மனப்பாடம் செய்து கொண்டுவிட முடியும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளில் வழிவழியாய் சீடர்கள் சூத்திரங் களை மனப்பாடஞ் செய்து வந்தார்கள். பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகே எழுத்து வடிவம் வந்த பிறகே அவை எழுதி வைக்கப்பட்டன. சூத்திரம் தந்தி வாசகம் மாதிரி, நீங்கள் பல வார்த்தைகளைப் பயன்படுத்த முடியாது. மிகக் குறைவான வார்த்தைகளையே பயன்படுத்த வேண்டும். ஆக ஒரு சூத்திரத்தை நீங்கள் புரிந்து கொள்ள அதைப் பெரிதாக்க வேண்டியிருக்கும். ஒரு பூதக்கண்ணாடி கொண்டு விவரம் அறிய வேண்டிய நிலை.

போதிய விழிப்புணர்வின்மை நிலையற்ற ஒன்றை நிலையானதாய்க் கொள்ளும், அசுத்தத்தை சுத்தமாகவும், துன்பம் தருவதை மகிழ்வளிப்ப தாகவும், தனித்தன்மையற்றதை (selfless) த் தனித்தன்மை (self) யாயும் கொள்ளும்.

பதஞ்சலி கூறுகிறார், அவித்யை - போதிய விழிப்புணர்வின்மை என்று, விழிப்புணர்வின்மை என்றால் என்ன? நீங்கள் அதை எப்படி அறிவீர்கள்? அதன் அடையாளங்கள் எவை? நிலையற்றதை நிலையான தாய் எண்ணிக் கொள்வதே அடையாளம்.

சுற்றிவரப் பாருங்கள் - வாழ்க்கை ஓர் ஓட்டமாய் இடைவிடாத மாற்றமாய் இருக்கிறது. எல்லாமும் போய்க் கொண்டே இருப்பதைப் பார்க்கிறீர்கள்.

நம்மைச் சுற்றியிருக்கிற எல்லாவற்றிலும் ஒரு மாற்றம் நிகழ்கிறது முற்றிலுமாய். மாற்றம் ஒன்றே மாறாமல் (நிலையாய்) இருப்பது. மாற்றத்தை தவிர எல்லாமும் மாறுகிறது.

எல்லாமும் மாறுகிறது, மாற்றங்களை ஏற்றிடுங்கள். கடலில் தோன்றும் அலைகளைப் போல் அவை எழுந்து மறைகின்றன, மடிந்து விழுகின்றன. அது அலைகளைப் போலத்தான்.

நீங்கள் கடல்பக்கம் செல்கிறீர்கள். அங்கே எதைப் பார்க்கிறீர்கள்? கடலின் மேற்பரப்பை, அலைகளைக் காண்பீர்கள். நீங்கள் அங்கிருந்து திரும்பி வந்ததும் சொல்வீர்கள், 'கடல்பக்கம் போயிருந்தேன், அந்தக்

கடல்தான் எத்தனை அழகானது' என்று. நீங்கள் தெரிவித்தது முற்றிலும் தவறானது. நீங்கள் கடலை ஓரளவும் பார்க்கவில்லை, அதன் மேற்பரப்பை அலை அடிக்கும் மேற்பரப்பை மட்டுமே கண்டீர்கள். கரையில் நின்றிருந்தீர்கள். நீங்கள் பார்த்துக் கொண்டிருந்தது உண்மையில் கடலல்ல, அதன் புற அடுக்கு, காற்றும் அலையும் கை குலுக்கும் எல்லைக் கோடு.

அது போலத்தான் என்னை நீங்கள் காண வருகிறபோதும், நீங்கள் என்னுடைய உடைகளை மட்டுமே காண்கிறீர்கள். இங்கிருந்து திரும்பிச் சென்றதும் என்னைக் கண்டதாய் சொல்கிறீர்கள். என்னைக் காணவந்து, இக்கட்டடத்தையும் அதன் சுவர்களையும் பார்த்து விட்டுத் திரும்பிச் சென்றதும் என்னைப் பார்த்ததாய் சொல்வது போலத்தான் அதுவும்.

'கடலில் அலைகள் இருக்கின்றன அலைகளில் கடல் இருக்கிறது ஆனால் அலைகள் கடலாகாது'

அவை - கடலின் மையத்திலிருந்து அடியாழத்திலிருந்து தொலைவில் புறத்தே நிகழ்வதாகும்.

வாழ்க்கை ஓர் ஓட்டம், அதில் எல்லாமும் மாறிக் கொண்டே யிருக்கும், ஒன்று இன்னொன்றாகும்.

பதஞ்சலி கூறுகிறார், 'வாழ்க்கை போதிய விழிப்புணர்வின்றி இருப்பதை நம்புங்கள்'. வாழ்க்கையின் மையப் பகுதியிலிருந்து, அதன் அடியாழத்தில் இருந்து வெகு தொலைவில் நீங்கள் இருக்கிறீர்கள். மேற்பரப்பில் நிகழ்கிறது மாற்றம், புற எல்லையில் (periphery) இருக்கிறது இயக்கம். ஆனால் மையப் பகுதியில் எந்த அசைவும் இல்லை. அந்த அசைவற்ற அச்சில் சக்கரம் சுற்றுகிறது. உலகமெங்கிலும் சுற்றினாலும், அசைவற்ற ஒன்றின் மீதுதான் அது சுற்றிவரும். அசைவற்றதும், நிலையானதுமான ஒன்றைச் சார்ந்தே அனைத்தும் இயங்கும்.

வாழ்க்கையின் இயக்கத்தை மட்டுமே நீங்கள் பார்த்திருப்பின், பதஞ்சலி கூறுவார், 'இதுவே விழிப்புணர்வின்மை, அவித்யை' என்று.

நீங்கள் எப்படி பார்க்க வேண்டுமோ அப்படி பார்க்க வில்லை. ஒருவர் குழந்தையாயிருந்ததை, இளைஞனாய் வளர்ந்து, முதியவனாகி மடிந்து போவதை நீங்கள் எண்ணிப் பார்க்கிறீர்கள். நீங்கள் பார்த்தது சக்கரத்தை மட்டுமே. குழந்தை, இளைஞன், முதியவன் செத்துப்போனது, சடலம் என்று ஒருவரின் குறிப்பிட்ட கால அளவில் ஏற்பட்ட செயல்களை மட்டுமே கண்டீர்கள். அத்தனை இயக்கங்களுக்குள்ளும் இயக்கமின்றி இருக்கிற ஒன்றைக் கண்டீர்களா?

எது குழந்தையாய், இளைஞனாய், முதியவனாய் இல்லாதிருந்ததோ அதைக் கண்டீர்களா? இத்தனை கட்டங்களும் எதைச் சார்ந்திருந்தனவோ அதைக் கண்டீர்களா? எது எல்லாவற்றையும் வைத்திருக்கிறதோ எது

பிறக்கவும் மரிக்கவும் செய்வதில்லையோ அதைக் கண்டீர்களா? நீங்கள் அதைக் காணவில்லையானால், 'போதிய விழிப்புணர்வில்லாமல் அவித்யையில் இருக்கிறீர்கள்' என்று பதஞ்சலி கூறுகிறார்.

நீங்கள் போதிய கவனமுடையவராயில்லை, காரணம் போதிய அளவு கவனிக்கவில்லை. உங்களுடைய கண்களுக்குப் போதிய திறன் இல்லாத காரணத்தால் உங்களால் ஊடுருவிச் செல்ல முடியவில்லை. கண்களும், காட்சியும், கண்டுணரும் திறனும், தெளிவும், ஊடுருவும் ஆற்றலும் இருந்துவிட்டால் அங்கே மாற்றம் ஏற்படுவதை நீங்கள் கண்டுகொள் வீர்கள், ஆனால், அதுவே எல்லாமுமாகிவிடாது. உண்மையில் புறஎல்லை (Periphery) மட்டுமே மாறுகிறது, அசைகிறது. ஆழத்தில் இருக்கும் அடித்தளம் நிலையானது. அந்த நிலைபேறுடையதை, சாசுவதமானதை (eternal) நீங்கள் கண்டிருக்கிறீர்களா? நீங்கள் அதைக் கண்டிராவிட்டால் அது அவித்யை, நீங்கள் புற எல்லையாய் அறிதுயிலில் ஆழ்த்தப் பட்டிருப்பீர்கள். மாறுகின்ற காட்சிகள் உங்களை அறிதுயிலில் ஆழ்த்தி விட்டிருக்கும். நீங்கள் அவற்றுடன் ரொம்பவே சம்பந்தப்பட்டிருப்பீர்கள். கொஞ்சம் ஒதுங்கியிருப்பது அவசியம், கொஞ்சம் இடைவெளிவிடுங்கள், கொஞ்சம் கூர்ந்து கவனியுங்கள். நிலையற்ற ஒன்றை நிலையானதாய் கொள்வது அவித்யை, அசுத்தமானதை சுத்தமானதாய் கொள்வது அவித்யை.

எது சுத்தமானது, எது அசுத்தமானது? உங்களுடைய பொதுவான ஒழுக்க முறைமை (morality) பற்றிப் பதஞ்சலி பேசவில்லை. பொதுவான நெறியோடு கூடிய நடத்தை வேறுபடும். இந்தியாவில் புனிதமாய் கருதப்படுகிற ஒன்று சீனாவில் புனிதமற்றதாய் கருதப்படலாம். இந்தியாவில் புனிதமற்றதாயிருப்பது இங்கிலாந்தில் புனிதம் பெற்றிருக்கலாம்.

ஏன் இங்கயே எடுத்துக் கொள்ளுங்கள். இந்துக்களுக்குப் புனிதமான ஒன்று சமணர்களுக்கு புனிதமற்றதாகி விட்டிருக்கும். ஒழுக்க முறைமை வேறுபடும். பதஞ்சலி ஒழுக்க முறைமை பற்றிப் பேசவில்லை. நெறியோடு கூடிய நடத்தையை ஊடுருவிப் பார்த்தாலே தெரியும். அவை பல அடுக்குகள் கொண்டது என்பதும், நபருக்கு நபர் வேறுபடும் என்பதும். ஒழுக்க முறை என்பது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு நடைமுறை (convention) அதில் பயன்படும் தன்மை இருக்கிறது. ஆனால், அது மெய்ம்மை (truth) என்று சொல்லும்படியாய் தன்னுள் எதையும் பெற் றிருக்கவில்லை. பதஞ்சலியைப் போன்ற ஒருவர் பேசுகிறபோது, நிலையானவற்றைப் பற்றிப் பேசுவாரே தவிர, சில்லறைப் பாதிப்புகள் பற்றிப் பேசமாட்டார். உலகின் ஆயிரமாயிர ஒழுக்க முறைமைகளும் நாளுக்கு நாள் மாறிக் கொண்டே போகின்றன. சந்தர்ப்ப சூழ்நிலைகள்

மாறும்போது ஒழுக்க முறைமையும் மாறவேண்டியிருக்கும். பதஞ்சலி 'சுத்தம்', 'அசுத்தம்' என்று குறிப்பிடுவது முற்றிலும் வேறான ஒன்றையே.

அவர் 'சுத்தம்' என்று குறிப்பிடுவது இயல்பானதை, அசுத்தம் என்று குறிப்பிட்டது இயல்புக்கு மாறானதை. உங்களுக்கு ஏதோவொன்று இயல்பானதாயும், ஏதோ ஒன்று இயல்பற்றதாயும் தெரியும். எனவே, நெறிமுறை (criterion) என்று எதுவும் இருக்க முடியாது. நீங்கள் புனிதமற்றதை புனிதம் என்றும், இயல்புக்கு மாறானதை இயல்பானது என்றும் கருதிக் கொள்கிறீர்கள். நீங்கள் எதைச் செய்கிறீர்களோ அதைத் தான் மனித இனம் முழுமையும் செய்து கொண்டிருக்கிறது. அதனால்தான் நீங்கள் ரொம்பவே அசுத்தமானவராகி (ஒழுக்கம் கெட்ட) விட்டீர்கள்.

எப்போதும் இயற்கைக்கு உண்மையானவராயிருங்கள். எது இயற்கையானது என்று சிந்தியுங்கள், கண்டறியுங்கள். காரணம் என்ன வெனில், இயற்கைக்கு மாறானவற்றில் நீங்கள் இறுக்கமடைந்து அமைதி யற்றவராய், சுகமற்றவராய் ஆகிவிடுவீர்கள். இயற்கைக்கு மாறான சூழ்நிலையில் யாரும் சுகமாயிருக்க முடியாது. இயற்கைக்கு மாறானவை களை நீங்களே தோற்றுவித்துக் கொள்கிறீர்கள், உங்களைச் சுற்றிலும் பார்த்தாலே தெரியும். அவை சுமக்க முடியாத சுமையாகி (துயரம்) உங்களைச் சர்வநாசம் செய்துவிடுகிறது. நான் இயற்கைக்கு மாறானது - இயல்புக்கு மாறானது என்று சொல்கிறபோது உங்கள் இயற்கைக்கு - இயல்புக்கு ஒவ்வாததையே கருத்தில் கொள்கிறேன்.

உதாரணம்: பால்காரரிடம் பால் வாங்குகிறீர்கள். அது அசுத்தமாய் இருப்பதாகச் சொல்கிறீர்கள்.

நீங்கள் ஏன் அதை அசுத்தமானது என்று சொல்கிறீர்கள்? அவர் பாலில் தண்ணீர் கலந்து விட்டதாய்க் கருதியதால் அது அசுத்தம் என்கி றீர்கள். பொதுவாக தண்ணீரும் சுத்தமாயிருந்து பாலும் சுத்தமாயிருந்து இரண்டு தூய்மைகள் கலக்கப்பட்டால் அது இரட்டைத் தூய்மையாகி விட வேண்டுமே. ஆனால் அவை தூய்மையற்றதாகி விடுவதேன்? சுத்தமான தண்ணீர், சுத்தமான பால் என்றாலும் அவை சேர்கிறபோது அசுத்த மாகிவிடுகிறது. எப்படி? அவற்றுக்கு அந்நியமான, ஒவ்வாத ஏதோ வொன்று வெளியில் இருந்து உள்ளே நுழைந்துவிடுகிறது.

நான் பல்கலைக் கழக மாணவனாயிருந்த போது எனக்குத் தெரிந்த பால்காரன் ஒருவன். அவன் பல்கலைக் கழக விடுதிகளில் ரொம்பப் பிரபலம். அவன் திருத்தொண்டு புரிபவன் என்று எல்லாரும் நம்பிக் கொண்டிருந்தார்கள். இந்தியாவில் பாலில் தண்ணீர் கலக்கிற பழக்கம் உண்டு என்றாலும், அவன் மட்டும் அப்படிச் செய்யமாட்டான் என்பது அவர்களுடைய நம்பிக்கை. சுத்தமான பாலைப் பெறுவதென்பது கிட்டத்தட்ட முடியாத காரியம். அந்த ஆள் உண்மையிலேயே நல்லவன்

தான். அவன் வயது முதிர்ந்த கிராமவாசி. படிப்பறிவு இல்லாவிட்டாலும் இரக்க மனம் உடையவன். அவனுடைய தொண்டுள்ளம் காரணமாய் பல்கலைக் கழக வட்டாரத்தில் 'சாந்த்' என்றே அழைக்கப்பட்டான்.

எங்களுக்குள் பரிச்சயமாகி, நட்பு ஏற்பட்ட பிறகு ஒருநாள் அவனிடம் கேட்டேன், 'சாந்த் உண்மையிலேயே நீ பாலுடன் தண்ணீர் கலப்பதில்லை என்கிறார்களே, அது நிஜமா?' என்று. அவன் சொன்னான் 'முற்றிலும் உண்மை' என்று. ஆனால், அப்போது நான் சொன்னேன், 'அது நடவாத காரியம். மற்ற பால்காரர்களின் விலைதான் உன்னுடையதும், அப்படியானால் உன்னுடைய வியாபாரம் நஷ்டத்திலல்லவா ஓடிக் கொண்டிருக்க வேண்டும்' என்று. அவன் சிரித்தான். 'உங்களுக்குத் தெரியாது, அதில் ஒரு தந்திரம் இருக்கிறது' என்றான்.

நான் கேட்டேன், 'அந்தத் தந்திரத்தை தான் எனக்குச் சொல்லேன். இந்துக்களின் வேதமான இராமாயண நூலின் மீது கைவைத்து நீ பாலில் தண்ணீர் கலப்பதில்லை என்று சொன்னாயாமே. நானும் கேள்விப்பட்டிருக்கிறேன்? அவன் 'ஆமாம், நான் அதைச் செய்திருக்கிறேன். ஏனெனில் நான் எப்போதும் தண்ணீரில் தான் பாலை கலப்பேன். பாலில் தண்ணீர் கலந்ததே இல்லை. ஆனால் தண்ணீரில் தான் பாலைக் கலப்பேன்' என்று சொன்னான். தர்க்கரீதியாக. அவன் சொன்னது சரிதான்.

நீங்கள் சத்தியப் பிரமாணம் செய்யலாம். அதிலொன்றும் பிரச்சினை இல்லை. ஆனால் பாலில் தண்ணீரைக் கலந்தாலும், தண்ணீரில் பாலைக் கலந்தாலும் ஒன்றுதான். ஒன்றை இன்னொன்றுடன் கலந்தாலே அது அசுத்தப்படும், தூய்மை கெடும்.

''தூய்மையற்றதை தூய்மையானது என்று ஏற்றுக் கொள்வது அவித்யை. இயல்புக்கு மாறானதை இயல்பு எனப் புரிந்துகொள்வது அவித்யை'' என்பார் பதஞ்சலி. நீங்கள் இயல்புக்கு மாறான பலவற்றையும் இயல்பாய் கொள்கிறீர்கள். இயல்பானதைக் கண்டறிய உங்களுக்குள் அடியாழத்துக்கு நீங்கள் செல்ல வேண்டும். ஒட்டு மொத்த சமுதாயமே உங்களை அசுத்தப்படுத்துகிறது. அது இயற்கைக் கொவ்வாதவற்றை உங்கள் மீது திணிக்கிறது. உங்களைக் கட்டுப்படுத்துவதுடன் கொள்கைகள், தவறான கருத்துகள் உட்பட சகல அபத்தங்களையும் உங்களுக்கு வழங்குகிறது. எது இயல்பானது இயற்கையானது என்பதை சுயமாக நீங்களே கண்டுபிடியுங்கள்.

சில நாட்களுக்கு முன் ஓர் இளைஞன் என்னிடம் வந்தான். ''நான் கல்யாணம் செய்து கொண்டால் எனக்கு நல்லதா? எனக்கு ஆன்மீகத்தில் விருப்பம், கல்யாணம் செய்துகொள்ள விருப்பமில்லை'' என்றான். நான் அவனிடம் கேட்டேன், 'நீ விவேகானந்தரை வாசித்திருக்கிறாயா?' என்று. அவன் சொன்னான் 'ஆகா, விவேகானந்தர் என்னுடைய குருநாதர்' என்று.

அப்போது நான் 'வேறு என்னென்ன புத்தகங்களைப் படித்திருக்கிறாய்' என்று கேட்டேன். அவன் சொன்னான் 'சிவானந்தா, விவேகானந்தா மற்றும் குருமார்களின் நூல்கள்' என்று. 'இந்த கல்யாணம் வேண்டாம் என்கிற யோசனை உனக்குள் இருந்து வந்ததா? அல்லது விவேகானந்தா, சிவானந்தா போன்றவர்களிடம் இருந்தா? உன்னிடமிருந்து வந்திருந்தால் ரொம்ப சரி' என்றேன். அவன், 'இல்லை என்னுடைய மனம் பாலியல் சிந்தனை கொண்டது. பாலுணர்வுக்கு எதிராய் போரிட விவேகானந்தர் தான் சரியானவர். இல்லையேல், எப்படி ஒருவர் மேம்பட முடியும்? ஒருவர் இறைத்தன்மையை அடைய வேண்டும்' என்று கூறினான்.

இதுதான் தொல்லை. இந்த விவேகானந்தர் பாலில் தண்ணீரா யிருக்கிறாய். பிரும்மச்சாரியாய் இருப்பது விவேகானந்தரின் உரிமை, அவர்தான் அதைத் தீர்மானிக்க வேண்டும். ஆனால் அவரை இராமகிருஷ்ணரோ, புத்தரோ பாதித்திருந்தால் அப்போது அவர் ஒவ்வாத ஒன்றைக் கொண்டவர்தான்.

ஒருவர் தம்முடைய இருப்புணர்வையும், இயற்கையையும் பின்பற்றுவதோடு உண்மையாய், உண்மையைப் பற்றி ஐயப்பாடு இல்லாதவராய் இருக்க வேண்டும்.

காரணம், கழிவு போக மிஞ்சியவை பெருமளவில் இருப்பதுடன் இலட்சக்கணக்கான படு குழிகளும். அபாயங்களும் இருக்கின்றன. மண்ணைக் கொத்தி வாரியெடுக்கும் மூட்டிகரண்டிகள் பல அளவுகளில், பாக்குகளில். நீ காணாமல் போகக்கூடும். உன்னுடைய மனம் பாலுறவைச் சிந்திக்கிறது. விவேகானந்தரின் போதனைகள் 'வேண்டாம்' என்று சொல்கிறது. அதன் பிறகே நீ தீர்மானிக்கிறாய். உன்னுடைய மனதுக் கிணங்கவே நீ செயல்பட வேண்டும்'. அந்த இளைஞனிடம் நான் சொன்னேன் 'நீ கல்யாணம் செய்து கொண்டுவிடுவதே நல்லது' என்று. பிறகு. ஒரு குட்டிக் கதையும் அவனுக்குச் சொன்னேன்.

அவதிப்படும் கணவன்மார்களில் அதிகச் சிறப்புடையவர் சாக்ரட்டீஸ். அவருடைய மனைவி சாந்தீப் பெண்களிலேயே மிகவும் அபாயகரமானவள். அவள் சமயத்தில் சாக்ரட்டீஸை அடிக்கவும் செய்வாள். ஒரு சமயம் மொத்த தேநீர்ப் பாத்திரத்தையும் அவருடைய தலையில் கவிழ்த்து விட்டாள். வாழ்க்கை முழுதும் சாக்ரட்டீஸ் முகத்தில் பாதி புண்ணாகவே இருந்தது. அத்தகையவரிடம் போய் 'நான் என்ன செய்யட்டும்' என்று யோசனை கேட்டால்... ஓர் இளைஞன் கேட்டான், 'ஐயா, நான் திருமணம் செய்து கொள்வதா, வேண்டாமா? என்று. உண்மையில், சாக்ரட்டீஸ் வேண்டாம் என்பார் என்றே அவன் எதிர்பார்த்தான். பாவம் மனிதர் ரொம்பவும் துன்பப்பட்டிருக்கிறாரே. ஆனால், அவர் சொன்னார், 'ஆகா, திருமணம் செய்துகொள்' என்று.

அந்த இளைஞன் அவரிடம் சொன்னான், ஆனால் அதை எப்படி நீங்கள் சொல்வது? உங்களையும் உங்கள் மனைவியையும் பற்றிப் பல வதந்திகள் நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.' அவர் சொன்னார் "ஆமாம், நீ கட்டாயம் மணம் செய்துகொள்ள வேண்டும் என்றுதான் நான் சொல்வேன். உனக்கொரு நல்ல மனைவி வாய்த்திருந்தால் நீ மகிழ்ச்சி அடைவாய், மகிழ்ச்சியில் பலதும் வளர்ச்சியடையும், காரணம் என்னவெனில் மகிழ்ச்சி இயல்பானது. உனக்கு மோசமான மனைவி அமைந்துவிட்டால் பிணைப்பின்மையும், துறவு மனப்பான்மையுந்தான் வளரும். என்னைப் போல் நீயும் ஒரு பெரிய தத்துவ மேதை ஆகலாம். எப்படியென்றாலும் ஆதாயந்தான். என்னிடம் வந்து கல்யாணம் செய்து கொள்ளலாமா, வேண்டாமா என்று நீ கேட்டபோது கல்யாணம் செய்து கொள்கிற எண்ணம் உனக்குள் இருந்தது. இல்லையேல் நீ எதற்கு என்னிடம் வரவேண்டும்" என்று.

நான் இந்த இளைஞனிடம் சொன்னேன், "நீ என்னிடம் கேட்பதற்காக வந்திருக்கிறாய். அது விவேகானந்தர் உனக்குப் போதவில்லை என்பதையே காட்டுகிறது. உன்னுடைய சுபாவம் இன்னும் தொடர்கிறது. நீ கல்யாணம் செய்துகொள்ள வேண்டும். துன்பத்தில் அவதிப்படு, இன்பத்தில் மகிழ்ச்சி அடை. இரண்டையும் அனுபவித்து, அனுபவத்தின் மூலம் பக்குவப்படு. ஒருமுறை பக்குவப்பட்டு விட்டால் விவேகானந்தரோ வேறு யாரோ சொன்னார்கள் என்பதற்காக அல்ல, நீ வளர்ச்சியும், முதிர்ச்சியும் அடைந்துவிட்டால் பாலியல் பண்பு (sexuality) நழுவிவிடும். அப்போது பிரும்மச்சர்யம் எழும் அது, உண்மையான பிரும்மச்சரியமாய் இருக்கும்."

"எப்போதும் நீ நீயாகத்தான் இருப்பாய். நீ விவேகானந்தராகவோ, புத்தராகவோ அல்லது நானாகவோ இருப்பதில்லை. ரொம்பவும் பாதிக்கப்பட்டு விடாதே, பாதிக்கப்பட்டால் தூய்மையிருக்காது. எச்சரிக்கையோடு கவனமாய் இரு, கருத்தூன்றிக் கவனிக்க வேண்டும்."

'உன் இயல்புக்குப் பொருந்தாத எதையும் ஏற்றுக் கொள்ளாதே'

அது உனக்கானதல்ல, நீயும் அதற்கு ஆயத்தமாயில்லை. எது எப்படியாயினும் இத்தருணத்தில் அது உனக்கானதல்ல. உன்னுடைய அனுபவங்களின் வழியே நீ போக வேண்டும். வளர்ச்சி அடைவதற்குத் துயருறுவதும் அவசியம். எதையும் அவசரப்பட்டு நீ செய்யக் கூடாது.

வாழ்க்கை சாசுவதமானது, இதில் அவசரம் எதற்கு? காலம் கனிசமாயிருக்கிறது, வாழ்க்கை முற்றாகவும் பொறுமை கொண்டிருக்கிறது, அதில் பொறுமையின்மை என்பதே துளியும் கிடையாது. நீங்கள் அளந்து நடைபோடலாம், குறுக்கு வழியில் செல்லத் தேவையில்லை. குறுக்கு வழியில் செல்கிறவர்கள் ஒருபோதும் வெற்றி பெறுவதில்லை.

'நீங்கள் குறுக்கு வழியை மேற்கொண்டால், உங்களுக்கு நெடும் பயண அனுபவத்தை யார் வழங்குவது?'

அதைத் தவறவிடுவீர்கள். நீங்கள் திரும்பவும் அந்த வழிக்கு வருகிற சாத்தியங்கள். அப்படியே உள்ளன. குறுக்கு வழியில் நேரத்தையும் ஆற்றலையும் வீணடிக்காதீர்கள். குறுக்கு வழி என்பது ஒரு மாயை. எப்போதும் இயல்பானதைத் தேர்ந்தெடுங்கள், குறுக்கு வழி வேண்டாம். வாழ்க்கை இப்படித்தான் வளர்ச்சி காண்கிறது. அதில் திணிப்பு வேலை வேண்டாம்.

பதஞ்சலி கூறுகிறார், 'விழிப்புணர்வின்மை தூய்மையற்றதைத் தூய்மையாய் புரிந்துகொள்ளும்' என்று. தூய்மை என்பது நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படி இயல்பாய் இருத்தல். யாரையும் உதாரணமாய் கொள்ளாதீர்கள். ஒரு புத்தரைப் போல் ஆகவேண்டும் என்று முயற்சிக் காதீர்கள். நீங்கள் நீங்களாகத்தான் இருக்க முடியும். ஒரு புத்தர் உங்களைப் போல் ஆகவேண்டும் என்று நினைத்தால் கூட அது நடவாத காரியம். யாரும் இன்னொருவரைப் போல் ஆகமுடியாது. ஒவ்வொருவரிடமும் ஓர் இணையற்ற வழிமுறை இருக்கிறது, அது தூய்மையாக இருக்கும் தன்மை. நீங்கள் நீங்களாகவே இருந்து கொண்டு உங்கள் இருப்புணர்வைப் (being) பின்பற்றுவதே தூய்மை. அது கடினந்தான், நீங்கள் அழுத்தப்படு கிறீர்கள், அறிதுயிலில் ஆழ்த்தப்படுகிறீர்கள். அது கடினமானதுதான், காரணம் வாதமுறையில் வல்லவர்கள் உங்களை நம்பச் செய்து விடு வார்கள். அது கடினமே, எளிதாகாது. அவர்கள் நேர்த்தியானவர்கள் அவர்களிடமுள்ள இனிமை உங்கள் மனதில் பதிவை ஏற்படுத்தி விடுகிறது. அவர்கள் கிளர்ந்தெழும் வியப்புணர்ச்சி கொண்டவர்கள். அவர்களிடம் கவரும் திறன் இருக்கிறது, ஆட்படுத்தும் வலிமை இருக்கிறது. அவர்கள் பக்கத்தில் இருக்கும்போது நீங்கள் இழுபடுகிறீர்கள், அவர்கள் ஈர்க்கும் சக்தி பெற்றவர்க்ள.

நீங்கள் மிகப்பெரிய ஆட்களிடம் கவனமாய் இருக்க வேண்டும், கவரும் திறன் உள்ளவர்களிடம், கருத்துப் பதிவை உண்டு பண்ணுகிற வர்களிடம், தங்கள் ஆக்கத்திறன் மூலம் உங்களை மாற்றக் கூடியவர் களிடம் எச்சரிக்கையாயிருங்கள், காரணம் என்னவெனில் அவர்களால் உங்களைத் தூய்மையற்றவராக்கிவிட முடியும். யாரையும் தம்மைப் போலாக்க வேண்டும் என்று புத்தர் முயன்றதில்லை. ஆனால் உங்க ளுடைய அறிவீனம் பாவனை செய்ய முயலும், அடுத்தவரை உதாரண மாய்க் கொண்டு அவரைப்போல் ஆக முயற்சிக்கும். அதுதான் ஒருவருக்கு நேரிடுகிற மிகப்பெரிய ஒவ்வாமை (தூய்மையின்மை).

புத்தரை, இயேசுவை, இராமகிருஷ்ணரை நேசியுங்கள், அவர்க ளுடைய அனுபவங்கள் மூலம் உங்கள் தகுதியை உயர்த்திக் கொள்ளப்

பாருங்கள். ஆனால் பாதிக்கப்பட்டுவிடாதீர்கள். நேசியுங்கள், உற்றுக் கவனியுங்கள், மனதில் வாங்கிக் கொள்ளுங்கள். ஆனால் பாவனை மேற்கொள்ளாதீர்கள்.

உங்களால் ஏற்க முடிகிற எதையும் ஏற்றுக் கொள்ளுங்கள், ஆனால் அது உங்கள் இயல்புக்குப் பொருந்துவதாயிருக்க வேண்டும். உங்களுக்குப் பொருந்துகிறதா என்று பாருங்கள், புத்தர் சொன்னார் என்பதற்காக அல்ல.

புத்தர் தம்முடைய சீடர்களிடம் மீண்டும் மீண்டும் வலியுறுத்துவார், ''நான் சொன்னேன் என்பதற்காய் எதையும் ஏற்றுக் கொள்ளாதீர்கள். உங்களுக்கு அவசியப்பட்டால், உங்கடைய இயல்புக்குப் பொருத்தமானது என்ற நிலைக்கு நீங்கள் வந்தால் ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று. நல்லது, கெட்டது, பாவம், பண்பு, ஒழுக்கமுறைமை ஒழுக்கமின்மை, வேதனை மகிழ்ச்சி என்று இலட்சக் கணக்கான அனுபவங்களைக் கண்டு, கடந்த பிறகே ஒருவர் புத்தரானது. ஆனால் நீங்கள் புத்தரைக் கவனித்து, அவரால் கவரப்பட்டதும் உடனே துள்ளிக்குதித்து அவரைப் பின்பற்றத் தொடங்கி விடுகிறீர்கள். அது நடவாத காரியம். உங்கள் வழியில்தான் நீங்கள் போகவேண்டும். உங்களால் முடியுமளவு ஏற்றுக் கொள்ளுங்கள். ஆனாலும் போக வேண்டியதென்னவோ உங்களுடைய சொந்த வழியில் தான்.

நான் எப்பொழுதும் ஃப்ரடெரிக் நீட்சேயின் *'Thus spake zarathustra'* என்ற நூலை நினைவுபடுத்திக் கொள்வேன். ஜராதுஷ்ட்ரர் தம்முடைய சீடர்களை விட்டகலும் போது அவர் கடைசியாய் சொன்ன செய்தி அருமையானது. அதுதான் அவருடைய கடைசிச் செய்தி, எல்லாவற்றையும் அவர் சொல்லிவிட்டார். 'இப்போது கவனித்துக் கேளுங்கள், முன்பு எப்போதையும் விட கவனமாய்க் கேளுங்கள். என்னுடைய கடைசிச் செய்தி இதுதான் 'ஜராதுஷ்ட்ரனிடம் விழிப்பாயிருங்கள், என்னிடம் விழிப்பாயிருங்கள்.'

அறிவுத் தெளிவு (ஞானம்) பெற்ற எல்லாரும் விடுக்கிற கடைசிச் செய்தி இதுவாகத்தான் இருக்கும். காரணம், அவர்கள் ரொம்பவும் கவர்ச்சியானவர்கள், நீங்கள் எளிதில் அவர்களால் ஏமாற்றப்படுவீர்கள். உங்களுக்குப் புறம்பான ஒன்று உங்கள் இயல்பில் பிரவேசித்ததும் நீங்கள் தவறான பாதையில், செல்லத் தொடங்குவீர்கள்.

பதஞ்சலி கூறுவார்: **'விழிபுணர்வின்மை என்பது தூய்மை யற்றதைத் தூய்மையாய் கொள்வதும், வேதனையை மகிழ்ச்சியாய்க் கொள்வதும்'** என்று.

நீங்கள் கூறலாம் ''பதஞ்சலி சொன்ன இரண்டில் எதுவுமே உண்மை யாயிருக்கலாம். ஆனால், வேதனையை மகிழ்ச்சியாய்க் கொள்ளுமளவுக்கு நாங்கள் முட்டாள்களல்லவே'' என்று. முழுமையான விழிப்புணர்வு இல்லாவிட்டால் ஒவ்வொருவரும் அப்படித்தான் இருப்பார், நீங்களுந்தான். வேதனைக்குரிய பலவற்றை நீங்கள் மனதிற்குகந்ததாய் ஏற்றுக் கொண் டிருக்கிறீர்கள். வேதனையில் நீங்கள் அழுது புலம்பியிருக்கிறீர்கள், வலியை அனுபவித்திருக்கிறீர்கள். ஆனால், அடிப்படையில் வேதனையான ஒன்றை மகிழ்ச்சிக்குரியதாய் மாற்ற முடியாதென்பதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லை.

தினமும் என்னிடம் வருகிறவர்களில் பலர் தங்களுடைய பாலுறவு வேதனையளிப்பதாய் கூறுகிறார்கள். தங்கள் பாலியல் வாழ்க்கை குறைகளற்று, நேர்த்தியாய் இருக்கிற தென்று ஒரேயொரு தம்பதி கூட என்னிடம் கூறியதில்லை. விஷயம் இதுதான். தொடக்கத்தில் எல்லாமே இனிமையாய் தெரிந்ததென்று அவர்கள் சொன்னார்கள். ஒவ்வொரு வருக்கும் பாலுறவு இனிமையாகவே இருந்திருக்கிறது, தொடக்கத்தில்தான், ஆனால் அது ஏன் வெறுப்பளிக்கும் விதமாய் கசந்துபோனது? ஏன் கொஞ்ச காலத்துக்குள், தேனிலவு முடிவதற்கும் முன்பே திகட்டிப்போனது?

மனிதனின் பிரக்ஞை பற்றிப் பேசுகிறவர்கள் சொல்கிறார்கள், 'தொடக்கமும், தொடக்கக்கால இனிமையும் உங்களை முட்டாளாக்குகிற ஓர் இயல்பான தந்தரம்' என்று. நீங்கள் முட்டாளாக்கப்பட்டதும் நடைமுறை வந்துவிடுகிறது. ஒரு சிறிய தூண்டிலை எடுத்துக்கொண்டு நீங்கள் மீன்பிடிக்கப் போகிற மாதிரிதான் இதுவும். தொடக்கத்தில் இரண்டுபேர் சந்திக்கிற போது எண்ணிக் கொள்வார்கள். 'உலகத்திலேயே இதுதான் உச்ச அனுபவமாய் இருக்கப் போகிறது' என்று.

'இந்தப் பெண் மிகவும் அழகானவள்' என்று அவர்கள் எண்ணிக் கொள்வார்கள், அந்தப்பெண் எண்ணிக் கொள்வாள்' இவர் இதுவரை கண்டி ராத மிகச் சிறந்த மனிதர்' என்று. அவர்கள் மாயையில் தொடங்குகிறார்கள்.

'தாங்கள் காணவிரும்பியது எதுவாயினும் அவர்கள் அதைக் காண முயற்சிக்கிறார்கள்'

உண்மையான நபரை அவர்கள் காண்பதில்லை.

அவர்கள் அங்கே இருப்பவரைக் காண்பதில்லை, தங்கள் கனவில் கண்டதையே தரையில் விழும்படிச் செய்கிறார்கள். அடுத்தவரைத் திரையாக்கி நீங்கள் ஒளிநிழலைத் திரையில் காட்டுகிறீர்கள். சற்று

முன்னாகவோ பின்னாகவோ நடைமுறை (reality) தன்னுடைய நிலையை உறுதிப்படுத்தும். இயற்கையின் அறிதுயில் நிறைவுறும் போது எல்லாமே புளித்துப் போய்விடும்.

அப்போது எதிராளி உங்கள் கண்ணுக்கு வெகு சாதாரணமாய் தனித்தன்மையற்றவராய் தெரிவார். அதற்குமேல் உடம்பு நறுமணம் வீசாது - வியர்வை நாற்றமடிக்கும். அந்த முகத்தில் தெய்விகக்களை இருக்காது, விலங்கின் சாயல்தான் தெரியும். கண்களிலிருந்து கடவுள் உங்களை நோக்கமாட்டார், மூர்க்கம் கொண்ட, பாலுணர்வுமிக்க ஒரு விலங்குதான் வெறித்துக் கொண்டிருக்கும். மாயை தகர்ந்து, கனவுகள் நொறுங்கும். துன்பம் அப்போது தொடங்கும்.

அந்தப் பெண்ணை எப்போதைக்கும் காதலிப்பதாய் நீங்கள் வாக்குறுதியளித்திருப்பீர்கள். இனிவரும் அத்தனை பிறவிகளிலும் உங்கள் நிழலாய் இருக்கப் போவதாய் அந்தப் பெண்ணும் வாக்குறுதி வழங்கி இருப்பாள். அப்போது உங்கள் வாக்குறுதிகளின் தந்திரப் பொறியில் நீங்கள் சிக்கிக் கொள்வீர்கள். எப்படிப் பின்னடைய முடியும், ஏற்கும்படி ஆகும்.

பாசாங்குத் தனமும், பாவனைகளும், கோபமும் பிரவேசிக்கிறது. நீங்கள் பாவனை மேற்கொள்கிற போதெல்லாம் சற்று முன்பின்னாய் கோபமுற்று விடுவீர்கள். பாவனை என்பது பாரமான விஷயம். இக்கணத்தில் ஒரு பெண்ணின் கையை நீங்கள் பற்றிக் கொள்கிறீர்கள். ஆனால், வியர்க்கிறது, எதுவும் நேரவில்லை. கவிதை இல்லை, வியர்வை மட்டுமே. அந்தக் கையை நீங்கள் விட்டுவிட விரும்புவீர்கள். ஆனால் அவர்களுடைய உணர்வு காயப்படுமே. அவளும் அதை விடவே விரும்புவாள். ஆனால், எங்கே உங்கள் மனம் காயப்பட்டுவிடுமோ என்று எண்ணுவாள்.

'காதலர்கள் என்றால் கைகள் பற்றியிருக்க வேண்டும்'

நீங்கள் பெண்ணை முத்தமிடுகிறீர்கள். ஆனால் அங்கே வாய் நாற்றத்தைத் தவிர வேறெதுவும் இல்லை. எல்லாமே அருவருப்பாகி விடுகிறது. அப்போது நீங்கள் எதிர்வினை புரிகிறீர்கள். எதிரியின் தலையில் பொறுப்பைக் கட்டி, அவருக்குக் குற்ற உணர்வைத் தந்து அவரைப் பழிவாங்குகிறீர்கள். அவன் அல்லது அவள் ஏதேனும் தவறு செய்திருக்க வேண்டும். அல்லது, அவள் ஏமாற்றியிருப்பாள். தன்னிடம் இல்லாத ஒன்று இருப்பதாய் நடித்திருப்பாள்.

அதன்பிறகு முடிவற்ற தொந்தரவாய் ஒரு கல்யாண விவகாரம்.

விழிப்புணர்வு - வேதனையை மகிழ்ச்சியாய்க் கொள்ளும் என்பது நினைவிருக்கட்டும். தொடக்கத்தில் ஏதேனும் மகிழ்ச்சியளிப்பதாய் இருந்தால் அதுவே பின்பு வேதனையளிப்பதாகிவிடும். அது தொடக்கத்தில் இருந்தே வேதனை தருவதாகத்தான் இருந்திருக்கிறது. நீங்கள் போதிய விழிப்புணர்வு இல்லாத காரணத்தால் ஏமாந்தீர்கள். உங்களுடைய விழிப்புணர்வன்றி வேறுயாரும் உங்களை ஏமாற்றவில்லை. நீங்கள் பொருள்களையும் செயல்களையும் உள்ளது உள்ளபடி பார்க்குமளவு கவனமில்லாமல் இருந்து விட்டீர்கள். இல்லையேல் மகிழ்ச்சி எப்படி மன வேதனையாகிறது? மகிழ்ச்சி என்பது மெய்யாகவே இருக்குமானால் அது நாளுக்கு நாள் பெருமகிழ்ச்சியாய் மாறிவிட்டிருக்க வேண்டும்.

நீங்கள் ஊன்றியது மாமரத்துக்கான விதையை. அது எப்படி வேப்பமரத்துக்குரிய கனியை - கசப்பைக் கொடுக்கும்? முதலில் - அந்த விதை மாமரத்தினுடையதென்றால் அது பெரிய மாமரமாயிருக்க வேண்டும். அதில் இன்சுவை கொண்ட மாங்கனிகள் ஆயிரமாயிரம் விளைந்திருக்க வேண்டும். நீங்கள் ஊன்றிய மாமரம் கசப்புள்ள வேப்பரமாகி விட்டிருப்பின் அதற்கு என்ன பொருள்? மரம் உங்களை ஏமாற்றிவிட வில்லை, நீங்கள்தாம் மாவின் விதைக்குப்பதில் வேம்பின் விதையைத் தவறாக ஊன்றிவிட்டீர்கள்.

இல்லையேல் இன்பம் பேரின்பமாகவும் மகிழ்ச்சி பெருமகிழ்ச்சி யாகவும் வளர்ந்து விட்டிருக்க வேண்டுமே. நிறைவாக அது பரம சுகத்தின் (bliss) உயர்ந்த சிகரமாகி விட்டிருக்கும். நீங்கள்-

'விதைக்கிற போது விழிப்போடிருங்கள்'

ஒருமுறை விதைத்து விட்டதைப் பின்பு மாற்றமுடியாது. எப்போதும் துன்பத்தையே அறுவடை செய்கிற நீங்கள் விதையில் ஏதோ தவறு நேரிட்டிருக்கும் என்பதை ஒருபோதும் உணரவில்லை. துன்பத்தை அறுவடை செய்கிற போதெல்லாம் யாரோ உங்களை ஏமாற்றிவிட்டதாய், உங்களுக்குத் துரோகம் செய்துவிட்டதாய் எண்ணிக் கொள்கிறீர்கள். அது மனைவியாகவோ, கணவனாகவோ, நண்பராகவோ, குடும்பமாகவோ, உலகமாகவோ வேறு யாராகவோ எதுவாகவோ இருக்கலாம் என்கிற எண்ணம்.

இது ஏதோ கெட்ட ஆவியின் வேலை என்பீர்கள், தவறான விதையை நீங்கள் விதைத்த உண்மையை அவ்விதமாய் எதிர்கொள்ளாமல் தவிர்க்கப் பார்ப்பீர்கள்.

விழிப்புணர்வின்மை வேதனையை மகிழ்ச்சியாய் புரிந்துகொள்ளும். இது அடிப்படைத் தத்துவமும் கூட. பதஞ்சலியைக் கேளுங்கள், சங்கராச்சாரியார், புத்தர் என்று எவரிடம் வேண்டுமானாலும் கேளுங்கள். இதனை அடிப்படைத் தத்துவம் முடிவெடுக்க உதவும் நெறிமுறை (criterion) என்றே சொல்வார்கள். ஒன்று இறுதியில் துன்பமளிப்பதாய் மாறுமெனில் அது ஆதியில் இருந்தே துன்பம் நிரம்பியதாகத்தான் இருக்க வேண்டும். இறுதி செய்வதும், இறுதியில் கிடைக்கிற பலனும் தத்துவம் - நெறிமுறை. நீங்கள் பலனை (பழம்)க் கொண்டே மரத்தைப் பற்றியே கருத்தை உருவாக்கிக் கொள்ள வேண்டும். உங்கள் வாழ்க்கை துன்பத்தைத் தரும் மரமாயிருந்தால் விதை தவறானது என்று நீங்கள் கருதிக் கொள்ளுங்கள். கொஞ்சம் திரும்பிப் பாருங்கள். உங்கள் செயலில் ஏதோ தவறாகி விட்டிருக்கும்.

ஆனால் நீங்கள் அதைச் செய்வதில்லை. அதே தவறை மீண்டும் செய்கிறீர்கள். உங்கள் மனைவி சாகிறாள் என்றால், நீங்கள் பலமுறை நினைத்திருப்பீர்கள் அவள் செத்துப்போனால் நன்றாயிருக்குமே என்று. பெண்டாட்டி செத்தால் நன்றாயிருக்கும் என்று பலமுறை நினைக்காத ஒரு கணவனைப் பார்ப்பது அபூர்வம். 'நான் தொலைந்தேன். இன்னொரு பெண்ணை ஒரு முறையும் ஏறெடுத்துப் பார்க்கமாட்டேன்' என்றா நினைப்பான். மனைவி போய்விட்ட கணத்திலேயே இன்னொரு பெண்ணைப் பற்றிய எண்ணம் மனதில் வந்துவிடுகிறதே.

மனம் இப்படி எண்ணத் தொடங்கும். 'யார் கண்டது, இவள் தகுதியானவளாய் இருந்ததில்லை. ஆனால் அவள் விரும்பத்தக்கவளாய் இருப்பாள். அந்த உறவின் நிறைவுப்பகுதி இனிதாயில்லை. ஆனால் என்ன? எல்லாக் கதவுகளும் மூடிக்கொண்டு விடவில்லையே. மற்ற கதவுகள் திறந்திருக்கின்றன.' மனம் வேலை செய்யத் தொடங்குகிறது. நீங்கள் திரும்பவும் பொறியில் சிக்கிக் கொண்டு, திரும்பவும் துன்பப் படுகிறீர்கள். 'இவள் அப்படி, அவள் இப்படி' என்று எப்போதும் எண்ணிக் கொண்டிருப்பீர்கள். இது ஆண் பெண் பற்றிய பிரச்சினையல்ல, விழிப்புணர்வின் பிரச்சினையாகும்.

நீங்கள் விழிப்புணர்வோடு இருந்தால் செயலின் விளைவைக் கருத்தில் கொண்டே எதையும் செய்வீர்கள். விளைவு என்னவாகும் என்பதில் முழுக்கவனம் வைப்பீர்கள். அது வேதனையளிப்பதாய் இருக்கும் என்று நீங்கள் ஏங்கினால், துன்பமும் வேதனையும் நிரம்பிய வாழ்க்கையை வாழ விரும்பினால். அது உங்கள் தேர்வைப் பொறுத்தது. ஆனால் அப்போது யாரையும் நீங்கள் பொறுப்பாளிக்க முடியாது.

*நீங்கள் நன்றாகவே அறிவீர்கள் - 'விதைத்தது நாம், அறுவடை செய்யப் போவதும் நாமே' என்பதை. கசப்பான விதைகளை எதற்காக நாம் விதைக்க வேண்டும்?*

***சுயமல்லாத ஒன்றைச் சுயமாய்க் கொள்வது விழிப்புணர்வின்மை ஆகும்: இவையே நெறிமுறை.***

*நீங்கள் சுயமற்றதை சுயமாய்க் கொள்கிறீர்கள். சிலசமயம் இந்தச் சரீரமே நாம் என்றும், சில வேளையில் இந்த மனமே நாம் என்றும், சில நேரத்தில் இந்த இதயமே நாம் என்றும் நீங்கள் எண்ணிக் கொள்கிறீர்கள். இம்மூன்றும் பொறிகள் (traps). உடம்பு மிகவும் புறத்தே உள்ள ஓர் அடுக்கு (layer) நீங்கள் பசியை உணர்கிற போது சொல்வீர்கள்: 'நான் பசியாயிருக்கேன் என்று - போதியவிழிப்புணர்வின்மை காரணமாய் நீங்கள் உடம்பின் பசியை அறிபவர் மட்டுமே, நீங்கள் பசியாயிருப்ப தில்லை. பிரக்ஞை எப்படிப் பசித்திருக்க முடியும். உணவு ஒருபோதும் பிரக்ஞையில் நுழைவதில்லை. பிரக்ஞை ஒருபோதும் பசித்திருப்பதில்லை. உண்மையில் நீங்கள் பிரக்ஞையை ஒருமுறை அறிந்து கொண்டுவிட்டால் அது ஒருபோதும் பசித்திருக்காது, மனநிறைவுற்ற தாயிருக்கும் என்பதைக் காண்பீர்கள். எப்போதும் அது குறைவற்றதாய், பூரணமாய் இருக்கிறது. எதுவும் அதற்குத் தேவைப்படாமல். அது முன்பே கோபுரமாய், சிகரமாய் உச்ச அளவில் வளர்ச்சி கண்டிருக்கிறது, அது பசியாயில்லை.*

*'பசி (ஆவல்) பிரக்ஞையில் இல்லை உடம்பில் இருக்கிறது'*

*விழிப்புணர்வுள்ள ஒருவன் கூறுவான் 'என்னுடைய உடம்பு பசித்திருக்கிறது' என்று. அல்லது, விழிப்புணர்வு இன்னும் ஆழமா யிருப்பின், 'என்னுடைய உடம்பு' என்று அவன் கூறமாட்டான். 'இந்த உடம்பு பசியில் இருக்கிறது, இந்த உடம்புக்குப் பசி' என்பான்.*

*ஒரு புகழ் பெற்ற இந்திய மறைஞானி அமெரிக்காவுக்குச் சென்றார். அவருடைய பெயர் ராமதீர்த்தர். அவர் எப்போதும் மூன்றாம் பெயர்ச் சொல்லிலேயே (third person) பேசுவார். அவர் ஒருபோதும் 'நான்' என்பதைப் பயன்படுத்துவதில்லை. அவரையறியாதவர்களுக்கு அவர் என்ன சொல்கிறார் என்பதையும் புரிந்து கொள்ள முடியாது, அது ரொம்பவும் இடர்ப்பாடாய் தெரியும். ஒருநாள் தாம் தங்கியிருந்த வீட்டுக்கு (அமெரிக்காவில்) அவர் திரும்பிக் கொண்டிருந்தார். அவர் சிரித்தபடி மகிழ்ச்சியாய் சென்றார். வயிறு குலுங்கும் சிரிப்பு. அவருடைய உடம்பே சிரித்துக் கொண்டிருந்தது.*

அந்த வீட்டில் இருந்தவர்கள் கேட்டனர், 'என்ன விஷயம், என்ன ஆச்சு?' என்ன இவ்வளவு மகிழ்ச்சி, எதற்காகச் சிரிக்கிறீர்கள்?' என்று. அவர் சொன்னார், 'தெருவில் என்ன நடந்தது தெரியுமா? சில குறும்புக்காரப் பையன்கள் ராமின் மீது கற்களை வீசினார்கள் (ராம் அவருடைய பெயர்). நான் ராமிடம் 'இதைப் பார்த்தாயா' என்று சொன்னேன். ராமிற்கு ரொம்பக் கோபம். அவனுக்கு எதையாவது செய்ய வேண்டும் போலிருந்தது. ஆனால் நான் அதற்கு ஒத்துழைக்கவில்லை, ஒரு பக்கமாய் நின்றுவிட்டேன்' என்று. அந்தக் குடும்பத்தினர் 'நீங்கள் என்ன பொருளில் கூறுகிறீர்கள் என்றே எங்களுக்குப் புரியவில்லை. நீங்கள் ராம். ஆனால் யாரைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?' என்றனர். ராமதீர்த்தர் சொன்னார் 'நான் ராம் அல்ல, அறிபவர் மட்டுமே (knower). இந்த உடம்புதான் ராம், அந்தக் குறும்புக்காரர்கள் என்மீது கல்லெறிய முடியாது. பிரக்ஞையின் மீது எப்படிக் கல்விட்டெறிய முடியும்?

'வானத்தின் மீது கல்லெறிய முடியுமா? ஒரு கல்லைக் கொண்டு வானத்தைத் தொடமுடியுமா?'

பிரக்ஞை என்பது பிரும்மாண்ட வானம். அதை நீங்கள் அடக்க முடியாது. கல் கொண்டு உடம்பை மட்டுமே தாக்க முடியும். காரணம் என்னவெனில் உடம்பு ஒரு திடப் பொருள். பொருளைத் தாக்க முடியும். உடம்பு பொருளுடன் தொடர்புடையது. தன் பசிக்கு உணவு தேவை என்று அது உணர்கிறது. பசி உடம்பைக் கொன்று விடும், உணவு நிறைவளிக்கும். பிரக்ஞை உடம்பாகாது.

உங்கள் உடம்பை நீங்களாய் புரிந்துகொள்வது விழிப்புணர்வின்மை. பிறவித்துன்பங்களில் தொண்ணூறு சதவிகிதத்திற்கு இதுவே காரணம். உங்கள் உடம்பை நீங்கள் என்று கருதிக் கொள்வதால் துன்பத்துக் குள்ளாகிறீர்கள். ஒரு கனவில் துன்பப்படுகிறீர்கள். அந்த உடம்பு 'நீங்கள்' (சுயம்) ஆகாது. சீக்கிரமே அது உங்களுடையதல்ல என்றாகிவிடும். உங்கள் உடம்பில்லாத போது நீங்கள் எங்கே இருந்தீர்கள்? உங்கள் பிறப்புக்கு முன் எங்கே இருந்தீர்கள்? அப்போது உங்களுடைய முகம் எப்படி இருந்தது? மரணத்திற்குப் பிறகு எங்கே இருப்பீர்கள், உங்கள் முகம் எப்படி இருக்கும். நீங்கள் ஆணாய் இருப்பீர்களா? பெண்ணாய் இருப்பீர்களா? பிரக்ஞை இரண்டுமல்ல, இரண்டில் ஒன்றுமல்ல. என்னை ஓர் ஆண் என்று நீங்கள் நினைத்தால் அது விழிப்புணர்வின்மை ஆகும். பிரக்ஞை? பிரக்ஞையை எப்படிப் பாலினத்தில் வகைப்படுத்த முடியும்? அது பாலின உறுப்பைப் பெற்றிருக்கவில்லை.

உங்களை ஒரு குழந்தையாகவோ, இளைஞனாகவோ, முதியவ னாகவோ எண்ணிக் கொண்டால் நீங்கள் அப்போதும் விழிப்புணர்வற்றவர் தாம். நீங்கள் எப்படி முதியவனாகவோ, இளைஞனாகவோ இருக்க முடியும்? பிரக்ஞை இரண்டுமல்ல. அது சாசுவதமானது, அப்படியே தானிருக்கிறது. அது சாவதில்லை அதுவே வாழ்வாயிருக்கிறது.

அல்லது, மனதை எடுத்துக் கொள்ளுங்கள். அது இரண்டாவது ஆழமான அடுக்கு. அது மிகவும் நுட்பமானது, பிரக்ஞைக்கு நெருக்க மானது. உங்களுடைய மனதை 'நீங்கள்' என்று புரிந்து கொள்கிறீர்கள். 'நான்... நான்... நான்' என்று சொல்லிக் கொண்டேயிருக்கிறீர்கள். யாரேனும் உங்கள் கருத்தில் மாறுபட்டால் 'இது என்னுடைய கருத்து' என்கிறீர்கள், அதற்காகப் போரிடவும் செய்கிறீர்கள். யாரும் உண்மைக்காக வாதிடுவ தில்லை. மக்கள் வாதிடுவதும், போராடுவதும், போரிடுவதும் தங்களுடைய 'நான்' (ஐ) என்பதற்குத்தான். 'என்னுடைய கருத்து' - நான் என்று பொருள் படுவது, 'நான்' என்பதைக்குறிப்பது. 'இதை மறுக்கிறீரே, உமக்கு என்ன துணிவு? அது சரியென்று நான் நிரூபிக்கிறேன்.'

யாரும் உண்மை பற்றிக் கவலைப் படுவதில்லை. யார் கவலைப்படுகிறார்கள்? யார் சரி என்பதுதான் கேள்வி, எது சரி என்பதல்ல. ஆனால் அப்போதுதான் மனிதர்கள் அடையாளம் காணப்படுகிறார்கள். சாதாரணர்கள் மட்டுமல்ல சமயப் பற்றுடையவர்களும் கூட.

ஒருவன் தன்னுடைய குடும்பம், குழந்தைகள், வியாபாரம் உலகம் இவற்றைத் துறந்து இமயமலைக்குச் செல்கிறான். நீங்கள் அவனிடம் கேட்கிறீர்கள், 'நீர் என்ன இந்துவா?' என்று. அவன் சொல்கிறான் 'ஆமாம்' என்று. பிரக்ஞை இருப்பது இந்துவாகவா, முகமதியனாகவா, கிறிஸ்துவ னாகவா? அப்படியிருக்கிறது மனம். சுயமல்லாததைச் சுயமென்று நீங்கள் எண்ணிக் கொள்வது விழிப்புணர்வின்மை.

அடுத்தாற்போல் இருக்கிறது இதயம், பிரக்ஞைக்குச் சமீபமாய் அதே சமயம் தொலைவில் இருப்பது. உடம்பு, எண்ணம், உணர்வு இருக்கிறது. நீங்கள் உணர்கிறபோது உண்மையில் எதை உணரவேண்டுமோ அதை உணர்வதில்லை. அது இயந்திர நுட்பத்தின் ஒரு பகுதி. உண்மையில் அது பிரக்ஞைக்கு நெருக்கமாகவே உள்ளது. இதயம் பிரக்ஞைக்குச் சமீபமாயும், தலை இரண்டுக்கும் இடையிலும், உடம்பு தொலைவிலும் இருக்கிறது. ஆனால் நீங்கள் இதயமாயும் இல்லை. உணர்வு கூட ஒரு நிகழ்வுதான். அது வருகிறது, போகிறது. அது நீரில் ஏற்படும் சிற்றலை மாதிரி எழும், விழும்.

அது ஒரு மனநிலை (mood), இருக்கும் இல்லாதிருக்கும். எது எப்போ தைக்கும், என்றென்றைக்குமாய் இருக்கக் கூடியதோ அதுதான் நீங்கள்.

சுயமல்லாததைச் சுயமாய்க் கொள்வது விழிப்புணர்வின்மை.

அப்படியானால் விழிப்புணர்வு என்பது என்ன? விழிப்புணர்வு என்பது இந்த உடம்பு நீங்களல்ல என்பதை அறிந்திருப்பது. உபநிடதங்கள் அப்படிச் சொல்கிறது என்பதற்காகவோ அல்லது பதஞ்சலி அப்படிக் கூறுகிறார் என்பதற்காகவோ கூடாது, இந்த உடம்பு நீங்கள் அல்ல என்பதை உங்கள் மனதில் நீங்கள் திணிக்க முடியும். 'நான் உடம்பல்ல' என்று காலையும், மாலையும் நீங்கள் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே யிருப்பது உதவாது. அது கூறியது கூறல் (repetition) தொடர்பான பிரச்சினையல்ல, ஆழ்ந்த புரிதல் பற்றியது. நீங்கள் புரிந்து கொண்டிருந்தால் கூறியதையே மீண்டும் கூற அவசியம் என்ன?

ஒரு சமயம் சமணத் துறவி ஒருவர் என்னுடன் தங்கியிருந்தார். அவர் தினமும் காலையில் உட்கார்ந்து ஒரு சமஸ்கிருத ஸ்லோகத்தைப் பாடிக் கொண்டிருப்பார்: 'நான் இந்தச் சரீரமல்ல, நான் இந்த மனமுமல்ல. நான் தூய பிரம்மம்.' ஒவ்வொரு காலை வேளையிலும் குறைந்தது ஒன்றரை மணி நேரமாவது இப்படிச் சொன்னதையே சொல்லிக் கொண்டிருப்பார்.

மூன்றாவது நாள் நான் அவரிடம் சொன்னேன் 'இது என்ன உமக்குத் தெரியாத விஷயமா? பிறகெதற்குச் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பது? நீ அதை அறிந்திருக்கும் பட்சத்தில் சொல்லிக் கொண்டிருப்பது முட்டாள்தனம். நீர் அதை அறியாதிருந்தாலும் அது முட்டாள்தனமான வேலைதான், ஒன்றைத் திரும்பச் சொல்வதால் மட்டும் நீர் எப்படி அறிந்து கொள்ள முடியும்?' என்று.

'நான் அபார ஆற்றல் உள்ளவன், பாலுறவில் ஆற்றல் மிக்கவன்' என்று ஒருவன் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தால், அவன் ஆண்மைக் குறைவுள்ளவன் என்று நீங்கள் நிச்சயித்துக் கொள்ளலாம். 'நான் ஆம்பிளை, பலசாலி, ஆற்றல்மிக்கவன்' என்று ஏன் திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டும்? ஒருவன் தினமும் இதையே ஒன்றரை மணிநேரம் சொல்லிக் கொண்டிருந்தால் அதன் பொருள் என்ன? அது மனதில் உள்ளதற்கு நேர்மாறானது என்பதையே குறிக்கும். 'நான் ஆற்றலுள்ளவன்' என்று சொல்லிக் கொள்வதன் மூலம் அவன் தன்னையே முட்டாளாக்கிக் கொள்ள முயல்கிறான், அவ்வளவுதான். நீங்கள் அப்படி இருந்தால் இருங்களேன், அதைத் திரும்பத் திரும்பச் சொல்லத் தேவையில்லையே.

நான் அந்தச் சமணத் துறவியிடம் சொன்னேன், ''நீர் அறிந்து கொண்டிருக்கவில்லை என்பதையே இது காட்டுகிறது. உம்மை இன்னும் உம்முடைய உடம்போடு அடையாளப்படுத்திக் கொள்கிறீர் என்பதையே தெரிவிக்கிறது. நீர் அறிந்துகொள்ளும் திரும்பச் சொல்வது (repitition) புரிதல் (understanding) ஆகாது'' என்று.

புரிந்துகொள்ள வேண்டுமென்றால் கவனியுங்கள். பசிவரும்போது அது உடம்பிலா அல்லது உங்களுக்குள்ளாகவா என்பதைக் கவனியுங்கள். நோய் ஏற்படும்போது அது எங்கே உடம்பிலா, உங்களுக்குள்ளா என்பதைக் கவனியுங்கள். ஒரு சிந்தனை வரும்போது அது எங்கே உள்ளது உங்கள் மனதிலா அல்லது உங்களிலா என்று கவனியுங்கள். ஓர் உணர்வு மேலெழும் போது கவனியுங்கள். நீங்கள் மேலும் மேலும் உற்றுக் கவனிப்பதால் விழிப்புணர்வு பெறுவீர்கள்.

**'தற்பெருமை (Egoism) என்பது காண்பவரையும், காணப்படு வதையும் அடையாளம் காட்டுவதாகும்'**

யாரோ ஒருவர் சன்னலுக்குப் பின்புறமாய் நின்று வெளியே பார்ப்பதுபோல், உங்கள் கண்களுக்குப் பின்னால் நீங்கள் நின்று கொண்டிருக்கிறீர்கள். காண்பதுடனும் கண்களுடனும் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ள முடியும். ஆனால் காண்பது ஒரு திறன், சாதனம். கண்கள் என்பது நீங்கள் அல்ல, அவை வெறும் சன்னல்கள்.

பதஞ்சலி கூறுவார், 'ஐம்புலன்களின் மூலம் சாதனங்களுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்கிறீர்கள். அதன்பிறகு அந்த ஐந்திலிருந்தும் எழுகிறது தற்பெருமை (ego). தற்பெருமை, அகந்தை, தன்முனைப்பு என்று எந்தப் பெயரில் அறியப்பட்டாலும் அது பொய்யான சுயந்தான். நீங்கள் எப்படி இருப்பதாய் நினைத்துக் கொள்கிறீர்களோ உண்மையில் அப்படி இல்லையோ அது தற்பெருமை.

சன்னலடியில் நிற்கிறவன் தன்னையே சன்னலாய் எண்ணத் தொடங்குகிறான். கண்களுக்குப் பின்னால் இருந்து கொண்டு நீங்கள் என்ன செய்கிறீர்கள்? கண்களின் வழியே காண்கிறீர்கள்.

**'நீங்கள் காணும்போது உங்களுடைய கண்கள் சன்னலாகும் நீங்கள் கேட்கிறபோது உங்கள் காதுகள் சன்னலாகும்'**

என்னை நோக்கி உங்கள் கைகளை நீட்டுகிறீர்கள், நான் உங்களைத் தொடுகிறேன். கை ஒரு சாதனம். கையே நீங்களாகி விடுவதில்லை. இதனை நீங்கள் ஊன்றிக் கவனிக்கவும், சோதித்தறியவும் முடியும்.

பல சமயங்களில் இப்படி ஆகிவிடுகிறது. உங்கள் கண்முன்பாகவே நடக்கிற ஒன்றைக் காணத் தவறி விட்டிருப்பீர்கள். சில சமயங்களில் பக்கம் முழுவதையும் படித்துவிட்டு, ஒற்றை வரி கூட படிக்காத உணர்வைப் பெறுவீர்கள். என்ன படித்தோம் என்பது நினைவில் இருக்காது மீண்டும் படிக்கும்படி ஆகும். கண்களே நீங்கள் என்றால் இது எப்படி சாத்தியம்?

'நீங்கள்' கண்கள் அல்ல. பக்கத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலும் சன்னல் காலியாயிருக்கிறது. சன்னலுக்குப் பின்னால் இருக்கவேண்டிய பிரக்ஞை அங்கே இல்லை. அது வேறெதிலோ ஈடுபட்டிருக்கிறது. கவனம் அங்கே இல்லை. நீங்கள் சன்னல் பக்கம் நின்றிருந்தாலும் உங்கள் கண்கள் மூடியிருந்திருக்கும், அல்லது சன்னலுக்கு முதுகு காட்டி நின்றிருப்பீர்கள், ஆனால் நீங்கள் சன்னலுக்கு அப்பால் உள்ளதைப் பார்த்துக் கொண்டிருக்க வில்லை. ஏதோ ஒன்றைக் காணத் தவறிவிட்டதாய், கேட்காமல் இருந்துவிட்டதாய் படிக்காமல் விட்டதாய் உணர்கிறீர்கள் - இது ஒவ்வொரு நாளும் நடக்கிறதுதான்.

நீங்கள் அங்கே இருப்பதில்லை. எதையோ எண்ணமிட்டபடி எங்கோ இருப்பீர்கள். நீங்கள் ஏதேதோ கனவுகளில் மிதந்து கொண்டு இன்னோர் உலகில் இருப்பீர்கள். கண்கள் அங்கே இருந்தாலும் சன்னல் காலியாயிருக்கும்.

வெறுமை நிரம்பிய கண்களை நீங்கள் அறிவீர்களா? ஒரு சித்த சுவாதீனமற்ற, சிந்தனைத் தெளிவில்லாதவனின் கண்களைப் போய்ப் பாருங்கள். அவனிடம் வெறுமையான கண்களை நீங்கள் காண முடியும். அவன் உங்களையே பார்ப்பது போலிருந்தாலும் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டான். அவனுடைய கண்கள் வெறுமையானவை. முயன்று சாதனை புரிந்த ஒரு துறவியின் கண்களும் வெறுமையாகவே இருக்கும். அவர் உங்களை ஊடுருவிப் பார்ப்பதுபோல் இருந்தாலும் உங்களுக்கப்பால் செல்வார். அல்லது உங்கள் உடம்போடு நின்றுவிடாமல் உங்களை ஆராய்கிற மாதிரி இருக்கும். உங்கள் உடம்பு, மனம், இதயம் இவற்றையெல்லாம் விட்டு உங்களுக்குள் ஊடுருவிச் செல்வார்.

நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பீர்கள், உங்களுடைய தற்பெருமை (ego) யை 'நீங்கள்' என்று, துறவியோ அதிலிருந்து விலகிச் செல்பவர். ஒரு பார்வையிலேயே உங்களை அவர் ஆராய்ந்து கொண்டுவிடுவார். சித்த சுவாதீனமற்றவனின் பார்வை வெறித்திருக்கக் காரணம் அங்கே பிரக்ஞை இல்லை. துறவியின் பார்வையும் அப்படி இருக்கலாம். ஆனால் அதில் பிரக்ஞை இருக்கும். அவர் உங்கள் அடியாழத்திலும் ஊடுருவுவார், நீங்கள்

*இன்னும் அடைந்திராத உங்கள் இருப்புணர்வின் ஆழம் அது. அதனால் தான் அவர் உங்களைப் பாராதது போல் பார்த்துக் கொண்டிருப்பது. உங்களை நீங்கள் அடையாளம் படுத்திக் கொள்கிற 'நீங்கள்' அவருக்கு உண்மையாய் (reality) இருக்காது. நீங்கள் அறிந்திராத நீங்கள்தாம் அவருக்கு உண்மைத் தன்மை.*

*பார்க்கப்படுகிறதுடன் பார்க்கிறவரை அடையாளப்படுத்துகிறது தற்பெருமை. அது ஒரு சாதனம். உங்களுடைய சாதனங்களுடன் அடையாளப்படுவதை நீங்கள் விட்டால் தற்பெருமையும் விடப்பட்டதாகும். தற்பெருமையை விட வேறு வழியில்லை. உங்கள் கண்கள், காதுகள், மனம் இதயம் என்று உடம்புடன் அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள்.*

*உங்கள் ஒட்டு மொத்தத் தூய்மையில் ஒருபோதும் இருக்காது தற்பெருமை*

*நீங்கள் முதல் முறையாக உங்கள் முழு உள்ளமை (presence) யில் இருக்கிறீர்கள்.*

தன் வயப்படுத்துகிற (attract) எதுவும் பிணைப்பை
ஏற்படுத்தி மகிழ்ச்சியைத் தருவதாயிருக்கும்.
எதனிடமிருந்தும் விலகச் செய்கிற வெறுப்பு (repulsion)
வேதனையளிக்கும்.

*இவ்விரண்டும் உலகில் இருப்பதற்கான செயல் முறை ஆகும்: இது மகிழ்ச்சியளிக்கும் என்று நீங்கள் எண்ணுகிற ஒன்றின் பால் ஈர்க்கப்படுவது. இது வேதனை தரும் என்று நீங்கள் எண்ணுகிற ஒன்றிடம் வெறுப்பு கொள்வது. ஆனால் நீங்கள் ரொம்பவும் எச்சரிக்கையோடு இருந்தால் ஒட்டு மொத்த மாறுதலைப் பெறுவீர்கள். உங்கள் மகிழ்ச்சிக்குக் காரணமாகிற எதுவும் துன்பத்துக்குக் காரணமாகும் என்பதை நீங்கள் கண்டறிய முடியும். தொடக்கத்தில் மகிழ்ச்சி, முடிவில் துன்பம். அதே மாதிரி துன்பத்துக்குக் காரணமாகிற எதுவும் இன்பத்துக்கும் காரணமாகும். தொடக்கத்தில் துன்பமளிப்பது முடிவில் இன்பமாகி விடும். இவையே உலகின் இரண்டு செயல்முறைகள்.*

*ஒன்று இல்லறத்தில் இருப்பவனுடையது. (கிருஹஸ்தன்). அவன் தன் வயப்படுவதிலும், பிணைப்பிலும் வாழ்கிறான். எது மகிழ்ச்சி தரக்கூடியது என்று அவன் எண்ணுகிறானோ அதை நோக்கி அவன் செல்கிறான். அவன் எதை இறுகப் பற்றிக் கொண்டானோ அதுவே முடிவில் துன்பம் தருவதைக்*

காண்கிறான், துன்பத்தைத் தவிர வேறில்லை. தாங்க முடியாத மனவேதனையும், துயரமுந்தான் மிஞ்சுகிறது.

துறவியின் வழியோ இதற்கு நேர் எதிரிடையானது. அவன் மகிழ்ச்சிக்குரியதைப் பற்றுவதில்லை. மாறாக துன்பத்தை, தன்னொழுக்க முறையில் கண்டிப்பாய் இருப்பதை (austerity), உடல் மன வேதனையைப் பற்றுகிறான். முட்படுக்கையில் படுத்து, நீண்டகாலம் உண்ணாதிருந்து, மாதக்கணக்கில் உறங்காதிருந்து தவம் புரிகிறான். தொடக்கத்தில் துன்பம் தருவது பிற்பாடு இன்பம் தருவதாகவே இருக்கும் என்பதை அறிவதால் தான் அவன் எதிரிடையான ஒன்றைச் செய்வது. அவனுடைய தத்துவம் தலைகீழானது. அவன் வேதனையை துன்பத்தை விரும்பி நிற்கிறான். ஆனாலும் அவனுடைய நிலைப்பாடே சரியாய் இருக்கிறது. நீங்கள் வேதனையை நாடிச் சென்றால் முடிவில் மகிழ்ச்சி விளைகிறதே.

ஆனால், வேதனையிலேயே பழகிவிட்டவனுக்கு அதை உணரும் திறன் குறைந்துவிடும்.

ஒருமாதம் உண்ணாமையை மேற்கொண்டவனுக்கு சாதாரண ரொட்டி, வெண்ணெய், உப்பு இவையே அற்புதமான விருந்தாய் தெரியும்.

முட் படுக்கையில் கிடந்தவனைத் தரையில் படுக்க விடுங்கள். சுகமாய் தூங்குவான், ஓர் அரசன் கூட அத்தனை அருமையான உறக்கத்தை அனுபவித்திருக்க முடியாது.

ஆனால் அவையிரண்டுமே ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் மாதிரிதான். இரண்டுமே தவறானவை. ஒரு துறவி செயல் முறையை தலை கீழாக்கி விடுகிறான். தலையைக் கீழே வைத்து சிரசாசனம் செய்தாலும் அவன் அதே மனிதன்தான். இருவரிடமும் பற்றும் நிலை இருக்கிறது. இல்லறத்தான் மகிழ்ச்சியை பற்றிக் கொண்டான் என்றால், துறவி வேதனையைப் பற்றிக் கொள்கிறான்.

விழிப்புணர்வுடையவனோ எதிலும் சேராதவனாய், தனியாய் இருக்கிறான். அவன் இல்லறத்தானுமல்லன், துறவியுமல்லன். அவன் மடத்துக்குப் போவதில்லை, மலைகளைத் தேடியும் போவதில்லை. அவன் எங்கிருந்தாலும் உள்நோக்கிச் செல்பவனாகவே இருக்கிறான். புறத்தே எந்தவொரு தெரிவும் (choice) இல்லை அவனுக்கு. அவன் இன்பத் தையோ துன்பத்தையோ மகிழ்ச்சியையோ வேதனையையோ பற்றுவ

தில்லை. அவன் இன்பமே நலம் பயக்கும் என்கிற கோட்பாடுடையவனு மல்லன், தன்னைத்தானே வதைத்துக் கொள்பவனுமல்லன். வேதனை, மகிழ்ச்சி, இருட்டு, வெளிச்சம், இரவு பகல், வாழ்க்கை மரணம் என்கிற 'இருமை' விளையாட்டை ரசித்தபடி உள்நோக்கிச் செல்கிறவன். அவன் இரண்டையும் கடந்து, இரண்டுக்கும் அப்பால் செல்கிறான். தன்னுடைய விழிப்புணர்வின் மூலம் பரம சுகத்தை (bliss) அவன் அடைகிறான். பரம சுகம் என்பது மகிழ்ச்சியல்ல. மகிழ்ச்சி எப்போதுமே வேதனையுடன் கலந் திருப்பது. பரம சுகம் என்பது மகிழ்ச்சியுமல்ல, வேதனையுமல்ல, அது இரண்டிற்கும் அப்பாற்பட்டது.

இரண்டுக்கும் அப்பால் நீங்கள் இருக்கிறீர்கள். அதுதான் உங்களுடைய இயல்பு, தூய்மை எல்லாம். கடந்த நிலை. அதுவே உங்கள் இருப்புணர்வின் பளிங்கு போன்று தூய்மை.

'நீங்கள் உலகில் வாழ்கிறீர்கள் ஆனால் உலகம் உங்களில் இல்லை

நீங்கள் உலகில் செயல்படுகிறீர்கள், ஆனால் உலகம் உங்களுக்குள் செயல்படவில்லை. நீங்கள் எங்கிருந்தாலும் தொட்டுணரப்படாதவராய் இருங்கள். ஒரு தாமரைப்பூவாய் இருப்பீர்கள்.

O

# 4. தளைப்பட்ட சமூகத்தில் தளையற்றவராதல்

முதல் கேள்வி:

நேற்றைக்கு முந்தினநாள் நீங்கள் அளித்த விடைகளுள் ஒன்றில் இருந்து, கனவை விழிப்புணர்வின் சாதனங்களில் ஒன்றாய் பயன்படுத்தும் மேற்கத்திய மனிதனுக்குத் தாங்கள் போதிய முக்கியத்துவம் அளிக்கவில்லை என்றே நான் உணர்கிறேன். குறிப்பாக ஜங்கினுடைய **(Jung)** உளவியல் உத்திகளைக் கருத்தில் கொள்கிறேன்.

ஆம், நான் ஃப்ராய்டுக்கோ, ஜங்கிற்கோ ஆட்லர் அல்லது அஸாக்யோலிக்கோ அதிக முக்கியத்துவம் கொடுக்கவில்லைதான். அவர்களெல்லாம் காலத்தின் கரைமணலில் விளையாடும் குழந்தைகள். அவர்கள் அழகிய கூழாங்கற்களையும், வண்ணக் கற்களையும் சேகரித் தார்கள். ஆனால் முடிவான குறிக்கோள் என்று பார்க்கிறபோது அவர்கள் கூழாங்கற்களை வைத்து விளையாடும் குழந்தைகள் தாம். அந்தக் கற்கள் நிஜமான வைரங்களல்ல. அவர்கள் பெற்றது எதுவாயினும் ரொம்பப் பழைமையானவையே. நான் சொல்வதை நிதானமாக கேட்டால் நீங்களே, புரிந்து கொள்வீர்கள்.

மனிதன் உடல் ரீதியான நோய் வாய்ப்பட்டிருக்கும் போது மருத்துவர் தேவைப்படுவார். மனிதன் உளவியல் ரீதியாகவும் நோய் வாய்ப்படக் கூடும். அந்நிலையில் ஃப்ராய்டும், ஜங்கும் மற்றவர்களும் தேவைப்படுவார்கள். ஆனால், அவனுடைய வாழ்தலே இடர்ப்பாட்டுக் குள்ளாகுமெனில் பொது மருத்துவரோ மனநல மருத்துவரோ உதவ முடியாது. அது ஆன்மா சார்ந்த பிணி. அது உடலுமல்ல மனமுமல்ல, ஒட்டு மொத்தமானது. முழுமை என்பது அனைத்துப் பகுதிகளும் கடந்தது. அது பகுதிகளை ஒருங்கிணைத்து உருவாக்கப்பட்டதல்ல, பகுதிகளுக்கப் பாற்பட்டது. எல்லாப் பகுதிகளையும் தன்னுள் வைத்திருப்பது. அது கடந்த நிலை.

மனிதன் ஆன்மா சார்ந்த பிணியில் துன்புறுகிறான். அதில் கனவுகளால் எந்தப் பயனுமில்லை. உண்மையில் கனவுகளால் என்ன ஆகும்? அவை பெரும்பாலும் உங்களுடைய தன்னுணர்வற்ற (*unconscious*) நிலையை இன்னும் கொஞ்சம் கூடுதலாய் புரிந்து கொள்ளவே உதவும். கனவுகள் தன்னுணர்வற்ற நிலையின் மொழி - வெளிப்படுத்தும் முறை ஆகும். தன்னுணர்வின்மையின் குறியீடுகளையும், சுட்டல்களையும், குறிப்புரைகளையும், சைகைகளையும் அது வெளிப்படுத்தும்.

கனவுகளுக்குப் பொருள் காண்பதில் உளநோய் பகுப்பாய்வாளர்கள் உங்களுக்கு உதவக் கூடும். அவர்கள் பிரச்சினைகளைத் தீர்த்து வைக்க முற்படுவதுடன் உங்கள் கனவுகளைப் பற்றியும் விளக்குவார்கள். உங்கள் கனவுகளை நீங்கள் புரிந்துகொள்ள முடிந்தால் தன்னுணர்வற்ற தன்மை

(unconscious) க்குச் சமீபமாய் வந்து விடுவீர்கள் என்பது உண்மை. உங்கள் தன்னுணர்வற்ற நிலையுடன் நீங்கள் ஒத்துப் போகவும் இது உதவும். உங்களின் இருபகுதிகளான பிரக்ஞை (conscious) யும், தன்னுணர்வற்ற தன்மையும் ரொம்பவும் விலகியிருப்பவை அல்ல. அவை ஓரளவு நெருங்கியிருப்பவைதாம். நீங்கள் முன்னைப்போல் ஒரேயடியாய் பிளவுண்டு போவதில்லை, சிறிதளவேயென்றாலும் உங்களுக்குள் ஓர் இசைவு (unity) ஏற்படும். .

நீங்கள் இயல்பாகி விடுவீர்கள் இன்னும் கூடுதலாய். இயல்பா யிருத்தல் என்பது வழக்கமாய் இருப்பதுதான். எதுவும் புதிதாய் நிகழ்ந்துவிடாது, வெகுதொலைவில் இருந்து ஏதோவொன்று உங்களுள் ஊடுருவிப் பரவிவிடாது. சமூகத்திலும் நீங்கள் ஒத்துப் போகிறவரா யிருப்பீர்கள். உண்மையில் முன்னிலும் சிறந்த கணவராய், சிறந்த தாயாய், சிறந்த நண்பராய் இருப்பீர்கள். ஆனால் ஓரளவிற்குத்தான்.

தன்னை உணர்வதென்பது (self - realization) இதுவல்ல. கனவுப் பகுப்பாய்வு மூலம் தன்னை உணர்வது பற்றிப் பேசும்போது ஜங் ரொம்பவும் அபத்தமதாகவே பேசியிருக்கிறார். அது தன்னை உணர்வதல்ல, காரணம் தன்னை உணர்வதென்பது மனம் அற்றநிலையில் மட்டுமே நிகழ்வது. விவரிக்கப்பட்ட கனவுகளெல்லாம் விளக்கம் பெற்றுவிடாது. கனவுகள் மனதுக்குரியவை, மனதின் ஒரு பகுதி. குருட்ஜீவ், எக்கார்ட் ஜேகப் பெக்மி இவர்களுடையது தவிர்த்து மேற்கத்திய உளவியலில் வேறெதுவும் மனதுக்கப்பால் போகவில்லை. இந்த ஜேகப் பெக்மி, எக்கார்ட், குருட்ஜீவ் இவர்களெல்லாம் உண்மையில் மேற்கிற்குரியவர்களல்லர், அவர்கள் கிழக்கிற்குரியவர்கள். அவர்களுடைய செயல்முறை முழுக்க கிழக்கத்திய தாகவே இருந்தது. அவர்கள் மேற்கில் பிறந்தாலும் அவர்களுடைய மனோபாவம், வாழ்க்கைமுறை, புரிதல் எல்லாம் கிழக்கத்தியதுதான். நான் 'கிழக்கு' பற்றிச் சொல்லும்போது அதை நான் புவியியல் ரீதியாய் சொல்லவில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

என்னைப் பொறுத்தவரை கிழக்கு ஒரு நோக்கு முறை, மேற்கு ஒரு நோக்குமுறை அவ்வளவுதான். இதில் நான் புவியியலைத் தொடர்பு படுத்தவில்லை. 'மேற்கு' பொருள்களை நோக்குவதில் ஒரு வழிமுறை என்றால், கிழக்கும் ஒரு வழிமுறைதான். கிழக்கு பொருள்களைக் கவனிக்கும் போது ஒட்டுமொத்தமாய் கவனிக்கிறது. மேற்கு எப்போதுமே பொருள்களின் பகுதிகளில் கவனம் செலுத்துகிறது. நுணுகி ஆராய்வது மேற்கத்திய மனோபாவம், அது எண்ணம் அல்லது பொருள்களின் அடிப்படைப் பற்றி ஆராயும். கிழக்கத்திய மனோபாவமோ ஒருங்கிணைப்

பதாகும். அது பலவற்றையும் தொகுத்து முழுமை காணும். மேற்கத்திய மனோபாவம் ஒன்றில் பலவற்றைக் காண முயல்வது.

மேற்கத்திய மனோபாவம் பகுப்பாய்வு செய்வதிலும், பிரித்தறிவதிலும் ஆற்றல் மிக்கதாயிருக்கிறது. அஸாக்யோலியின் உணர்வுகளைக் கூட்டிணைக்கும் முறைகூட உண்மையான கூட்டிணைப்பு (synthesis) ஆகாது, காரணம் அதில் நோக்குமுறை தவறிவிட்டிருக்கிறது. முதலில் ஃப்ராய்டும், ஜங்கும் முழுமையைத் தகர்த்து, பகுதிகளாய் பிரித்தறிந்தார்கள். அஸாக்யோலி அப்பகுதிகளை எப்படியாவது ஒருங்கிணைக்க முயல்கிறார்.

நீங்கள் மனிதனைப் பல பகுதிகளாய் வெட்டி ஆய்வு செய்ய முடியும். ஆனால், அவனை வெட்டியவுடனே அவன் உயிருடனிருக்க மாட்டான். நீங்கள் வெட்டிய பகுதிகளைப் பழையபடிக்கே இணைத்தாலும் உயிர் மீண்டும் வராது. அது உயிரற்ற பிணந்தான். பகுதிகளைத் திரும்பச் சேர்த்தாலும் அது முழுமையடையாது. ஃப்ராய்டும், ஜங்கும் எதைச் செய்தார்களோ அது குறித்து வருந்துகிற வேலையைத் தான் அஸாக்யோலி செய்தார். அவர் மீண்டும் பகுதிகளை ஒருங்கிணைக்கிறார். ஆனால் அது பிணமாயிருக்கிறது. அதை எப்படி கூட்டிணைப்பாய்க் கொள்வது?

நீங்கள் முழுமையை ஆய்ந்து பார்க்க வேண்டும். முழுமை என்பது முற்றிலும் மாறுபட்டது, தனித்தன்மை கொண்டது. இப்போது உயிரியல் நிபுணர்களும், மருத்துவமும் அறிநிலை கூடுதலாய் பெற்றிருக்கக் காண்கிறோம். ஒரு மனிதனின் இரத்தத்தைப் பரிசோதிப்பதற்காக அவன் உடலிலிருந்து எடுக்கிறீர்கள். அந்த இரத்தம் அவனுக்குள் ஓடிக் கொண்டிருக்கிற அதே இரத்தமாய் இருக்காது. அது அவனிலிருந்து எடுக்கப்பட்டதுமே மரித்து விட்டிருக்கும். நீங்கள் சோதிப்பது மாறுபட்ட ஒன்றைத்தான். மனிதனுக்குள் ஓடிக் கொண்டிருக்கிற இரத்தம் இயக்கமுள்ளது. அது ஒரு முழுமைக்குரியது, ஓர் இயங்கும் அமைப்புக்குட்பட்டது. உடம்பின் ஒரு பகுதியான கையைப் போன்று உயிர்த்தன்மை உடையது. நீங்கள் கையைத் துண்டித்து விட்டால் அதற்கு மேலும் அதே கையாய் இருக்காது.

உடம்பில் இருந்து வெளியே எடுக்கப்பட்டு, ஆய்வுக் கூடத்துக்குக் கொண்டு செல்லப்பட்ட இரத்தம் எப்படி அதே இரத்தமாயிருக்க முடியும்?

வாழ்க்கை ஓர் இசைவுத் தன்மையில் நடப்பது, மேற்கத்திய நோக்கு முறையோ பகுதிகளாய் துணித்து, பகுதிகளை ஆராய்ந்து, பகுதியின் மூலம் முழுமையை அறிய முயல்வது. நீங்கள் எப்போதுமே தவறவிடுவீர்கள். அஸாக்யோலி மாதிரி நீங்களும் அறிய முற்பட்டாலும் அந்த அறிதல் ஓர் உயிரற்ற பிணமாகவே இருக்கும். எப்படியாவது பகுதிகளை இணைத்து

விடுவீர்கள். ஆனால் அதில் வாழ்தலுக்கான இசைவுத்தன்மை இருக்காது.

ஃப்ராய்டும், ஜங்கும் கனவுகள் பற்றி ஆராய்ந்திருக்கிறார்கள். மேற்கைப் பொறுத்தவரை அது ஒரு பெரிய கண்டுபிடிப்பு, காரணம் அவர்களுடைய சிந்தனை உறக்கத்தையும், கனவுகளையும் மறந்து விட்டிருந்தது. மேற்கத்திய மனிதன் குறைந்தபட்சம் மூவாயிரம் ஆண்டு களுக்கு மேல் உறக்கம் கனவுகள் பற்றிய சிந்தனையில்லாமல் வாழ்ந் திருக்கிறான். அவன் விழித்திருக்கும் நேரங்களைப் பற்றி மட்டும் சிந்தித் திருக்கிறான். அவனுக்கு அதுதான் வாழ்க்கையாய் தெரிந்திருக்கிறது. ஆனால் விழித்திருக்கும் நேரம் மூன்றில் ஒரு பங்கு மட்டுமே.

நீங்கள் அறுபது ஆண்டு காலம் வாழ்கிறீர்கள் என்றால் இருபது ஆண்டுகள் உறக்கத்தில் கரைந்து விடுகிறது. வாழ்வில் மூன்றில் ஒரு பகுதி கனவுகளிலும் உறக்கத்திலுமாய் காணாமல் போய்விடுகிறது. இருபது ஆண்டுகள் ஒன்றும் இலேசாய் தூக்கி எறியப்படுவதற்கில்லை. அதில் ஏதாவது நடந்திருக்கும். அது உங்களில் ஒரு பகுதி, சிறு பகுதியல்ல, பெரும் பகுதி. மனிதனை அவனுடைய கனவுகள் மற்றும் உறக்கத்தின் மூலம் புரிந்துகொள்ள முடியும் என்ற கருத்தை ஃப்ராய்டும், ஜங்கும் திரும்பக் கொண்டு வந்தார்கள். அந்த வகையில் நிறையவே ஆய்வுகள் நடத்தப் பட்டிருக்கின்றன. ஆனால், இது தன்னை உணர்தல் பற்றியது என்று ஜங் சிந்திக்கத் தொடங்கியதும் அவர் வெகு தொலைவு போய்விட்டார்.

அதுவும் நல்லதுதான்.

நீங்கள் உடல் சார்ந்த விதத்தில் ஆரோக்கியமாய் இருக்கலாம், மனம் சார்ந்த விதத்தில் ஆரோக்கியமாய் இருக்கலாம். ஆனால், வாழ்தலில் ஆரோக்கியம் இல்லாதிருக்கும் அப்போது முதல்முறையாக ஆன்மா சார்ந்த வருத்தத்தை, உள்ளில் பெருங்கவலையை உணர்வீர்கள்.

அதற்குமுன் உங்களுடைய உடலும் மனமும் நோய்களும் உங்கள் இருப்புணர்வின் மீது நீங்கள் கவனம் செலுத்த முடியாத அளவுக்கு உங்களை ஆக்ரமித்திருக்கும். ஒவ்வொன்றும் குறிப்பிட்ட நிலையில் இருந்தால்; உடம்பு நன்றாய் இயங்கும், மனம் இடர்ப்பாடுகளில் சிக்காது, திடீரென்று உலகின் மிகப்பெரிய வருத்தத்தை நீங்கள் அறியும்படி ஆகும். அது வாழ்வு சார்ந்தது, ஆன்மா சார்ந்தது. திடுதிப்பென்று நீங்கள் 'இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? நான் இங்கிருப்பது ஏன், எதற்காக?' என்று கேட்கத் தொடங்கி விடுவீர்கள். ஒரு நோயாளிக்கு இப்படித் தோன்றுவ தில்லை, காரணம் அவன் நோயின் பிடியில் கடுமையாய் சிக்கிக் கொண்டிருப்பான். முதலில் அவன் உடம்பையும், மனதையும் நல்ல முறையில் பாதுகாத்துக் கொண்ட பிறகே அவனால் சிந்திக்க முடியும்.

உடம்பும் மனமும் ஆரோக்கியமாய் இருந்தால்தான் உண்மையான இடர்ப்பாடு பற்றிய சிந்தனை எழும். அந்த இடர்ப்பாடு ஆன்மா சார்ந்தது.

ஜங் தன்னை உணரும் (*Self - realization*) வழியாய் தம்முடைய உளவியல் பகுப்பாய்வு பற்றிப் பேசுகிற போது, தாம் என்ன சொல்கிறோம் என்பதே அவருக்குத் தெரியாது. அவர் தம்மளவில் தன்னை உணர்ந்தவரல்லர். ஃப்ராய்டு அல்லது ஜங்கின் வாழ்க்கையை உள்ளார்ந்து பார்த்தீர்களானால் தெரியவரும், அவர்களும் சாதாரண மனிதர்கள் தாம் என்பது. ஃப்ராய்டு சராசரி மனிதர்களைவிட பயங்கர கோபக்காரர். அவர் பொறாமைக்காரருங்கூட. பொறாமையில் வலிப்பு வந்து தரையில் விழுந்துவிடுவார், தன்னுணர்வின்றிக் கிடப்பார். ஃப்ராய்டின் வாழ்வில் இப்படிப் பல முறை நடந்திருக்கிறது. பொறாமையின் வயப்பட்ட போதெல்லாம் அவர் மயக்கம் அல்லது வலிப்புத் தொல்லைக்குள்ளாகி விடுவார். இந்த ஆசாமி தன்னை உணர்ந்தவரா? புத்தாவின் சங்கதி என்ன? அவரை எங்கே வைப்பீர்கள்?

சராசரி மனிதனின் பேராவலுடனும், சூழ்ச்சித் திறனுடன்தான் ஃப்ராய்டு வாழ்ந்திருக்கிறார். அவர் உளவியல் பகுப்பாய்வை பொதுவுடைமை இயக்கம் மாதிரி ஓர் இயக்கமாகவே வளர்த்தெடுக்க முயன்றார். ஒரு லெனின் அல்லது ஸ்டாலினைப் போன்று, அவர்களை விடவும் அதிகாரத்துடன் அதைக் கட்டுப்பாட்டில் வைக்க முயன்றார். ஜங்கைத் தம்முடைய வாரிசாக அவர் அறிவித்தார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

ஜங்கின் உருவப் படங்களைப் பாருங்கள். ஜங்கின் படத்தை நான் பார்க்கக் கிடைத்த போதெல்லாம் ஊன்றிக் கவனித்திருக்கிறேன், அது மிகவும் அரிதான ஒன்றாகும். ஜங்கின் படத்தை நீங்கள் எப்போது பார்த்தாலும் அந்த முகத்தில் எழுதப்பட்டிருக்கும் எல்லாவற்றையும் நீங்கள் அறிந்து கொள்ள முடியும். அகந்தை, தந்திரம், கோபம் என்று சகல உபாதைகளும் அதில் எழுதப்பட்டிருக்கும். அவர் ஒரு சாதாரண மனிதனாய் அச்சத்தில் விழுந்துகிடந்தார். பிசாசுகள், ஆவிகளைப் பற்றிய பயம் அவருக்கிருந்தது. பொறாமை, போட்டி மனப்பான்மையுடன் காரசாரமாய் விவாதிக்கும் சண்டைக்காரராய் இருந்தார் அவர்.

உண்மையிலேயே, தன்னை உணர்தல் என்றால் என்னவென்று மேற்கிற்குத் தெரிந்திருக்கவில்லை. அதனால், எந்த ஒன்றும் தன்னை உணர்தலாகிவிட்டது. தன்னை உணர்தல் என்றால் என்ன? எந்த ஒன்றாலும் இடையூறு செய்யப்படாத அமைதி. அதில் எப்படி உடைமைத்தனமும், பேராவலும், பொறாமையும் இருக்க முடியும்? தன்னை உணர்தல் என்பது

அகந்தையற்றிருத்தல். அகந்தையோடு அதைப் போன்ற மற்றவர்களும் இல்லாதொழியும்.

கனவுகளை விளங்கிக் கொள்வதன்மூலம் அகந்தை மறைந்துவிடாது என்பதை நினைவில் வையுங்கள். மாறாக அந்த அகந்தை வலுப்படக் கூடும். காரணம் பிரக்ஞைக்கும் (conscious) தன்னுணர்வற்றிருப்பதற்கும் (unconscious) உள்ள இடைவெளி குறைவு.

'இடர்ப்பாடு குறைந்த மனதில் வலிமை கூடிக் கொண்டேயிருக்கும்'

அகந்தை புதிய குத்தகை உரிமை பெற்றுவிடும். உளவியல் பகுப்பாய்வு (psycho - analysis) உங்களுடைய அகந்தைக்கு அடித்தளமிட்டு, மையப்படுத்தி அதை வலுவடையச் செய்யும், உங்களைத் தன்னம்பிக்கை உடையவராக்கும். உண்மையில் முன் எப்போதையும் விட இவ்வுலகில் சிறப்புடன் வாழ்வீர்கள், காரணம், உலகம் அகந்தையில் - தற்பெருமையில் நம்பிக்கை வைத்திருக்கிறது. தொடர்ந்து வாழ்தலுக்கான போராட்டத்தில் நீங்கள் இன்னும் ஆற்றலுடன் போரிடுவீர்கள. உங்களுடைய பிரக்ஞைக்கும் உணர்வற்ற நிலைக்கும் தொடர்ந்து நடக்கும் சச்சரவில் நீங்கள் சிக்கித்தவித்த போதிருந்ததை விட இப்போது சில உன்னத நோக்கங்களை நீங்கள் எளிதாய் அடையப் பெறுவீர்கள்.

உங்களுக்குள் கலவரம் குறைந்து, குழப்பம் நீங்கி, தன்னம்பிக்கை யோடு காணப்படுவீர்கள். ஆனால் இது தன்னை உணர்தலாகாது. மாறாக, இது அகந்தையை தற்பெருமையை உணர்தலாகும்.

மேற்கத்திய உளவியல் இதுவரைக்கும் 'அகந்தையின்மை' (non-ego) என்கிற முக்கியப்பண்பை அடைந்தபாடில்லை. அது இன்னமும் அகந்தையின் அடிப்படையிலேயே சிந்தித்துக் கொண்டிருக்கிறது. அகந்தையை எப்படி மேலும் வலுவூன்றச் செய்வது, மையப்படுத்துவது, எப்படி மேலும் இயல்பாக்குவது, விரும்பத்தக்க விதத்தில் அமைத்துக் கொள்வது என்று. ஆனால் கிழக்கோ அகந்தையை ஒரு பிணியாய் கருதுகிறது. மனமே ஒரு நோய். அதில் தேர்வு செய்ய எதுவும் இல்லை. பிரக்ஞை, உணர்வற்ற தன்மை என்கிற இரண்டுமே போக வேண்டியவை தாம்.

அவை போக வேண்டியவை, அதனால் கிழக்கு அவற்றை விளக்க முற்படவில்லை. போக வேண்டியவற்றைப் பற்றி விளக்குவது நேர விரயம் தானே. கிழக்கும் மேற்கும் எப்படி மாறுபடுகிறதென்பதைக் கவனியுங்கள். மேற்கு பிரக்ஞைக்கும் உணர்வற்ற தன்மைக்கும் ஒரு

சரிக்கட்டலை (adjustment) மேற்கொள்ளவும், அகந்தையை வலுப்படுத்தவும் முயற்சிக்கிறது. அவ்விதமாய் சமூகத்தில் நீங்கள் விரும்பத்தக்க நபராய், தனக்குள்ளும் ஒழுங்கு செய்து கொண்டவராய் ஆகிவிடுவீர்கள். பிளவுக்குப் பாலமிடப் பட்டதில் உங்கள் மனம் இலேசாகி விட்டிருக்கும். மனதை விடவும் அதற்கப்பால் செல்லவும் கிழக்கு முயற்சித்துக் கொண்டிருக்கிறது. சமூகத்துடன் ஒத்துப் போவதல்ல பிரச்சினை, பிரபஞ்ச இருப்புடன் (existence) பொருந்திக் கொள்ள முடியுமா என்பதுதான். பிரக்ஞைக்கும் தன்னுணர்வற்ற தன்மைக்கும் இடையில் சரி செய்து கொள்வது பற்றியல்ல பிரச்சினை. உங்களுடைய முழு இருப்புணர்வுடன் (being) அதை உருவாக்கிய அனைத்துப் பகுதிகளுடன் சரி செய்துகொள்ள முடிவதுதான்.

கனவுகள் முக்கியம். ஒரு மனிதன் பிணியுற்றிருந்தால், இசைவற்றிருந்தால் கனவுகள் முக்கியம். அவை நலக் குறைவின் அடையாளங்கள். ஆனால், கனவுகளில்லாத மனிதனைப் பற்றி நீங்கள் எதுவும் தெரிந்துகொள்ள முடியாது. கனவு காணல் தன்னளவிலேயே நோய்க் குணங்களை அறிவதாகும். கனவு என்பது ஒரு நோய்க் கூறு இயல் (pathology) என்றால் அது மிகையல்ல. புத்தர் ஒருபோதும் கனவு கண்டதில்லை. அப்போது ஃப்ராய்டு இருந்திருந்தால் என்ன செய்திருப்பார்?

ஃப்ராய்டு அங்கே இருந்திருந்தால் புத்தரை ஆராய்ந்திருப்பாரா? அவரைப் பற்றி என்ன விளக்கம் தந்திருப்பார்? ஃப்ராய்டு புத்தருக்குள்ளிருந்து விளக்கக் கூடியதாய் எதையும் கண்டறிந்திருக்க மாட்டார். அவருடைய உளவியல் முற்றாக உபயோகப்பட்டிருக்காது.

அமெரிக்காவில் இது நடந்தது. அடுத்தவர் மனதில் ஓடும் எண்ணங்களை அப்படியே படித்துச் சொல்லக் கூடிய ஒருவன் இருந்தான். அவன் சொல்வது நூறு சதவிகிதம் சரியாயிருக்கும். அவன் உங்கள் முன்பாய் அமர்ந்து கொள்வான். நீங்கள் உங்களுடைய கண்களை மூடிக்கொண்டு எண்ணமிட வேண்டும். அவனும் கண்களை மூடியபடி நீங்கள் எண்ணுவதையெல்லாம் சொல்லத் தொடங்குவான். நீங்கள் சிந்திக்கிற கணத்திலேயே அந்தச் சிந்தனை இடப் பெயர்ச்சி செய்யப்பட்டு, அவன் அதைப் பெற்றுக் கொண்டு விடுகிறான். இது ஒரு கலை. நிறையபேர் அதைப் பற்றி அறிவார்கள். அது கற்றுணரக் கூடியதுதான், நீங்களும் அதைச் செய்ய முடியும், அது ஒரு நுட்பமான அதிர்வு.

நீங்கள் எண்ணங்களைக் கருத்தில் கொள்ளும் ஆர்வமுள்ளவராயிருந்தால் (receptive) அடுத்தவருடைய மனம் ஒலிபரப்பு நிலையமாகிவிடும், நீங்கள் அதை பெற்றுக் கொள்பவராகிவிடுவீர்கள். எண்ணம்

ஒலிப்பரப்பப்படக் காரணம் மனிதனைச் சுற்றியுள்ள மின்சார மண்டலத்தில் சிற்றலைகள் எழுவதால்தான். நீங்கள் போதிய அளவு அமைதியாய், வரவேற்கும் பண்புடையவராயிருந்தால் அதை நீங்கள் அதைப் பிடித்துக் கொள்ள முடியும்.

மெஹர்பாபா என்பவர் அமெரிக்காவில் இருந்தபோது யாரோ சிலர் அந்த மனிதனை அவர் முன் கொண்டு வந்தார்கள். மெஹர் பாபா ஆண்டுக் கணக்கில் மவுனமாய் இருந்தவர். அவன் மெஹர் பாபாவின் முன்பாய் அமர்ந்து, கண்களை மூடித் தியானமிருந்தான். நெடுநேரம் தியானம் செய்த பின் கண்களைத் திறந்து மெஹர் பாபாவைப் பார்த்தான். நேரம் ஓடிக் கொண்டிருந்தது. மக்கள் கவலையுடன் கேட்டார்கள், 'நீர் ஒரு போதும் இத்தனை நேரம் எடுத்துக்கொண்டதில்லையே' என்று. அவன் ''என்ன செய்வது? இவர் எண்ணமிடாமல் இருக்கிறார். இவருக்குள் எந்தவோர் எண்ணமுமில்லை'' என்று சொன்னான்.

ஃப்ராய்டு அல்லது ஜங் புத்தரின் அருகில் இருந்தால், அல்லது அவர்கள் என்னிடம் வந்தால் அவர்கள் எதையும் விளக்கியுரைக்க முடியாது, அவர்களின் பிடியில் சிக்க எந்தவோர் எண்ணமும் கிடைக்காது.

கிழக்கு சொல்கிறது, 'கனவே ஒரு நோய்க் கூறுவியல் (pathology) என்று. அது ஒரு வகை நோய், அமைதியைக் குலைப்பது. நீங்கள் உண்மையிலேயே அமைதியாய் இருக்கும் பட்சத்தில் பகலில் சிந்தனை மறையும், இரவில் கனவுகள் மறையும். சிந்தனையும் கனவும் ஒரே விஷயத்தின் இரண்டு வடிவங்கள்: பகலில் நீங்கள் விழிப்பு நிலையில் இருக்கும்போது அது சிந்தனையாய், இரவில் நீங்கள் உறங்கும்போது அது கனவாய் இருக்கும். கனவு காண்பது காலத்தால் தொன்மையான வழிமுறை. ஆனால் முதன்மையானது. கனவை, குழந்தைகள் சிந்திப்பதைப் போல் வண்ணச் சித்திரங்களோடு கூடிய சிந்தனை எனலாம். அதனால்தான் குழந்தைகள் படிக்கிற நூல்களை வண்ணப் படங்களுடன் அச்சிடுகிறார்கள். குழந்தைகளால் வார்த்தைகள் அதிகம் பேச முடியாது, கொஞ்சம் கொஞ்ச மாகத்தான் அவர்கள் அதில் இயக்கம் பெற முடியும்.

நீங்கள் ஒரு மாங்கனியின் வடிவத்தைப் பெரிய அளவில் வரைந்து 'மாம்பழம்' என்ற வார்த்தையைச் சிறிய எழுத்தில் எழுதுகிறீர்கள். முதலில் அவர்கள் (குழந்தைகள்) படத்தைப் பார்ப்பார்கள் பிறகு வார்த்தையுடன் தொடர்பு கொள்வார்கள். கொஞ்சம் கொஞ்சமாய் படம் சிறிதாகி பிறகு மறையும். அப்போது 'மாம்பழம்' என்ற வார்த்தை மட்டும் போதியதாய் இருக்கும்.

ஆதிவாசியின் மனம் குழந்தைகள் செய்வது போல் சித்திரவடிவில் சிந்திக்கும். நீங்கள் உறங்கும் போது ஓர் ஆதிவாசியாகி விடுகிறீர்கள்.

ஒட்டுமொத்த நாகரிகமும் மறைகிறது. பண்பாடும், சமூகமும் மறைகிறது. நீங்கள் சம காலத்திய உலகின் ஓர் அங்கமாயிருப்பதில்லை, குகையில் வாழும் ஆதிவாசியாயிருப்பீர்கள். காரணம் என்னவெனில் தன்னுணர்வற்ற மனம் (unconscious) பண்படுத்தப்படாமல் இருந்து விடுகிறது. நீங்கள் சித்திரவடிவில் சிந்திக்கத் தொடங்குகிறீர்கள்.

சிந்திப்பதும் கனவு காண்பதும் ஒன்றேதான், ஒரே மாதிரிதான். சிந்தனை நிற்கும்போது கனவு காண்பதும் நிற்கிறது. கனவு காண்பது நிற்கும் போது சிந்திப்பதும் நின்று விடுகிறது.

கிழக்கின் தீவிர முயற்சி - விஷயத்தை எப்படி முழுமையாய் கைவிடுவது என்பதாகவே இருந்தது. எப்படித் தெரிந்துகொள்வது, எப்படி சரி செய்து கொள்வது என்பது பற்றியெல்லாம் நாம் கவலைப்படவில்லை. ஆனால் அதை எப்படி விடுவது என்பது பற்றித்தான் கவலை கொள்கிறது. அதை விட முடியும் என்கிறபோது, தெரிந்துகொண்டு என்ன ஆகப் போகிறது, நேரத்தை ஏன் வீணடிப்பது?

சற்று முன்னாகவோ பின்னாகவோ மேற்கும் இதை உணர்ந்து புரிந்து கொள்ளும் காரணம் இப்போது தியான உத்திகள் மேற்கில் ஊடுருவிக் கொண்டிருக்கின்றனவே. மனிதன் ஒட்டுமொத்த சிக்கலை, சிந்தனையை, கனவு காணலை விட்டுவிடச் செய்யும் வழி முறையாகவே தியானங்கள் இருக்கின்றன. அவற்றை விட்டுவிட்டால் மனம் சாராத ஒரு நலனை அடைவீர்கள். நீங்கள் அடைவது உங்களுடைய தற்போதைய மனதால் எண்ணிப் பார்க்க முடியாததாகும். நீங்கள் சிந்திக்காதபோது, கனவு காணாதபோது அது எப்படி இருக்கும் என்று உங்களால் கற்பனை கூட செய்து பார்க்க முடியாது.

உணர்வுகளைப் பகுப்பாய்வு செய்வதும், இதர போக்குகளும் நீண்ட கால அவகாசம் எடுத்துக் கொள்ளும். கனவுகளைப் பற்றித் தெரிந்து கொள்ளவே மூன்று வருடங்கள், ஐந்து வருடங்கள் என்றாகிவிடும். விஷயம் முழுவதும் சலிப்பூட்டுவதாய் இருக்கும், சிலரிடம் மட்டுமே அதற்கான திறமையும், நேரமும் இருக்கும். அப்படிச் செயல்படக் கூடியவர்களும் அதன் மூலம் பெறக் கூடியது என்ன. உணர்வுகளைப் பகுப்பாய்வு செய்கிறவர்களில் பலர் என்னிடம் வந்தார்கள். தன்னை உணரும் விதமாய் எதுவும் நடந்துவிட வில்லை. அவர்கள் பல ஆண்டு களாய் உணர்வுப் பகுப்பாய்வில் இருந்திருக்கிறார்கள். தங்களை மட்டுமன்றி பிறரையும் அவர்கள் உணர்வுப் பகுப்பாய்வு செய்திருந்தார்கள் ஆனால் எதுவும் நடந்துவிடவில்லை. அவர்கள் அப்படியேதான் இருந் தார்கள், அகந்தையும் அப்படியே தானிருந்தது. இதில் முற்றிலும் மாறாக

நடந்தது என்னவெனில் அவர்கள் முன்னிலும் ஓரளவு உறுதியும், வலிமையும் பெற முடிந்ததுதான். ஆன்ம வருத்தம் அப்படியே தொடர்ந்தது.

ஆம். நான் ஃப்ராய்டு, ஜங் இவர்கள் மீது ரொம்பவும் மதிப்பு வைக்கவில்லைதான். ஏனெனில், என்னுடைய மனோபாவம் இப்படி இருந்தது. மனதை எப்படி விடுவது? அதைவிட முடியும், அது எளிதான காரியந்தான், மிகக் குறைவான கால அவகாசத்திலேயே அதை விட்டுவிட முடியும்.

உண்மையில் யாருடைய உதவியும் இல்லாமலே அதைவிட முடியும்.

கிழக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தற்செயலாய் இந்த உண்மையைக் கண்டுபிடித்துவிட்டது. புராதன கிழக்கத்திய நூல்களில் கனவுகளைப் பற்றிய விளக்கங்கள் உள்ளன. கடந்த காலத்தில் கிழக்கு கண்டுபிடித்திராத எந்தவொரு விஷயமும் புதிதாய் கண்டுபிடிக்கப்பட்டு விடவில்லை. ஃப்ராய்டு, ஜங் இவர்களிடம் கூட புதிய சரக்கு கிடையாது. பழைய பரப்பில் நிகழ்த்தப்பட்ட மறு கண்டுபிடிப்புகள்தாம் அவர்களுடையவை. அதே சமயம் அவர்களுடைய கண்டுபிடிப்பில் குறிப்பிட்டுக் கூறக் கூடிய ஒன்றும் உண்டு. அது - மனம் பற்றிய விளக்கத்துக்கு அளவே கிடையாது என்பதுதான். அது முடிவின்றிக் கனவு காணும், புதிது புதிதாய் கனவுகளை உருவாக்கிக் கொண்டேயிருக்கும்.

உண்மையில் - உணர்வு சார்ந்த பகுப்பாய்வு எதுவும் இதுவரை முடிந்தபாடில்லை. அது ஒரு போதும் முடிவதில்லை. ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகும் அரைகுறையாகவே இருக்கும். எந்தவொரு பகுப்பாய்வும் பூர்த்தி அடைவதில்லை. காரணம் இந்த மனம் புதிய கனவுகளை நெசவு செய்து கொண்டே போகிறது. நீங்கள் பொருளை விளக்கிக் கொண்டிருந்தாலும் அது புதிய கனவுகளை மேலும் மேலும் நெசவு செய்தபடி இருக்கிறது. அதன் திறனுக்கு எது எல்லை - மிகவும் படைப்பார்ந்ததாயும், கற்பனை வளம் கொண்டதாயும் அது இருக்கிறது. ஒன்று அது வாழ்க்கையுடன் முடியும், அல்லது, தியானத்தில் நிறைவெய்தும், உங்கள் விருப்பத்தின் பேரிலேயே மறைந்தொழியும். மனதுக்குத் தேவை இறத்தல் (உணர்வற்றுப் போதல்). பகுப்பாய்வு அல்ல. இறத்தல் சாத்தியம் என்கிற போது பகுப்பாய்வு எதற்கு? இவை இரண்டுமே முற்றிலும் வேறான விஷயங்கள் என்பதை நீங்கள் அறிந்திருக்க வேண்டும்.

ஃப்ராய்டும், ஜங்கும் மேதைகள் தாம், ஆனால், சரியான பாதையை விட்டு விலகிச் சென்றவர்கள். அவர்கள் பெரிய அறிவாளிகள் அவர்களுடைய அறிவுத்திறன் குறித்து சந்தேகமில்லை. ஆனால், அவர்கள் தங்களுடைய நேரத்தை வீணடித்துக் கொண்டிருந்தனர். இதில் பிரச்சினை

என்னவெனில் - அவர்கள் பலவற்றை மனதைப் பற்றியவற்றைக் கண்டு பிடித்தார்கள். ஆனால் அவர்களாலேயே அதைப் பயன்படுத்த முடிய வில்லை. அதுவே முடிவெடுக்க உதவும் நெறி முறையாய் இருந்திருக்க வேண்டும்.

ஒரு தியான உத்தியை நான் கண்டுபிடித்து, அதை நானே தியானத்தில் பயன்படுத்தாவிட்டால், பயன்படுத்த முடியாவிட்டால் அந்தக் கண்டு பிடிப்புக்கு அர்த்தம் உண்டா?

ஆனால், கிழக்கிலும், மேற்கிலும் அதுகூட மாறுபடவே செய்கிறது. மேற்கில் அவர்கள் சொல்வார்கள், ''மருத்துவரால் தன்னைக் குணப்படுத்திக் கொள்ள முடியாது. ஆனால் உங்களைக் குணப்படுத்த முடியும்'' என்று கிழக்கில், நாம் எப்போதுமே சொல்லிக் கொண்டிருக்கிறோம், 'முதலில் உம்மைக் குணப்படுத்திக் கொள்ளப் பாரும், மருத்துவரே! அடுத்தவருக்கு அது பயன்படுமா இல்லையா என்பதை முடிவு செய்ய அந்த நெறி முறை உதவும்' என்று. மேற்கில் அப்படிக் கேட்கமாட்டார்கள். மேற்கில் அறிவியல் தன்னால் வளர்ந்து கொண்டிருக்கிறது. தனிப்பட்ட முறையி லானவை (personal) கேட்கப்படுவதிலலை, காரணம், விஞ்ஞானம் உண்மையானதும், நடைமுறைக்கு ஏற்கக் கூடியதுமான பாடமாய் கருதப்படுவது தான். அது உள்ளுணர்வோடு சம்பந்தப்படுவதல்ல. அறிவியலைப் பொறுத்தவரை அப்படி இருக்கலாம், ஆனால் உளவியல் புறநோக்குடையதாய் (objective) மன உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட புறப் பொருளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதாய் இருக்க முடியாது. அது உள் உணர்வு சார்ந்ததாயும் இருக்க வேண்டும், காரணம், மனம் என்பது உணர்வில் அமைந்தது.

முதல் காரியமாய் ஜங்கிடம், 'உம்மை நீர் தெளிவாய் புரிந்து கொண்டிருக்கிறீரா?' என்று கேட்க வேண்டும். ஆனால், அவர் தற்பெருமை கொண்டவர். தம்மைப் புரிந்து கொண்டிருப்பதாகவே அவருக்கு நினைப்பு. அவர் இந்தியாவிற்கு வரத்தயங்கினார். ஒரே ஒரு முறை இங்கே வந்தார், ரமணமகரிஷி போன்ற ஒரு புனிதரைச் சென்று பார்ப்பதிலும் ஆர்வமற்ற வராயிருந்தார். அவருக்கு அதிலெல்லாம் விருப்பம் இருக்கவில்லை. அவர் கற்றுக்கொள்ள அங்கே என்ன இருக்கிறது? எல்லாமும் அவரிடம் முன்பே இருக்கிறதாக்கும். சில கனவுத் துணுக்குகளுக்கு விளக்கமளித்துவிட்டு வாழ்க்கைக்கே விளக்கமளித்துவிட்டதாய் எண்ணிக் கொள்பவர் அவர்!

நீங்கள் கனவுகளை விளக்கிக் கொண்டே போகிறீர்கள். அந்தக் கனவுகளே உண்மை என்று எண்ணிக் கொள்கிறீர்கள். கிழக்கில் உள்ளவர் களாகிய நமது நோக்குமுறை (standpoint) நேர் எதிரிடையானது.

நாம் வாழ்வுக்குள் ஊடாடிப் பார்க்கிறவர்கள் நமக்கு வாழ்வே ஒரு கனவுதான்'

கனவுகளை விளங்கிக் கொள்வதன் மூலம் உண்மையையே விளங்கிக் கொண்டதாய் எண்ணம் உங்களுக்கு (மேற்கத்தியர்கள்) மாறாக நாமோ வாழ்க்கை ஒரு கனவன்றி வேறல்ல என்பதைக் கண்டோம். ஜங்கிற்கு ஏன் அந்தத் தயக்கம், ஆர்வமின்மை? கிழக்கென்றாலே அவருக்குப் பயம். அவர் அப்படி அஞ்சி நடுங்கியதற்கு ஏதோ காரணம் இருக்க வேண்டும். அவர் பயந்ததற்குக் காரணம் எங்கே அவருடைய புரிதல் (understanding) பற்றிய பொய்யான புரிதல், உண்மையை கிழக்கு வெளிப்படுத்தி விடுமோ என்பதாய் இருக்கலாம். அவர் மட்டும் ரமணரிடமோ, இதர கிழக்கத்திய மறைஞானிகளிடமோ சென்றிருந்தால் தம்மிடமிருந்த சரக்கு பைசா பெறாதது என்பதை உணர்ந்திருப்பார்.

அவர் படிகளில் இருந்தார், ஆலயத்துக்குள் நுழைந்து விடவில்லை. தன்னை உணர்தல் என்றால் என்னவென்று தெரியாமலே தன்னிடம் இருந்தது அதுதான் என்று எண்ணிக் கொண்டது மேற்கு.

தன்னை உணர்தல் என்பது சுயமறுப்பு (No-self) நிலைக்கு வந்து சேர்வதாகும். தனக்குள் ஒரு முற்றான வெறுமையைக் காண்பதும், எங்கே தானில்லையோ அங்கே சென்றடைவதும் ஆகும்.

'துளி கடலில் மறைகிறது கடல் மட்டுமே இருக்கிறது'

அப்போது யார் கனவு காண்பது, யார் கனவு காண்பதற்காய் எஞ்சியிருப்பது? வீடு வெறிச்சோடிக் கிடக்கிறது, அங்கே யாருமில்லை.

**இரண்டாவது கேள்வி:**

**பாவனை எவ்வகையாயினும், அது புத்தரைப் பின்பற்றுவதே என்றாலும் கூட தூய்மையான விழிப்புணர்வுக்கு அது அயலாகும் என்று தாங்கள் சொன்னீர்கள். ஆனால், எம்முடைய பண்பாடான வாழ்க்கையில் பாவனையன்றி எதுவுமில்லை என்பதை நாங்கள் புரிந்து கொண்டிருக்கிறோம். அந்நிலையில் பண்பாடு என்பது மதத்துக்கு அந்நியமானதா என்ன?**

ஆம், பண்பாடு, சமூகம், நாகரிகம் இவை எல்லாமே மதத்துக்கு அந்நியமானவைதாம். மதம் என்பது ஒரு சுழற்சியின் மைய அச்சு. உங்களுடைய பண்பாட்டு நிலையிலும், சமூகம் சார்ந்த நிலையிலும் முழுமையான மாற்றத்தைக் கொண்டுவருவது. அது நீங்கள் வாழ்ந்து முடித்த, வாழ்ந்து கொண்டிருக்கிற எல்லைகளில் (sphere) மாற்றத்தை

உண்டு பண்ணுவது. ஒவ்வொரு சமூகமும் மதத்துக்கு எதிராகவே உள்ளது. நான் சமூகம் தோற்றுவித்திருக்கும் வழிபாட்டுத் தலங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கவில்லை.

அவையெல்லாம் தந்திரங்கள், உங்களை முட்டாளாக்குகிறவை. அவை மதமல்ல, மதத்துக்கு மாற்றுகள். அவை உங்களைத் தவறாய் வழி நடத்துகின்றன.

உங்களுக்கு மதம் தேவைப்படுகிறது. அவை சொல்கின்றன: ஆலயத்துக்கு வாருங்கள். வந்து பிரார்த்தித்துக் கொள்ளுங்கள், மதபோதகர் உங்களுக்கு மதத்தைப் பற்றிப் போதிப்பார்' என்று. இது ஒரு தந்திரம். சமூகம் பொய்சொல்லி ஏமாற்றுகிற மதங்களைத் தோற்றுவித்திருக்கிறது. ஆனால் புத்தரோ மகாவீரரோ இயேசுவோ முகமதுவோ சமூகத்துக்கு அப்பாற் பட்டவர்கள். சமூகம் எப்போதுமே அவர்களை எதிர்த்து வந்திருக்கிறது. அவர்கள் மறைந்தபின் அந்தச் சமூகம் அவர்களை வழிபடத் தொடங்கியது, பிறகு அது ஆலயங்களைத் தோற்றுவித்தது. பிறகு - தீவிர ஆர்வம் மறைந்துவிட்டது. ஆலயங்களில் சமூகத்தை அதன் நாகரிகத்தை பார்க்க முடிகிறதே தவிர மதத்தைப் பார்க்க முடியவில்லை. ஆனால், மதம் என்பது என்ன?

முதலாவதாக - மதம் என்பது ஒரு தனிநபர் சார்ந்த விஷயம், அது சமூகம் சார்ந்த சங்கதியல்ல. நீங்கள் ஓர் அணியாக அதனுள் செல்ல முடியாது, தனியாகத்தான் போக வேண்டும். சமாதி நிலைக்கு எப்படிச் செல்வீர்கள், வேறு யாருடனாவதா? உங்களுக்கு நெருங்கிய உறவினரோ, உங்கள் நம்பிக்கைக்கு உகந்தவரோ கூட உங்களுடன் இருக்கமாட்டார். நீங்கள் உள்நோக்கிச் செல்லும்போது ஒவ்வொன்றும் உங்களைவிட்டு அகன்றுவிடும். சமூகம், பண்பாடு, நாகரிகம், பகைவர்கள், நண்பர்கள் நேசிப்பவர்கள், நேசிக்கப்படுபவர்கள், குழந்தைகள், மனைவி, கணவன் என்று எல்லாமும் காலப் போக்கில் விட்டகலும். நீங்களும் செல்கிற ஒரு தருணம் வரும். அவ்வேளையில் தான் மலர்ச்சியும், மாற்றமும். காரணம் என்னவெனில் நீங்களும் சமூகத்தில் ஓர் அங்கம்.

முதலில் மற்றவர்கள் சென்று விடுவார்கள். பிறகு நெருக்க மானவர்கள், நம்பிக்கைக்குகந்தவர்கள் நீங்கிச் செல்வர். இறுதியில் நீங்கள் உங்களிடம் வந்து சேர்வீர்கள். சமூகத்தின் ஒரு பகுதியாய், சமூகத்தால் பயிற்றுவிக்கப்பட்ட, சமூகத்தால் கட்டுப்படுத்தப்பட்ட நீங்கள். உங்கள் மூளையும், தற்பெருமையும், சிந்தனையும் அந்தச் சமூகத்தால் வழங்கப் பட்டது. அவையும் வெளியேறிய பின் உங்களுடைய தூய்மையான தனிமையில் நீங்கள் பிரவேசிக்கிறீர்கள்.

மதம் தனிநபருக்குரியது (personal) மதம் முழுமையான மாற்றத்தை ஏற்படுத்துவது. உலகில் மதம் மட்டும் புரட்சியாகும். மற்ற எல்லா புரட்சிகளும் போலியானவை, தவறானவை. அவை வெறும் விளை யாட்டுக்களேயன்றி புரட்சிகளல்ல. உண்மையில் அத்தகைய புரட்சிகளால் தான் உண்மையான புரட்சி தள்ளிப் போடப்படுகிறது. அவை புரட்சிக்கு எதிரானவை.

ஒரு பொதுவுடைமை வாதி வருகிறார், 'ஒட்டு மொத்த சமூகம் மாறாதவரை நீங்கள் எப்படி மாறியதாக முடியும்?' என்று கேட்கிறார். 'சரிதான். என்னை நான் எப்படி மாற்றிக்கொள்ள முடியும்? தளைப்பட்ட சமூகத்தில் நான் எப்படி தளையின்றி வாழமுடியும்?' என்று எண்ணமிடு கிறீர்கள். தர்க்கம் பொருந்துவதாய் தெரிகிறது. 'மகிழ்ச்சியற்ற சமூகத்தில் நீங்கள் எப்படி மகிழ்ச்சியாய் இருக்க முடியும்? எல்லாரும் துயரப்பட்டிருக்க நீங்கள் எப்படிப் பரசுகத்தை (bliss) க் கண்டுகொள்வீர்கள். பொது வுடைமை வாதி உங்களிடம் வேண்டுகிறார், உங்கள் உணர்ச்சிகளைத் தூண்டுகிறார். நீங்கள், 'ஆம், ஒட்டுமொத்த சமூகமும் மகிழ்ச்சியாயில்லா விட்டால் நான் எப்படி இருக்க முடியும்?' என்கிறீர்கள். அப்போது அவர் கூறுகிறார், 'வாருங்கள், முதலில் சமூகத்தில் ஒரு புரட்சியை நடத்துவோம்' என்கிறார். பிறகு நீங்கள் அணி வகுத்து முன்னேறுகிறீர்கள். உலகை மாற்றப் போவதாய் பொறியில் சிக்கிக் கொள்கிறீர்கள்.

ஆனால் எவ்வளவு காலம் நீங்கள் வாழப் போகிறீர்கள் என்பதை மறந்துவிட்டீர்களா? ஒட்டுமொத்த உலகமும் மாறிவிட்டபோது அந்நேரத்தில் நீங்கள் இங்கே இருக்க மாட்டீர்கள். உங்களுடைய வாழ்வை நீங்கள் இழந்துவிட்டிருப்பீர்கள். முட்டாள் மனிதர்கள் எதற்கு எதிராய் போராடுகிறோம் என்று தெரியாமலே தங்கள் வாழ்க்கையை இழக்கிறார்கள்.

'தன்னை மாற்றிக்கொள்ள இயலாதவர்கள் உலகை மாற்றப் புறப்படுகிறார்கள்'

சாத்தியமான ஒரே மாற்றம் சுய மாற்றந்தான்.

நான் சொல்கிறேன், தளைப்பட்ட ஒரு சமூகத்தில் நீங்கள் தளையற்றவராய் (சுதந்திரமாய்) வாழ முடியும் என்று. துயர்ப்படும் உலகில் நீங்கள் சுகப்பட முடியும். நீங்கள் மாறத் தயாராகிவிட்டால் உங்களை யாரும் தடுக்க மாட்டார்கள்.

உங்களையன்றி உங்களைத் தடுத்துக் கொண்டிருப்பவர் யாரு மில்லை. யாரும் தடையாகி விடவில்லை. சமூகத்தைப் பற்றியோ, உலகத்தைப் பற்றியோ கவலைப்பட வேண்டாம், உலகம் தொடரும். அது

எப்போதுமே ஒரே மாதிரியாய் இயங்கிக் கொண்டிருப்பது. பல புரட்சிகள் நிகழ்ந்து முடிந்த பிறகும் இந்த உலகம் இருக்கிறபடியே இருக்கிறது.

லெனினும் மார்க்சும் தங்களுடைய கல்லறைகளில் இருந்து எழுந்தார்களானால் புரட்சி நடந்த பிறகும் உலகம் அப்படியே இருப்பதைக் கண்டு வியப்படைவார்கள். ரஷ்யாவாகட்டும் அமெரிக்கா வாகட்டும் இயல்புக்கு மாறாய் என்ன இருக்கிறது? எதுவுமில்லை, மரபளவான வேற்றுமைதான். அமைப்புகள் வேறுபடுகின்றன. அடிப் படையில் நடைமுறை ஒரே மாதிரி இருக்கிறது, மனிதனின் அடிப்படைத் துயரமும் அப்படியேதான்.

'சமூதாயம் ஒரு போதும் குறைகளற்ற சமூதாயமாகிவிடாது'

சமுதாயம் ஒருபோதும் பரிபூரணமான நிலைக்கு வந்ததில்லை. இந்த ஆங்கில வார்த்தை (utopia) மிக அழகானது: இந்த வார்த்தையின் பொருள் என்னவென்றால் ஒரு போதும் வராதது. ஆப்டோபியா (utopia) என்றால் வரவே வராதது. அது எப்போதும் வந்து கொண்டேயிருக்கிறது, ஆனால் வந்து சேராதது. எப்போதும் வாக்குறுதி மட்டும் தான், ஆனால் அது மட்டும் வந்தடையவே இல்லை. அது அப்படித் தான். அது அப்படித்தான் இருக்க முடியும். இதில் ஒரே ஒரு சாத்தியக் கூறுதான் உள்ளது: அது நீ மாறுவது தான்.

அரசியல் சமூகம் சார்ந்தது, மதம் தனி நபர் சார்ந்தது. மதம் எப்போது சமூகத்தில் உள்ள மக்கள் சார்ந்ததானாலும் அது அரசியலில் ஒரு பகுதியாகிவிடும். மதங்கள் இப்போது மதங்களாயில்லை அவை மக்கள் சார்ந்ததாகி விட்டது.

நீங்கள் ஒரு மாற்றம் தேவைப்படுவதை, இப்போது நீங்கள் இருக்கும் நிலை தவறானதென்பதை, உங்களைச் சுற்றி ஒரு நரகத்தைத் தோற்று வித்திருக்கிறீர்கள் என்பதை, துன்பத்தன் விதையாய் நீங்கள் இருப்பதை உங்கள் இருப்புணர்வின் மையப்பகுதியில் உணர்வீர்கள். அந்த உணர்தலே ஒரு மாற்றமாய் உருவெடுக்கிறது. நீங்கள் விதையை நழுவ விடுகிறீர்கள், இன்னொரு பரிமாணத்தை நோக்கி நகர்கிறீர்கள். அது தனிப்பட்டது, பண்படுத்தப்பட்டதாகாது.

அதனால்தான் சமயத்தில் ஈடுபாடு கொள்வது உங்களுக்கு இடர்ப்பாடாய் தெரிகிறது. சமூகம் உங்களுக்குக் கற்பிக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புவீர்கள். மதத்தைக் கற்பிக்க முடியுமென்றால் நீங்கள் எல்லாருமே மதத்தில் ஈடுபாடு கொண்டு விடுவீர்கள். ஆனால், மதத்தைக் கற்பிக்க முடியாது. அது கற்பித்தல் அல்ல, அறிந்திராத ஒன்றின் மீது

குதித்தல் ஆகும். அதற்குத் தேவை கற்றல் அல்ல துணிவு. துணிவை யார் கற்றுத்தர முடியும்? எப்படிக் கற்றுத் தருவார்கள்? நீங்கள்தான் அதை எப்படி கற்றுக் கொள்வீர்கள்.

ஒன்று, துணிச்சல் உங்களிடம் இருக்க வேண்டும், அல்லது இல்லாமல் இருக்க வேண்டும. உங்களிடம் துணிச்சல் இருக்கிறதா என்பதைக் கண்டுபிடியுங்கள். நீங்கள் கண்டுபிடிக்க முயன்றால், ஒவ்வொருவரும் தங்களுக்குள் துணிவுக்கான மிகப்பெரிய சாத்தியம் மறைந்திருப்பதைக் கண்டு கொள்வார்கள். காரணம் என்னவெனில், துணிவு இல்லாவிடில் வாழ்க்கை சாத்தியப்படாது.

வாழ்க்கை ஆபத்துக்குட்படும் நிலை ஒவ்வொரு கணத்திலும் இருக்கிறது.

'துணிவு இல்லையெனில் சுவாசிக்கவும் முடியாது'

துணிவு இருக்கிறது அதை நீங்கள் அறிந்திருக்கவில்லை. துணிவைக் கண்டுபிடியுங்கள், தனிப்பட்ட முறையிலான பொறுப்பை அதனிடம் ஒப்படையுங்கள். உலகையும், கற்பனையான வசதிகளையும் மறந்துவிட்டு உங்களை மாற்றிக் கொள்ளுங்கள். நீங்கள் உங்களை மாற்றிக் கொள்ளுகிறபோது உலகத்தையும் முன்பே மாற்றத் தொடங்கி விட்டீர்கள் என்று அர்த்தம். காரணம் நீங்கள் மாறும்போது உலகின் ஒரு பகுதி மாறுகிறது. உலகின் ஓர் உயிருள்ள பகுதி நீங்கள். ஒரு பகுதி மாறினாலும் அது முழுவதையும் பாதிக்கிறது. காரணம் முழுமை என்பது ஒன்றா யிருப்பது. எல்லாமும் தொடர்புடையதாயிருக்கிறது.

நான் மாறும்போது உலகையும் ஏதோ ஒரு வழியில் மாற்றுகிறேன். இலட்சோபலட்சம் பகுதிகளில் ஒரு பகுதி மாறினாலும் உலகம் அப்படியே இருக்காது. அது முற்றிலும் வேறானதாகிவிடும். இன்னோர் உலகம் என்னுள் நுழைகிறது.

நிலைபேறுடைய (eternity) ஒன்று காலத்தில் ஊடுருவுகிறது. கடவுள் மனித சரீரத்தில் வந்து தங்குகிறார். எதுவும் ஒரே மாதிரி இருக்காது. எல்லாமும் என் வழியே மாற்றத்துக்குள்ளாகின்றன.

இதனை நினைவில் கொள்ளுங்கள். மதம் என்பது பாவனையல்ல என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் மதப்பற்றுள்ளவராய் பாவனை செய்ய முடியாது. நீங்கள் பாவனை செய்தால் அது பொய்யான மதமாகிவிடும், தவறானதும், நேர்மையற்றதுமாய்.

'நீங்கள் பாவனை மேற்கொண்டுவிட்டால் உங்களுக்கு நீங்களே உண்மையாயிருக்க மாட்டீர்கள்.'

நீங்கள் பொய்யானவரகி விடுவீர்கள். என்னைப் போல் ஆவதற்காக நீங்கள் இங்கே இருக்கவில்லை. நீங்கள் உங்களைப்போல் இருக்க வேண்டும், நீங்கள் நீங்களாய் இருக்க வேண்டும்.

நான் யூதமறைஞானி ஜோஸயாபற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். அவர் இறந்து கொண்டிருந்த போது யாரோ கேட்டார்கள், 'ஜோஸயா, உங்களுக்கு உதவும்படி மோசஸிடம் மன்றாடுங்கள்' என்று. ஜோஸயா சொன்னார், 'மோசஸை மறந்து விடுங்கள். காரணம், நான் செத்துப் போனதும் கடவுள் கேட்கமாட்டார்' நீ ஏன் மோசஸைப்போல் இருக்க வில்லை என்று. நீ ஏன் ஜோஸயாவாக இருக்கவில்லை என்று தான் கேட்பார். மோசஸைப் போல் இருப்பது என்னுடைய கடமையல்ல. நான் மோசஸைப் போல் இருக்க வேண்டும் என்று கடவுள் விரும்பியிருந்தால் என்னை மோசஸாகவே படைத்திருப்பார். 'நீ ஏன் ஜோஸயாவாக இல்லை' என்று அவர் கேட்பார். அதுதான் என்னுடைய தொல்லை. வாழ்க்கை நெடுகிலும் வேறு யாராகவோ இருக்க முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால், குறைந்தபட்சம் இந்தக் கடைசி நிமிடத்திலாவது என்னைத் தனியே விடுங்கள். நான் நானாக இருக்க விடுங்கள். காரணம் அதுதான் கடவுளிடம் காட்ட வேண்டிய முகம். அதைக் காணவே அவர் காத்திருக்கிறார்.

'இதுதான் இவர்' என்று நம்பக் கூடியவராய் இருங்கள். நீங்கள் பாவனை செய்வதற்கில்லை. மதம் ஒவ்வொருவரையும் இணையற்றவ ராகவே உருவாக்குகிறது. உண்மையிலேயே குருவாக இருக்கிற எவரும் தன்னைப் பின்பற்றும்படி உங்களை வற்புறுத்த மாட்டார். நீங்கள் நீங்களாகவே இருக்க அவர் உதவுவார். தன்னைப்போல் இருக்கும்படி அவர் உங்களைத் தயார் செய்வதில்லை.

எல்லாப் பண்பாடுகளும் பாவனை தாம், சமூகம் முழுவதும் பாவனையை மேற்கொள்கிறது. அதனால்தான் இந்தச் சமூகம் உண்மை யற்று, ஒரு நாடகமாய் காட்சியளிக்கிறது. இந்துக்கள் அதை மாயை என்கிறார்கள் - ஒரு விளையாட்டு, உண்மையில்லை, பெற்றோர்கள் தங்களைப்போல் இருக்கும்படி பிள்ளைகளுக்குக் கற்பிக்கிறார்கள். ஒவ்வொருவரும் இன்னொருவரை தன்னைப்போல் இருக்கும்படி உந்தித் தள்ளுவதில் மிஞ்சுவது பெருங்குழப்பம்.

நான் ஒரு குடும்பத்தோடு தங்கியிருந்தேன். அன்று வீட்டருகே உள்ள புல் வெளியில் அமர்ந்திருந்தபோது, அவ்வீட்டுச் சிறுவனிடம் கேட்டேன், 'உன் வாழ்வில் எப்படி வரவேண்டுமென்று நீ எண்ணுகிறாய்?' என்று அவன் சொன்னான், ''என்னால் எப்படிச் சொல்ல முடியும். நான் டாக்டராக வரவேண்டுமென்று என்னுடைய அப்பா விரும்புகிறார். நான் என்ஜி னீயராவது என் அம்மாவின் விருப்பம். நான் வழக்கறிஞராக வேண்டு

மென்கிறார் என்னுடைய மாமா. எனக்குக் குழப்பமாக இருக்கு. நான் என்னவாகப் போறேன்னு எனக்கே தெரியாது'' என்று. 'நீ என்னவாக விரும்புகிறாய்?' நான் கேட்டேன். அவன் 'இந்தக் கேள்வியை என்னிடம் யாருமே கேட்கலை' என்றான். 'நீ யோசனை பண்ணி நாளைக்குச் சொல்' என்றேன் நான். அடுத்த நாள் அவன் வந்து சொன்னான் 'நான் டான்ஸராக விரும்புகிறேன். ஆனால் என்னுடைய அப்பாவோ அம்மாவோ அதற்கு அனுமதிக்க மாட்டார்கள்' என்று 'நீங்கள் உதவ முடியுமா அவர்கள் உங்கள் பேச்சைக் கேட்பார்கள்' என்றான்.

ஒவ்வொரு குழந்தையும் ஏதோ ஒன்றாக (தீர்மானித்துக் குறிக்கப் படாத) வரவேண்டும் என்று நிர்ப்பந்திக்கப்படுகிறது. இது அருவருக்கத்தக்க விஷயம். யாரும் அவராக இல்லை. நீங்கள் பெரிய பொறியாளராய் வந்தாலும் அது உங்களுடைய சுயமான தூண்டுதலின் பேரில் வராத பட்சத்தில் நிறைவளிக்காது. நான் சொல்கிறேன், உலகிலேயே மிக மோசமான நடனக்காரராய் நீங்கள் இருக்கக் கூடும் - அதனாலென்ன! அது உங்களுடைய விருப்பமாக இருந்தால் நீங்கள் மகிழ்வுடன் நிறைவுடன் இருப்பீர்கள் அல்லவா?

'உங்களுடைய சுயதூண்டுதலின் பேரில்நீங்கள் செய்கிற எதுவும் உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கும், மனநிறைவையுமளிக்கும்.'

நோபல் பரிசு பெற்ற ஒரு விஞ்ஞானியைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். உலகம் இதுவரை அறிந்த அறுவை சிகிச்சை நிபுணர்களிலேயே மிகச் சிறந்தவர் அவர். அவருக்கு நோபல் பரிசு கிடைத்த நாளில் ஒருவர் சொன்னார், 'நீங்கள் மகிழ்ச்சியாய் இருக்கவேண்டும்' என்று. காரணம், அவர் குறைந்த அளவில் கூட சந்தோஷப்படுகிறவராய் தெரியவில்லை. அவருடைய முகத்தில் துயரம் படிந்திருந்தது. யாரோ கேட்டார்கள், 'நீங்கள் மகிழ்ச்சியாய் இருக்க வேண்டும். ஏன் துயருற்றிருப்பது! இது மகத்தான பரிசு, உலகம் உங்களுக்குத் தருகிற மிகப்பெரிய வெகுமதி. உலகின் மிகச்சிறந்த அறுவை சிகிச்சை நிபுணர்களில் நீங்களும் ஒருவர்' என்று.

அவர் சொன்னார், 'அதுவல்ல விஷயம். எனக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டபோது, என்னுடைய குழந்தைப் பருவத்தைப்பற்றி நான் நினைத்துக் கொண்டிருந்தேன். நான் ஒருபோதும் அறுவை சிகிச்சை மருத்துவராக விரும்பியதில்லை. அது என்மீது வலுக்கட்டாயமாய் திணிக்கப்பட்டது. என்னுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும் வீணாகிப் போனதே. இந்த நோபல் பரிசை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வேன். நான் ஆட்டக்காரனாக விரும்பியிருந்தேன். அது மோசமானதே என்றாலும்

அதைச் செய்திருக்க வேண்டும். அது தான் என்னுடைய உள்ளத்தின் கிளர்ச்சி. நான் அதில் நிறைவடைந்திருப்பேன்.

இதனை நினைவில் கொள்ளுங்கள், 'நீங்கள் ஏன் மன நிறைவற்று இருப்பது? நிறைவற்றவராய் உங்களை உணர்வது? குறிப்பிட்ட காரணம் எதுவும் இல்லாமலே அதிருப்திக்குள்ளாவது ஏன்? எல்லாம் நன்றாய் நடக்கிற மாதிரி இருந்தாலும் ஏதோ ஒன்று தவறவிடப் பட்டதாய் தெரிகிறது. எது தவறிப்போனது? உங்கள் இருப்புணர்வை, (being) நீங்கள் கவனிப்பதில்லை. யாரோ ஒருவர் தம்முடைய ஆதாயத்துக்காக உங்களைத் தந்திரமாய் பயன்படுத்துகிறார், ஆட்டுவிக்கிறார், உங்களைத் தந்திரமாய் பயன்படுத்துகிறார், ஆட்டுவிக்கிறார், உங்களை அதிகாரம் செய்கிறார். இன்னொருவர் உங்களுடையதல்லாத ஒரு வாழ்க்கை வடிவமைப்பை உங்கள் மீது வலுக்கட்டாயமாய் திணிக்கிறார். அது ஒரு போதும் உங்களுடையதாய் இருந்திருக்காது. நீங்கள் ஒருபோதும் அதை விரும்பியிருக்க மாட்டீர்கள்.

நான் உங்களுக்குச் சொல்வேன் 'நீங்கள் பிச்சைக்காரராக நேர்ந்தாலும், அது உங்களுடைய உள்ளக் கிளர்ச்சியாயிருந்தால் கவலைப்படத் தேவையில்லை. உங்களுக்குள் எது கிளர்ச்சியைத் தருகிறதோ அதைப் பின்பற்றுங்கள். 'நீ ஏன் மகாவீரராகவில்லை, ஏன் முகமது ஆகவில்லை அல்லது ஏன் ஜராதுஷ்ட்ரனாகவில்லை?' என்று கடவுள் கேட்க மாட்டார். அவர் ஜோஸயாவிடம் கேட்பார், 'நீ ஏன் ஜோஸயாவாக இல்லை' என்று.

நீங்கள் நீங்களாக இருக்கவேண்டும். ஒட்டுமொத்த சமூகமும் பொய்யான பாவனையாய், போலிக்கண் காட்சியாய் இருக்கிறது. அதனால்தான் ஒவ்வொரு முகத்திலும் அதிருப்தி பரவிக்கிடக்கிறது. நான் உங்களுடைய கண்களுக்குள் பார்க்கிறேன் அதில் திருப்தியின்மை, நிறைவற்ற தன்மை தெரிகிறது. மகிழ்ச்சி தரக்கூடிய இளங்காற்றும் உங்களைத் தீண்டவில்லை, நீங்கள் பரவசப்படவில்லை. எனினும் பரவசம் சாத்தியமானதே. அது எளிதாய் நிகழக் கூடியதே:

இயல்பாய் இருங்கள். இறுக்கமற்றவராய் இருங்கள். உங்கள் மன விருப்பத்தைப் பின் பற்றுங்கள்.

உங்களுக்கு உதவவே நான் இருக்கிறேன். நீங்கள் ஒரு சீடனாகிற போது, உங்களுக்கு நான் தீட்சையளிக்கிற போது, ஒரு பாவனையானராக வேண்டுமென்றோ, என்னைப் பின்பற்ற வேண்டுமென்றோ நான் தீட்சையளிப்பதில்லை. உங்களுடைய இருப்புணர்வை நீங்கள் கண்டறியும் முயற்சியில் நான் உதவுகிறேன், அவ்வளவுதான். உங்களுடைய நம்பத்தக்க, அதிகாரப்பூர்வமான இருப்புணர்வை நீங்கள் பெற்றிருக்க வேண்டும்,

காரணம், எது உங்களுடைய அசலான முகம் என்பதையே நீங்கள் மறந்து போகுமளவிற்குப் பல முகங்களை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். உங்களுக்குள்ளிருக்கும் உண்மையான கிளர்ச்சியை நீங்கள் அறியவில்லை. சமுதாயம் உங்களை நன்றாகவே குழப்பியிருக்கிறது, தவறாக வழி நடத்தியிருக்கிறது. தற்போது நீங்கள யாரென்பதில் உங்களுக்கே உறுதியில்லை.

நான் உங்களுக்கு தீட்சையளித்த போது, உங்களுடைய சொந்த வீட்டுக்கு நீங்கள் திரும்புவதில் உதவவேண்டும் என்பது என்னுடைய விருப்பமா யிருந்தது. உங்களுடைய இருப்புணர்வில் நீங்கள் மையம் கொண்டு விட்டால் என் வேலை தீர்ந்தது. உண்மையில் சமூகம் எதைச் செய்கிறதோ அதை மாற்றிச் செய்வதே குருவின் வேலை. பண்பாடு எதைச் செய்ததோ அதை குருவானவர் கட்டவிழப்பு செய்வார். அவர் உங்களை மீண்டும் எழுதப்படாத காகிதமாக்கிவிடுவார்.

குரு உங்களுக்கு மறு பிறவி அளிப்பதன் பொருள் அதுவே. நீங்கள் மீண்டும் குழந்தையாகிறீர்கள், உங்களுடைய கடந்த கால மாசுகள் நீக்கப்படுகின்றன, உங்களுடைய கரும்பலகை கழுவப்பட்டு விடுகிறது. ஒரு நாற்பது அல்லது ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இந்த உலகில் நீங்கள் பிரவேசித்த அதே முனைக்கு திரும்ப வருகிறீர்கள்? சமூகத்தின் பிடியில் நீங்கள் இருந்தீர்கள். அது உங்களைப் பொறியில் அகப்படுத்தியிருந்தது. சரியான பாதையில் இருந்து விலகச் செய்தது. ஐம்பது ஆண்டுகள் எங்கெங்கோ அலைந்து திரிந்துவிட்டு என்னிடம் வந்திருக்கிறீர்கள். நான் ஒன்று மட்டும் செய்ய முடியும், உங்களுக்கு எது நடந்திருந்தாலும் அதைச் சுத்தமாய் துடைத்தெறிய முடியும், உங்களுடைய குழந்தைப் பருவத்துக்கே மீண்டும் உங்களை இட்டுச் செல்ல முடியும். பயணத்தை எங்கிருந்து தொடங்கினீர்களோ அந்தப் பூர்வ நிலைக்குக் கொண்டு செல்வேன், உங்கள் பயணத்தை நீங்கள் மீண்டும் துவங்க உதவுவேன்.

மூன்றாவது கேள்வி:

> யாரோ ஒருவரால் பாதிக்கப்படுகிற போது தூய்மையற்று, இயல்புக்கு மாறாகிவிட நேருமென்று நீங்கள் சொன்னீர்கள். ஆனால், உங்களுடைய ஆளுமை மற்றும் வார்த்தைகளின் தாக்கமில்லாமல் ஒருவர் எப்படி உங்கள் சீடனாக முடியும்?

நீங்கள் வார்த்தைகளாலும், ஆளுமையாலும் கவரப்பட்டிருந்தால் ஒரு போதும் நீங்கள் சீடனாக முடியாது, பாவனை மேற்கொள்பவராகி விடு வீர்கள். சீடன் என்பவன் பின்பற்றுகிறவனல்லன். ஆனால் உங்களுடைய சங்கடம் எனக்குப் புரிகிறது. ஒரு வழிதான் உங்களுக்குத் தொடர்புடைய

தாய் தெரிகிறது. அது, எண்ணப் பதிவு, பாதிப்புறுதல். பாதிப்புறுகிறபோது தொடர்பிருப்பதாய் கருதிக் கொள்கிறீர்கள். அப்போது ஒரு சீடனாவது எப்படி என்பதை நீங்கள் அறிந்திருக்கவில்லை. எப்படி மாணவனாவது என்பதை மட்டுமே அறிந்திருப்பீர்கள், நீங்கள் உணர்வது ஒரு நிழலான (ஐயத்திற்கிடமானது) காட்சி.

என்னை நீங்கள் உற்றுக் கவனிக்கிறபோது பாதிப்புறுவது பற்றி மறந்துவிடுங்கள். காது கொடுத்துக் கவனமாய் கேட்டால் போதும். என்னிடம் ஒளிவு மறைவற்றவராயிருங்கள், எந்த வகையிலும் கருத்துருவாக்க முயலவேண்டாம். நான் எதைச் சொன்னாலும் கேட்டுக் கொள்ளுங்கள், உங்களுக்குள் நான் ஊடுருவ இடமளியுங்கள். ஆனால் கருத்துருவாக்க வேண்டாம். 'ஆமாம் இது சரி' என்று சொல்லாதீர்கள், அப்போது பாராட்டுகிற உணர்வை அடைகிறீர்கள். 'இல்லை, அது சரியல்ல' என்று நீங்கள் சொல்கிறபோது மறுக்க முற்படுகிறீர்கள்.

உங்களுடைய எண்ணப் பதிவுகளில் ஒன்று நேர்மறையாயும், மற்றொன்று எதிர்மறையாயும் இருக்கிறது. இரண்டுமே தவறுதான். என்னிடம் 'ஆம்' என்றோ, 'இல்லை' என்றோ கூறாதீர்கள். இரண்டையுமே கூறாமல் உங்களால் இருக்க முடியாதா? கவனியுங்கள், கேளுங்கள், நிகழ்வுக்கு இடமளியுங்கள். நீங்கள் 'ஆம்' என்று சொல்கிறபோது அந்த 'ஆம்' நீங்கள் பாவனை மேற்கொள்ள - அப்படியே பின்பற்றத் தயாராயிருப்பதைக் குறிக்கிறது. நீங்கள் 'இல்லை' என்றால் 'உங்களைப் பின்பற்ற மாட்டேன்' என்று அர்த்தமாகிறது, வேறு யாரையோ பின்பற்றப் போகிறீர் என்றுந்தான். நீங்கள் இன்னொருவரை உங்களுடைய குறிக்கோளாக்கிக் கொள்கிறபோது நீங்கள் ஒரு நிழலாகத்தான் இருப்பீர்கள். தான் மற்றவர்களுக்கு உதாரணமாய் திகழ்வதை எண்ணி அவர் அகந்தை கொள்வதை நீங்கள் பார்க்க முடியும்.

பலரும் ஒருவரைப் பின்பற்றுகிறபோது அவருடைய அகந்தை 'நான் பலருக்கு முன்னுதாரணமாயிருக்கிறேன்' என்று எண்ணி அதிசயிக்கும். 'நான் முற்றிலும் சரியானவராயிருக்க வேண்டும். இல்லாவிட்டால் ஏன் பலரும் என்னைப் பின்பற்றப் போகிறார்கள்' என்று எண்ணிக் கொள்ளும். ஒரு மனிதனுக்குப் பின்னால் பெரிய கூட்டம் திரளும்போது அகந்தை வலுப் பெறுகிறது. ஆக, உங்களைப் பின்பற்ற நிறைய பேர் இருக்கிறார்கள். ஆனால் நான் அவர்களுள் ஒருவனல்லன். நான் எதிரிடையானவன். உங்களுடைய பாவனை எனக்கு மகிழ்ச்சியளிக்காது.

என்னைப் பின்பற்றாதீர்கள். கவனியுங்கள், கேளுங்கள், உணருங்கள். என்னோடு இருந்து கவனித்தறிவதால், காலப்போக்கில் உங்களுடைய

ஆற்றல் உங்கள் மையப்பகுதியில் விழத் தொடங்கும். என்னைக் கவனித்துக் கேட்பதன் விளைவாய் மனம் நின்றுவிடும். மனம் நிற்பதைக் கவனித்துக் கொண்டிருங்கள். மனம் நின்றுவிட உங்களுடைய இருப் புணர்வின் (being) மூலத்துக்கே நீங்கள் திரும்புவீர்கள். உங்கள் மையத்தில் இறங்குவீர்கள். மனக்குழப்பமில்லாமல், ஒரு சமநிலையை அடைவீர்கள்.

நான் அதைத்ததான் விரும்புகிறேன். அவ்விதமாய் உங்கள் மூலத்தை மையப்பகுதியை நீங்கள் அடைந்ததும், அந்த மையம் உங்களுடைய வாழ்க்கையை உயிர்த் துடிப்புடன் செயல்படச் செய்யும். அதற்கு நான் உங்கள் மீது ஏற்படுத்துகிற பதிவுகள் காரணமாயிருக்காது. நான் எந்தப் பதிவையும் விட்டுச் செல்ல விரும்பவில்லை. அப்படியேதேனும் இருந்தால் அதற்கு நான் பொறுப்பல்ல. நீங்களாகவே தான் ஏதாவது செய்திருக்க வேண்டும். வார்த்தைகளை, பதிவுகளை நீங்கள் பற்றிக் கொண்டிருப்பீர்கள். எவ்வித கருத்தும் கொள்ளாமல் கவனித்து, கேட்டுக்கொண்டு என்னோடு இருப்பது என்பது மிகவும் நுட்பமான விஷயம்.

என்னுடைய பேச்சு உங்களை இழுத்து பிடித்து என்னோடு அமர்த்திக் கொள்வதற்கான ஒரு சாக்கு (excuse) அவ்வளவே. எனக்குத் தெரியும், நான் அமைதியாய் உட்கார்ந்திருந்தால் உங்கள் மனம் வீண்பேச்சில் பொழுதை வீணடிக்கும் என்று. உங்களால் அமைதியாய், பேச்சன்றி இருக்க முடியாது. உங்கள் மனம் வம்பளப்பில் ஈடுபடக் கூடாதே என்பதற்காக நான் பேசுகிறேன். நீங்கள் கேட்கிற போது சிந்தனையில் ஆழ்கிறீர்கள். உங்கள் மனம் நின்றுவிடுகிறது.

அந்த இடைவெளியில் உங்களுடைய மூலத்தை (source) நீங்கள் அடைகிறீர்கள். உங்கள் மையத்தை நீங்கள் கண்டறிவதில் நான் உதவு கிறேன். அதுதான் உண்மையில் குரு - சீடத்தொடர்பு. சீடருக்குள்ள ஒழுங்காக மக்கள் எண்ணிக் கொண்டிருப்பதில் இருந்து இது மாறுபட்டது. இதில் பின்பற்றலோ, பாவனை செய்தலோ கிடையாது. ஒரு குருவை உதாரண புருஷராய்க் கொள்வதும் கிடையாது. உங்கள் மையத்தில் நீங்கள் இறங்குவதற்கு அவர் உதவி செய்கிறார், அவ்வளவுதான்.

நான்காவது கேள்வி:

'உன்னுடைய இயல்புக்கு எது பொருந்துமோ அதைச் செய் என்கிறீர்கள். நான் செய்வது என்னுடைய இயல்பு அல்லது தன் முனைப்பு இவற்றில் எதனுடன் பொருந்தும் என்பதை அறிவது எளிதாய் தெரியவில்லை. தன் முனைப்பின் பல குரல்களுக்கு நடுவே இயல்பின் ஒரு குரலை எப்படிப் பிரித்தறிவது?'

தன் முனைப்பின் (ego) குரலைக் கேட்கும் போதெல்லாம் சற்று முன்னாகவோ பின்னாகவோ தொல்லை இருக்கும். துன்பத்தின் பொறியில் நீங்கள் சிக்கிக் கொள்வீர்கள். இதனை நீங்கள் கவனிக்க வேண்டும். அகந்தை எப்போதுமே துன்பத்தை நோக்கியே இட்டுச் செல்லும். அதில் ஐயம் சிறிதும் இல்லை. இயல்பின் குரல் அமைதியை, நிறைவை, பரம சுகத்தை நோக்கியே உங்களை இட்டுச் செல்லும். ஆக, இதுதான் நெறிமுறையாய் இருக்க வேண்டும். உங்கள் தெரிவை (choice) நீங்கள் கவனிக்க வேண்டும். குரல் எங்கிருந்து வருகிறது என்பதையுந்தான். அதன் பிறகு என்ன நிகழ்கிறது என்பதைக் கவனியுங்கள் - ஏனெனில் பலன் தான் முடிவெடுக்க உதவும் நெறிமுறை.

நீங்கள் செயல்படும்போது கவனத்துடன் இருங்கள், எச்சரிக்கையாய் இருங்கள். அது உங்களைத் துன்பத்தை நோக்கி இட்டுச் சென்றால் அது அகந்தை யென்று நீங்கள் நன்றாய் தெரிந்து கொள்ளலாம். அடுத்த முறை அந்தக் குரலைக் கேட்காதீர்கள். அது இயல்புக்குரியது என்றால் மனதின் சுகமான நிலைக்கு இட்டுச்செல்லும்.

'இயல்பான எல்லாமே அழகு அகந்தைக் குரியதோ இழிவு'

நல்லது கெட்டதை அனுபவத்தால் அறிவதன்றி வேறு வழியில்லை. நீங்கள் எல்லாவற்றையும் தீர்ப்பு செய்யும்விதமாய் ஒரு நெறிமுறை (criterion)யை நான் உங்களுக்குத் தரப்போவதில்லை. வாழ்க்கை நுட்பமானது, சிக்கல் நிறைந்தது. இதில் நெறிமுறைகள் அற்ப காலத்தில் அழிகிறவை. உங்களுடைய முயற்சியின் பேரில்தான் நீங்கள் கருத்து களை உருவாக்கிக் கொள்ளவேண்டும். எனவே, எதைச் செய்கிறபோதும் உங்கள் உள்ளிருந்து எழும் குரலைக் கேளுங்கள். அது எங்கே இட்டுச் செல்கிறது என்பதைக் கூர்ந்து கவனியுங்கள். அது துன்பத்தை நோக்கி இட்டுச் சென்றால் தன் முனைப்பின் (அகந்தை) குரலாகத்தான் இருக்கும்.

உங்களுடைய அன்பு பேரின்பநிலை (benediction) யை, புனிதமானதை நோக்கி இட்டுச் சென்றால் அது இயல்பின் குரலாய் இருக்கும். உங்களுடைய நட்பு, தியானமும் கூட துன்பத்தை நோக்கி இட்டுச் சென்றால் அது அகந்தையினுடையதாயிருக்கும். இயல்பில் இருந்து வருகிற எதுவும் தகுதியானதாய், இசைவானதாய் இருக்கும். இயல்பு அழகானது, அதிசயம் கொள்ளச் செய்வது அதை பயன்தரத் தக்கவிதத்தில் நீங்கள் வெளிப்படுத்த வேண்டும்.

நீங்கள் என்ன செய்கிறீர்கள், அது எங்கே கொண்டு செல்கிறது என்பதைக் கவனித்து வாருங்கள். காலப்போக்கில் எது மெய், எது பொய், எது அகந்தை, எது இயல்பு என்பதை நீங்கள் அறிவீர்கள். அதற்குக் காலமும், எச்சரிக்கையும், கூர்ந்து கவனிப்பதும் தேவைப்படும்.

உங்களைத் துன்பத்தை நோக்கி இட்டுச் செல்வது உங்களுடைய அகந்தையேயன்றி மனிதர்களல்லர்.

'அகந்தையே நரகத்தின் வாயில்! இயல்பானதும், உண்மையானதும் சொர்க்கத்தின் கதவு!'

கண்டுபிடியுங்கள், பயன்படுத்துங்கள்.

இயல்பானதைப் பின்பற்ற எந்த முயற்சியும் தேவையில்லை. வலிந்து பெறப்படாத எதுவும் இயல்பானது, இயல்பானதெல்லாம் நேர்த்தியாயும், தெய்வத்தன்மை பொருந்தியதாயும் இருக்கும். இயல்பில் மறைந்திருக்கிறது மேம்பட்ட இயல்பு. நீங்கள் இயல்பானதைப் பின்பற்றினால் காலப்போக்கில் கொஞ்சம் கொஞ்சமாய் மேம்பட்ட இயல்பு வெளிப்படும் ஓசையில்லாமல். இயல்பு கடவுளிடம் இட்டுச் செல்லும். கடவுள் இயல்பில் மறைந்திருக்கிறார்.

முதலில் இயல்பாயிருங்கள். பிறகு அந்த நீரோட்டத்தில் நீங்கள் மிதந்து செல்வீர்கள். ஒருநாள் அந்த நீரோட்டம் மேம்பட்ட இயல்பு என்னும் கடலைச் சென்றடையும்.

ஐந்தாவது கேள்வி:

> குறுக்கு வழிகளைப் பயன்படுத்தத் தேவையில்லை என்று நீங்கள் சொல்கிறீர்கள். உங்களுடைய தியானமுறைகளெல்லாம் குறுக்கு வழிகளில்லையா? முன்பு நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள் உங்களுடைய தியான முறைகள் உடனடியாய் தாண்டிக் கடக்க உதவுகிறவை என்று.

உடனடியாக குதித்தல் என்பது நீண்ட பாதை. ஏனெனில் உடனடியாக குதிப்பதற்கு தயாராக வேண்டும்......... அதற்கு பல ஆண்டுகள், ஏன் பல பிறவிகள் கூட ஆகலாம். ஆகவே நான் 'உடனடியாக குதித்தல்' என்று சொல்லும் போது நீங்கள் 'உடனடி தாவலை' எடுத்துக் கொண்டு விட்டீர்கள்? நீங்கள் அதை செய்து விட்டீர்களா? நான் சொன்னதன் மூலம் மட்டுமே நீங்கள் அதை செய்து விட முடியாது. நான் 'உடனடியாக' என்று சொல்கிறேன், ஆனால் அந்த 'உடன்டி' என்பதை நீங்கள் செய்ய உங்களுக்கு பல வருடங்களாகும்.

தாவிக் குதித்தல் ஒரு போதும் குறுக்கு வழியல்ல. காரணம், குதித்தல் என்பது ஒரு வழியாகாது. நீளவழி குறுக்கு வழி எல்லாம் உண்டு. ஆனால் குதித்தல் எவ்வகையிலும் வழியாகாது. அது ஒரு திடீர் நிகழ்வு. குதிக்கத் தயாராயிருத்தல் என்றால் முன்பு அறிந்திராத ஒன்றில், பாதுகாப்புத்

தன்மையற்ற ஒன்றில் விவரமாய் அறியப்படாததில் குதிக்கத் தயாராயிருப்பது.

அந்த-

ஆயத்தநிலையை நீங்கள் அடைய ஆண்டுகள் பலவாகும்.

உடனடித் தாவலை குறுக்கு வழியென்று ஒரு போதும் எண்ணிக் கொண்டு விடாதீர்கள். யாராவது உங்களிடம் ''இந்த மந்திரத்தை வாங்கிக்கொள். காலையில் பதினைந்து நிமிடம், மாலையில் பதினைந்து நிமிடம் ஜெபித்துவா. பதினைந்து நாட்களுக்குள் தியானம் உனக்குக் கூடிவிடும்'' என்று சொன்னால் அது குறுக்கு வழி.

மேற்கத்தியர்கள் நேரப் பிரக்ஞை உடையவர்கள், பலியாகிறவர்கள். யாரோ ஒருவர் வந்து 'என்னுடைய வழி கட்டை வண்டியில் போவதல்ல, 'ஜெட்' டில் பறப்பதாக்கும் என்கிறார், மகேஷ் யோகி சொல்கிற மாதிரி. அவர் சொல்வது இதுதான் 'உங்களுக்கு நான் குறுக்கு வழியைக் காட்டுகிறேன். காலை மாலை பதினைந்து நிமிடம் ஒரு மந்திரத்தை திரும்பத் திரும்பச் சொல்லுங்கள். இரண்டே வாரத்தில் ஞானியாகி விடுவீர்கள்.'

மேலை நாட்டவர்கள் எப்போதுமே தேவைக்கும் அதிகமான வேகத்தில் செயலாற்றிக் கொண்டிருப்பவர்கள். அவர்களுக்கு உடனடி காபி, உடனடி கலவி மாதிரி உடனடி கடவுளும் வேண்டும். எதுவும் சுருக்காய், சிப்பமிட்டு, முன்கூட்டியே உருவாக்கப்பட்டதாய் இருக்கவேண்டும். மேற்கத்திய மூளைக்கு 'அதிக நேரம்' என்றாலே மன இறுக்கத்தை ஏற்படுத்திவிடும். யாரேனும் ஒருவர் வந்து 'இது அத்தனை பிரச்சினைகளுக்கும் தீர்வு செய்யக்கூடிய சஞ்சீவினி (panacea)' என்கிறார். நீங்கள் என்ன செய்கிறீர்கள். ஓர் இடத்தில் உட்கார்ந்து, மந்திரத்தை திரும்பத் திரும்பச் சொல்ல ஆரம்பித்து விடுவீர்கள்.

கீழ்த்திசை நாட்டில் இலட்சோபலட்சம் ஆண்டுகளால் மந்திரங்களை ஜெபித்தாகிறது, எதுவும் நடந்த பாடில்லை. ஆனால் இரண்டு வார ஆழ்நிலை தியானத்தில் நீங்கள் அறிவுத் தெளிவு பெற்றுவிடுகிறீர்கள். இந்த முட்டாள்காரியங்கள் எப்போதுமே தொடரும், காரணம் நீங்கள் அவசரத்தில் இருக்கிறீர்கள். யாரோ ஒருவர் அல்லது வேறொருவர் உங்களை ஏமாற்றிச் சுரண்டுவார்.

அன்று இரவு ரிச்சர்டு சர்ச் என்பவர் எழுதிய ஒரு கட்டுரைத் தொகுப்பை நான் படித்துக் கொண்டிருந்தேன். அப்புத்தகத்தின் பெயர் '*A strole before the park*' என்பதாகும். அப்புத்தகத்தில் தம்முடைய நண்பர்களுள் ஒருவருக்கு நேர்ந்த சம்பவத்தை அவர் நினைவு கூருகிறார்.

நேரத்தில் பிடிவாதமான நண்பனொருவன் இரயிலில் பிரயாணம் மேற்கொள்கிறான். தன்னுடைய கடிகாரத்தை மறந்து விட்டு வந்தது திடீரென்று தெரியவும் அவன் வருத்தத்துக்குள்ளாகிறான். இரயில் ஒரு சிறிய இரயில் நிலையத்தில் நிற்கிறது. அந்த நண்பன் கடந்து செல்லும் போர்ட்டரை சன்னல் வழியே பார்க்கிறான். அவனிடம் 'மணி என்ன?' என்று கேட்கிறான். 'எனக்குத் தெரியாது' என்கிறான் போர்ட்டர். 'என்னது, நீ இரயில்வேயில் வேலைப் பார்க்கிற ஆள், உனக்கு நேரம் தெரியாது என்றால் எப்படி? ஸ்டேஷனில் கடிகாரம் இல்லையா? என்று கேட்கிறான் நண்பன். போர்ட்டர் சொல்கிறான், 'இங்கே கடிகாரம் இருக்கு. ஆனால் நான் எதற்கு நேரத்தைப் பற்றிக் கவலைப்படணும்' என்று. அது விநோதமானது.

மக்கள் நேரத்தைப் பற்றிக் கவலைப்படுபவர்கள். அதிலும் மேலைநாட்டினர் மிகவும் கவலை கொள்வார்கள். அவர்கள் சொல்வார்கள் நேரம் தான் பணம், நேரம் பறக்கிறது என்று.

நேரம் கையைவிட்டுப் போய்க் கொண்டிருக்கிறது, தொடர்ந்து போய்க் கொண்டேயிருக்கிறது. எனவே குறுக்கு வழி அவசியப்படுகிறது. யாரோ ஒருவர் அவர்களுக்குத் தேவைப்படுவதை உடனடியாய் வழங்குகிறார்.

காலம் சுருக்க ஓடிவிடுவதில்லை. காலம் சாசுவதமானது. அது அவசரப்படுவதில்லை. பிரபஞ்ச இருப்பு மந்தமாகவே நகர்ந்து கொண் டிருக்கிறது. சமவெளியில் அசைந்து செல்லும் கங்கை நதியைப் போன்று அது மெள்ளமாகவே செல்கிறது. அது பாய்ந்தோடவில்லை, இன்னும் கடலை அடைந்தபாடில்லை.

காலம் குறுகியதல்ல, அச்சத்தில் அவதிப்படாதீர்கள். காலம் போதிய அளவில் இருக்கிறது, நீங்கள் ஓய்வு கொள்ளலாம். நீங்கள் ஓய்வெடுத்தால் வெகு நீண்ட பாதையும் எளிதில் கடக்கக் கூடியதாகிவிடும். நீங்கள் அச்சத்தில் விழுந்து விட்டாலோ குறுகிய பாதையும் வெகு நீண்டதாகி விடும். காரணம் என்னவெனில், நீங்கள் அச்சத்தில் இருந்தால் தியானம் செய்வது முடியாத காரியம். நீங்கள் அச்சத்தில், அவசரத்தில் இருக்கும் போது அவசரமே தடையாகி உட்புக விடாது. நான் குதியுங்கள் என்று சொன்னதும், உடனே உங்களால் குதிக்க முடியும். நான் குறுக்கு வழி, நீண்ட வழி பற்றியெல்லாம் பேசவில்லை. நான் வழியைப் பற்றியே பேசவில்லை. குதித்தல் ஒரு வழியாகாது. குதித்தல் துணிச்சல் நிரம்பிய தருணம். ஒரு திடீர் நிகழ்வு.

ஆனால் அதை நீங்கள் இப்போதே செய்ய வேண்டுமென்று நான் கருதவில்லை. 'உடனே குதியுங்கள், முடிந்த அளவு சீக்கிரமே குதியுங்கள்' என்று நான் வலியுறுத்திக் கொண்டே இருப்பேன். அந்த வலியுறுத்தல் நீங்கள் அதற்காக ஆயத்தப் படுத்திக் கொள்வதில் உதவும். என்றாவது ஒருநாள் நீங்கள் ஆயத்தமாகி விடுவீர்கள். யாரோ ஒருவர் இப்போதே ஆயத்த நிலையில் இருக்கலாம். காரணம் நீங்கள் புதியவரல்லர். பல பிறவிகளால் நீங்கள் செயலில் இறங்கி விட்டிருக்கிறீர்கள். நான் 'உடனே குதியுங்கள்' என்று சொல்கிறபோது பல பிறவிகளால் செயல்பட்டு வருகிற ஒருவர் செங்குத்தான பாறையின் விளிம்பில், ஆழ் கடலின் கரையில் நிற்பவர், அச்சத்தோடு நிற்கும் அச்சத்துக்குள்ளாகலாம். அவர் தம்முடைய துணிவையெல்லாம் திரட்டிக் கொண்டு குதிக்க முடியும்.

உடனடியாய் குதிப்பது சாத்தியம் என்று எண்ணமிடும் ஒருவர் தொலைதூரத்தில் இருந்தாலும் நம்பிக்கையைத் திரட்டிக் கொண்டு நடைபயிலத் தொடங்கட்டும்.

நான் ஒன்றைச் சொல்கிற போது (தீர்மானமின்றி) அது பலவகைப் பட்டவர்களுக்கு, பல்வேறு சூழ்நிலைகளிலும் உதவக்கூடிய உபாயமாகும். ஆனால் என்னுடைய பாதை குறுக்கு வழியல்ல. காரணம், எந்தவொரு பாதையும் குறுக்கு வழி ஆகாது. குறுக்கு வழி என்கிற வார்த்தையே ஏமாற்றக் கூடியதுதான்.

'வாழ்க்கை குறுக்கு வழிகளை அறியாது, காரணம், அதற்கு ஆரம்பம் என்பதே கிடையாது'.

கடவுள் குறுக்கு வழிகளை அறியமாட்டார். அவர் அவசரத்தில் இல்லை. அங்கே இருப்பது நிலைபேறு (eternity) .

நீங்கள் நிதானமாய் செய்யமுடியும். எந்த அளவு பொறுமையாய், நிதானத்துடன், அவசரப்படாமல் உங்கள் வேலையைச் செய்கிறீர்களோ அத்தனைக்கு விரைவாய் அடையப் பெறுவீர்கள். நீங்கள் மிகவும் பொறுமையுடன் இருக்க முடிந்தால், அடைவதைப் பற்றிய கவலையே இல்லாமல் அளவற்ற பொறுமையுடன் இருந்தால் அதை இப்போதே நீங்கள் அடையக் கூடும்.

○

# சூத்திரங்கள்

மரணத்தைப் பற்றிய பயம் வாழ்க்கை நெடுகிலும் ஓடிக் கொண்டிருக்கிறது. உயிர்மீது கொள்ளும் பிடிப்பு கற்றறிந்தோர் உட்பட எல்லோரிடமும் மேலோங்கி நிற்கிறது.

ஐந்து வகை துன்பங்கள், கிலேசங்களின் மூலங்களை பிரித்து அவற்றின் மூலாதாரத்திற்க்கே அனுப்புவதன் மூலம் அவற்றை ஒழித்து கட்ட முடியும்.

ஐவகை துன்பங்களின் புறத்தோற்றங்கள் தியானத்தில் மறைந்து விடும்.

வாழ்க்கை என்பது முடிவற்ற துயரங்களின் சங்கிலிபோல் தெரிகிறது. பிறப்பிலிருந்து இறப்பு வரை ஒருவர் துன்பத்தை அனுபவித்துக் கொண்டேயிருக்கிறார். ஆனால் வாழ்வின் மீதான பற்றும் அவருக்குள் வளர்ந்து கொண்டே இருக்கிறது. அவர் வாழ்வைப் பற்றிக் கொண்டு விடுகிறார் மிக வலுவாக.

ஆல்பர்ட் கேமஸ் வெகு அழகாய்ச் சொன்னார், ''இயற்கையின் நடைமுறையில் உள்ள ஒரே பிரச்சினை தற்கொலை தான்'' என்று. நீங்கள் ஏன் தற்கொலை செய்து கொள்ளவில்லை? வாழ்க்கை அத்தனை துன்பகரமாய், நம்பிக்கையற்ற சமாசாரமாய் இருக்குமென்றால் நீங்கள் ஏன் தற்கொலை செய்து கொள்ளவில்லை? மிக ஆழ்ந்து நோக்கினால் இது உண்மையில் ஒரு தத்துவார்த்த பிரச்சினை. ஆனால், யாரும் சாக விரும்புவதில்லை. தற்கொலை செய்து கொள்பவர்கள் கூட தற்கெலை செய்து கொண்டுவிட்டால் மேலும் சிறந்த வாழ்க்கை கிடைக்கும் என்ற நம்பிக்கையில் தான் செய்து கொள்கிறார்கள். ஆக வாழ்வின் மீதான பற்று அப்படியே இருக்கிறது. சாவிலும் தொடர்கிறது நம்பிக்கை.

தற்கொலையைத் தவிர வேறெதையும் பற்றித் தமது சீடர்களுக்குப் போதிக்காத ஒரு கிரேக்க தத்துவமேதையை நான் கேள்விப் பட்டிருக் கிறேன். உண்மையில் அவரை யாரும் பின்பற்றவில்லை. மக்கள் அவருக்குக் காது கொடுத்தனர். தெளிவாகப் பேசும் திறனுடையவர் அவர். மனிதர் தற்கொலை பற்றிப் பேசினாலும் எவ்வளவு நேர்த்தியாயிருக்கிறது. கேட்கத் தகுதியுடையதாய் இருக்கிறது என்று தான் மக்கள் கேட்டனர். ஆனால் யாரும் அவரைப் பின்பற்றவில்லை. அவர்கூட மிக முதிர்ந்தவராய் தொண்ணூறு வயது வரை வாழ்ந்தார். அவர் மரணப் படுக்கையில் இருந்தபோது யாரோ கேட்டார்கள், 'நீங்கள் தற்கொலை பற்றித் தொடர்ந்து போதித்து வந்தீர்கள். ஆனால், நீங்கள் ஏன் தற்கொலை செய்து கொள்ளவில்லை?' என்று. இறந்து கொண்டிருக்கும் அந்த வயதான மேதை சொன்னார் 'நான் அதை மக்களுக்குப் போதிப்பதற்காக இங்கே இருக்க வேண்டியதாயிற்று' என்றார்.

வாழ்வைப் பற்றிக் கொண்டிருப்பது கடும் சிக்கலான விஷயம். பதஞ்சலி இத்னை 'அபினிவேஷ்' என்பார். வாழ்வின் மீதான ஆசை. அதில் அத்தனை துன்பங்கள் இருக்கிற தென்கிறபோது ஏன் அந்த ஆசை? மக்கள் என்னிடம் வந்து தங்ளின் துன்பங்களை வேதனைகளைப் பற்றிச் சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் வாழ்க்கைய விட்டுவிடத் தயாராயில்லை என்பது தெரிகிறது.

'வாழ்க்கை வாழத்தக்கதாய் தெரிகிறது அதன் அத்தனைத் துன்பங்களுடனும்'

இந்த நம்பிக்கை எங்கிருந்து வந்தது? அது ஒரு முரண்பாடு, புரிந்து கொள்ளப்பட வேண்டியது.

உண்மையில் நீங்கள் துயரத்தில் இருக்கிற போதுதான் உங்களுக்கு வாழ்வின் மீதான பிடிப்பு அதிகரிக்கிறது. எத்தனைக்குத் துன்பமாய் இருக்கிறீர்களோ அத்தனைக்கு இறுகப் பற்றிக் கொண்டு விடுகிறீர்கள். மகிழ்ச்சியாயுள்ள மனிதன் வாழ்க்கையைப் பற்றிக் கொள்வதில்லை. மேலோட்டமாய் பார்த்தால் இது ஒரு புதிராய் தெரியும். ஆனால் நீங்கள் அடியாழத்துக்குச் சென்று பார்த்தால் விஷயம் என்ன வென்று புரியவரும்.

'ஏதோ ஒன்று நாளையேனும் நடக்கும் என்று அவர்கள் நம்பிக் கொண்டிருக்கிறார்கள் எப்போதும்'

துன்பத்திலும் பெரும் மன வேதனையிலும் உழன்று கொண் டிருப்பவர்கள் தாம் சொர்க்கமென்கிற ஒன்றைக் கண்டுபிடித்தது. நாளை எப்போதும் வந்து கொண்டிருக்கிறது. ஆனால் அது ஒரு போதும் வருவதில்லை. அந்த எண்ணம் ஒரு தூண்டிலில் வைக்கப்பட்ட இரை போல் உங்கள் கண் முன்னால் தொங்கிக் கொண்டிருக்கிறது. எதிர்காலத்தில் எங்கோ ஓரிடத்தில் அது இருப்பதான நம்பிக்கை.

அது மனதின் தந்திரம் - மிகப் பெரிய தந்திரம். மனம் சொல்கிறது 'இன்றைய பொழுதைப் பற்றிக் கவலைப்படாதே, நாளை வருகிறது சொர்க்கம், அதை அடையும் வரை இன்றைய பொழுதை எப்படியாவது தள்ளிக்கொண்டு போய் விடு. நாளை வரக்கூடிய மகிழ்ச்சியை நீ எதனுடனும் ஒப்பிட முடியாது' என்று. நாளை என்பது மிக அருகில் இருப்பதாய் தெரிகிறது. ஆனால் அது போதும் உளதாய் இருப்பதில்லை. வருவது எதுவாயினும் அது எப்போதும் இன்றாயிருக்கிறது, இன்று என்பது நரகமாயிருக்கிறது. மனம் ஆறுதலளிக்க முயல்கிறது, அப்படிச் செய்துதான் ஆகவேண்டும். இல்லையேல் துன்பம் தாங்கிக்கொள்ள முடியாததாகி விடும். ஆனாலென்ன - அதைத் தாங்கித்தான் ஆகவேண்டும்.

அதை எப்படித் தாங்கிக் கொள்வீர்கள்? நம்பிக்கை ஒன்றே வழியாய் தெரிகிறது. நம்பிக்கைகள் கனவுகள் இவற்றை முன்னிட்டு நாம் கொள்ளும் நம்பிக்கை. கனவு அமைதியளிக்கப் பார்க்கும். உங்கள் துன்பங்களின் கடுமையை அது குறைக்க முயலும், நீர்த்துப்போகச் செய்யும். கனவு நடக்காமல் போகலாம், ஆனால், இன்றைய துன்பங்களைச் சகித்துக்கொள்ள அது உதவும். நீங்கள் தள்ளிப்போட முடியும். உங்கள் ஆசைகள் இன்னும் நிறைவேறாமல் எதிர்காலத்தின் ஏதோ ஓர் இடத்தில் தொங்கிக் கொண்டிருக்கும்.

'நாளை எல்லாம் சரியாகிவிடும் என்கிற நம்பிக்கை உங்கள் முயற்சிகளைத் தொடரச் செய்கிறது.

மிகவும் துன்புறுகிறவன் மிகவும் நம்பிக்கை உடையவனாய் இருக்கிறான். அதனால்தான் பிச்சைக்காரர்கள் இவ்வுலகத்தை விட்டுத் துறப்பதில்லை. அவர்கள் எப்படித் துறப்பார்கள்? புத்தர், மகாவீரர் போன்று மாளிகையில் பிறந்த இளவரசர்களால் மட்டுமே துறக்க முடிகிறது. எத்தனைக்கு மனிதன் மகிழ்ச்சியாயிருக்கிறானோ அத்தனைக்கு நம்பிக்கை யற்றவனாகி விடுவான். அவர்கள் நம்பிக்கையற்றவர்கள், அவர்களிடம் நம்பிக்கையோடு எதிர்பார்க்கும் படியாய் எதுவும் இல்லை. அங்கே எல்லாம் இருந்தது, எல்லாவற்றுடன் துன்பமும் துயரமும் கூடவே இருந்தது. ஒரு பிச்சைக்காரன் நம்பிக்கையோடு எதிர்பார்க்க முடிவதற்குக் காரணம் அவனிடம் எதுவும் இல்லை. எல்லாம் இருந்துவிட்டால் இதுவே சொர்க்கம், எல்லாம் கிடைத்துவிட்டால் இதுவே பேரின்ப உலகம். எல்லாமும் மகிழ்ச்சியளிப்பதாகிவிடும். அவன் நாளைக்காகக் காத்திருக்கிறான், அதற்கான ஏற்பாடுகளைச் செய்கிறான். புத்தர் எதையும் செய்ய வேண்டி யிருக்கவில்லை. அவருக்கு எல்லாமும் இருந்தன, எல்லாமும் கிடைத்தன. பிறகெதற்கு எதிர்பார்ப்பு தேவைப்படுமாம்?

அதனால்தான் செல்வவளம் மிக்க சமூகத்தில் மட்டுமே மதம் சாத்தியப்படும் என்று நான் மீண்டும் மீண்டும் அழுத்தமாய் சொல்வது. ஏழ்மையான சமுதாயத்தில் மத நம்பிக்கை அவ்வளவாய் இருக்காது. அது பொதுவுடைமைச் சமுதாயமாய் மாறக் கூடியது. காரணம் பொதுவுடைமைக் கொள்கை தான் நாளை பற்றிய நம்பிக்கையாய், சொர்க்கமாய் இருக்கிறது.

'நாளை எல்லாமே சமமாய் பிரித்தளிக்கப்படும். நாளை யாரும் பணக்காரனாகவோ ஏழையாகவோ இருக்கப் போகிறதில்லை. நாளை நாளை முழுமையான மாற்றத்தை ஏற்படுத்தும் புரட்சி.

'சூரியன் உதித்தெழும் போது எல்லாமும் அழகாகிவிடும்'

இருள் - தெளிவின்மை இன்று மட்டுந்தான். கொஞ்சம் பொறுத்துக் கொள், நாளைக்காய் போராடு. ஏழ்மையுற்ற சமூதாயம் பொதுவுடைமைக்குத் தாவுவது தவிர்க்க முடியாத ஒன்று.

செல்வ வளம் பெற்ற சமூகம்தான நம்பிக்கையற்றதாய் உணரத் தொடங்குகிறது. வாழ்க்கையைப் பற்றி நம்பிக்கையற்ற விதத்தில் உணர்கிறபோதுதான் உண்மையான நம்பிக்கை உங்களுக்குள் துளிர் விடுகிறது. வாழ்க்கையின் மீது விரக்தியேற்பட்டு, தற்கொலை என்கிற ஆபத்தான விளிம்புக்கு நீங்கள் வருகிறபோது இந்த ஒட்டு மொத்த துன்பத்துக்கும் விடையளிக்கத் தயாராகிறீர்கள். இக்கட்டான அந்தக் கணத்தில் மாற்றமடைவது சாத்தியமாகிறது.

தற்கொலை, சாதனை (*sadhana*) என இரண்டு மாற்று வழிகள். நீங்கள் தற்கொலை செய்துகொள்ளத் தயாராகிற போது மாற்றத்துக்கும் தயாராகிறீர்கள், அதற்கு முன்பில்லை. ஒட்டு மொத்த வாழ்வையும் அதன் அத்தனை துன்பங்களோடும் நீங்கள் விடத் தயாராகிற போதுதான் உங்களை மாற்றத்துக்குள்ளாக்க தயாராகிறீர்கள். நிலை மாற்றமே உண்மையான தற்கொலை. உங்களுடைய உடம்பை நீங்கள் அழித்துக் கொண்டால் அது உண்மையான தற்கொலை ஆகாது. உங்கள் மனம் அப்படியே இருப்பதால் இன்னோர் உடம்பை நீங்கள் பெறுவீர்கள். மனதை அழிப்பதே உண்மையான தற்கொலை. அதைப் பற்றிக் கூறுவதே யோகா: மனதை அழிப்பதன் மூலம் இறுதியான தற்கொலை நிகழ்கிறது, அதன்பிறகு திரும்பி வருவது என்கிற பேச்சுக்கே இடமில்லை.

ஆனால் துன்புறும் மனிதன் வாழ்வை இறுகப் பற்றிக் கொண்டிருக்கிறான். நீங்கள் வேறு விதமாய்ச் சிந்தித்திருக்கலாம். துன்புறும் மனிதன் வாழ்வைப் பற்றிக் கொள்ளவேண்டாம் என்பதாய். வாழ்க்கை அப்படிப் பெரிதாய் என்னத்தை அவனுக்கு வழங்கிவிட்டது? அவன் ஏன் அதைப் பற்றிக் கொண்டிருப்பது? சாலையில் ஒரு பிச்சைக்காரனைக் காணும் போது, குருடனை, தொழுநோயாளியை, முடவனைப் பார்க்கும் போது அந்த எண்ணம் உங்களுக்கு வந்திருக்கும்.

''ஏன் இந்த மனிதன் உயிர்வாழத் துடிக்கிறான்? இப்போது என்ன மிச்சமிருக்கிறது? அவன் தற்கொலை செய்து எல்லாவற்றுக்கும் முடிவு கட்டலாமே'' என்று எண்ணமிடுவீர்கள்.

நான் நினைத்துப் பார்க்கிறேன்: என்னுடைய குழந்தைப் பருவத்தில் கால்களற்ற ஒரு பிச்சைக்காரன் வந்திருக்கிறான். ஒரு சிறிய தள்ளு வண்டியில் அவனை உட்காரவைத்து அவனுடைய மனைவி தள்ளிக்

கொண்டு வருவாள். அவன் பார்வையற்றவனாய், உடல் முழுதும் அழுகிய பிணம்போல் நாறிக் கொண்டிருந்தான். பக்கத்தில் நெருங்கவே முடியாது. தீராத தொழுநோயில் அவன் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான். கிட்டத்தட்ட செத்துப் போனமாதிரி, தொண்ணூற்று ஒன்பது சதவீகிதம் செயலற்றுப் போயிருந்தது. ஒரு சதவீகிதம் உயிரைவைத்துக் கொண்டு மூச்சு விட்டான். நான் அவனுக்கு ஏதாவது கொடுப்பதுண்டு. ஒரு நாள் அறிந்து கொள்ளும் ஆவல் மிகுதியால் அவனிடம் கேட்டேன், 'நீ ஏன் வாழ்கிறாய் எதற்காக? தற்கொலை செய்து உன் துன்பங்களுக்கு ஒரு முடிவு கட்டிவிடலாமே?' என்று. அவனுக்குக் கோபம் வந்துவிட்டது, 'நீ என்ன சொல்றே?' என்றான். தன் கையிலிருந்த கம்பால் என்னைத் தாக்க விரும்பியிருப்பான்.

துன்புறும் மனிதன் தற்கொலை செய்துகொண்டு விடலாமே என்று தான் உங்களுக்கும் தோன்றும். ஆனால், துன்புறுகிறவன் ஒருபோதும் அப்படி எண்ணுவதில்லை, அவனால் அப்படி எண்ண முடியாது. துன்பம் தனக்குரிய இழப்பீட்டை, நச்சு முறிவை தயார் செய்துகொண்டு விடுகிறது. நச்சு முறிவாய், பிணி தீர்க்கும் மருந்தாய் தெரிவது சொர்க்கம். "நாளை எல்லாமே சரியாகிவிடும். இன்னும் கொஞ்சம் பொறுமையாயிருக்க முடியுமா என்பதுதான் கேள்வி."

ஒரு பிச்சைக்காரன் எப்போதும் எதிர்காலத்தில் வாழ்கிறவன். எதிர்காலத்தில் வாழ்கிறவரென்றால் நீங்களும் ஒரு பிச்சைக்காரன்தான். ஒருவன் சக்கரவர்த்தியா, பிச்சைக்காரனா என்பதைத் தீர்மானிக்க அது ஒரு நெறிமுறையாயிருக்கிறது.

'எதிர்காலத்தில் வாழ்கிறவன் பிச்சைக்காரன் இக்கணத்தில் வாழ்கிறவன் பேரரசன்'

இங்கே இப்போது வாழ்கிறவனே பரமசுகத்தில் திளைக்கிறவன். அவன் நாளையைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. எதிர்காலம் என்பது ஒன்றுமேயில்லை. அது அவனுக்கு எந்தப் பொருளையும் (meaning) தராது.

உண்மையில் எதிர்காலம் என்று எதுவும் கிடையாது, இக்கணம் மட்டுமே உளதாய் இருப்பது. ஆனால் அதுவும் சுகானுபவத்தில் திளைப்பவனுக்கு சாத்தியமாயிருக்கிறது. துன்புறுகிறவனுக்கு கண நேரமும் சாத்தியப்படாத, சகித்துக் கொள்ள முடியாத ஒன்றுதான். அவன் ஒரு எதிர்காலத்தைத் தோன்றுவித்துக் கொள்கிறான். துன்பத்திற்கு இழப்பீடாய் ஒரு கனவை எப்படியேனும் அவன் உருவாக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது.

துன்பத்தின் ஆழத்துக்கேற்ப நம்பிக்கையின் அளவும் அதிகரிக்கிறது. நம்பிக்கை ஓர் இழப்பீடு. துன்புறுகிறவன் ஒருபோதும் தற்கொலை செய்து கொள்வதில்லை. துயருற்ற ஒருவன் சமயத்தைத் தஞ்சமடைவதுமில்லை. அவன் வாழ்வை இறுகப் பற்றிக் கொண்டு விடுகிறான். நீங்கள் அதிக மகிழ்ச்சியுடையவராயிருந்தால் எக்கணத்திலும் வாழ்வை இழக்கத் தயாராயிருப்பீர்கள். உங்களால் கிழிந்த உடையைத் தூக்கியெறிவது போல் உயிரைத் தூக்கியெறிந்துவிட முடியும். அது ஒன்றும் பெரிய விஷயமில்லை.

அது மட்டுமல்ல, நீங்கள் உண்மையிலேயே பரமசுகத்தில் இருந்தால், மரணம் உங்கள் வாயிற்கதவைத் தட்டுகிறபோது நீங்கள் அதனை வரவேற்கவே செய்வீர்கள். மரணத்தைக் கடப்பதன் பொருட்டு மரணத்தைத் தழுவிக் கொள்வீர்கள். நான் மீண்டும் சொல்கிறேன். மரணம் உங்கள் வாயிற்கதவைத் தட்டுகிறது, நீங்கள் அதைக் கண்டு அஞ்சினால் எங்காவது மூலைகளில், கதவுள்ள அலமாரிகளில் ஒளிந்து கொள்ள முற்படுவீர்கள். இன்னும் கொஞ்சநாள் வாழ விரும்புகிறேன் என்று அழுகையுடன் கூச்சலிடுவீர்கள். நீங்கள் ஒரு பலி உயிர் (victim) பலமுறை இறக்க வேண்டியிருக்கும்.

'கோழை ஆயிரத்தியோரு முறை சாகிறான்'

ஆனால், உங்களால் கதவைத் திறந்து மரணத்தை ஒரு நண்பனைப் போல் வரவேற்று தழுவிக்கொள்ள முடிந்தால் மரணத்தைக் கடந்தவராவீர். இப்போது நீங்கள் ஒரு சிரஞ்சீவி. முதல்முறையாய் துன்பமற்ற வாழ்வை அடைகிறீர்கள். இயேசு அந்த வாழ்க்கையை எல்லா வளமும் நிறைந்த வாழ்க்கை என்கிறார். புத்தர் அந்த வாழ்க்கையை பரவசமானது, அதுவே நிர்வாண நிலை என்கிறார். பதஞ்சலி அதனை சாசுவதம், அனாதியானது (timeless) மரணத்துக்கப்பாற்பட்டது என்கிறார்.

தன்னுடைய இழப்பைத் தானே ஈடுகட்டிக் கொள்கிறது துன்பம். ஒருமுறை பொறியில் நீங்கள் சிக்கிக் கொண்டுவிட்டால் வாழ்வை இன்னும் அதிகமாய் பற்றிக்கொண்டு, அதிக துன்பத்தை அனுபவிப்பீர்கள். காரணம் பற்றிக் கொள்வதே துன்பத்தைத் தோற்றுவித்து விடுகிறது. நீங்கள் ஒன்றைப் பற்றிக்கொள்ளாமல் விட்டுவிட்டால் துன்புறமாட்டீர்கள். ஒன்றை நீங்கள் பற்றியிருந்து அதை இழக்கும்படியானால் உங்களுக்குப் பைத்தியமே பிடித்துவிடும். வாழ்வில் உங்களுக்குப் பற்று அதிகரித்தால் உங்களுடைய துயரங்களும் பெருகிக் கொண்டே போகும். உங்கள் இருப்புணர்வில் (being) மேலும் மேலும் வேதனை கூடிவிடும். ஒரு தருணத்தில் நீங்கள் வேதனையின் வடிவமாகி விடுவீர்கள். அப்படி நேரும் போது

நீங்கள் இன்னும் வலுவாய் பற்றிக் கொள்வீர்கள். இது ஒரு தவறான சுழற்சியாகும்.

ஒட்டுமொத்த நிகழ்வையும் கொஞ்சம் கருத்தூன்றிக் கவனியுங்கள். நீங்கள் ஏன் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள்? காரணம், இதுவரை நீங்கள் வாழ முடியாமல் இருந்திருக்கிறீர்கள். உங்கள் வாழ்வில் உயிரோட்டமில்லை என்பது நீங்கள் அதைப் பற்றிக் கொண்டிருப்பதிலிருந்தே தெரிகிறது. உங்கள் வாழ்க்கை உணர்ச்சியற்றது, செயலற்றுப் போனது. வாழ்வின் போற்றுதலுக்குரிய நலன்களை நீங்கள் இன்னும் அனுபவித்தபாடில்லை. நீங்கள் உணர்வற்றவராயிருக்கிறீர்கள். ஒரு கூட்டுக்குள்ளாகவோ குறுகிய வட்டத்துக்குள்ளாகவே கழிந்திருக்கிறது. உங்களுடைய வாழ்க்கை. உங்களால் பூக்களை ஸ்பரிசிக்கவோ, பறவைகளுடன் பரிச்சயப்படவோ, ஆகாயத்தைத் தொட்டுப் பார்க்கவோ முடியவில்லை.

உங்களால் வாழ்வென்னும் நீரோட்டத்துடன் அதன் போக்கில் செல்ல முடிகிறதோ? உறைந்து போய் விடுகிறீர்கள். உறைந்து விட்டபடியால் நீங்கள் துன்புறுகிறீர்கள், உங்களால் வாழமுடியாமல் போகிறது. நீங்கள் துன்புறுகிறபடியால் மரணத்தைக் கண்டு அஞ்சுகிறீர்கள். இன்னும் நாம் வாழவில்லையே அதற்குள் மரணம் வந்து எல்லாவற்றுக்கும் முற்றுப்புள்ளி வைத்துவிட்டால் என்ன செய்வது என்கிற அச்சம்.

பழைய கதையொன்று. உபநிடத காலத்தில் யயாதி என்கிற புகழ்பெற்ற அரசன் இருந்தான். அவன் இறக்க வேண்டிய வேளை வந்தது.

அவன் அப்போது நூறு வயதைக் கடந்திருந்தான். மரணம் அவனை நெருங்கியதும் கூவி, அழத் தொடங்கினான். மரணம் சொன்னது, 'புகழும் துணிவும் மிக்க பேரரசே! இது உமக்குச் சற்றும் பொருத்தமில்லாதது. நீர் செய்கிற காரியம் என்ன? ஒரு குழந்தையைப் போல் அழுது புலம்புவ தேன்? காற்றில் படபடக்கும் இலையைப்போல் நடுங்குவது எதற்காக? உமக்கு என்ன ஆயிற்று? 'யயாதி சொன்னான்', நீயோ வந்துவிட்டாய், நான் இன்னும் வாழ்ந்தபாடில்லை. எனக்கு இன்னும் கொஞ்சம் அவகாசம் கொடு. நான் வாழ்ந்து பார்க்க முடியும். நான் பல காரியங்களைச் செய்திருக்கிறேன், பல போர்களில் ஈடுபட்டிருக்கிறேன். நிறைய செல்வத்தைக் குவித்தேன், ஒரு பேரரசை நிறுவினேன். உண்மையில் வாழ்வதற்கு நேரமில்லாமல் போயிற்று. நீயோ வந்துவிட்டாய்.

மரணம் சொல்லிற்று, 'ஆனால் நான் யாரையாவது கொண்டு சென்று தானாக வேண்டும். ஓர் ஏற்பாடு செய். உன்னுடைய மகன்களில் யாரேனும் உனக்காக இறக்கத் தயாராய் இருந்தால், நான் அவனை எடுத்துச் செல்கிறேன்' என்று.

யயாதிக்கு நூறு பிள்ளைகளும் ஆயிரக்கணக்கான மனைவியரும் இருந்தார்கள். அவன் தன்னுடைய பிள்ளைகளை அழைத்து, யாராவது தங்களுடைய உயிரைத் தந்து, தன்னை வாழ வைக்கச் செய்யும்படி வேண்டினான். வளர்ந்து பெரியவர்களாகி விட்ட அவர்கள் அவன் பேச்சைக் கேட்கவில்லை. அவனுக்காக உயிரை இழக்க யாரும் முன்வர வில்லை. மூத்தமகன் எழுபது வயதினன். அவன் சொன்னான், 'நானுந்தான் இன்னும் வாழ்ந்தபாடில்லை. என் கதி என்னாவது. நீராவது நூறு வயசு வாழ்ந்துவிட்டீர். நான் எழுபது வயசுக்காரன். எனக்குத்தான் இன்னொரு வாய்ப்பு வழங்கப்பட வேண்டும்' என்று.

பதினாறு பதினேழு வயதேயான இளையவன் தந்தையின் பாதங்களில் விழுந்து வணங்கி, 'நான் தயார்' என்றான். மரணத்துக்கே அவன் மீது இரக்கம் உண்டாயிற்று. உலக அனுபவம் இல்லாத சிறு பிள்ளை அவன், தான் இன்னது செய்கிறோம் என்பதை அவன் அறியமாட்டான். மரணம் அவன் காதில் முணுமுணுத்தது, 'முட்டாளே, நீ என்ன செய்கிறாய். உன் தந்தையைப் பார். நூறு வயதிலும் அவர் சாகத் தயாராயில்லை.

உனக்கோ பதினேழு வயதுதான் ஆகிறது. இன்னும் வாழ்வுடன் பரிச்சயப்படாதவனாயிருக்கிறாய்' என்று. அந்தச் சிறுவன் சொன்னான், ''அவ்வளவுதான் வாழ்க்கை. என் தந்தை நூறு வயதிலும் இன்னும் வாழ முடியவில்லையே என்று வருந்துகிறார். அதன் அர்த்தம் என்ன? நான் நூறு வயது வாழ்ந்தாலும் அப்படித்தான் ஆகப்போகிறது. என்னுடைய ஆயுளையும் அவரே பெற்று வாழட்டும். அவர் நூறு வருடங்களில் வாழ முடியவில்லை என்றால் ஒட்டு மொத்த வாழ்க்கையையும் பொருளற்ற தாகிறதே.''

அந்த மகன் இறந்தான், தந்தை மேலும் நூறு ஆண்டுகள் வாழ்ந்தான். மரணம் மீண்டும் அவனுடைய வாயிற்கதவைத் தட்டியபோது அவன் அழலானான். ''நான் முற்றாய் மறந்து போனேன். செல்வத்தை அதிகரித்து, சாம்ராஜ்யத்தை விரிவுபடுத்துவதிலேயே காலம் கழித்துவிட்டேன். நூறு வருடங்களும் ஒரு கனவாய் போய்விட்டது? நீயோ மீண்டும் வந்து விட்டாய், நான் இன்னும் வாழ்ந்த பாடில்லையே'' என்று புலம்பினான். இச்செயல் முறை தொடர்ந்தது.

மரணம் மீண்டும் மீண்டு வந்து அவனுடைய மகன்களுடன் ஒருவரைக் கொண்டு போகும். யயாதி ஆயிரம் ஆண்டுகள் மேலாய் வாழ்ந்துவிட்டான்.

அருமையான கதை, அதே மாதிரி தான் மீண்டும் நடந்து. ஆயிரம் ஆண்டுகள் ஓடி மறைந்தபின் மரணம் வந்தது. யயாதி அஞ்சி நடுங்கினான், அழுது புலம்பினான்.

மரணம் சொன்னது, 'இது ரொம்ப அதிகம். ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து கழித்த நிலையில் சொல்கிறாய், இன்னும் உன்னால் வாழ முடியவில்லை' என்று. யயாதி கூறினான், ''இந்தக் கணமே வாழ்வதென்பது யாருக்காகும்? நான், நாளை... நாளை என்று தள்ளிப்போட்டுக் கொண்டே யிருக்கிறேன். நீயோ திடுதிப்பென்று வந்து விடுகிறாய்'' என்று.

வாழ்க்கையைத் தள்ளிப் போடுவது கடமையினின்றும் தவறிய செயலாகும். நான் அந்தத் தவறை 'பாவம்' என்பேன்.

'கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் மறந்து, இக்கணத்தில் வாழப் பாருங்கள்'

ஒருமுறை இழந்தால் மீண்டும் பெற முடியாது, திருப்பித் தரும்படி கேட்க முடியாது.

நீங்கள் தற்போதே வாழத் தொடங்கிவிட்டால் எதிர்காலத்தைப் பற்றி எண்ண வேண்டியதில்லை, வாழ்வை பற்றிக்கொள்ள மாட்டீர்கள்.

நீங்கள் வாழ்கிறபோது வாழ்க்கையை நன்கறிந்தவராய், அதில் நிறைவுற்றவராய், தெவிட்டும் நிலையை அடைந்திருப்பீர்கள். உங்க ளுடைய முழு இருப்புணர்வும் மகிழ்ச்சியாயிருக்கும். எந்தவோர் இழப்பீடும் தேவைப்படாது. மரணம் நூறு ஆண்டுகள் கழித்து வர வேண்டும். என்கிற அவசியமில்லை. நீங்கள் அஞ்சி நடுங்கி அழுது புலம்பவும் அவசியமில்லை. மரணம் இப்போதே வந்தாலும் அதை ஏற்கத் தயாராயிருக்க வேண்டும். நீங்கள் வாழ்ந்து அனுபவித்தாயிற்று, கொண்டாடி முடித்துவிட்டீர்கள்.

'உயிரோட்டமுள்ள வாழ்வை ஒருகணம் வாழ்ந்தாலும் போதும் உண்மையற்ற வாழ்வை ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து என்ன ஆகப்போகிறது?'

வாழாமல் வாழும் காலம் ஆயிரம் ஆண்டுகளாய் இருந்தாலென்ன, இலட்சம் ஆண்டுகளாய் இருந்தாலென்ன? நான் சொல்கிறேன் -

'அனுபவித்து மகிழ்வது ஒரு கணமே என்றாலும் அது சாசுவதமானது'

அது காலவெளி கடந்தது. வாழ்வின் ஆன்மாவையே நீங்கள் தொடுகிறீர்கள். அதன் பிறகு மரணமில்லை, கவலையில்லை, பற்றுதல்

இல்லை. எந்தக் கணத்திலும் நீங்கள் உயிரைவிட முடியும். எதுவும் மிச்சம் வைக்கப்படவில்லை என்பது உங்களுக்குத் தெரியும். அதை முழுமையாய் அதன் விளிம்பு வரை அனுபவித்து விட்டீர்கள். அது நிரம்பி வழிகிறது உங்களுக்குள், நீங்கள் தயாராயிருக்கிறீர்கள்.

ஒரு மனிதன் கொண்டாடும் மன நிலையுடன் சாவை எதிர்கொள்ளத் தயாராகிறான் என்றால் அவன் உண்மையிலேயே வாழ்ந்து பார்த்தவனாயிருப்பான். வாழ்வை நீங்கள் பற்றிக் கொண்டிருப்பது உங்களிடம் வாழ்வதற்கான திறமையில்லை என்பதையே காட்டும். வாழ்வின் ஒரு பகுதியாய் மரணத்தை நீங்கள் தழுவிக் கொள்வது உங்களுடைய வாழ்க்கை நன்றாய் அமைந்திருந்தது என்பதையே வெளிக்காட்டும். நீங்கள் மனநிறைவு கொண்டவர். இப்போது பதஞ்சலியின் சூத்திரத்தைக் கவனமாய்க் கேளுங்கள். அது மிகவும் ஆழ்ந்த அறிவும் முக்கியத்துவமும் உடையது.

> "மரணத்தைப் பற்றிய பயம் வாழ்க்கை நெடுகிலும் ஓடிக் கொண்டேயிருக்கிறது. உயிர்மீது கொள்ளும் படிப்பு கற்றறிந்தவர்கள் உட்பட எல்லாரிடத்தும் மேலோங்கி நிற்கிறது."

உங்கள் மன ஓட்டத்தை நீங்கள் கவனித்தால், உங்களையே நீங்கள் ஊடுருவிப் பார்த்தால் அது உங்களுக்குப் புலப்படும். நீங்கள் எச்சரிக்கையோடு இருந்தாலும் இல்லாவிட்டாலும் மரணத்தைப் பற்றிய பயம் அங்கு தொடர்ந்து இருக்கிறது. எதைச் செய்தாலும் அதில் மரணபயம் இருக்கிறது. நீங்கள் எதை அனுபவித்து மகிழ்ந்தாலும் அங்கே ஏதோ ஒரு மூலையில் மரணத்தின் நிழல் எப்போதும் படிந்திருக்கும். நீங்கள் எங்கு சென்றாலும் அதனுடனேயே செல்வீர்கள். அது உங்களிடமே இருக்கும் ஏதோ ஒன்றாகும். நீங்கள் அதை வெளியில் விடுவதோ அதைவிட்டு நழுவ முயல்வதோ முடியாத காரியம். மரணபயமே நீங்கள்.

இந்த மரணபயம் எங்கிருந்து வருகிறது? மரணத்தைப் பற்றி உங்களுக்கு முன்பே தெரியுமா? நீங்கள் மரணத்தை முன்பே அறிந்திரா விட்டால் அதைப் பற்றி ஏன் அச்சப்பட வேண்டும்? உளவியல் நிபுணர் களிடம் நீங்கள் கேட்டால் சொல்வார்கள், மரணத்தைப் பற்றி நீங்கள் அறிந்திருந்தால் மட்டுமே அது குறித்து அஞ்சுவது பொருத்தமாயிருக்கும். இதற்கு முன் நீங்கள் இறந்திருந்தாலும் அந்த அச்சம் பொருத்தமுடைய தாயிருக்கும். ஆனால், உங்களுக்கு மரணத்தைத் தெரியாது. அது வேதனை யளிக்குமா, பரவசப்படுத்துமா என்பதும் உங்களுக்குத் தெரியாது. பிறகெதற்கு நீங்கள் அஞ்சுவது?

இல்லை. மரணபயம் என்பது உண்மையில் மரணத்தைப் பற்றிய பயமே அல்ல. நீங்கள் அறிந்திராத, எவ்வகையிலும் அறிந்திராத ஏதோ ஒன்றுக்காக ஏன் அஞ்சுவது? மரணபயம் உண்மையிலே வாழ்வைப் பற்றிக் கொண்டிருப்பதால் வருவது.

வாழ்க்கை இருக்கிறது என்பதும் அதை நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கவில்லை என்பதும் உங்களுக்கு நன்றாகவே தெரியும். ஆறு உங்கள் பக்கமாய் ஓடிக் கொண்டிருக்கிறது, நீங்கள் கரையில் நிற்க அது உங்கள் கைவிட்டு ஓடிக் கொண்டிருக்கிறது. எப்போதும் மரணபயம் என்பது அடிப்படையில் வாழ்க்கையை வாழும் திறமை உங்களிடம் இல்லாமையால் ஏற்பட்ட பயம். வாழ்க்கை நம்மை விலகிப் போய்விடுமோ என்கிற பயம்.

வாழ்வதற்காய் - நீங்கள் காத்திருக்கிறீர்கள், உங்களைத் தயார் செய்து கொண்டிருக்கிறீர்கள். தொடர்ந்து அதே வேலையாய் இருக்கிறீர்கள்.

உலகின் எல்லா நாடுகளிலிருந்தும், மொழிகளிலிருந்தும் நூல்களைச் சேகரித்து மிகச் சிறந்த நூலகத்தை நிறுவிய ஜெர்மானியப் பேறறிஞரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் அந்த நூல்களில் ஒன்றைக் கூட ஒரு போதும் படித்ததில்லை, காரணம் நூல்களைச் சேகரிக்கவே அவருக்கு நேரம் சரியாயிருந்தது. மனிதனின் சருமத்தைப் பற்றிய அபூர்வமான நூலொன்றைத் தேடி சீனாவுக்குச் செல்வார். பிறகு பர்மாவுக்குச் செல்வார். இந்தியா, இலங்கை, ஆப்கானிஸ்தான் என்று வாழ்க்கை நெடுகிலும் பயணித்தபடி இருப்பார். அவருக்கு எழுபது வயதானபோது அபூர்வமான நூல்களுடன் மிகப்பெரிய நூல் தொகுப்பு அவரிடம் இருந்தது. நூலகம் முழுமையானதும் படிக்கலாம் என்று அவர் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தார். மரணம் வந்தது. சாகும் தறுவாயில் அவருடைய கண்களில் நீர் உருண்டோடியது. நண்பரொருவரிடம் கேட்டார் ''இப்போது என்ன செய்வது?'' என்று. ''நேரம் இல்லை. நூலகம் தயாராகி விட்டபோது என் வாழ்க்கை பயன்படுத்தப்படாமலே தீர்ந்துபோயிற்று. நூலகத்திலிருந்து ஏதாவதொரு புத்தகத்தைக் கொண்டு வாரும். அதிலிருந்து எதையாவது படித்துக் காட்டும். நான் கேட்டுப் புரிந்து கொள்கிறேன். சிறிதளவேனும் திருப்தி கிடைக்கட்டும்'' என்று சொன்னார். அவருடைய நண்பர் நூலகத்தி லிருந்து ஒரு புத்தகத்தோடு திரும்பி வந்தபோது - அறிஞர் செத்துப் போயிருந்தார்.

ஒவ்வொருவருக்கும் இப்படி ஆகிறது, கிட்டத்தட்ட எல்லாருக்கும். வாழ்வதற்கான ஏற்பாடுகளிலேயே நீங்கள் வாழ்க்கையைச் செலவழித்து

விடுகிறீர்கள். இலட்சோபலட்சம் ஏற்பாடுகளைச் செய்துகொண்டு நிதானமாய் அனுபவிப்போம் என்று நினைப்பீர்கள். ஆனால் அந்த நேரத்தில் வாழ்க்கை போயே போய்விடுகிறது. முன்னேற்பாடுகளெல்லாம் மிக நன்றாய் நடந்த போதிலும் அவற்றை அனுபவிக்கத்தான் ஆள் இருக்காது. இதுதான் பயம். குடல் நாளத்தில் அடியாழத்தில் உணரப் படுவது. வாழ்க்கை ஓடிக்கொண்டிருக்கிறது, ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் இறந்து கொண்டிருக்கிறீர்கள்.

எதிர்காலத்தில் ஏதோ ஓர் இடத்தில் வந்து உங்களை அழிக்கப் போகிற மரணம் பற்றிய பயமல்ல அது. அது ஒவ்வொரு கணத்திலும் நிகழ்ந்து கொண்டிருப்பதாகும். வாழ்க்கை போய்க் கொண்டிருக்கிறது. நீங்கள் விளைவுகளில் மனதை ஆட்படுத்தாதவராய் (closed) இருக்கி றீர்கள். உங்களுடைய ஆற்றல் அடியோடு தீர்ந்து போயிற்று. நீங்கள் முன்பே இறந்து கொண்டிருக்கிறீர்கள், அது பிறந்தநாளிலிருந்தே தொடங்கி விட்டது.

'வாழ்வின் ஒவ்வொரு கணமும் மரணத்தின் கணமாயிருக்கிறது'

அந்த அச்சம் பிறிதொரு நாளில் வரும் மரணம் பற்றியதல்ல, அது இப்போதே இருக்கிறது. வாழ்க்கை உங்கள் கையை விட்டுப் போய்க் கொண்டிருக்க நீங்கள் என்ன செய்வதென்றறியாமல் விழிக்கிறீர்கள்.

அச்சத்துடன் வாழ்வை இறுகப் பற்றிக் கொள்கிறீர்கள். ஆனால், ஒன்றைப் பற்றிக் கொண்டிருப்பது எப்படி கொண்டாட்டமாக முடியும்? அவ்வாறு பற்றியிருப்பது அருவருக்கத் தக்கது, அதை ஒரு வன்முறை என்றும் கொள்ளலாம். எத்தனைக்குப் பற்றி நிற்கிறீர்களோ அத்தனைக்கு திறமையற்றவராவீர்கள்.

உதாரணமாய் - ஒரு பெண்ணை நீங்கள் காதலிக்கிறீர்கள், அவளை பற்றிக் கொண்டுள்ளீர்கள். நீங்கள் அவளிடம் கொண்ட பிடிப்பு நிர்ப்பந்தமாகிறபோது அவள் உங்களை விட்டு நழுவியோடி விடுவாள். காரணம், உங்களுடைய பற்றுதல், அவளுக்குச் சுமையாய் தெரியும். அவளை நீங்கள் சுவாதீனப்படுத்திக்கொள்ள முயலும்போது அவள் எப்படி விடுபடலாம் என்று யோசித்துக் கொண்டிருப்பாள். நான் உங்களுக்குச் சொல்கிறேன். வாழ்க்கை ஒரு பெண் மாதிரி, அதைப் பற்ற முயலாதீர்கள். தன்னைப் பற்றாதவர்களையே அது தொடர்ந்து செல்கிறது. தன்னைப் பற்ற முயலாதவர்களிடமே அது அபரிமிதமாய் சென்று சேர்கிறது. நீங்கள் பற்ற முனைந்தால் அதுவே வாழ்க்கை உங்களிடமிருந்து விலகிச் செல்லக் காரணமாகி விடும், உங்களுடைய பிச்சைக்காரத் தனம் வாழ்க்கையைக் குலைத்து விடுகிறது.

ஒரு பேரரசனைப் போலிருங்கள், எல்லாரைவிடவும் மேலா யிருங்கள். வாழ்க்கையை வாழுங்கள். ஆனால் அதைப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டாம்.

நீங்கள் எதைப் பிடித்துக் கொண்டிருந்தாலும் அது உங்களை அருவருப்பானவராய், வன் முறையாளராய் காண்பிக்கும். பற்றுகிற முயற்சி உங்களை ஒரு பிச்சைக்காரராய் தோற்றமளிக்கச் செய்யும்.

'வாழ்க்கை பேரரசர்களுக்குரியது யாசிப்பவர்களுக்கல்ல'

எதையும் யாசிக்காதவர்க்கே வாரி வழங்குகிறது வாழ்க்கை. தன்னைப் பற்றாமல் இருப்பவர்க்கு வாழ்க்கை ஒரே சீராய் நன்மை பயக்கும். வாழுங்கள், அனுபவித்து மகிழுங்கள், அதைக் கொண்டாடுங்கள். ஆனால் கருமித்தனம் வேண்டாம், அதைப் பற்றியிருக்கவும் வேண்டாம்.

> "மரணத்தைப் பற்றிய பயம் வாழ்க்கை நெடுகிலும் ஓடிக் கொண்டேயிருக்கிறது. உயிர்மீது கொள்ளும் பிடிப்பு கற்றறிந்தவர்கள் உட்பட எல்லாரிடத்தும் மேலோங்கி நிற்கிறது."

காரணம், உங்களுடைய கற்றறிந்தவர்களும் உங்களைப் போல் முட்டாள்தனம் உடையவர்களே. கற்றவர் என்பவர் எதையும் கற்றுணர்ந் திருக்கவில்லை. உண்மையில் அவர்கள் பல விஷயங்களை மனப்பாடம் செய்தவர்கள். பெரிய அறிஞர்களும், பண்டிதர்களும் வாழ்க்கையைப் பற்றி தெரிந்து வைத்திருப்பார்கள், ஆனால், வாழத் தெரியாது. அவர்கள் வட்டத்தைச் சுற்றிச் சுற்றி வருவார்களே தவிர மையத்தில் ஊடுருவுவ தில்லை. அவர்கள் உங்களைப் போல் சில சமயம் உங்களை விடவும் பயந்து நடுங்குவார்கள். காரணம் - தங்கள் வாழ்க்கையையே வார்த்தைகளில் வீணடித்து விட்டவர்கள். அவர்கள் வார்த்தைகள் நீர்க்குமிழி மாதிரி. அவர்கள் நிறையவே அறிவைச் சேர்த்துக் கொண்டார்கள். ஆனால் வாழ்க்கையுடன் ஒப்பிடும்போது அறிவு எம்மாத்திரம்?

காதல் இன்னதென்று அறியாமலே காதலைப் பற்றி அநேக விஷயங்களைத் தெரிந்து வைத்திருப்பீர்கள். உங்களுக்குக் காதல் இன்னதென்று தெரிந்திருந்தால் காதலைப் பற்றித் தெரிந்து கொள்கிற அவசியம் இருக்காது. கடவுளைத் தெரியாது உங்களுக்கு. ஆனால் கடவுளைப் பற்றி நிறைய விஷயங்கள் தெரியும் இல்லையா. உண்மையில் கடவுளைத் தெரிந்து கொண்டிருந்தால் கடவுளைப் பற்றிய தகவல்கள் உங்களுக்குத் தேவைப்படாது. அறிவது எல்லாம் அறிவாகி விடாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். அறிதல் ஒரு வட்டத்துக்குள் சுற்றுவது, அது நடுப்பகுதியை ஒரு போதும் தொடுவதில்லை.

பதஞ்சலி சொல்கிறார், 'கற்றறிந்தவர்களும், வேத புராண விற்பன்னர்களும் விவாதிக்கலாம். தங்கள் வாழ்க்கை பூராவும் வாதிட்டுக் கொண்டேயிருக்கலாம். இலட்சம் விஷயங்களைக் காரசாரமாய் பேசித் தீர்க்கலாம். ஆனால் அதே நேரத்தில் வாழ்க்கை அவர்களிடமிருந்து விலகியோடிக் கொண்டிருக்கும். வாழ்வென்னும் கோப்பையை அவர்கள் ருசித்திருக்க மாட்டார்கள். வாழ்க்கை எப்படிப்பட்டதென்று அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் வார்த்தை விளையாட்டுகளில் ஈடுபட்டவர்கள், மொழிபெயர்ச்சி அவர்களது மூச்சு. அவர்களும் அஞ்சுகிறவர்கள் தாம்.

ஆக நினைவில் கொள்ளுங்கள்: வேதங்களும், மத நூல்களும் கை கொடுக்காது. வாழ்க்கையைப் பொறுத்தவரையில் அறிவால் பயனேதும் இல்லை. நீங்கள் பெரிய விஞ்ஞானியாகலாம், அல்லது தத்துவ மேதையாகலாம் அல்லது கணித நிபுணராகலாம். அதனால் நீங்கள் வாழ்க்கையை அறிந்து கொண்டவராகிவிட மாட்டீர்கள். வாழ்க்கையை அறிதல் என்பது முற்றிலும் வேறான பரிமாணம் ஆகும்.

வாழ்க்கையைத் தெரிந்துகொள்வதன் பொருள். அதை வாழ்வது, அச்சமற்றிருப்பது, பாதுகாப்பற்றவற்றில் உட் புகுவது, காரணம், வாழ்க்கையே ஒரு பாதுகாப்பற்ற நடப்புதான். தெரியாதவற்றில் உட் செல்வது ஏனெனில் வாழ்க்கையே ஒவ்வொரு கணத்திலும் நமக்குத் தெரிந்திராததுதான். அது எப்போதும் மாறுவது, புதிதாய் உருவெடுப்பது. முன்பின் தெரியாத இடத்துக்குச் செல்லும் பயணியைப் போல், வாழ்க்கை எங்கே இட்டுச் செல்கிறதோ அதனுடன் செல்லுங்கள், ஊர் சுற்றியாய் இருங்கள்.

எனக்குத் தெரிந்தவரை சந்நியாசம் என்பதற்கு இதுதான் பொருள்: தெரிந்தவற்றையும் தெரிந்தவற்றின் சுக உணர்வுகளையும் விட்டு வெளியே எப்போதும் தயாராயிருங்கள், தெரிந்திராதவற்றுள் தெரிந்திராதவற்றில் பாதுகாப்பின்மை, அசவுகரியம், நலக்குறைவு இருக்கத்தான் செய்யும். தெரியாதவற்றில் இறங்குவது என்றாலே ஆபத்தை இருகை நீட்டி வரவேற்கிற மாதிரி. வாழ்க்கையே அபாயகரமானது. அது துன்பங்களும் ஆபத்துகளும் நிறைந்தது. இது காரணம் பற்றியே மக்கள் தொடர் பற்றிருப்பது. அவர்கள் இருண்ட சிறையில் அதே சமயம் வசதியான சிறை அறைகளில் (cells) வாழ்கிறார்கள்.

அவர்கள் மரணம் வருவதற்கு முன்பாகவே மரித்துப் போனவர்கள்.

நினைவில் கொள்ளுங்கள், நீங்கள் வசதியைத் தெரிவு செய்வதால், பாதுகாப்பைத் தெரிவு செய்வதால், நன்கு பழக்கமானதையே நாடினால்

பிறகு உங்களால் தேர்வு செய்ய முடியாது. வாழ்க்கை என்பது அறிந்திராத நடப்பு. நீங்கள் அதை வாழ முடியும். ஆனால் கையில் வைத்துக் கொள்ளவோ, பற்றி நிற்கவோ முடியாது. அது எங்கே வழி நடத்திச் சென்றாலும் அதனுடன் செல்ல முடியும். காற்றின் போக்கில் செல்லும் வெண்மேகமாயிருங்கள், தான் எங்கே செல்கிறோம் என்பதை மேகம் அறியுமா?

இலக்கில்லாதது வாழ்க்கை. ஒரு குறிப்பிட்ட இலக்கைத் தேடினால் உங்களால் வாழமுடியாது. வாழ்க்கை இலக்கற்றது. அதனால்தான் அது எல்லையற்றதாயிருக்கிறது, அதனால் தான் பயணம் முடிவற்றதா யிருக்கிறது. இல்லையேல் இலக்கை அடைவீர்கள், இலக்கை அடைந்தபின் என்ன செய்வீர்கள்.

வாழ்க்கைக்கு இலக்கில்லை. நீங்கள் ஓர் இலக்கை அடைகிறீர்கள். ஆயிரக்கணக்கான புதிய இலக்குகள் உங்கள் முன்னால் தோன்றுகின்றன. நீங்கள் ஒரு சிகரத்தை அடைந்து இதுதான் கடைசி, 'நாம் ஓய்வெடுப்போம்' என்று நினைக்கிறீர்கள். அப்போது எண்ணற்ற சிகரங்கள் தலை காட்டுகின்றன, இன்னும் உயரமான சிகரங்களும் இருக்கின்றன. எப்போதுமே அப்படித்தான், நீங்கள் ஒரு முடிவுக்கு வர முடியாது. கடவுள் எல்லையற்றவர், வாழ்க்கை முடிவற்றது என்பதே இதன் பொருள். தொடக்கமும் இல்லை, முடிவும் இல்லை. பயத்துடன் உங்களையே நீங்கள் மூடிக்கொண்டு, குகைக்குள் பதுங்கியபடி வாழ்வைப் பற்றுவதால் உங்களுக்குத் துயரந்தான் மிஞ்சும்.

மரணத்தைப் பற்றிய பயம் வாழ்க்கை நெடுகிலும் ஓடிக் கொண்டேயிருக்கிறது. உயிரிடத்து கொள்ளும் பிடிப்பு கற்றறிந்தவர்கள் உட்பட எல்லாரிடத்தும் மேலோங்கி நிற்கிறது.

மரணத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளாமலே பயப்படுகிறீர்கள் உங்களுக்குள் அடியாழத்தில் ஏதோ ஒன்று இருக்கவேண்டும். இதுதான் அந்தப்பொருள். உங்களுடைய நான் என்கிற தன்முனைப்பு (ego) பொய்யானது. அது குறிப்பிட்ட சில பொருள்களின் சேர்க்கை. உண்மையில் அதனுள் முக்கியக் கருத்தாய் எதுவும் இல்லை. மையப்பகுதியும் இல்லை. 'தான்' என்கிற அகந்தையே மரணத்தைக் கண்டு அஞ்சுகிறது. அது, சீட்டுக்கட்டு மாளிகை கட்டி இளங்காற்றில் கலைந்துவிடுமே என்று கலங்குகின்ற குழந்தை போன்றது.

இன்னொரு குழந்தை அந்த வீட்டருகே வந்துவிடுமோ என்று அஞ்சுகிறது. அது தன்னைப் பற்றியும் பயப்படுகிறது, தான் ஏதேனும் செய்து வீடு உடனே விழுந்து விடுமோ என்கிற பயம்.

*'நீங்கள் மணல் வீடு கட்டுகிறீர்கள், எப்போதும் அதைப் பற்றிய பயம் உங்களுக்கிருக்கும்'*

கற்களால் அடித்தளமிட்டிருக்கவில்லை. புயற்காற்று வீசும் போது நீங்கள் நடுங்குகிறீர்கள், உங்கள் வீடும் நடுங்குகிறது. அது எந்தக் கணத்திலும் சரிந்துவிடக் கூடும். அகந்தை சீட்டுக்கட்டு மாளிகை, அதனால் நீங்கள் அஞ்சுகிறீர்கள். நீங்கள் யாரென்பதை உண்மையில் அறிந்தால் அச்சம் மறைந்துவிடும். ஏனெனில் நீங்கள் இப்போது எல்லையற்ற மலைமேல், இறவாத்தன்மை பெற்றவராய் இருக்கிறீர்கள்.

அகந்தை அழியக் கூடியது காரணம். அது முன்பே மரித்துவிட்டது. அதற்கென்று ஒரு தனி வாழ்வு கிடையாது. அது ஒரு கண்ணாடி மாதிரி. உங்களுடைய இருப்புணர்வு நிலையானது. அதனால்தான் கற்றறிந்தோரும் மரணத்தைப் பற்றி அஞ்சுகிறார்கள், காரணம், கற்பதன் மூலம் உங்கள் இருப்புணர்வை நீங்கள் தெரிந்து கொள்ள முடியாது. இருப்புணர்வு கற்றறியப்படுவதல்ல, கல்லாமல் அறிந்து கொள்ளப்படுவது. உங்கள் மனதை முற்றாய் காலி செய்து விடுங்கள். சுயம் பற்றிய உணர்வும் இருக்கக் கூடாது. அந்நிலையில் உங்கள் இருப்பை நீங்கள் முதல் முறையாய் உணர்ந்து கொள்கிறீர்கள். அந்த இருப்புணர்வு நிலையானது. அதற்கு மரணம் என்பது கிடையாது. அத்தகைய இருப்புணர்வு மட்டுமே மரணத்தைத் தழுவ முடியும். உங்களுடைய சிரஞ்சீவித் தன்மையை அதிலிருந்து அறிந்துகொள்ளலாம். அகந்தையே அஞ்ச வைக்கிறது.

> பதஞ்சலி சொல்கிறார் ''ஐந்து துன்பங்கள், கிலேசங்களின் மூலங்களைப் பிரித்து அவற்றின் மூலாதாரத்துக்கே அனுப்புவதன் மூலம் அவற்றை ஒழித்துக் கட்ட முடியும்''.

பிரதி - ப்ரஸவ்: இது மிகவும் முக்கியமான செயல்முறை. விளைவை காரணத்துக்கே திரும்பவும் கொண்டு செல்வது இந்தச் செயல்முறையை சிக்க வைத்தல் (involution) எனலாம்.

ஜானவ் என்ற பெயரை நீங்கள் கேள்விப்பட்டிருக்க வேண்டும், 'ப்ரைமல் தெரஃபி' (மூலாதார சிகிச்சை) யை மறு கண்டுபிடிப்பு செய்தவர் அவர். அது பிரதி ப்ரஸவ் வின் ஒரு பகுதியாகும். பதஞ்சலியின் மிகப் பழைமையான நுட்ப அறிவில் அதுவும் ஒன்று. தம்முடைய ப்ரைமல் தெரஃபி மூலம் மக்களை மீண்டும் அவர்களுடைய குழந்தைப் பருவத் துக்கே திரும்பிச் செல்லும்படி ஜானவ் போதித்தார். ஓர் இடர்ப்பாடு அல்லது பிரச்சினை என்றால் அது எங்கிருந்து தொடங்கியதோ அந்த மூலத்துக்கான நீங்கள் திரும்பிச் செல்வீர்கள். காரணம் பிரச்சினையின் வேர்ப்பகுதியைக்

கண்டுபிடித்தாலன்றி அதற்குத் தீர்வுகாண இயலாது என்பதால்தான். விளைவுகளைக் கொண்டு தீர்வு காண்பதற்கில்லை. அவற்றை வலுக் கட்டாயமாய் காரணத்துக்கே (cause) திரும்பக் கொண்டு செல்ல வேண்டும். ஒரு மரத்தை அகற்ற விரும்பினால் அதன் இலைகளையும், கிளைகளையும் வெட்டி வீழ்த்தினால் போதாது. அவை மீண்டும் துளிர்த்துவிடும். ஓர் இலைக்கு மூன்று இலை துளிர்க்கும். நீங்கள் வேர்ப்பகுதியில் கை வைக்க வேண்டும்.

உதாரணமாய் - பெண்களைக் கண்டாலே பயப்படுகிற ஒருவன் வருகிறான். அவனைப் போன்ற பலர் என்னிடம் வருகிறார்கள். தாங்கள் பெண்களைக் கண்டு அஞ்சுவதாய், மிகவும் அஞ்சுவதாய் சொல்கிறார்கள். அச்சத்தின் காரணமாகவே ஓர் அர்த்தமுள்ள உறவை அவர்களால் ஏற்படுத்திக் கொள்ள முடியவில்லை. அவர்கள் உறவாட முடியாதபடிக்கு அங்கே எப்போதும் பயம் இருந்து கொண்டிருந்தது. நீங்கள் பயத்தில் இருந்தால் உறவு பாழ்பட்டு விடும். நீங்கள் முழுமையாய் இயங்க முடியாது. எப்போதும் பயம் என்றால் உறவு அரை மனதோடுதான் இருக்கும். நாம் புறக்கணிக்கப்படுவோமே என்ற பயம், பெண் நம்மை மறுத்துவிடுவாளோ என்ற பயம். மேலும் பல பயங்கள் உள்ளன.

இந்த மனிதன் 'எமிலி - கூ' செயல்முறையை சோதித்துப் பார்க்கலாம், 'நான் பெண்களைக் கண்டு பயப்படுவது கிடையாது, தினமும் தேறிவருகிறேன்' என்று திரும்பத் திரும்ப அவன் சொல்லி வந்தால், தற்காலிகமாகவேனும் பயத்தை அடக்கி வைக்க முடியும். ஆனால் பயம் இருக்கும், மீண்டும் மீண்டும் வரும்.

மூலாதார சிகிச்சை (primal - therapy) யில் அவன் தொடக்க நிலைக்கு - கடந்த காலத்துக்குத் தூக்கியெறியப்பட வேண்டும். தாயுடன் ஏற்பட்ட அனுபவமே ஒருவனுக்குப் பெண்களிடம் பயம் ஏற்படக் காரணமாயிருக்கும். மனைவி, மகள், அதிகாரத்தில் உள்ள பெண்மணி என்று உங்கள் வாழ்க்கை நெடுகிலும் பல பெண்களுடன் நீங்கள் பழகினாலும் தாயின் உருவமே மனதில் தொடர்ந்திருப்பது. பெண்களுடனான உங்கள் உறவின் கட்டமைப்பு அந்த அடித்தளத்தின் மீதே அமைகிறது. உங்கள் தாயுடனான உறவே அந்த அடித்தளம். ஆக, ஓர் ஆண் பெண்ணைப் பற்றிய பயத்தில் இருந்தால் அவனைத் தொடக்க நிலைக்கே கொண்டு செல்ல வேண்டும். பயம் எங்கிருந்து தொடங்கியது என்பதை மூலாதாரத்தில் இருந்தே கண்டறிய வேண்டும். அது ஒரு சாதாரண மிகச்சிறிய நிகழ்வாயிருக்கலாம், அவன் அதை முற்றாய் மறந்திருக்கலாம். ஆனால் அவன் தொடக்க நிலைக்குச் சென்றால் எங்கே புண்பட்டது என்பதைக் கண்டறிய முடியும்.

எல்லாக் குழந்தைகளையும் போலவே நீங்களும் தாயினால் நேசிக்கப்பட வேண்டும் என்று விரும்பியிருப்பீர்கள். ஆனால் தாய்க்கு அதில் அவ்வளவாய் ஆர்வம் இருந்திருக்காது. அவள் எப்போதும் வேலையில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் பெண்மணி. பல பொது அமைப்புகளில், சங்கங்களில் அவள் கவனம் செலுத்தும்படி இருக்கலாம். தனது உடம்பை ஒரே சீராய் வைத்துக் கொள்ள வேண்டி தாய்ப்பால் கொடுப்பதை அவள் விரும்பியிருக்க மாட்டாள். தனது மார்பகங்கள் குழந்தையால் சிதைக்கப்படாமல் முழுமையாய், எப்போதும் இளமையுடன் இருக்க வேண்டுமென்று அவள் விரும்பியிருப்பாள். அல்லது வேறு பல பிரச்சினைகள் அவளுடைய மனதில் இருந்திருக்கலாம். உங்களை ஒரு குழந்தையாகவே அவள் ஏற்க மறுத்திருக்கலாம், வேண்டாத சுமையாய் நினைத்திருக்கலாம். கருத்தடை மாத்திரை பலனளிக்காத நிலையில் நீங்கள் பிறந்திருக்கலாம். அல்லது, அவள் தன் கணவனை வெறுத்திருந்து அந்தக் கணவனின் முகம் உங்களுக்கிருந்திருக்கலாம். ஆனால் நீங்கள் கடந்த காலத்துக்குத் திரும்பி மீண்டும் குழந்தையாக வேண்டியிருக்கும்.

நினைவில் கொள்ளுங்கள், வாழ்வில் எந்தப் பருவமும் எப்போதைக்குமாய் இழக்கப்படுவதில்லை.

'உங்கள் குழந்தைப் பருவம் இன்னமும் உங்களுக்குள் இருக்கிறது'

குழந்தை இளைஞனாகிறான் என்பதில்லை. குழந்தை உள்ளுக்குள் தங்கி விடுகிறது, இளைஞன் அதன் மீது சுமத்தப்படுகிறான். பிறகு இளைஞனின் மீது முதியவன் என்று அடுக்கடுக்காய் சுமத்தப்படும். குழந்தை ஒரு போதும் இளைஞனாவதில்லை. இளைஞன் என்கிற அடுக்கு அதன் மீது வருகிறது. இளைஞன் ஒருபோதும் முதியவனாவதில்லை. முதுமை இன்னோர் அடுக்கு (layer) நீங்கள் ஒரு வெங்காயத்தைப் போல பல அடுக்குகளைக் கொண்டவர். ஊடுருவிப் பார்த்தால் அத்தனை அடுக்குகளும் அப்படியே இருக்கின்றன முழுமையாய்.

மூலாதார சிகிச்சையில் மக்கள் பின்னோக்கிச் செல்வதற்கு ஜானவ் உதவுகிறார். அவர்கள் மீண்டும் குழந்தைகளாக அவர் உதவுகிறார். அந்தக் குழந்தைகள் உதைத்துக் கொள்கின்றன, அழுகின்றன. ஆனால் அந்த அலறல் நிகழ்காலம் பற்றியதாயிருக்காது. தற்போதைய மனிதனுடையதல்ல அது, பின்னால் மறைந்திருக்கும் குழந்தையினுடையது. அந்த அலறல், மூலாதார அலறல் வரும்போது பல விஷயங்கள் உடனடியாய் மாற்றம் பெறுகின்றன.

'பிரதி ப்ரஸவ்'வின் செயல்முறையில் இது ஒரு பகுதியாயிருக்கும். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒவ்வொரு விளைவும் காரணத்துக்கு எடுத்துச் செல்லப்பட வேண்டும் என்கிற அமைவை பதஞ்சலி. போதித்தது

பற்றி ஜானவ் அறியாமல் இருந்திருக்கலாம். காரணம் மட்டுமே தீர்மானிக்கக் கூடியது. நீங்கள் வேர்களைத் துண்டிக்க முடியும். அதன் பிறகே மரம் விழ்ந்து மடியும். ஆனால், கிளைகளை வெட்டிவிட்டு மரம் வீழ்த்தப்பட்டதாய் நீங்கள் நம்பமுடியாது. அது மேலும் செழித்து வளரும்.

'பிரதி – ப்ரஸவ்' ஓர் அழகான வார்த்தை. 'ப்ரஸவ்' என்றால் பிறப்பது. ஒரு குழந்தை பிறப்பது பிரசவம். நீங்கள் நினைவில் மீண்டும் பிறப்பது ப்ரதி ப்ரஸவ் ஆகும். நீங்கள் பிரசவிக்கப்பட்ட காலத்துக்கே திரும்பிச் செல் கிறீர்கள். பிறந்ததை பிறக்கும் போது பட்ட அவதியை நீங்கள் மீண்டும் வாழ்ந்து பார்க்கிறீர்கள். நீங்கள் அதை ஞாபகத்தில் கொண்டு வரவில்லை, அதை வாழ்ந்து பார்க்கிறீர்கள் என்பதை நினைவில் வையுங்கள்.

நினைவு படுத்திக் கொள்வதென்பது முற்றிலும் வேறானது. நீங்கள் அமைதியாய் இருந்து நினைவுகொள்ள முடியுமென்றாலும் அதே ஆளாகத்தான் இருப்பீர்கள்.

நீங்கள் குழந்தையாக இருந்தபோது உங்கள் தாய் பலமாக அடித்தாள். அதனால் காயம் ஏற்பட்டது. அது நினைத்துப் பார்க்கிறபோது உங்களுக்குத் தெரியவரும். ஆனால் அது வெறும் நினைவு கூர்தல் (remembrance) மட்டுமே. யாரோ ஒருவருக்கு நடந்த சம்பவம் போல் அதை நினைவு படுத்திக் கொள்கிறீர்கள். அதை மறுபடியும் வாழ்வதென்பது நீங்கள் மீண்டும் குழந்தையாவதுதான். மீண்டும் குழந்தையாகி வாழ்ந்து பார்க்கிறீர்கள். தாய் உங்களை அடிப்பது நினைவில் அல்ல. அவர் உங்களை இப்போது மீண்டும் அடிக்கிறார். அந்தக் காயம், கோபம், பகையுணர்வு, நீங்கள் முதுகைக் கூனிக் கொள்வது, மறுத்தல், உங்களுடைய எதிர்வினை என்று ஒட்டுமொத்தச் செயலும் திரும்ப நடக்கிறது. இதுதான் பிரதி – ப்ரஸவ்.

இது மூலாதார சிகிச்சை மட்டுமல்ல, ஆராய்ச்சி முறை (methodology) என்கிற வகையில் உண்மையைத் தேடுகிற, நிறைவான வாழ்க்கையை நாடுகிற ஒவ்வொருவருக்கும் பொருந்தும்.

அவித்யை (விழிப்புணர்வின்மை) அஸ்மிதா (தான் என்கிற உணர்வு) ராக் (பற்றுதல்), த்வைஸ் (வெறுப்பூட்டும் செயல்புரிதல்), அபிநிவேஷ் (வாழ்விற்கான இச்சை) இவ்வைந்தும் துன்பங்கள்.

> **ஐவகைத் துன்பங்களின் மூலாதாரங்களை, கிலேசங்களை அவற்றின் மூலத்துக்குத் திருப்பி அனுப்புவதன் மூலம் ஒழித்துக்கட்ட முடியும்.**

ஐந்தில் கடைசியானது அபிநிவேஷ். வாழ்விற்கான இச்சை முதலாவது விழிப்புணர்வின்மை. கடைசியில் உள்ளதை முதலில்

தீர்மானிக்க வேண்டும். இப்போது பின்னோக்கிச் செல்லுங்கள். உங்களிடம் வாழ்வின் மீது இச்சையிருக்கிறது, வாழ்வைப் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். ஏன்? பதஞ்சலி சொல்கிறார், பின்னோக்கிச் செல்லுங்கள் என்று. நீங்கள் ஏன் வாழ்வைப் பற்றியிருப்பது? காரணம் நீங்கள் துயர்ப்படுகிறீர்கள். அந்தத் துன்பம், துயரம் எல்லாம் உங்களுடைய வெறுப்பூட்டும் செயல்களால் தோற்றுவிக்கப்பட்டவை. வன்முறை, பொறாமை, கோபம் இவை வெறுப்பூட்டக் கூடியவை. உங்களைச் சுற்றி இத்தகைய முரண்பாடுகளை வைத்தக் கொண்டு எப்படி வாழ்வீர்கள்?

இத்தகைய எதிர்மறையான விஷயங்களை வைத்துக்கொண்டு நீங்கள் எங்கு பார்த்தாலும் வாழ்க்கை வாழத் தகுதியற்றதாகவே தெரியும். நீங்கள் இந்த எதிர்மறைத் தன்மையுடன் எங்கு நோக்கினும் ஒவ்வொன்றும் இருண்டதாய், மங்கியதாய், நரகமாகவே தெரியும். வாழ்வதற்கான இச்சை பின்னோக்கிச் செல்வதன் மூலம் (கடந்த காலத்தில் தொடங்கி) தீர்மானிக்கப்பட வேண்டியது, அப்போது த்வைஸைக் கண்டு கொள்வீர்கள். வாழ்விற்கான பற்றுடன் கீழ்நோக்கிச் சென்றாலும், பின்னோக்கிச் சென்றாலும் அதன் பின்னால் வெறுப்பூட்டக் கூடியவற்றின் அடுக்கை நீங்கள் காண்பீர்கள். அதனால்தான் உங்களால் வாழ முடியவில்லை. அனைத்துச் சமூகங்களும், கலாச் சாரங்களும் பல வெறுப்பூட்டும் செயல்களை வலுக்கட்டாயமாய் உங்கள் மீது திணிக்கின்றன.

இந்துமத இதிகாசங்களும், மறை நூல்களும் என்ன சொல்கின்றன? நீங்கள் ஒரு பெண்ணின் மீது காதல் கொண்டால் முதலில் அவள் எப்படியானவள் என்று பார்க்க வேண்டுமாம். பெண் எப்படியானவள்? எலும்பு, சதை, இரத்தம், சளி என்று அருவருக்கத்தக்கவற்றின் கூட்டமைப்பு. அந்தப் பெண்ணுக்குள் என்ன இருக்கிறது. அழகு என்பது அவளுடைய சரும அளவில் மட்டுமே. அந்தச் சருமத்தினடியில் இருப்பது எல்லாம் வெறுப்பூட்டக் கூடியவை.

நீங்கள் அத்தகையவர்களால் போதிக்கப்பட்டிருந்தால். உங்களால் பெண்ணைக் காதலிக்க முடியாது காரணம் அருவருப்பு வந்துவிடும். அருவருப்பு எழும் போது அங்கே காதல் எப்படி தலையெடுக்கும். வாழ்வின் மூலதாரங்களையே நஞ்சாக்கி விடுவார்கள். இந்த ஒவ்வாத மனிதர்கள் காதல் இல்லாமல் நீங்கள் எப்படி மகிழ்ச்சியாயிருப்பீர்கள்? நீங்கள் துன்புற்றிருப்பீர்கள்.துன்புற்ற நிலையில் துயரத்தில் வாழ்க்கையை இறுகப்பற்றிக் கொண்டு விடுவீர்கள்.

ஆக பதஞ்சலி கூறுகிறார்: வாழ்வைப் பற்றுதல் புற அடுக்காகும். மிக ஆழமாய் செல்லுங்கள். அடியில் வெறுக்கத்தக்க அடுக்காய் த்வைஸ்

இருக்கிறது' என்று. ஆனால் நீங்கள் ஏன் வெறுப்படைய வேண்டும்? இன்னும் ஆழத்திற்குச் சென்றால் அன்பின் இணைப்பைக் காண்பீர்கள். ஒரு பொருள் உங்களைக் கவர்ந்துவிடுகிறபோது அதன்பால் ஈர்க்கப்படுவீர்கள். ஈர்க்கப்பட்டால் நீங்கள் அதை வெறுத்தொதுக்கும் நிலையும் ஏற்படுகிறது.

நீங்கள் ஈர்க்கப்படாவிட்டால் உங்களால் வெறுக்க முடியாது. ஈர்ப்பு தான் வெறுப்பைத் தோற்றுவிக்கிறது, வெறுப்பு என்பது ஈர்ப்பின் இன்னொரு முனை. இன்னும் ஆழத்துக்குச் சென்றால் அஸ்மிதா என்கிற மற்றோர் அடுக்கைக் காண்பீர்கள். 'நான்' என்கிற உணர்வு - அகந்தை. இந்த 'நான்' ஈர்ப்பிலும், வெறுப்பிலும் வருவது. ஈர்ப்பும் வெறுப்பும் வீழ்ந்து விட்டால் 'நான்' என்பது நிற்க முடியாது. அவற்றுடன் அதுவும் வீழ்ந்துவிடும்.

நீங்களும் உங்களுடைய அகந்தையும் உங்களது நல்லதும் கெட்டதுமான எண்ணங்களால் இருக்கிறீர்கள். காதல் வெறுப்பு எது அழகானது, எது அருவருப்பானது போன்ற எண்ணங்கள், கருத்துகள். இருமைத்தன்மை (duality) அகந்தையைத் தோற்றுவிக்கிறது. ஈர்ப்பு வெறுப்பு இரண்டுக்கும் பின்னால் அகந்தையை நீங்கள் காண்பீர்கள். இந்த அகந்தை எதனால் தொடர்ந்து இருக்கிறது? பதஞ்சலி சொல்கிறார். ''இன்னும் ஆழத்துக்குச் சொல்லுங்கள், விழிப்புணர்வின்மையைக் காண்பீர்கள். வாழ்வின் ஒட்டு மொத்த துன்பங்களுக்கும் மூல காரணம் விழிப்புணர் வின்மை தான்' என்று. இதுதான் எல்லாவற்றுக்கும் காரணம், முதன்மையான காரணம். நீங்கள் அதனை அபிநிவேஷில் காணமுடியாது. வாழ்விற்கான இச்சை ஒரு பழம் மாதிரி, பூ மாதிரி, இறுதி நடப்பு. உண்மையில் அது காரணமாய் இல்லை. இன்னும் பின்னே செல்லுங்கள்.

**ஐவகைத் துன்பங்களின் மூலாதாரங்களை அவற்றின் மூலத்துக்கே திரும்பச் செலுத்தி அழித்துவிடலாம்.**

காரணத்தை (cause) நீங்கள் அறிந்து கொண்டுவிட்டால் எல்லா வற்றுக்கும் தீர்வு கிடைத்துவிடும். இதுதான் காரணம். விழிப்புணர்வின்மை. என்ன செய்யலாம்? உங்களுடைய பற்றுந் தன்மையுடன் போரிட வேண்டாம். உங்களுடைய பிணைப்புடனும் (attachments) வெறுப் பூட்டுகிறவற்றுடனும் போரிட வேண்டாம், அகந்தையுடனும் போரிட வேண்டியதில்லை. உணர்வு மேலிட்டவராய் இருங்கள். எச்சரிக்கை யோடும், கவனத்தோடும், சிந்தனையோடும் இருங்கள். உங்களுடைய எச்சரிக்கை உணர்வு எல்லாவற்றையும் முடிவுக்குக் கொண்டு வந்துவிடும். காரணம் இல்லையென்றாகிறபோது விளைவுகளும் இல்லாமல் போய் விடும்.

சாதாரணமாய் ஒழுக்கமுறைமை (*morality*) மேலெழுந்த வாரியான மாற்றங்களையே உங்களுக்குப் போதிக்கும்.

பெயரளவில் தங்களாயிருப்பவை எல்லாம் விளைவுகளுடன் எப்படிப் போரிடலாம் என்பதையே சொல்லித்தரும். பதஞ்சலி மதங்களின் அறிவியலை உங்களுக்குத் துல்லியமாய் பெரிய அளவில் வழங்குகிறார். மூலாதார காரணத்துக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட முடியும். நீங்கள் அதிக விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். வாழ்க்கையை எச்சரிக்கையோடு வாழுங்கள். இதுதான் மொத்தச் செய்தியும். ஆழ்துயிலில் உள்ள குடிகாரனைப் போல் தூங்கி விழுகிறவனைப் போல் வாழாதீர்கள். உங்கள் செயல்கள் எதுவாயினும் அவற்றைப் பிரக்ஞையுடன் செய்யுங்கள். திடீரென்று பலதும் மறையக் காண்பீர்கள்.

நாகார்ஜுனர் என்கிற மறை ஞானியிடம் ஒரு திருடன் வந்தான். 'ஐயா, நான் சொல்வதைத் தயவு செய்து கேளுங்கள். பல குருமார்களிடம் சென்று எனக்குப் போதிக்கும் படி வேண்டினேன். நான் ஒரு பெரிய திருடன் என்பதால் என்னை அவர்கள் அறிவார்கள், உண்மையில் இந்த நாட்டிலுள்ள திருடர்களில் நான் முதன்மையானவன், திருடர்களின் தலைவன். எனவே, எல்லாரும் என்னை நன்கறிவர். அவர்களிடம் நான் சென்றதும், அவர்கள் 'முதலில் நீ திருடுகிற வேலையை விட வேண்டும். உன்னுடைய வாழ்க்கை முறை மாறினால் ஏதாவது நிகழக் கூடும்' என்றனர். ஆனால் அது என்னால் முடியாத காரியம். அத்துடன் அந்த முயற்சி நின்று போயிற்று. இப்போது தங்களிடம் வந்துள்ளேன். தாங்கள் என்ன சொல்கிறீர்கள்?' என்று கேட்டேன்.

நாகார்ஜுனர் சொன்னார், ''அப்படியானால் நீ குருமார்களிடம் சென்றிருக்கமாட்டாய், திருடர்களிடம் சென்றிருப்பாய். நீ திருடினாலும் திருடாவிட்டாலும் அதைப்பற்றி ஏன் ஒரு குருவானவர் கவலைப்பட வேண்டும்? நான் அதைப்பற்றி அக்கறை கொள்ளமாட்டேன். நீ ஒரு காரியம் செய். தொடர்ந்து திருடிக் கொண்டிரு, ஆனால் மக்களிடம் பொருளை அபகரிக்கிறபோது அதை விழிப்புணர்வுடன் செய்'' என்று. திருடன் சொன்னான் 'இது என்னால் முடிகிற காரியந்தான்' என்று. ஆனால் அவன் பிடிபட்டான், பொறியில் சிக்கினான்.

இரண்டு வாரங்கள் சென்றபின் அவன் மீண்டும் நாகார்ஜுனரிடம் வந்தான். 'நீர் ஒரு மோசக்காரன், என்னைத் தந்திரமாய் ஏமாற்றிவிட்டீர். நேற்றிரவு முதல் தடவையாய் அரசனுடைய மாளிகைக்குள் நுழைந்தேன்.

ஆனால் உம் பொருட்டு மிகவும் கவனமாய் செயல்பட்டேன். அங்குள்ள கருவூலத்தைத் திறந்தேன். ஆயிரக்கணக்கான வைரங்கள்

இருந்தன, ஆனால் உம்மால்தான் நான் அரண்மனையில் இருந்து வெறுங்கையுடன் வெளியேறும்படி ஆயிற்று' என்றான். அவனிடம் 'என்ன நடந்தது, சொல்' என்று கேட்டார் நாகார்ஜுனர். திருடன் சொன்னான் 'நான் மிகவும் விழிப்புடன் இருந்ததால் வைரங்களை எடுக்க முயன்றபோது என் கையை அசைக்க முடியவில்லை. கை அசையும்போது என்னால் முழுக் கவனத்துடன் இருக்க முடியாதல்லவா. நான் இரண்டு மூன்று மணிநேரம் முயன்றேன். நான் வைரத்தை எடுக்கிற போதெல்லாம் என்னுடைய விழிப்புணர்வு சிதறிவிடும் போலிருந்தது. நான் அவற்றைத் திரும்ப வைத்துவிட்டேன். நான் விழிப்பாய் இருந்தபோதெல்லாம் என்கை அசையவில்லை' என்று. நாகார்ஜுனர் சொன்னார், 'அதுதான் முழுமையான பொருள். நீ முக்கியப் பகுதியை அறிந்து கொண்டுவிட்டாய்'.

நீங்கள் கவனத்தோடு இல்லையென்றால் கோபப்படும்படி ஆகும், வன்முறையில் இறங்குவீர்கள், உங்களிடம் உமைமைத்தனம் வந்துவிடும், பொறாமைக்காரராகி விடுவீர்கள். இவை வேர்கள் அல்ல, முக்கியக் கிளையில் இருந்து பிரியும் சிறிய கிளைகள்.

நீங்கள் கவனத்துடன் இருந்தால் உங்களால் கோபப்படவோ பொறாமைப்படவோ முடியாது, வலுச் சண்டைக்குப் போக மாட்டீர்கள், பேராசை தோன்றியிருக்காது. இது சாதாரண ஒழுக்க முறைமை. பெரிதாய் ஒன்றும் உதவி விடாது. அதிக பட்சம் உங்கள் வெளிப்பாடுகளை ஓரளவு அமுக்கி வைக்கும். பேராசை, கோபம் அப்படியே இருக்கும், ஆனால், ஓரளவு சமூகம் சார்ந்த ஒழுக்கம் உடையவராயிருப்பீர்கள். சமூகத்தில் உராய்வின்றி இயங்க ஒரு மசகெண்ணெயாய் (lubricant) அது செயல்படும். அதைவிட பெரிதாய் எதுவும் நடந்துவிடாது.

பதஞ்சலி சாதாரண ஒழுக்கமுறைமை பற்றிப் போதிக்கவில்லை. அவர் அனைத்து மதங்களுக்கும் மூலாதாரமான, மதங்களின் அடிப்படை விஞ்ஞானத்தைப் போதித்தார். அவர் சொல்கிறார் 'ஒவ்வொரு விளைவையும் காரணத்துக்குக் கொண்டு வாருங்கள்' என்று. காரணம் என்கிற வினைமுதல் (cause) எப்போதுமே கவனமின்றி, உணர்வின்றி, அறியாமையுடன் இருக்கும். நீங்கள் உணர்வோடு இருந்தால் எல்லாமும் மறைந்துவிடும்.

> **'ஐவகைத் துன்பங்களின் புறத் தோற்றங்கள் தியானத்தில் மறைந்துவிடும்.'**

நீங்கள் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. இன்னும் அதிகமாய் தியானம் செய்யுங்கள், அதிக உணர்வுடையவராகி விடுங்கள்.

முதலில் புறத்தோற்றங்கள் - கோபம், பொறாமை, பகைமை, வெறுப்பு, ஈர்ப்பு இவை மறைந்தவிடும். முதலில் புறத்தோற்றங்கள் மறைய, விதைகள் உங்களோடு தங்கிவிடும். ஆதலால் அதையும் அகற்ற ஒருவன் அடியாழத்துக்குச் செல்ல வேண்டும். நீங்கள் கோபப்படும் நிலையில்தான் உங்களுக்குள் கோபம் இருப்பதாய் நினைத்துக் கொள்கிறீர்கள். உண்மையில் நீங்கள் கோபம் கொள்ளாமல் இருக்கும் போதும் உங்களுக்குள் கோப ஓட்டம் தொடர்ந்து இருக்கவே செய்யும். இல்லையேல், உங்களுக்கு மறுபடியும் கோபம் ஏற்படும்போது அது எங்கிருந்து வருகிறது? சிறிது நேரம் முன்பு நீங்கள் மகிழ்ச்சியோடிருந்தீர்கள். புன்னகைத்தபடி இருந்தீர்கள். திடுதிப்பென்று உங்கள் முகம்மாறுகிறது. கொலை செய்யப் போகிறவனைப் போல் ஆகிவிடுகிறீர்கள். இது உங்களுக்கு எங்கிருந்து வந்தது? அது அங்கேயே இருந்திருக்க வேண்டும். நீறு பூத்த நெருப்பு என்பார்களே அப்படி, உள்ளாத அது ஓடிக் கொண்டிருக்கும். எப்போது தேவைப்படுகிறதோ அப்போது கோபம் திடீரென கொழுந்து விட்டெரியும்.

முதலாவது, தியானம் உங்களுக்கு உதவி புரியும். புறத் தோற்றங்கள் மறையும். அத்தோடு திருப்தியடைந்து விடாதீர்கள். காரணம் அடிப் படையில் அந்த உள்ளார்ந்த எண்ணப்போக்கு அப்படியே இருக்கும். பிறகு எந்த நேரத்திலும் வெளிப்படும் சாத்தியம் இருக்கிறது. சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் அந்த வெளிப்பாடு மீண்டும் வரும். அதனால் புறத்தோற்றம் மறைந்ததில் திருப்தி அடைந்து விடாதீர்கள், விதைகள் எரிக்கப்படவேண்டும். தியானத்தின் முதல் பகுதி புறத்தோற்றங்களை உள்ளார்ந்த போக்கிற்கு (current) க் கொண்டு வர உதவும், வெளியில் நீங்கள் அமைதியதாய் தெரிந்தாலும் உள்ளுக்குள் செயல்கள் தொடரும். அப்போது தியானத்தை இன்னும் தீவிரப்படுத்த வேண்டும்.

அதுதான் பதஞ்சலியின் சமாதிநிலைக்கும் தியானத்திற்கும் உள்ள வேறுபாடு. தியானம் முதல் நிலை, தியானத்தில் புறத் தோற்றங்கள் மறையும். சமாதி இறுதிநிலை. தியானத்தின் உச்ச நிலையில் விதைகள் எரிக்கப்படுகின்றன.

நீங்கள் இருப்புணர்வின் (being) துல்லியமான ஆதாரத்தைச் சென்றடைகிறீர்கள். பிறகு நீங்கள் எதையும் பற்றுவதில்லை. பின்பு மரணத்தைப் பற்றிய அச்சம் உங்களுக்கில்லை. பிறகு நீங்கள் இல்லை, இனியும் இருப்பதில்லை. பின்பு கடவுள் உங்களில் உறைகிறார். நீங்கள் 'அகம் ப்ரும்மாஸ்மி' என்று சொல்ல முடிகிறது'. நான் இறைத் தன்மையோடு இருக்கிறேன். அதுவே பிரபஞ்ச இருப்பின் அடிப்படை.

○

# 6. வாழ்வைத் தேர்வு செய்பவனின் ஒருவழிப் பாதை

முதல் கேள்வி:

பதஞ்சலி சொல்கிறார், வாழ்வைப் பற்றிக் கொள்ளாதீர்கள் என்று. இது புரிந்து கொள்ளவும், பின்பற்றவும் எளிதா யிருக்கிறது. ஆனால், அவர் வாழ்வின் மீது இச்சை வைக் காதே என்றும் சொல்கிறார். இயற்கை நமக்கு வழங்கும் உணவு, அன்பு, அழகு, பாலுறவு போன்றவற்றை நாம் இப்போதே அனுபவிக்க வேண்டாமா? அப்படியானால் இது வாழ்வின் மீது வைக்கும் இச்சையாகிவிடாதா?

பதஞ்சலி சொல்கிறார், ''வாழ்விற்கான இச்சை ஒரு தடுப்புச் சவர், வாழ்வை அனுபவிப்பதற்குத் தடை, உண்மையில் இருப்புணர்விற்கே அது ஒரு தடையாகும்'' என்று. காரணம், இச்சை என்பது எப்போதுமே எதிர்காலத்தைப் பற்றியதாயிருக்கும். அது ஒரு போதும் நிகழ்காலத்துக் குரியதல்ல. அவர் அனுபவித்து மகிழ்வதற்கு எதிரானவரல்லர். ஏதேனும் ஒன்றை அனுபவித்துக் கொண்டிருக்கும் தருணத்தில் அதில் இச்சை இருக்காது. இச்சை என்பது எதிர்காலம் பற்றிய ஆசையில் இருப்பது, இதனைப் புரிந்துகொள்ள வேண்டும்.

நிகழ்காலத்தில் தங்கள் வாழ்க்கையை அனுபவிக்காதவர்கள் தாம் எதிர்கால வாழ்வில் இச்சை வைப்பது. வாழ்வின் மீதான இச்சை எப்போதுமே எதிர்காலத்தில் இருக்கிறது. அது தள்ளிப் போடுகிற நிலை. 'இன்று நம்மால் அனுபவிக்க முடியாது, இன்னொரு நாள் பார்த்துக் கொள்வோம்' என்று அவர்கள் சொல்லிக் கொள்கிறார்கள். 'இந்தக் கணத்தில் நம்மால் கொண்டாட முடியாது, இன்னொரு நாளில் நாம் கொண்டாடு வோம்' என்கிறார்கள்.

எதிர்காலம் உங்கள் துயரங்களில் இருந்தே வருகிறது, கொண்டாட்டங்களில் இருந்தல்ல. உண்மையிலேயே கொண்டாடிக் கொண்டிருப்பவர்களுக்கு வருங்காலம் சார்ந்ததாய் எதுவும் இல்லை. அவன் முழுமையாய், இக்கணத்தில் வாழ்கிறான்.

'ஒட்டு மொத்த வாழ்தலில் இருந்தே உதயமாகிறது அடுத்த கணம்'

அது இச்சையில் இருந்து எழுவதல்ல. உண்மையில் கொண் டாட்டத்தில் இருந்து அடுத்தகணம் எழுமெனில் அது உங்களை மகிழ்ச்சியடையச் செய்யும் திறன் பெற்றிருக்கும். அது மேலும் மேலும் வளமுடையதாய் இருக்கும்.

ஒரு கணம் அதன் முழுமைத் தன்மையோடு வருகிறது, முழுமையில் காலம் மறைகிறது.

காலம் என்பது துன்புறும் மனதுக்கு அவசியப்படுவது. காலம் துன்பத்தின் படைப்பு. நீங்கள் மகிழ்ச்சியாயிருக்கும் போது நேரம் என்பதே தெரியாது. அது மறைந்துவிடும்.

அதை இன்னொரு பரிமாணத்தில் இருந்து கவனியுங்கள். நீங்கள் துயர்பட்டிருக்கும் நிலையில் கவனித்திருக்கிறீர்களோ, காலம் எத்தனை மெதுவாய்ச் செல்கிறது என்பதை. யாரை நீங்கள் நேசிக்கிறீர்களோ, யார் உயிரோடிருப்பதை நீங்கள் விரும்புவீர்களோ அவர் இறந்து கொண் டிருக்கிறார், நீங்கள் அருகில் இருக்கிறீர்கள். அவருடைய படுக்கையருகில் இரவு முழுதும் நீங்கள் அமர்ந்திருக்கிறீர்கள், அந்த இரவு அப்படியே நிலை கொண்டுவிட்டது போல் தெரிகிறது. அது முடிவற்ற இரவாய் தொடர்கிறது. சுவர்க் கடிகாரம் அநியாயத்துக்கு மெதுவாய் நகர்கிறது. துயரமான நேரத்தில் காலம் மெதுவாக நகர்கிறது. நீ மகிழ்ச்சியாக இருக்கும்போது - உன் நண்பனுடன், உன் அன்புக்குரியவருடன், நீ விரும்பும் சமயத்தில் காலம் வேகமாக போகிறது. முழு இரவும் ஒரு சில கணங்களுக்குள் ஒரு சில நிமிடத்திற்குள் கடந்து விட்டதாக தெரிகிறது.

ஏன் இப்படி ஆகிறது? காரணம் சுவரிலுள்ள கடிகாரம் தன் பாட்டுக்கு ஓடிக் கொண்டிருக்கிறது. அது நீங்கள் மகிழ்ச்சியாயிருக்கிறீர்களா, மகிழ்ச்சியற்றவராய் இருக்கிறீர்களா என்றெல் லாம் கவலைப்படுவதில்லை. அது உங்கள் மனநிலைக்கேற்ப வேகமாகவோ, மெதுவாகவோ ஓடு வதில்லை. அது ஒரே இடைவெளிகளைத் தான் கொண்டிருக்கிறது, உங்களுடைய விளங்கிக்கொள்ளும் நிலைதான் வேறுபடுகிறது.

காலம் துன்பகாலங்களில் பெரிதாயும், மகிழ்ச்சியில் சிறிதாயும் ஆகிவிடுகிறது. ஒருவர் பேரின்ப நிலையில் இருக்கும் போது காலம் எளிதாய் மறைந்துவிடுகிறது.

'நீங்க நரகத்தில் தூக்கியெறியப்பட்டதும் அந்த நரகமே நிலை யானதாய், முடிவற்றதாய் இருக்கும்' என்று கிறிஸ்துவம் சொல்கிறது. 'நான் ஏன் ஒரு கிறிஸ்துவனாக இல்லை?' என்றொரு நூலை பெட்ராண்ட் ரஸ்ஸல் எழுதினார். அதில் பல காரணங்களை அவர் தந்திருக்கிறார். அவற்றுள் ஒன்று 'நான் செய்த பாவங்கள் எதுவாயினும் ஒரு நிரந்தரமான தண்டனையை நியாயமானதென்று எண்ணிக் கொள்வது சாத்தியமில்லை. நான் பல பாவங்களைப் புரிந்திருக்கலாம். என்னை ஐம்பது நூறு ஆண்டுகளுக்கு, ஐம்பது நூறு ஏன் ஆயிரம் பிறவிகளுக்கும் நரகத்தில் தள்ளலாம். ஆனால் நிரந்தர தண்டனை நியாயமிருக்காது.

மனிதனுக்கு ஒரேயொரு வாழ்க்கை மட்டுமே இருப்பதாய் கிறிஸ்துவம் நம்புகிறது. ஒரு மனிதன் அறுபது எழுபது வருட வாழ்க்கையில் எப்படி எண்ணற்ற பாவங்களைச் செய்ய முடியும்? அவனுக்கு நிரந்தரமாய் ஒரு தண்டனையை வழங்குவதென்பதும் அபத்தம். ரஸ்ஸல் கூறுகிறார், "நான் எத்தனையோ பாவங்களைச் செய்திருந்தாலும், இன்னும் பலவற்றைச் செய்ய நினைத்திருந்து செய்யாமல் இருந்துவிட்டாலும், நான் என்னுடைய

பாவங்களை செய்தது செய்யாதது, கற்பனை கனவு நிலைகளில் இருந்தவை என்று அத்தனையையும் ஒப்புக்கொண்டு விட்டால் கூட ஒரு நீதிபதி ஐந்து ஆண்டுகளுக்குமேல் எனக்குச் சிறை தண்டனை அளிக்க முடியாது"

அவர் சரியாய்ச் சொன்னார், ஆனால் முக்கியக் கருத்தைத் தவறவிட்டுவிட்டார். கிறிஸ்தவ இறைமையியலாளர்களால் பதிலளிக்க முடியவில்லை. நரகம் நிலைபேறுடையதாயிருக்க (eternal) க் காரணம் அது நிலையானது என்பதால் அல்ல. காலத்தால் நகர முடியாத அளவுக்கு அது பெருந்துன்பமாயிருப்பதே காரணம். பேரின்பத்தில் காலம் பறந்துவிடுகிறது, பெருந் துன்பத்திலோ அது மெள்ள நகர்கிறது. குறைந்த பட்ச அசைவும் இல்லாததுபோல் தெரியும். நரகத்தில் ஒற்றைக் கணமும் நிரந்தரமானது தான். அது உங்களுக்கு முடியாததாய், முடிவேயில்லாததாய் தெரியும்.

நரகத்தின் நிலைபேற்றுக் கொள்கை அருமையானது, உளவியல் சார்ந்தது, காலம் மனத்தைச் சார்ந்திருப்பதை அது மனம் சார்ந்த நடப்பென்பதை வெகு எளிதாய் காட்டுவது. நீங்கள் துயரத்தில் இருந்தால் நேரம் இருக்கிறது, மகிழ்ந்திருக்கும் போது நேரமேயில்லை. வாழ்வின் மீதான இச்சை என்பது நேரத்தின் மீதான இச்சை எனலாம்.

நீங்கள் இதுவரை பெற்றதெல்லாம் போதாது என்பதையே அது காட்டுகிறது. அவற்றுடன் நீங்கள் நிறைவுற்றுவிடவில்லை. 'எனக்கு இன்னும் நேரம் கொடு, நான் திருப்தியடைய வேண்டும். எனக்கு மேலும் வாழ்க்கை, மேலும் எதிர்காலம், செயல்படுவதற்குக் கூடுதலாய் இடம் தேவை. காரணம் என்னுடைய விருப்பங்கள் இன்னமும் நிறைவு செய்யப்படாமலே இருக்கின்றன.'

வாழ்வின் மீது இச்சை கொண்ட மனிதனின் பிரார்த்தனை இப்படித் தானிருக்கும் - 'பிரபுவே, எனக்கு மேலும் கால அவகாசத்தைத் தாரும், என்னுடைய ஆசைகளும் விருப்பங்களும் அப்படியே இருக்கின்றன. எதுவும் பூர்த்தியாகவில்லை, நான் நிறைவு காணவில்லை. நான் திருப்தியடையாத நிலையில் காலமோ ஓடிக கொண்டிருக்கிறது வேக வேகமாய். எனக்கு இன்னும் அவகாசம் தாரும்? இதுவே வாழ்விற்கான இச்சைக்குப் பொருள். அதிக நேர இச்சை.

வாழ்க்கைப் பற்றிய உங்கள் கருத்து என்ன? எதிர்காலத்தில் அதிக நேரம் வேண்டுமென்பது வாழ்க்கை. மரணத்தைப் பற்றி நீங்கள் கருதிக்கொள்வது என்ன? மரணம் என்பது எதிர்காலமற்றது. மரணம் இப்போதே வருமெனில் எதிர்காலம் அவ்வளவுதான், கால அவகாசமும் அவ்வளவுதான். அதனால்தான் நீங்கள் மரணத்தை எண்ணி நடுங்குகிறீர்கள் காரணம் அது உங்களுக்கு ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள அவகாசம்

அளிப்பதில்லை. பதஞ்சலி வாழ்க்கைக்கு எதிரானவர் அல்லர், உண்மையில் அவர் வாழ்க்கைக்கு எதிரானவர் அல்லர் என்பதாலேயே வாழ்விற்கான இச்சைக்கு எதிரானவராயிருக்கிறார். நீங்கள்

'வாழ்க்கையை முழுமையாய் வாழ்வதாயின், அதன் அடி யாழத்துக்கும் சென்று அனுபவித்து விடுங்கள்'

அப்படி நிகழ்வதற்கு இடமளியுங்கள், பிறகு வாழ்விற்கான இச்சையே இருக்காது.

நுட்ப உணர்வு உடையவராய், உயிரோட்டமுள்ளவராய், தெரி நிலையோடு (aware) இருங்கள். அப்படி இருந்தால் கூடுதல் அவகாசத்துக்கு ஆசைப்பட மாட்டீர்கள். உண்மையில் வாழ்க்கையில் தெவிட்டு நிலை (நிறைவு) பெற்ற ஒரு மனிதனுக்கு மரணத்தில் வாழ்க்கை முடிந்து விடுவதில்லை, அவனைப் பொறுத்தவரை அது ஓர் ஓய்வு, மிகப்பெரிய ஓய்வு. அவன் அதைக் கண்டு அஞ்சுவதில்லை, மாறாக அதை வரவேற்கவே செய்வான். ஒரு முழுமையான வளமான வாழ்க்கை வாழப்பட்டது.

பிறகு

இரவில் வருகிறது மரணம் இரவைப் போலவே

நாள் முழுதும் உழைத்துவிட்டு இப்போது ஓய்வெடுப்பதற்காய் படுக்கையைத் தயார் செய்கிறீர்கள்.

இரவைக் கண்டு அஞ்சுகிறவர்கள் இருக்கிறார்கள். நான் கொல்கத் தாவில் ஒரு செல்வந்தருடன் தங்கியிருந்தேன். அவர் மரணத்தைக் கண்டு அஞ்சுகிற மக்களைப்போல் இரவைக் கண்டு அஞ்சுகிறவராயிருந்தார். அவர் பகல் முழுக்க ஓய்வாயிருப்பதால் இரவில் உறங்கமாட்டார், அவரால் உறங்க முடியாது. அவர் பெரிய பணக்காரர், அவரிடம் எல்லாமும் இருந்தன, அதனால் அவர் எதையும் செய்ய வேண்டியிருக்கவில்லை. ஏழைகள் தாம் கால்சோர நடந்து எதையெதையோ செய்ய வேண்டியிருக்கிறது.

கேமஸ் ஏதோ ஓர் இடத்தில் எழுதுகிறார், எதிர்காலத்தில் மக்கள் காதலையே மறந்து செல்வத்தில் திளைக்கிற ஒரு காலம் வரும். அவர்கள் தங்கள் வேலைக்காரர்களை ஏவி அதைச் செய்யச் சொல்வார்கள். உண்மையில் செல்வந்தன் காதலிக்கக் கூடாது. அந்த உழைப்பை அவர் ஏன் மேற்கொள்ள வேண்டும்? ஒரு வேலைக்காரனை நீங்கள் அதற்காக ஏவ முடியும். பணக்காரர்கள் அதைத்தான் செய்கிறார்கள். வேலைக்காரர்களை வாழ்க்கையை வாழும்படி அனுப்பிவிட்டு, அவர்கள் ஓய்வெடுக்கிறார்கள்.

நீங்கள் நாள் முழுதும் ஓய்வில் இருந்தால் இரவில் எப்படி உறக்கம் வரும்? அதற்கான அவசியம் இருக்கவில்லை. பகல் முழுதும் வேலை செய்கிற ஒருவன் மாலையானதும் மறதியில் விழவும், இருளில் விழவும் தயாராகிறான். உண்மையான, நம்பத்தக்க வாழ்க்கை வாழ்ந்திருந்தால் அதே அனுபவம் உங்களுக்கு நேரும். நீங்கள் உண்மையிலேயே வாழ்ந்து விட்டிருந்தால் மரணம் ஓர் ஓய்வுதான். மாலை வருகிறது, இரவு வருகிறது நீங்கள் ஆயத்தமாகிறீர்கள். தரையில் படுத்துக் கொண்டு காத்திருக்கிறீர்கள். நீங்கள் வாழ்க்கையை சரியாக வாழ்ந்திருந்தால் மேலும் அது வேண்டு மென்று கேட்க மாட்டீர்கள், காரணம் 'இன்னும் என்பது முன்பே இருக்கிறது, நீங்கள் கேட்கக் கூடியதைக் காட்டிலும் அதிகமாகவே கொடுக்கப் பட்டிருக்கிறது. நீங்கள் ஒவ்வொரு கணத்தையும் முழு தீவிரத்துடன் வாழ்ந்தீர்களானால் மரணத்துக்கு எப்போதும் தயாராகவே இருப்பீர்கள்.

எனக்கு மரணம் இப்போதே வருமென்றாலும் நான் தயாரா யிருக்கிறேன், காரணம் எதுவும் அரைகுறையாய் விடப்பட்டிருக்கவில்லை.

நான் எதையும் தள்ளிப்போடவில்லை. என்னுடைய காலைக் குளியலையும் நான் அனுபவித்துக் குளிக்கிறேன். நான் எதையும், எவ்வகையிலும் எதிர்காலத்தில் பார்த்துக் கொள்வோம் என்று தள்ளிப்போடவில்லை. எனவே, மரணம் குறித்துப் பிரச்சினையேதுமில்லை. எதிர்காலம் பற்றிய சிந்தனை துளியும் கிடையாது, காரணம் எதுவும் அரைகுறையாய் விடப்படவில்லை.

ஆனால் நீங்கள்? எல்லாமே பூர்த்தி செய்யப்படாமல் இருக்கின்றன. காலைக் குளியலைக் கூட சரிவரக் குளிக்கவில்லை, காரணம் நான் சொல்வதைக் கேட்க வந்துவிட்டீர்கள். அதை இழந்துவிட்டீர்கள். நீங்கள் எதிர்காலத்துக்கேற்ப செயல்படுகிறீர்கள். அதனால் தவறவிடுகிறீர்கள். தவறவிடுவது ஒரு பழக்கமாகிவிட்டால் பிறகு எனது பேச்சையும் நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். காரணம் காலைக் குளியலைத் தவறவிட்ட, காலைத் தேநீரைத் தவறவிட்ட, அல்லது அரைகுறையாய் முடித்த அதே ஆள்தானே நீங்கள். அது உங்கள் மூளையைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருக்கிறது. நீங்கள் பூர்த்தி செய்யாமல் விட்டவைக் ரீங்கரிக்கும் தேனீக்களைப் போல் உங்களைச் சுற்றி வருகின்றன அல்லவா. தற்போது இது ஒரு பழக்கமாகிறது.

நான் சொல்வதை நீங்கள் கேட்டுக் கொண்டிருந்தாலும் அலுவலகம் செல்லவோ, கடைக்குச் செல்லவோ தயாராகிக் கொண்டிருக்கிறீர்கள், முன்பே தயாராகி விட்டீர்கள் என்று தான் சொல்ல வேண்டும். உங்கள் உடல் மட்டும் இங்கே அமர்ந்திருக்கிறது. மனம் எதிர்காலத்தில் சென்று

கொண்டிருக்கிறது. நீங்கள் ஓரிடமாய் ஒரு போதும் இருப்பதில்லை. நீங்கள் எங்கிருந்தாலும் முன்பே வேறோர் இடத்துக்குச் சென்று விடுகிறீர்கள். இந்த நிறைவுறாத வாழ்க்கையே வாழ்வின் மீது இச்சையைத் தோற்றுவிக்கிறது. நீங்கள் பூர்த்தி செய்ய வேண்டிய காரியங்கள் நிறைய இருக்கின்றன.

இந்தக் கணத்தில் வாழ்க்கையை மரணத்திடம் விட்டுக்கொடுக்க உங்களால் முடியுமா? என்னால் முடியும். நான் மகிழ்ச்சியாடு அதைச் செய்வேன். எல்லாமே முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது. பதஞ்சலியோ, புத்தரோ, இயேசுவோ வாழ்வுக்கு எதிரானவர் அல்லர் என்பதை நினைவில் வையுங்கள். அவர்கள் எல்லாருமே வாழ்வைப் பரிந்துரைக்கிறவர்கள். ஆனால் வாழ்விற்கான இச்சையை எதிர்ப்பவர்கள்.

'வாழ்விற்கான இச்சை ஒரு மனிதன் வாழ்வைத் தவற விட்டதற்கான அறிகுறி'

ஓஷோ,

> சார்த்தர், கேமஸ் போன்ற மேலை நாட்டு வாழ்க்கை முறை சிந்தனையாளர்கள் விரக்தி, நம்பிக்கையின்மை, வாழ்வின் அர்த்தமற்ற தன்மை இவற்றைத் தெளிவாய் புரிந்து கொண்டவர்கள், ஆனால் பதஞ்சலியின் பரவசநிலை இன்னதென்று அவர்கள் அறியமாட்டார்கள். ஏன்? எது தவறவிடப்பட்டது?

ஆம், இந்தியாவில் புத்தரிடம் காணப்பட்ட சில விஷயங்கள் மேற்கில் காணப்படவில்லை. சார்த்தர் நிற்கிற இடத்தை புத்தர் முன்பே அடைந்துவிட்டிருக்கிறார். வாழ்க்கை அர்த்தமற்றது. அது வேதனையும், நம்பிக்கையின்மையும் கொண்டது என்பதே அவருடைய கருத்து.

எல்லாமே அர்த்தமற்றது என்கிற கருத்தை புத்தர் எட்டியபோது இந்தியாவில் ஒரு தொடக்கம் தெரிந்தது. அது ஒரு பாதையின் முடிவல்ல, உண்மையில் -

'ஒரு பாதையின் முடிவில் இன்னொரு பாதை தொடங்குகிறது'

ஒரு கதவு மூடியபோது இன்னொரு கதவு திறந்து கொண்டது.

ஆன்மா சார்ந்த பண்பாட்டுக்கும், *இயற்பொருள் வாத (materia list)ப் பண்பாட்டுக்கும் உள்ள வித்தியாசம் இதுதான். ஆன்மீகத்தில் நம்பிக்கையில்லாத பொருள் முதல் வாதி சொல்வான் 'இவ்வளவுதான். வாழ்வில் வேறெதுவும் இல்லை' என்று. 'நீ எதைப் பார்க்கிறாயோ அதுதான்

---

* காணும் பொருளே உண்மை என்னும் வாதம்

மெய்' என்பான் அவன். ஆன்மீகவாதியோ 'எல்லாம் இத்தோடு முடிவதில்லை. காண்பது மட்டுமே எல்லாமுமாகிவிடாது, எல்லாம் தொட்டறிவதோடு முடிந்துவிடாது' என்பான். ஒன்றின் முடிவில் ஆரம்பிக்கிறது இன்னொன்றின் பரிமாணம்.

வாழ்க்கை பற்றி பொருள் முதல் வாதி கொண்டிருக்கும் கருத்துக்கும் ஆன்மிக வாதியின் கருத்துக்கும் உள்ள வேற்றுமை இதுதான். உலகப் பார்வைகள் வேறுபடும். ஆன்ம நிலை சார்ந்த உலகக் கண்ணோட்டத்தில் புத்தர் பிறந்தார். நாம் செய்கிற காரியங்களின் அர்த்தமற்றத் தன்மையை அவர் தெளிவாய் புரிந்து கொண்டிருந்தார். காரணம் மரணம் எல்லா வற்றையும் ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துவிடும் என்கிறபோது நீங்கள் செய்தாலும் செய்யாவிட்டாலும் அதில் என்ன முக்கியத்துவம் இருக்கப் போகிறது?

நீங்கள் காதல் கொண்டாலும், கொள்ளாவிட்டாலும் முதுமை உங்களைத் தீண்டும், சிதைந்து எலும்புக் கூடாவீர்கள். நீங்கள் வறுமையில் வாழ்ந்தாலும், வசதியுடன் வாழ்ந்தாலும் மரணம் இரண்டையுமே அழித்துவிடும். நீங்கள் யார் என்பது பற்றியெல்லாம் அது கவலைப் படுவதில்லை. நீங்கள் பாவியாயிருக்கலாம், புனிதராயிருக்கலாம் மரணத்துக்கு எந்த வேறுபாடும் கிடையாது. மரணம் பொதுவுடைமை வாதி, அது எல்லாரையும் சமமாகவே பாவிக்கும். புனிதராகட்டும் பாவியாகட்டும் இருவருமே புழுதியில் தான் விழுவது. புத்தர் இதனைத் தெளிவாய் புரிந்து கொண்டிருந்தார். அது ஆன்மநிலை சார்ந்த உலகக் கண்ணோட்டம். ஆனால், சூழ்நிலை வேறாயிருந்தது.

நான் உங்களுக்குப் புத்தரின் கதையைச் சொல்லியிருக்கிறேன். அவர் ஒரு முதியவரைக் காண நேர்ந்தது. அப்போது இளமை என்பது கடந்து செல்லும் வளர்ச்சிக் கட்டம் என்பதை அவர் புரிந்து கொள்கிறார். அது ஒரு கணநேர நடப்பு, கடலில் ஓர் அலை எழுந்து விழுகிறமாதிரி, அதில் நிரந்தரத்தன்மை இல்லை. அது ஒரு கனவு மாதிரி, எந்தக் கணத்திலும் உடையக் கூடிய நீர்க்குமிழி. பிறகு செத்துப்போனவனின் உடல் எடுத்துச் செல்லப்படுவதை அவர் பார்க்கிறார். மேற்கில் இந்தக் கதை இத்துடன் நின்று போகிறது. ஆனால் இந்தியக் கதையில், செத்தவனைப் பார்த்தபின் ஒரு சந்நியாசியை அவர் பார்க்கிறார். அதுதான் வாசல். அப்போது தன் சாரதியிடம் அவர் கேட்கிறார், 'இந்த மனிதர் யார்? இவர் மஞ்சள் நிற ஆடை அணிந்திருப்பது ஏன்? இவருக்கு என்ன ஆயிற்று? இவர் எத்தகையவர்?' என்று. அதற்கு தேரோட்டி சொல்வான், ''வாழ்க்கை மரணத்தை நோக்கி இட்டுச் செல்கிறது என்பதை இந்த மனிதர் புரிந்து கொண்டார், இவர் மரணமற்ற வாழ்க்கையைத் தேடிச் செல்கிறார்'' என்று.

இதுதான் நிலைமை. வாழ்க்கை மரணத்தோடு முடிந்து விடுவதில்லை. மரணத்தைக் கண்ட பிறகு, வாழ்க்கை அர்த்தமற்றதாகிற போது, திடீரென்று ஒரு புதிய பரிமாணம் தோன்றுகிறது. ஒரு புதிய பார்வை - அது சந்நியாசம் என்பதைக் காட்டும் புத்தர் கதை. சந்நியாசம் - வாழ்வின் துயரத்தை ஊடுருவிச் செல்கிற முயற்சி கண்ணுக்குத் தெரிவதை ஊடுருவி கண்ணுக்குப் புலப்படாததை அடைதல். பொருளை ஊடுருவி பொருள் மறைய அடிப்படையான மெய்ம்மையைக் கண்டறிவது. ஆன்ம சக்தியின் மெய்ப்பொருள் பிரும்மம்.

சார்த்தர், கேமஸ், ஹெய்டெக்கர் இவர்களைப் பொறுத்தவரை செத்தவனுடன் கதை முடிகிறது. சந்நியாசி தவறவிடப்பட்டது, தவறவிடப்பட்ட இணைப்பு வளையம்.

நீங்கள் என்னைப் புரிந்து கொள்வதாயின் நான் என்ன செய்கிறேன் என்பதைப் பாருங்கள். சந்நியாசிகள் பலரை உருவாக்கி உலகமெங்கும் அனுப்புகிறேன், சார்த்தர் மாதிரி வாழ்க்கை அர்த்தமற்றது என்று புரிந்து கொள்கிற ஒரு மனிதனைத் தொடர்ந்து செல்ல ஒரு சந்நியாசி இருக்கவேண்டும். வாழ்க்கை மரணத்தோடு முடிந்தவிடுவதல்ல என்கிற புதிய வார்வையை வழங்க வேண்டும்.

'வாழ்வின் வளர்ச்சிக் கட்டங்கள் முடியும் வாழ்க்கை முடியாது'

உண்மையில் எப்போது இறப்பு வருகிறதோ அப்போது தான் வாழ்க்கை தொடங்குகிறது காரணம் இறப்பு உங்கள் உடம்போடு முடிந்துவிடுகிறது, உள்ளார்ந்த இருப்புணர்வை தீண்டுவதில்லை. உடம்பின் வாழ்க்கை ஒரு பகுதி, வெளிச்சுற்றில் உள்ள ஆழமற்ற பகுதி.

மேலைநாடுகளில் இயற்பொருள் வாதம் (materialism) என்பது உலகக் கண்ணோட்டமாய் இருக்கிறது. மத நம்பிக்கை உள்ளவர் என்று சொல்லிக் கொள்ளும் மேலை நாட்டவர்கள் எல்லாம் பொருள் முதல் வாதிகள்தாம். அவர்கள் மதத்தில் நம்பிக்கை வைக்கலாம், தேவா லயத்துக்குச் சென்று வரலாம். ஆனால் அந்த நம்பிக்கை ரொம்பவும் மேலெழுந்தவாரியானது. அது ஒரு சமூக சம்பிரதாயம். ஞாயிற்றுக் கிழமையில் தேவாலயத்துக்குச் செல்வது, மற்றவர்கள் தங்களைச் சரியானவர் என்று சொல்வதற்காகச் செய்வது ஒரு சமூக சம்பிரதாயம். ஆனால் உள்ளுக்குள் எல்லாருமே பொருளியல் வாதிகள் தாம்.

பொருளியல்வாத உலகப் பார்வையில் மரணத்துடன் எல்லாமே முடிந்துவிடுகிறது. இது உண்மையானால் உரு, நிலை மாற்றம் எதற்கும்

சாத்தியமிருக்காது. எல்லாமே மரணத்தில் முடிந்துவிடும் என்றால் இந்த வாழ்வைத் தொடர்வதில் என்ன அர்த்தம் இருக்கப் போகிறது? அப்படியானால் தற்கொலைதான் சரியான பதிலாயிருக்கும்.

சார்த்தர் என்ற அறிஞர் வாழ்ந்து கொண்டே இருப்பதைப் பார்க்கும் போது அது அதிசயமாய் தோன்றும். அவர் நீண்ட காலத்திற்கு முன்பே தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டும் காரணம் அவர் உண்மையிலேயே வாழ்க்கை அர்த்தமற்றது என்பதை உணர்நதிருந்தால், பிறகு அதற்கென்ன பொருள்? ஒன்று அவர் உணர்ந்திருக்க வேண்டும் அல்லது அதற்கெதிரான நம்பிக்கையுடன் இருந்து அதை உணராதிருக் கலாம். தினமும் படுக்கை விட்டெழுந்தது முதல் செய்ததையே செய்து கொண்டிருப்பதில் என்ன சிறப்பு இருக்க முடியும்? நீங்கள் உண்மை யிலேயே வாழ்க்கை அர்த்தமற்றது என்று உணர்ந்து கொண்டிருந்தால் அடுத்தநாள் காலையில் எப்படி படுக்கையைவிட்டு எழுந்திருக்க முடியும்? எதற்காக எழுந்திருக்க வேண்டும்? பயனற்ற ஒன்றையே திரும்பச் செய்து கொண்டிருப்பதற்கா? அர்த்தமேயில்லை. எதற்காக மூச்சுவிட்டுக் கொண்டிருப்பது?

இதுதான் நான் புரிந்து கொண்டது. வாழ்க்கை அர்த்தமற்றது என்பதை நீங்கள் உண்மையிலேயே உணர்ந்திருந்தால் மூச்சு உடனே நின்று விட்டிருக்கும். அதற்கு என்ன பொருள்? நீங்கள் மூச்சு விடுவதில் ஆர்வம் காட்ட மாட்டீர்கள், அதற்காக எந்த முயற்சியும் மேற்கொள்ள மாட்டீர்கள். ஆனால் சார்த்தர் வாழ்வதைத் தொடர்ந்தபடி, இலட்சக் கணக்கான செயல்களைச் செய்து கொண்டிருந்தார். அர்த்தமற்ற தன்மை அடியாழத்தில் ஊடுருவவில்லை. அது தத்துவம். ஒரு வாழ்க்கையல்ல, இன்னும் சொல்லப் போனால் ஓர் அத்யந்தமான நிகழ்வுமில்லை, ஒரு தத்துவம் அவ்வளவு தான். இல்லையேல், கிழக்கு திறந்தே இருக்கிறது. ஏன் சார்த்தர் வரவில்லை? கிழக்கு சொல்கிறது, 'ஆம், வாழ்க்கை பொருளற்றது தான், ஆனால் பின்பொரு கதவு திறக்கிறது என்று. அப்படியாயின் அவர் கிழக்கே வந்து ஒரு வாசலைக் காண முயற்சிக்கலாமே.

அதைப் பற்றி யாரோ சிலர் சொன்னதாய் எடுத்து கொள்ள வேண்டாம். இந்தக் கருத்தைப் புரிந்துகொள்ள கிட்டத்தட்ட பத்தாயிரம் ஆண்டுகளாய் பலரும் இங்கே வந்திருக்கிறார்கள். அது குறித்து உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ள முடியாது. புத்தர் கணப்பொழுதும் துயர்ப்படமல் நாற்பது ஆண்டுகள் பரவசத்தில் வாழ்ந்திருக்கிறார். நீங்கள் எப்படி பாசாங்கு செய்ய முடியும்? உங்களால் நாற்பது ஆண்டுகள் பரவச நிலையில் இருப்பது போல் நடிக்க முடியுமா? நடிப்பதில் என்ன பொருள்?

கிழக்கில் ஒரு புத்தர் மட்டும் பிறந்திருக்கவில்லை, ஆயிரக்கணக்கான புத்தர்கள் பிறந்திருக்கிறார்கள், துன்பத்தின் ஒரு சிற்றலை கூட இல்லாமல் பேரின்ப வாழ்வையே அவர்கள் வாழ்ந்தனர்.

பதஞ்சலி சொன்னதெல்லாம் தத்துவங்களல்ல, தெளிவாய் புரிந்து கொள்ளப்பட்ட உண்மை, தேர்ந்த அனுபவம். சார்த்தர் போதிய துணிவு கொண்டிருக்கவில்லை. இல்லையேல் இரண்டு மாற்று வழிகள் இருந் திருக்கும். ஒன்று தற்கொலை செய்து கொள்வது, அதாவது உங்கள் தத்துவத்துக்கு உண்மையாயிருப்பது அல்லது ஒரு புதிய வாழ்க்கைக்கான வழியைத் தேடிக்கொள்வது. இந்த இரண்டு வழிகளிலும் நீங்கள் பழையன வற்றை விட்டுவிடுகிறீர்கள். அதனால்தான் நான் சொல்வது, ஒருவன் தற்கொலை செய்துகொள்ளும் எல்லை வரை சென்றால்தான் அந்த அடுத்த நுழைவு வாயில் திறக்கும் என்பதை. அங்கே நீங்கள் இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும் தற்கொலை அல்லது சுயமாற்றம்.

சார்த்தர் அவ்வளவு துணிச்சலானவரல்லர். துணிவு, பாசாங்கற்ற தன்மை, உண்மையாக இருத்தல் பற்றியெல்லாம் பேசுகிறார். ஆனால் இவற்றில் எதுவும் இல்லை. நீங்கள் உண்மையானவர் என்றால் ஒன்று தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டும். அல்லது துன்பத்திலிருந்து விடுபட வழி தேடியிருக்க வேண்டும். இத்துன்பமே இறுதியானது, முழுமையானது என்றால் நீங்கள் ஏன் தொடர்ந்து வாழ்ந்து கொண் டிருப்பது? உங்கள் தத்துவத்திற்கு உண்மையாயிருங்கள். இந்த நம்பிக்கை யின்மையும், வேதனையும், அர்த்தமற்ற தன்மையும் வார்த்தைக்கும் தர்க்கத்திற்கும் உரியவை என்றே படுகிறது. அவை உண்மையாய் இருக்கக் கூடியதன்று.

மேலை நாடுகளின் வாழ்வுடைமைத் தன்மை உண்மையில் வாழ்வுடைமையானதல்ல என்பதே எனது எண்ணம். அப்போதும் அது தத்துவந்தான். வாழ்வது என்றால் அதற்கு உணர்வுகள் இருக்க வேண்டியது அவசியம், அது சிந்திக்கிற காரியமல்ல. சார்த்தர் பெரிய சிந்தனையாளராய் இருக்கலாம், ஆனால், உணர வேண்டியதை அவர் உணரவில்லை, அதை வாழ்ந்து பார்க்கவுமில்லை. நீங்கள் நம்பிக்கையற்ற வாழ்வை வாழ்ந்து கொண்டிருந்தால் வேறு எதையாவது செய்தே ஆகவேண்டும் என்கிற முடிவுக்கு வர வேண்டும். அதுவும் உடனே செய்தாக வேண்டும். உடனடி மாற்றத்தில் நீங்கள் அக்கறை காட்டும்படி இருக்கும்.

எது தவறவிடப்பட்டது என்றும் நீங்கள் கேட்கிறீர்கள். மேற்கில் உலகப் பார்வை ஆன்மிக உலகப்பார்வை தவறவிடப்பட்டிருக்கிறது. இல்லையேல் இன்னும் பல புத்தர்கள் அவதரித்திருப்பார்கள். காலம் கனிந்த நிலையில்

உள்ளது. நம்பிக்கையின்மை, அர்த்தமற்ற தன்மை இவை உணரப் படுகின்றன. சமூகத்தில் செல்வவளமும் உயரிய சிந்தனையும் முயற்சி செய்து பெறப்பட்டாலும் போதிய அளவில் இல்லையென்றே சொல்ல வேண்டியிருக்கிறது. பணம் இருக்கிறது, அதிகாரம் இருக்கிறது அடி யாழத்தில் ஆற்றல் இல்லை. மனிதன் தன்னை சக்தியற்றவனாய் உணரும்படி ஆயிற்று. சூழ்நிலை பக்குவமாயிருந்தாலும் உலகப்பார்வை இல்லையே.

மேலை நாடுகளுக்குச் சென்று செய்தியை வழங்குங்கள். ஆன்மநிலை சார்ந்த உலகப் பார்வையை பரப்புங்கள். அப்போதுதான் தங்கள் வாழ்க்கை பயணத்தின் முடிவுக்கு வந்தவர்கள் அது முடிவல்ல, ஒரு புதிய வாசல் திறக்கிறது என்பதை உணர்வார்கள்.

வாழ்க்கை சாசுவதமானது. எல்லாமே முடிந்துவிட்டதாய் பலமுறை நீங்கள் உணர்ந்திருப்பீர்கள். ஆனால் திடீரென்று ஏதோ ஒன்று மீண்டும் தொடங்கும். ஆன்மநிலை சார்ந்த உலகப்பார்வை குறைவாயிருக்கிறது (அல்லது முற்றுமாயில்லை). உலகப் பார்வை ஏற்பட்டுவிட்டால் பலரும் அதனுள் செல்வார்கள்.

கிழக்கிலிருந்து தங்களை மதகுருவாய் சொல்லிக் கொள்கிறவர்கள் மேலை நாடுகளுக்குச் செல்கின்றனர். அவர்கள் உங்களைவிடவும் பொருள் முதல் வாதிகளாயிருப்பதுதான் தொல்லை. அவர்கள் அங்கிருப்பது பணம் சம்பாதிப்பதற்காக மட்டுமே. ஆன்ம நிலை சார்ந்த உலகப் பார்வையை அவர்களால் உங்களுக்கு வழங்க முடியாது. அவர்கள் விற்பனை யாளர்கள். அவர்கள் விற்பனைச் சந்தையைக் கண்டறிந்திருக்கிறார்கள், பருவமும் முதிர்ந்து பயன்படுத்தத் தக்கதாய் இருக்கிறது.

மக்கள் ஏதோ ஒன்றுக்கு ஆசைப்படுகிறார்கள், தாங்கள் ஆசை வைப்பது எதில் என்றே அறியாமல் மக்கள் இந்தப் பெயரளவிலான வாழ்க்கையில் விரக்தியடைந்தவர்களாய் இன்னும் அறிந்திராத வாழ்ந்திராத நிலையிலேயே இன்னொன்றுக்குத் தாவி விடுகிறார்கள். மக்களை ஏமாற்ற சந்தை தயாராயிருக்கிறது, கிழக்கிலிருந்து பல வியாபாரிகள் வந்திருக் கிறார்கள். அவர்கள் தங்களை மகரிஷிகள் என்று அழைக்கப்படலாம், இருந்தாலும் அவர்களுக்குள் வேறுபாடு எதுவும் இல்லை.

பல வியாபாரிகளும் விற்பனையாளர்களும் மேலை நாடுகளுக்குச் செல்கின்றனர். அவர்கள் அங்கேயிருப்பது பணத்துக்காகத்தான்.

உண்மையான குருவைத் தேடுங்கள், தேடிக் கண்டுபிடியுங்கள், சென்றடையுங்கள். அதற்கான முயற்சிகளைச் செய்யுங்கள். உண்மையான

குரு மேலை நாடுகளுக்குச் செல்லமாட்டார் அப்படிப் போனால் ஒட்டுமொத்த நோக்கமும் பாழ்பட்டு விடும், மேற்கு அவரைத் தேடிவர வேண்டும். அக வொழுங்கைக் கற்றுக்கொள்ள கிழக்கே வருவது மேலை நாட்டினர்க்கு எளிதான காரியந்தான். அவர்கள் இங்கே கற்ற பின் திரும்பிச் சென்று ஒரு புதிய சூழ்நிலையை உருவாக்க வேண்டும். இங்கே ஆன்மிக குருவிடம் அமைதியான சூழ்நிலையில் இருந்து கற்பது அவர்களுக்கு எளிது. இந்தச் செய்தியைக் கற்று, எடுத்துச் சென்று மேலைநாடுகளில் பரவச் செய்யும்போது நீங்கள் பொருள் முதல் வாதியாய் இருக்க மாட்டீர்கள். ஏனெனில், நீங்கள் அதை போதுமான அளவு வாழ்ந்து முடித்து விட்டிருப்பீர்கள்.

கீழ்த்திசை நாட்டவர்கள் மேலை நாடுகளுக்குச் செல்லும்போது பணம் சேர்க்கத் தொடங்கி விடுகிறார்கள் என்பது உண்மை. அது மிகவும் எளிது. இப்போது கிழக்கு வறுமையில் உள்ளது, கிழக்கத்தியர்கள் ஆன்மிகத்துக்கு ஆசை கொண்டிருக்கவில்லை. அதிக அளவில் பணம், புலன் நுகர்வுக்கான கருவிகள், பொறியியல் அறிவு, அணுவிஞ்ஞானம் இவற்றுக்கே ஆசைப்படுகின்றனர். இப்போது ஒரு புத்தர் வந்து பிறந்தாலும் அவருடைய போதனைகளைக் கேட்க விரும்பமாட்டார்கள். ஆனால் இந்தியா 'ஸ்புட்னிக்' என்றொரு கருவியை ஏவியபோது நாடே களிவெறி கொண்டு கூத்தாடியது. என்ன ஒரு முட்டாள்தனம். ஒரு சிறிய அணுகுண்டு வெடித்து இந்தியா மகிழ்ச்சியும், பெருமிதமும் அடைகிறது. காரணம், அது ஐந்தாவது அணு ஆயுத நாடாக மாறியிருப்பது.

கிழக்கு ஏழ்மையில் உள்ளது. அது பொருள் சார்ந்த விதத்தில் சிந்திக்கிறது. ஏழ்மையுற்ற மனம் பொருளைப் பற்றியும் பொருள் தரக் கூடியவைப் பற்றியுமே சிந்தத்திருக்கும். கிழக்கு நாடுகள் இப்போது ஆன்மிகத்தைத் தேடவில்லை. மேற்கு செல்வச் செழிப்பில் உள்ளது. அது ஆன்மிக அறிவு பெற ஆயத்தமாயுள்ளது.

தகுதி உடைய குருவைத் தேடி ஒருவர் செல்ல வேண்டும். தேடலில் நிகழும் பலதும். நான் உங்களிடம் வந்தால் ஒரு வேளை நீங்கள் தவறவிடலாம்.

நான் உங்களைத் தேடி வந்து உங்கள் வாசற் கதவைத் தட்டினால், ஏதோவொன்றைப் பெறும் பொருட்டு வந்ததாய் நீங்கள் எண்ணிக் கொள்வீர்கள். அது உங்கள் இதயக் கதவை மூடச் செய்துவிடும். இல்லை, நான் வந்து உங்கள் வீட்டுக் கதவைத் தட்டமாட்டேன். நான் உங்களுக்காய் காத்திருப்பேன், நீங்கள் வந்து தட்டுவதற்காய் காத்திருப்பேன். அத்துடன் உங்களையும் காத்திருக்க வைப்பேன். ஏனெனில் உங்கள் இதயம் திறக்க அதுவே வழி.

பதஞ்சலி, மேலை நாட்டவர்களுக்காக என்ன சொல்லியிருக்கிறார் என்று எனக்குத் தெரியாது. எனக்கெப்படி தெரியும்? பதஞ்சலி என்றால் ஒரு பதஞ்சலிதான். நான் பதஞ்சலியல்ல. ஆனால் நான் இதைத்தான் சொல்ல விரும்புகிறேன். தற்கொலையோ ஆன்மநிலை சார்ந்த புரட்சியோ நிகழ கூடிய ஓர் இடத்துக்கு மேற்கு வந்திருக்கிறது. இவை மட்டுமே மாற்றுக ளாயிருக்கும். நான் தனிநபர்களைக் குறித்து இதைச் சொல்லவில்லை. மேற்கத்திய நாடுகள் முழுவதற்குமே இது பொருந்தும். மேற்கு - தான் தயாராகிக் கொண்டிருக்கும் அணு ஆயுத்ப்போர் மூலம் தற்கொலை செய்து கொள்ளலாம் அல்லது அங்க ஆன்ம நிலை சார்ந்த விழிப்பு ஏற்படலாம். அதற்கு ரொம்ப காலமாகிவிட்டது. இந்த நூற்றாண்டில் இன்னும் இருபத்தைந்து ஆண்டுகளிலேயே மேற்கு தற்கொலை செய்து கொள்ளும் அல்லது ஆன்மிக விழிப்படையும். அது மனித சரித்திரம் இதுவரை கண்டிராத அளவில் இருக்கும்.

மக்கள் என்னிடம் வந்து சொல்கிறார்கள், 'நீங்கள் பாட்டுக்கு தகுதி உள்ளவரா இல்லையா என்று பார்க்காமல் எல்லாருக்கும் சந்நியாசம் வழங்கிக் கொண்டிருக்கிறீர்கள்' என்று. நான் அவர்களுக்குச் சொல்வேன், கொஞ்ச அவகாசமே உள்ளது, அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. நான் ஐம்பதாயிரம் பேருக்கு சந்நியாசம் வழங்கினால் ஐம்பது பேராவது தேறுவார்கள், அது போதுமானது.

மேலை நாடுகளுக்கு சந்நியாசிகள் தேவைப்படுகிறார்கள். இறந்த மனிதனைத் தூக்கிக் கொண்டு போவதுவரை அங்கே ஊதை போய் விட்டிருக்கிறது. மேற்கில் இப்போது ஒரு சந்நயாசி தோன்ற வேண்டும். அவர் மேற்கத்தியவராயிருக்க வேண்டும், கிழக்கத்தியராய் இருக்கக் கூடாது. காரணம் கிழக்கத்தியச் சந்நியாசி சற்றுமுன் பின்னாயினும் நீங்கள் கொடுக்கிறவற்றில் ஏமாந்து விடுவார். அவர் ஒரு விற்பனையாளராகி விடுவார். காரணம் அவர் பசியால் வாடும் கீழ்த்திசையிலிருந்து வந்தவர். பணம் தான் அவருக்குக் கடவுள்.

அந்தச் சந்நியாசி கட்டாயம் மேலை நாட்டவராயிருக்க வேண்டும். மேற்கில் வேர்கள் கொண்டவராய், வாழ்வின் அர்த்தமற்ற தன்மையை உணர்ந்தவராய், பொருளியல் வாதம் தரும் ஏமாற்றத்தைத் தெளிவாய் புரிந்து கொண்டவராய், மார்க்ஸியத்தின் பயனற்றத் தன்மையைப் புரிந்து கொண்டவராய் அவர் இருக்க வேண்டும். மேற்கத்தியரின் இரத்தத்தில் தோல்வி மனப்பான்மை இருக்கிறது, அவர்களுடைய எலும்புகளிலும் விரக்தி.

முடிந்த அளவு மேற்கத்திய சந்நியாசிகளை உருவாக்கி அங்கே திருப்பி அனுப்ப வேண்டுமென்று அதனால் தான் நான் ஆர்வம்

*காட்டுகிறேன். பல சார்த்தர்கள் அங்கே காத்திருக்கிறார்கள். அவர்கள் மரணத்தைக் கண்டவர்கள். அவர்கள் மஞ்சள் நிற அங்கியைக் காணக் காத்திருக்கிறார்கள், அந்த அங்கியுடன் தொடரும் பரவசத்துக்காகவும்.*

மூன்றாவது கேள்வி:

**ஒரு புத்தர் அதிநுட்ப உணர்வுடன் வாழ்கிறவர், அதனால் தம்முடைய உடலின் தேவைகளை அவர் மகிழ்வுடன் அனுபவிக்கிறார். பாலுறவும் உடலின் தேவை அல்லவா. அப்படியானால் அது புத்தரிடத்தில் ஏன் காணாமல் போனது?**

*பல விஷயங்களைப் புரிந்து கொள்ள வேண்டியிருக்கும். முதலாவது பாலுறவு உணவு மாதிரி வழக்கமான தேவையல்ல. அது அசாதாரண மானது. உங்களுக்கு உணவு வழங்கப்படாவிட்டால் நீங்கள் இறந்து விடுவீர்கள். ஆனால், பாலுறவு இல்லாமல் உங்களால் வாழமுடியும். உங்களுக்குத் தண்ணீர் கிடைக்காவிட்டால் உடம்பு மடிந்துவிடும். ஆனால், பாலுறவு இல்லாமல் உங்களால் வாழ முடியும். உங்களுக்குக் காற்று கிடைக்காவிட்டால் சில நொடிகளில் இறந்துபோவீர்கள். ஆனால், பாலுறவு இல்லையேல் வாழ்வது பாதிக்கப்பட்டுவிடாது.*

*இதுதான் முதல் வேறுபாடு, அது ஏன் அப்படியானது? ஏனெனில், பாலுறவு என்பது அடிப்படையில் தனிநபரின் தேவையல்ல, ஓர் இனத்தின் தேவை. உடலுறவை அனுமதிக்காவிட்டால் அந்த இனம் அழிந்துவிடும். ஆனால் நீங்கள் அழியமாட்டீர்கள். தனிநபரல்ல ஒட்டுமொத்த இனம் அழியும். பாலுறவு ஓர் இனத்தின் தேவை, தனி நபருடையதல்ல. ஒவ்வொருவரும் பிரும்மச்சாரியாகி விட்டால் பிறகு மனித இனமே அழிந்துவிடும். நீங்கள் எழுபது ஆண்டுகள் அல்லது அதற்கு மேலும் வாழ்வீர்கள். காரணம் உங்களால் அதிக அளவில் சக்தியைச் சேமித்து கொள்ள முடிகிறது.*

*எழுபது ஆண்டுகள் வாழக்கூடிய ஒருவரால் பாலுறவு இல்லாமல் நூறு ஆண்டுகள் வாழமுடியும் காரணம் அவருடைய சக்திகள் சிதையாமல் பாதுகாத்து வைக்கப்படுகிறது. ஆனால், பாலுறவு இல்லாவிட்டால் இனம் அழிந்துவிடும்.*

*இதுதான் முதல் வேறுபாடு: உங்களுக்கு உணவு தேவை, மற்றவர்களுக்குப் பாலுறவு தேவை. எதிர்வரும் தலை முறைகள் தோன்ற பாலுறவு அவசியம். நீங்கள் முன்பே தோன்றிவிட்டீர்கள். அதனால் பிரச்சினையில்லை. நீங்கள் தோன்றுவதற்கு உங்கள் பெற்றோர்கள் உறவு*

கொண்டனர். அவர்கள் பிரும்மச்சர்யத்தைக் கடைப்பிடித்திருந்தால் நீங்கள் எப்படி தோன்றியிருக்க முடியும்? அவர்கள் இருந்திருப்பார்கள், அவர்களுக்கு அது பிரச்சினையாயிருந்திருக்காது. அவர்கள் உங்களுடைய தொந்தரவுகளில்லாவிட்டால் மேலும் நன்றாய் வாழ்ந்திருப்பார்கள்.

அதனால்தான் இயற்கை பாலுறவில் உங்களுக்கு இத்தனை மயக்கத்தைக் கொடுத்திருக்கிறது. இல்லையேல் மனித இனமே காணாமல் போயிருக்கும். பாலுறவில் மிகவும் தீவிரம் காட்டுகிறவர்களாய் இயற்கை உங்களை உருவாக்கியிருக்கிறது. அது உங்களை உந்தித் தள்ளுகிறது. அதன் பொறியில் இருந்து நீங்கள் தப்பிக்க முயல்கிறீர்கள். ஆனால், எதைச் செய்தாலும் எங்கு சென்றாலும் பாலுறவு நாட்டம் உங்களைத் தொடர்கிறது அதனிடம் அகப்பட்டுக் கொள்கிறீர்கள். இயற்கையால் அதைக் கொடுக்காமல் இருக்க முடியாது. இல்லையேல், உடலுறவு என்பது ஓர் அருவருக்கத்தக்க செயலாய் இருந்திருக்கும், நீங்கள் தடையற்ற விதத்தில் அதை மேற்கொள்ள முடியும் பட்சத்தில், அதை யாரும் அப்போது தெரிவு செய்ய மாட்டார்கள், அது திணிக்கப்பட்டதாகவே இருக்கும்.

நீங்கள் ஒருவருடன் உடலுறவு கொள்வது பற்றி நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா? அது பார்ப்பதற்கு எவ்வளவு அருவருப்பாயிருக்கும். அதனால்தான் உடலுறவு கொள்கிறவர்கள் தங்களை மறைத்துக் கொள்கிறார்கள். தங்களை யாரும் பார்த்துவிடாதபடிக்கு அவர்கள் தனியிடத்தை நாடுகிறார்கள். ஆனால் உடலுறவு கொள்ளும் காட்சியைக் கற்பனை செய்து பாருங்கள். ஒட்டுமொத்த செயலும் அபத்தமாய், முட்டாள்தனமாய் தெரியும். அதைச் செய்வதற்கான கருத்தாவேசம் (obsession) உங்களுக்குள் இல்லாவிட்டால் ஒருபோதும் செய்யப் போவதில்லை. ஆனால், இயற்கையால் உங்களை அப்படியே விட்டுவிட இயலாது. அது பற்றிய ஓர் ஆழ்ந்த மயக்கத்தை இயற்கை உங்களுக்குக் கொடுத்திருக்கிறது. அது வேதியியலானது, இயக்குநீர் சார்ந்தது (hormonal) . உங்களைக் கட்டாயப்படுத்தக் கூடிய இயக்குநீர்கள் உங்களுடைய இரத்த ஓட்டத்தில் இருக்கின்றன.

இப்போது உயிரியல் விஞ்ஞானிகள் அந்தச் சுரப்பிகளை உங்களிடமிருந்து எடுத்துவிட்டால் உங்களுக்குப் பாலுணர்வு தோன்றாது என்று கூறுகின்றனர். அந்தச் சுரப்பிகளில் (hormones) இருக்கும். வேதியியல் பொருள்களை வெளியே தயார் செய்து ஊசி மூலம் உங்கள் இரத்தத்தில் செலுத்தினால் பாலுறவு மிகவும் சக்தி வாய்ந்ததாயிருக்கும். எழுபது வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் அதனைச் செலுத்தி அவர்களும் இளைஞர்களைப் போல் செயல்பட முடியும் என்பதை நிரூபித்துள்ளனர்.

அவர்கள் பெண்களைத் துரத்திச் செல்லும் அளவுக்குப் போவார்கள். அவர்கள் சக்கர நாற்காலியில் இருந்து வாழ்ந்தாலும் பெண்களைத் துரத்துவார்கள். ஆனால் துரத்துவது அவர்களல்ல, அந்தச் சுரப்பிகள். உடலில் செலுத்தப்பட்ட வேதியியல் பொருள்கள்.

ஒரு குழந்தை பிறக்கிறது, அப்போது சுரப்பிகள் முதிர்வடைவதில்லை. அதற்கு இன்னும் பல வருடங்களாகும். சுமார் பதினைந்து வயதில் அந்தப் பாலின இயக்க உணர்வுகள் ஏற்படலாம். அதுவரை பிரச்சினை ஏதுமில்லை. அப்போது பாலின சுரப்பிகள் முதிர்வடைந்து, அதிலிருந்து வேதியியல் பொருள்கள் வெளிவரத் தயாராயிருக்கும். அது திடீரென வெடிக்கும்போது அவனுக்குக் கிறுக்குப் பிடித்தது போலாகி விடும். அவனுக்கு என்ன ஆயிற்றென்றே புரியாது.

பதினான்கிலிருந்து பதினெட்டு வயது வரையான விடலைப்பருவம் இடர்ப்பாடானது. என்ன நடக்கிறதென்பதே குழந்தைக்குப் புரியாது. ஏதோ ஒன்று அவனைத் தனது ஆளுகையில் கொண்டிருக்கும். அது ஆளுகை. இயற்கையின் அதிகாரம். நீங்கள் தயாராயிருக்கிறீர்கள், உங்கள் உடம்பு தயாராயிருக்கிறது. இயற்கை உங்களை இனவிருத்திக்குத் தூண்டுகிறது.

'கற்பனைகளும் கனவுகளும் எழும்., நீங்கள் அவற்றிலிருந்து தப்ப முடியாது'

நீங்கள் நோக்குமிடமெல்லாம் - நீங்களோர் ஆணாயின் உங்கள் கண்ணுக்குத் தெரிவது பெண்ணாயிருக்கும், நீங்களொரு பெண்ணாயின் ஆண்மட்டுமே தெரியும். அது ஒரு வகை பித்துப்பிடித்த நிலை. இயற்கை அதைத் தோற்றுவித்துத்தானாக வேண்டும். இல்லையேல் இனவிருத்தி என்பதில்லை.

நீங்கள் பிரும்மச்சாரியாகிவிட்டால் உங்கள் தனிப்பட்ட வாழ்க்கை பாதிக்கப்படாது.

எதுவும் பாதிப்பிற்குள்ளாகாது. மாறாக, நீங்கள் இன்னும் ஆழ்ந்து, எளிதாய் வாழ முடியும். உங்களது சக்தி சேமிக்கப்படுகிறது.

அதனால்தான் கீழ்த்திசை நாட்டவர்கள் இதனைக் கண்டுபிடித்தது. பாலுறவினால் மரணம் துரிதப்படும் என்பதை அவர்கள் கண்டுபிடித்தார்கள். எனவே, நீண்டகாலம் வாழ விரும்பியவர்கள், தங்கள் சொந்தக் காரணங்களுக்காய் பாலுறவைக் கைவிட்டனர். உதாரணமாய் - நீண்ட கால வாழ்வை விரும்பும் ஹத யோகிகள் மெதுவாக - இயங்கும் செய்முறையை

மேற்கொண்டவர்கள் - அவர்களுடையதை மாட்டுவண்டி முறை என்பார்கள் - அவர்களுக்கு அதை முடிக்க வெகுநேரம் தேவைப்படும், தங்களுடைய யோகத்தை முடிக்க அவர்களுக்கு நெடிய வாழ்க்கை தேவைப்பட்டது.

'ஞானத்தைப் பெறுவதற்காய் அவர்கள் பாலுறவைக் கைவிட்டார்கள்'

அவர்கள் எப்படி அதைக் கைவிட்டார்கள்? சில குறிப்பிட்ட ஆசன வகைகளில் இருந்து இயக்கு நீர் ஓட்டத்தை (hormonal flow) மடை மாற்றினார்கள். தேக ரீதியாய் சில பயிற்சிகளைச் செய்து விந்துவை மீண்டும் இரத்த ஓட்டத்தில் கலந்துவிடும்படிச் செய்தார்கள். உடம்பில் பல அபார வேலைகளை அவர்களால் செய்ய முடிந்தது, வெளிப்பட்ட விந்துவை திரும்பவும் உள்ளிழுத்துக் கொள்ளும் ஆற்றலும் அவர்களுக்கிருந்தது.

பாலுணர்வு சக்தியே உயிர்ச் சக்தி என்பதால், அதை உடலிலேயே உறிஞ்சிக் கொண்டுவிட பல செய்முறைகளை அவர்கள் உருவாக்கினர். அதிலிருந்து ஒரு குழந்தை பிறக்கும். அந்தச் சக்தியை மீண்டும் உங்கள் அமைவு (system)க் குள்ளாகவே உறிஞ்சிக் கொண்டுவிட்டால் நீங்கள் மிகவும் வலுவடைவீர்கள். நீண்ட காலம் வாழ முடியும். முதுமைக்கு விடை கொடுத்துவிடலாம். கடைசிநாள் வரை இளமையாகவே இருக்க முடியும்.

மேலும் பல வேறுபாடுகள் உள்ளன. உணவு ஒரு தனி நபரின் தேவை. நீங்கள் அதை நிறுத்தினால் இறந்துவிடுவீர்கள். பாலுறவு தனிநபரின் தேவையல்ல, அது ஓர் ஆளுகை. அதை நீங்கள் நிறுத்தி வைத்தால் நீங்கள் அதிலிருந்து நிறையவே பெற முடியும். ஆனால், நிறுத்துவதற்கு மூன்று வகைகள் உள்ளன.

நீங்கள் ஆசையை அடக்க முடியும். ஆனால் அது உதவாது. உங்களுடைய பாலுறவு சக்தி சரியான வழியிலிருந்து விலகிவிடும். வழிதவறச் செய்வதைவிட இயல்பாயிருந்து விடுவது மேல் என்று தான் நான் சொல்வேன். சமண, புத்த, கத்தோலிக்க துறவிகளில் நூற்றுக்கு தொண்ணூறு பேர் சுய இன்பம் காண்பவர்களாகவோ ஓரினப்புணர்ச்சியில் ஈடுபடுகிறவர்களாகவோ இருக்கிறார்கள். அவர்கள் அவ்வாறின்றி அடக்கிவைத்தால் அந்தச் சக்தி எங்கு போக முடியும்? அடக்கி வைக்கிறவர்கள் அதை நிலைமாற்றம் செய்வதில்லை; தேக வேதியியலை அவர்களால் மாற்ற இயல்வதில்லை. இன்னது செய்வதன்றறியாமல் அவர்கள் அடக்கி வைக்கிறார்கள். அடக்கி வைப்பது வழி தவறச் செய்கிறது. வழிதவறிச் செல்வது இயற்கையான போக்கைவிட கீழான தேயன்றி அதற்குமப்பால் செல்வதல்ல.

அங்கே இரண்டாவதாய் ஒரு செய்முறை உள்ளது. அது உடலின் இயக்குநீர் அமைவை மாற்ற முயல்வது. ஹத யோகிகளின் யோகாசனங்கள். உடலின் வேதியியலை மாற்றப் பல வழிகள் உள்ளன. இரண்டாவது செய்முறை முதலாவதை விட சிறந்தது. ஆனால் நான் அதற்கு ஆதரவாய் இருக்க மாட்டேன். ஏன்? ஏனென்றால் நீங்கள் உடலை மாற்றும்போது உங்களை மாற்றிக் கொள்வதில்லை. ஓர் ஆண்மையற்ற மனிதன் உடலுறவில் ஈடுபடாமல் இருப்பான். ஆனால் அதனால் பலனில்லை. ஹடயோக செய்முறைகளால் நீங்கள் ஆண்மையற்றவ ராகிறீர்கள். அந்த இயக்குநீர் அமைவு செயல்படுவதில்லை. அல்லது, இணைக்கப்பட்டிருக்கும் குழாய்கள் சிதைந்து போயிருக்கும், செயல்பட முடியாதிருக்கும். ஆனால் இது ஒன்றும் ஆன்மிக வளர்ச்சியாகிவிடாது. நீங்கள் அதனுடைய இயந்திர நுட்பத்தையே (mechanism) அழித்து விட்டீர்கள். ஆனால், நீங்கள் அதற்குமப்பால் செல்லவில்லை.

மேலும் இந்த முறையும் வாழ்வில் வேறுபல சிக்கல்களை உருவாக்கும். நீங்கள் பலவற்றைக் கண்டு பயப்படுவீர்கள். நீங்கள் பெண்களைப் பார்த்து பயப்படுவீர்கள். காரணம் அவள் நெருங்கி வரும் தருணத்தில் உங்கள் உடலின் வேதியியலை நீங்கள் மாற்றிவிடுகிறீர்கள். அது பழைய மாதிரி செயல்புரியத் தொடங்கும். பாலுணர்வு சக்தி திரும்பிவிடும். பெண்ணிடம் ஒரு சக்தி உண்டு. காந்த சக்தி. அது உங்கள் உடலின் வேதியியலை மாற்றிவிடும்.

அதனால் தான் ஹட யோகிகள் பெண்களைக் கண்டு பயப்படு கிறார்கள். அவர்கள் இமயமலைக் கூட்டத்திற்குள் சென்று விடுகிறார்கள். குகைகளில் வசிக்கிறார்கள். பயம் என்பது ஒரு நல்ல விஷயம் அல்ல. பயப்படுகிறவர் அதிலேயே உழலும்படி ஆகும். அது எப்படியெனில் ஒருவன் பெண்களையே பார்க்கக் கூடாது என்பதற்காகத் தனது கண்களையே குருடாக்கிக் கொள்வது போன்றது. அது முழுமையான பயனைத் தராது.

மூன்றாவது வகை அதைப் பற்றி அதிகக் கவனத்துடன் இருப்பது. உடம்பை மாற்ற வேண்டாம், அது நன்றாகவே உள்ளது. அது இயற்கையாகவே இருக்கட்டும், நீங்கள் அதிக உணர்வுடையவராகி விடுவீர்கள். மனதிலோ உடம்பிலோ எது நடந்தாலும் அதை உணர்வோடு கவனியுங்கள். உங்களுடைய மொத்த இருப்பிலும், நுட்பமான உள் அடுக்குகளிலும் நடப்பதை மேலும் மேலும் உணருங்கள். உணர்வோடு இருப்பதன் மூலம், ஒரு சாட்சியாய் இருப்பதன் மூலம் நீங்கள் மிக உயர்ந்த நிலைக்கு எழுகிறீர்கள். உங்களுடைய உயரத்தின் காரணம், உங்கள்

உச்சகட்ட விழிப்புணர்வின் காரணமாய், பள்ளத்தாக்கு அங்கே இருந்தாலும் அதன் ஒரு பகுதியாய் நீங்கள் இருப்பதில்லை, அதை கடந்து விடுகிறீர்கள். உடல் பால் சார்ந்ததாயிருந்தாலும் அத்துடன் ஒத்துழைப்பதற்கு அங்கே நீங்கள் இருப்பதில்லை. உடல் முற்றிலும் இயல்பாயிருக்க நீங்கள் அதைக் கடந்து சென்று விடுகிறீர்கள். உங்களுடைய ஒத்துழைப்பு இல்லாமல் அது இயங்குவதில்லை. இதுதான் ஒரு புத்தரில் நிகழ்வது.

புத்தர் என்ற வார்த்தைக்கு விழிப்புணர்வு பெற்றவர் என்று பொருள். அது கவுதம புத்தருக்கு மட்டுமே உரியதல்ல. புத்தர் ஒரு தனிப்பட்ட பெயரல்ல, அது இருப்புணர்வின் (being) பண்பு. கிறிஸ்து ஒரு புத்தர், கிருஷ்ணர் ஒரு புத்தர், ஆயிரக்கணக்கான புத்தர்கள் இருந்திருக்கிறார்கள். அது இருப்புணர்வின் பண்பு? எத்தகைய பண்பு? - உணர்ந்திருத்தல். விழிப்புணர்வின் சுவாலை மேலெழுகிறது, உடல் நுட்ப உணர்வோடு, சிற்றின்ப வேட்கையோடு, உயிர்த்துடிப்போடு முழுமையாய் இயங்கிக் கொண்டிருக்க உங்கள் ஒத்துழைப்பு மட்டும் இல்லாமல் போய்விடுகிறது. இப்போது நீங்கள் ஒரு சாட்சியாயிருக்கிறீர்கள், செய்பவராயில்லை - பாலுணர்வு மறைகிறது.

உணவு மறையாது, ஒரு புத்தருக்குக்கூட உணவு தேவைப்படும் காரணம் அது தனிநபரின் தேவை, சமூகத் தேவையோ, ஓர் இனத்தின் தேவையோ அல்ல. உறக்கம் மறைந்துவிடாது. அது ஒரு தனிநபரின் தேவை. தனி நபருக்குரியவை எல்லாம் இருக்கும். இனத்துக்குரியவை எல்லாம் மறைந்துவிடும். இந்த மறைதலிலும் இருக்கிறது ஒரு தனியழகு!

ஒரு ஹடயோகியை நீங்கள் கவனித்தால் தெரியவரும் அவனுடைய முடங்கிவிட்ட இருப்புணர்வு. அவனுடைய முகத்தில் நேர்த்தியாய் எதுவும் இருக்காது. அவனிடம் அழகிருப்பதில்லை, தன்னுடைய வேதியியலை அவன் சீரழித்துவிட்டிருப்பான். உணர்ச்சிகளை அடக்கி வைக்கும் ஒரு துறவியை நீங்கள் பாருங்கள், அவன் மிகவும் அருவருப்பாய் தெரிவான். அவனுடைய கண்களிலும் முகத்திலும் இருந்து காமக் ரோதங்கள் அவனைச் சுற்றியுள்ள எல்லா இடங்களிலும் சிதறிவிழுந்து கொண்டிருக்கும். தன்னைச் சுற்றி ஒரு மாசுபடிந்த, அருவருக்கத்தக்க சூழலை அவன் ஏற்படுத்தி யிருப்பான். இயல்பான மனிதன் மேம்பட்டவன். ஆனால் வழிதவறிப் போனவனோ நோயைப் பரப்புகிற ஒரு நோயாளி மாதிரி.

நான் மூன்றாவது வகைக்கு ஆதரவானவன், ஆனாலும் இடைப்பட்ட நேரத்தில் நீங்கள் இயல்பாகவே இருங்கள், உடம்பை முடக்கிப் போடும் எந்தவொரு செயல்முறையையும் முயன்று பார்க்கத் தேவையில்லை.

இயல்பாயிருங்கள், உங்களுடைய புத்தி நிலைக்குச் செயல்படுங்கள். இயல்பாயிருங்கள், அதிக எச்சரிச்கையுடனும், உணர்வுடனும் இருங்கள். பாலுணர்வு மறையக் கூடிய ஒரு தருணம் வரும். அது தன்னால் மறையும்போது ஓர் ஒளியை, அழகை விட்டுச் செல்லும். அதை மறையும்படி கட்டாயப்படுத்தாதீர்கள், இல்லையோ அதுபல காயங்களை விட்டுச் செல்லும், நீங்கள் எப்போதும் அந்தக் காயங்களுடனேயே இருக்கும்படி ஆகும். அது தன்னால் போகட்டும் என்று விட்டுவிடுங்கள். அவசரப்படாதீர்கள், ஒரு சாட்சியாய் இருங்கள். இயற்கை விரும்பத் தக்கது, இயற்கை அழகானது, நீங்கள் இயல்பாயிருங்கள். நீங்கள் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிலையை அடையும் வரை இயற்கையுடன் போரிடாதீருங்கள்.

'உன்னதத்தை உங்களுக்குள் வர விடுங்கள்'

எல்லாவற்றிலுமே என்னுடைய மனோபாவம் இப்படித்தான். இழிவானவற்றுடன் போரிடாதீர்கள். உயர்ந்தவற்றை வேண்டி நில்லுங்கள். கீழானவை தீண்டப்படாமலே இருக்கட்டும், உயர்ந்தவற்றை அடையப் பாடுபடுங்கள். நீங்கள் இழிந்தவற்றுடன் போரிட்டுக் கொண்டிருந்தால் அவற்றுடனேயே இருக்க வேண்டியதுதான், அங்கிருந்து நகர முடியாது. இயற்கையோடு இணைந்தவராயிருங்கள், இயற்கை உங்களுக்கு இடைஞ்சலாயிருக்காது. நீங்க்ள உயர்நிலை அடையும்படி தனியே விடப்படுவீர்கள். உயர்ந்தவற்றை அடையப் பிரார்த்தியுங்கள், உயர்ந்த நிலையைப் பெற தியானியுங்கள், இயற்கை இருப்பது போலவே இருக்கட்டும்.

சீக்கிரமே இயற்கைக்கு அப்பாற்பட்டது தோன்றும். இயற்கையில் இருந்தே இயற்கைக்கு அப்பாற்பட்டது தோன்றுகிறது. பின்பு அங்கே அருள் இருக்கும், அழகிருக்கும், இணைத்துப் பார்க்க முடியாத பேரின்பம் இருக்கும்.

இன்னொரு பரிமாணத்திலிருந்து பார்த்தால் அதைத் தெரிந்து கொண்டிருப்பது உங்களுக்கு நல்லது. பாலுணர்வு உடலுக்குரியது. காதல் சூட்கும உடல் சார்ந்தது, பிரார்த்தனை மையப்பகுதியுடன் தொடர்புடையது. அதுவே உங்கள் இருப்பின் அடிப்படையாகும். பாலுணர்வு புற எல்லையில் இருப்பது, பிரார்த்தனை நடுப்பகுதிக்குரியது. நடுப்பகுதிக்கும், வெளிப் பகுதிக்கும் இடையில் இருப்பது காதல். புத்தர் வழிபாட்டு ஒழுக்கத்தில் கனிந்தவர், அவர் மையப்பகுதியைச் சென்றடைந்தவர். நீங்கள் மையத்தை அடைவதற்கு முன்னால் வெளிப்பகுதிக்கும் நடுப்பகுதிக்கும் இடையில் சென்று கொண்டிருப்பீர்கள். அன்புடன் நேசிப்பவராயிருப்பீர்கள்.

வெளிப்பகுதியில் இருக்கும் போது உங்களுடைய காம இச்சை மேலோங்கியிருக்கும். பாலுணர்வு மிகுந்திருக்கும். வெளிப்பகுதியில் இருக்கும்போது பாலுறவு ஒரு தேவையாய் இருக்கிறது. வெளிப் பகுதிக்கும் நடுப் பகுதிக்கும் இடையில் காதல் தேவையாகிறது. அதே சக்திதான் நீங்கள் அதை மாற்றும்போது தேவைகள் மாறுகின்றன. நடுப் பகுதியில் (மையத்தில்) பிரார்த்தனை பரிவு தேவையாய் இருக்கும். எங்கும் எதிலும் ஒரே சக்திதான். எனவே, புத்தர் பாலுறவுப் பசியால் வருந்தவில்லை. அதே சக்தி இரக்க உணர்ச்சியாகி விட்டது. நேசம் உள்ளவன் பாலுறவில் பசி வருத்தம் அடைவதில்லை. அதே சக்தி நேச உணர்வாயிற்று. தேவைகள் பற்றிய இந்த ஆராய்ச்சி புரிந்து கொள்ளப்பட வேண்டியது.

தேவை உடலில் இருக்கிறது, ஆனால் நீங்கள் உடலிலிருந்து மிக ஆழமாய் சென்றால் இந்தத் தேவை மாறுபடும். தேவை உங்களைத் தொடரும். பால் சார்ந்த கற்பனைகள் நிரம்பியிருந்தால் நீங்கள் வெளிச்சுற்றிலேயே நின்று விட்டீர்கள் என்று அர்த்தம். அங்கிருந்து செல்லுங்கள், ஏன் வெளிச்சுற்றிலேயே இயங்கிக் கொண்டிருப்பது. இலட்சோபலட்சம் பிறவிகளாய் அங்கேதான் செயல்பட்டுக் கொண் டிருக்கிறீர்கள். ஆனால் தேவைதான் பூர்த்தி செய்யப்பட்ட பாடில்லை. அதைப் பூர்த்தி செய்ய முடியாது. கவனியுங்கள், எந்தத் தேவையும் நிறைவு செய்யப்படுவதில்லை. நீங்கள் உணர்கிறீர்கள். எட்டுமணி நேரத்துக்குப் பிறகோ, ஆறுமணி நேரத்திலோ உங்களுக்கு மீண்டும் பசியெடுக்கிறது. எந்தத் தேவையும் நிறைவு செய்யப் படுவதில்லை. அது தற்காலிக நிறைவாகவே இருக்கும். நீங்கள் உடலுறவு கொள்கிறீர்கள். சிலமணி நேரத்தில் மீண்டும் தயாராகிறீர்கள்.

தேவைகளை நிறைவு செய்யமுடியாது காரணம் அவை ஒரு வட்டத்தில் சுற்றிக் கொண்டிருப்பவை.

உங்கள் தேவைகளுக்கும் மேலே செல்லுங்கள். தேவைகளுடன் போரிட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. அவற்றுக்கு இட மளியுங்கள். நீங்கள் அங்கிருக்கும் போது அனுபவித்து மகிழுங்கள். ஏன் போரிட வேண்டும்? அனுபவிக்கலாமே. குற்ற உணர்வை ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள், நீங்கள் எந்த அளவு குற்ற உணர்வைக் கொள்கிறீர்களோ அந்த அளவு அதை அடக்கி வைக்க முற்படுவீர்கள், அங்கிருந்து செல்வதென்பது உங்களுக்குச் சிரமமாய் தெரியும். நீங்கள் காதலித்தால், உடலுறவு கொள்ளுங்கள், அதை அனுபவித்து மகிழுங்கள். குற்ற உணர்வு கொள்ளாதீர்கள், உங்களை ஒரு பாவியாய் கருதிக் கொள்ளாதீர்கள். பாவமே என்றாலும் அதை சரிவரச் செய்யுங்கள், அதில் திறமையான வராயிருங்கள்.

எனக்கு லூதர் நினைவுக்கு வருகிறார். பெக்கா ஃபார்ட்டிலர் என்கிற சீடர் லூதரிடம் கேட்டார், 'நான் என்ன செய்வது, என்னால் பாவங்கள் செய்வதை நிறுத்த முடியவில்லையே' என்று. லூதர் சொன்னார், 'இன்னும் திடமாகப் பாவம் செய்' என்று. ரொம்ப சரி. லூதரின் சிந்தனைகளுடன் நான் எப்போதும் ஒத்துப் போகிறவனல்லன், ஆனால், இதைப் பொறுத்தவரை நான் முற்றிலும் அவரை ஆதரிக்கிறேன். 'இன்னும் திடமாகப் பாவம் செய்'. உங்களால் ஒன்றை நிறுத்த முடியாவிட்டால் அதுபற்றிப் பிறகேன் கவலைப்படுவது? பாவத்தை இன்னும் பலமாய் செய்யுங்கள். காரணம் அதன் உச்சத்தில் நிலைமாற்றம் சாத்தியமாகும். ஏனோ தானோவென் றிருப்பவர்கள் ஒரு போதும் மாற்றமடைவதில்லை.

ஒருபோதும் அக்கறையற்றவராயிருக்காதீர்கள். அந்த ஒரு முட்டாள் தனத்தை மட்டும் நீங்கள் செய்து கொண்டே இருக்க முடிகிறது. காரணம் நீங்கள் நூற சதவிகித கொதி நிலை அடையும்போது தான் ஆவியாதல் நேரிடுகிறது. நீங்கள் அக்கறையற்றவராய் ஆயிரம் ஜென்மங்கள் இருந் தாலும் எதுவும் நிகழாது. உச்சத்துக்கு செல்லுங்கள். நீங்கள் பாலுறவில் ஈடுபட்டிருந்தால் அதில் முழுமையாய் கவனம் செத்துங்கள். எவ்வித முரண்பாடும் வேண்டாம், எதையும் தடுத்து நிறுத்தவோ கொடுக்காமல் வைத்துக் கொள்ளவோ வேண்டாம். தொடர்ந்து செயல்படுங்கள். பாலுறவை அதன்போக்கில் திகழ விடுங்கள். விழிப்புணர்வுக்காய் செயல்படுங்கள். மேலும் மேலும் தியானம் செய்யுங்கள், போகப்போக அதே சக்தி மாறுவதை, மாற்றம் செய்வதைக் காண்பீர்கள்.

நீங்கள் மாறும்போது அந்தச் சக்தியும் மாறுகிறது. காரணம் அச்சக்தி உங்களோடு தொடர்புடையது. உங்களுடைய நோக்கும் கோணம் மாறும்போது, அந்த சக்தியும் தன்னுடைய நிலையை மாற்றிக் கொள்ளும் படியாகிறது. உங்களுடைய இருப்புணர்வின் தளம் மாறுகிறபோது, சக்தியும் உங்களைப் பின்பற்றும். அது உங்களுடைய சக்தி.

நீங்கள் மையப் பகுதியை நோக்கிச் செல்லும் போது கொஞ்சம் கொஞ்சமாய் பாலுணர்வு மறைவதையும், காதல் வலுப்பெறுவதையும் காண்பீர்கள். நீங்கள் மேலும் நேசிப்பவராகி விடுகிறீர்கள். தற்போது காதல் ஓர் இச்சையாயிருக்காது.

'காதல் கொழுந்துவிட்டெரியும் நெருப்பல்ல, அது குளிர்ச்சி பொருந்திய ஒளியாகும்'

பாலுணர்வோ கனல்கக்கும் நெருப்பு. அது கடுமையான வெப்பத்தை உடைய சூரியன். காதலோ ஒளிவீசும் குளிர் நிலவு. குளிர்ச்சியும் அமைதியும் கொண்டது. காதலில் ஒரு நிசப்தம் ஊருடுவிப் பரவும்.

அப்போது கொஞ்சம் கொஞ்சமாய் பாலுறவு விலகிச் செல்லும், வெகுதூரம் விலகிச் சென்றுவிடும். அதே சக்தி காதலில் உட்புகும். நீங்கள் பசி வருத்தமாய் உணரமாட்டீர்கள். மாறாக, அதிக அளவில் நிறைவுற்றதாய் உணர்வீர்கள். காரணம் காதல் அதை நிறைவு செய்கிறது என்பதே உண்மை. அது பாலுறவில் மிக உயர்ந்த நிலை, நீங்கள் மேல்நோக்கிச் செல்கிற ஒவ்வொரு முறையும் மேலும் நிறைவுற்றதாய் உணர்வீர்கள். காரணம் உணர்ந்தவை எல்லாம் நுட்ப சக்திகளாயும் இருக்கும். அவை முரட்டுத் தனமானவை அல்ல, நுட்பமானவை. அவை நிறைவைத்தரும் நிறை வளிக்கும். பின்பு விழிப்புணர்வாய் தொடரும். நீங்கள் மையப் பகுதியியில் நிலை கொள்கிற, மையப் பகுதியாகிவிடுகிற ஒரு நாள் வரும். அப்போது காதலும் ஒரு புதிய பரிமானத்தை அடையும், அது இரக்க உணர்வாய் மாறும்.

இதில் என்ன வேறுபாடுள்ளது? பாலுறவில் உங்களைப் பற்றியே நீங்கள் அக்கறை கொள்வீர்கள், அடுத்தவரைப் பற்றிய அக்கறை இருக்காது. அடுத்தவரை உங்கள் தேவைக்குப் பயன்படுத்திக் கொள்வதோடு சரி. அதனால்தான் பால் சார்ந்த கூட்டாளிகள் ஓயாமல் சண்டையிட்டுக் கொள்வது காரணம், 'அவர் என்னைப் பயன்படுத்திக் கொள்கிறார்' என்ற உள்ளார்ந்த உணர்வு. பால் சார்ந்த கூட்டாளிகள் இணக்கத்துக்கு வருவதில்லை. அவர்கள் மீண்டும் மீண்டும் சண்டையிடுவார்கள். காரணம் தன்னை ஆண் பயன்படுத்திக் கொண்டதாய் பெண் நினைக்கிறாள்.

அதில் தவறில்லை. பெண் தன்னைப் பயன்படுத்திக் கொள்வதாய் ஆண் நினைக்கிறான். உங்களை ஒருவர் கருவியாய் பயன்படுத்திக் கொண்டால் உங்கள் மனம் புண்படுந்தானே. அது ஒரு சுரண்டல், சுயநலத்துக்காய் பயன்படுத்திக் கொள்கிற வேலை அல்லவா. ஆண் தன்னுடைய பாலுறவு பற்றியே அக்கறை கொள்வான், பெண் தன்னுடைய பாலுறவு பற்றியே அக்கறை கொண்டிருப்பாள். ஆனால், இருவரில் யாரும் அடுத்தவரிடம் செல்லத் தயாரில்லை. அந்தச் செயல்படும் தன்மை அங்கில்லை. இருவருமே சுயநலக்காரர்கள், சுயத்திலேயே மையம் கொண்டவர்கள் ஒருவர் அடுத்தவரை ஏமாற்றிச் சுரண்டப்பார்ப்பார்.

அவர்கள் காதலைப் பற்றிப் பேச, பாட, கவித்துவமாய் இருக்க வேண்டியிருந்தால் அது வெறும் கவர்ச்சியாய், நயந்து பேசி நம்பவைப்ப தாய், தவறான வழியில் செலுத்துவதாய் இருக்கும். ஆனால் அவர்கள் மற்றவரிடம் அக்கறை காட்டுவதில்லை. ஆண் ஒரு முறை பெண்ணைப் பயன்படுத்திய பிறகு கவிழ்ந்துபடுத்து தூங்க ஆரம் பித்துவிடுவான். அவனைப் பொறுத்தவரை - பயன்படுத்திய ஒன்றை தூக்கியெறிவது போல் 'முடிஞ்சாச்சு' அவ்வளவுதான்.

அமெரிக்காவில் பிளாஸ்டிக்கில் ஆண்களையும், பெண்களையும் செய்து வைத்திருக்கிறார்கள். அவை நல்லபடியாய் இயங்குகின்றன. பிளாஸ்டிக் பெண்ணின் மார்பகத்தை நீங்கள் கையாளும்போது அவை விம்மிப் புடைக்கின்றன, வெப்பமடைகின்றன. நீங்கள் அந்த பிளாஸ்டிக் பெண்ணுடன் உறவு கொள்கிறபோது அது அசலான பெண்ணைப் போலவே திருப்தியளிப்பதாயிருக்கும். அது மட்டுமா சண்டையோ முரண்பாடோ இருக்காது. முடிந்ததும், அந்தப் பெண்ணைத் தூக்கியெறிந்து விட்டு நீங்கள் உறங்கச் செல்லலாம். எல்லாரும் அதைத்தானே செய்கிறார்கள். பெண் பிளாஸ்டிக்காயிருந்தால் என்ன, அசலாயிருந்தால் என்ன வேறுபாடு கிடையாதே. பெண்ணும் ஆணைப் பயன்படுத்தத் தான் செய்கிறாள்.

நீங்கள் ஒருவரைக் கருவியாய் பயன்படுத்துவது ஒழுக்கம் கெட்ட தன்மையாகும். உங்கள் இருப்புணர்வின் இரண்டாவது கட்டத்தில்தான், நீங்கள் அவரிடம் அன்பு செலுத்துகிறபோதுதான் அடுத்தவர் தன்னுள் விளைவைக் காண்கிறார், எல்லையைத் தொடுகிறார். இரண்டாவது கட்டத்தில் நீங்கள் அடுத்தவருக்காக உறவில் ஈடுபடுகிறீர்கள், அதில் அவரைப் பயன்படுத்திக் கொள்ளும் நிலை கிடையாது. அடுத்தவருக்கு முக்கியத்துவம் கிடைக்கிறது. உறவில் ஏமாற்று இல்லை. நீங்கள் அவருக்கு உதவுகிறீர்கள். அதுபேரம் ஆகாது. நீங்கள் உதவுவதில், பகிர்ந்து கொள்வதில் மகிழ்ச்சியடைகிறீர்கள். பகிர்ந்து கொள்ளும் வாய்ப்புக்காக அடுத்தவரிடம் நன்றி பாராட்டுகிறீர்கள்.

காதல் நுட்பமானது. பாலுறவின் மொத்த ஆட்சி எல்லையும் உதறப்படுகிறது. மற்றவர் ஒரு முடிவுக்குக் கொண்டு வந்த பிறகும் ஒரு தேவை, நுட்பமான தேவை இருக்கும். நீங்கள் ஒருவரைக் காதலிக்கும் போது உங்களுக்குள் ஒரு நுட்பமான எதிர்பார்ப்பு (எங்காவது ஒரு மூலையில்) இருக்கவே செய்யும், அவரும் நம்மைக் காதலிக்க வேண்டும் என்கிற எதிர்பார்ப்பு, அதை நீங்கள் உணராதிருக்கலாம். அடுத்தவர் நம்மைக் காதலிக்க வேண்டும் என்கிற எண்ணம் நிழலாய் தொடரும். அந்த எதிர்பார்ப்பு பாலுறவைக் காட்டிலும் மேலான தேவையாய் இருக்கிறது. ஆனால் அது ஒரு பொருத்தமற்ற ஒலிபோன்றது, முழுமையற்றது.

அன்பெனும் பண்பில் மிக உயர்ந்தநிலை இரக்கவுணர்ச்சி, அதிகபட்சத் தூய்மை கொண்டது. தற்போது அங்கே எதிர்பார்ப்பும் இல்லை. அடுத்தவர் கருவியாயிருக்கவில்லை, அடையத்தக்க எல்லையாய் இருக்கிறார், அடுத்தவர் வழியாயிருக்கவில்லை குறிக்கோளாயிருக்கிறார். தற்போது நீங்கள் எதையும் எதிர்பார்க்கவில்லை, உங்களால் கொடுக்க

*முடிகிற எதையும் கொடுப்பவராயிருக்கிறீர்கள். எதிர்பார்ப்பு சுத்தமாய் போய்விட்டது. புத்தர் முழுமையாய் வழங்கிவிடுகிறவர். கொடுத்துக் கொண்டேயிருப்பார், கொடுப்பதில் மகிழ்ச்சி அடைவார்.*

*கொடுப்பது ஒரு பகிர்ந்து கொள்ளும் நிலையாகும். இப்போது அது இரக்கவுணர்ச்சியாகி விடுகிறது. இருப்புணர்வின் வெவ்வேறு தளங்களில் அதே சக்தி அதே தேவை. அதனால்தான் புத்தரில் பாலுணர்வு இல்லை, காரணம் அது இரக்கமாய் மறுத்தோற்றம் அடைந்து விடுகிறது.*

**நான்காவது கேள்வி:**

**ஜங், ஃப்ராய்டு இவர்களின் வாழ்க்கையைப் பற்றி நீங்கள் பேசினீர்கள், ஜானவ் தம்முடைய செயல்முறைகளை முயன்று பார்க்கவில்லை என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். அவர் பேராவல் கொண்ட மனிதராய் தெரிகிறார். அவருடைய செய்முறைகள் பற்றி நீங்கள் கருத்து தெரிவிப்பீர்களா? மேலும், அவர் குறைந்தபட்ச அளவிலேனும் தம்மைக் குணப்படுத்திக் கொண்டாரா?**

*மேற்கத்திய சிந்தனையாளர்களிடம் இதுதான் பிரச்சினை. அவர்கள் தங்களுடைய சொந்தச் செயல்முறைகளைச் சோதித்தறிவதில்லை. உண்மையில், அவற்றைத் தங்களுடைய ஆராய்ச்சியின் ஒரு பகுதியாய் அவர்கள் கணக்கிட்டுச் செயல்படவில்லை. தங்கள் நோயாளிகளைப் பரிசோதிக்கிறபோது தற்செயலாய் கண்டறிந்தவைதாம்.*

*ஃப்ராய்டின் 'உளவியல் பகுப்பாய்வு' தற்செயலாய் அவருக்குத் தட்டுப்பட்டதுதான். அது இருட்டில் துழாவி எடுக்கிறமாதிரி. அவர் நோயாளிகளுக்கு சிகிச்சையளித்துக் கொண்டிருந்தார். காலப்போக்கில் எண்ணற்ற நோய்கள் உடல் சாராதவை என்பதை அவர் கண்டறிந்தார். அத்தகைய நோய்களில் உடல் சார்ந்த சிகிச்சைகள் பயன்படாது. பிறகு *அறிதுயில் சிகிச்சையில் (Hypnosis) அவர் ஆர்வம் காட்டினார். அவர் பல ஆண்டுகள் அறிதுயில் சிகிச்சை அளிப்பவராய் இருந்திருக்கிறார். ஆனால் அது சிறந்த பலனை அளிப்பதில்லை என்பதைப் பிற்பாடு உணர்ந்தார். ஒரு மனிதனை அறிதுயிலில் ஆழ்த்தி, பிரக்ஞையற்று போகச் செய்யும் அவசியமில்லை. ஒருவன் பிரக்ஞையுடன் இருந்து, தன் மனதில் தோன்றுகிறவற்றை (உணர்வற்றதில் இருந்து உணர்வு மனுக்குக் கொண்டுவந்து) வெளிப்படுத்தினாலும் விடுபட்ட நிலையை அடைவான். இதனை உணர்ந்த ஃப்ராய்டு அதைச் சோதித்துப் பார்க்கத் தொடங்கிய*

---

** அறிதுயில் (Hypnosis) - மன ஆற்றல் கொண்டு தூண்டப்படும் அறிதுயில் நிலை.*

போது தான் 'உளவியல் பகுப்பாய்வு' தோன்றியது. அது தடையற்ற எண்ணங்களின் சேர்க்கை. அவர் எதையும் தன்மீதே சோதித்து அறிய வில்லை. அவர் அதே ஆளாகத்தான் இருந்தார், முதிர்ச்சி அடையவில்லை.

ஜானவ் உள்ளிட்ட மற்றவர்கள் விஷயத்திலும் அப்படித்தான் நடந்தது. ஒரு நோயாளி பின்னோக்கிச் சென்று (பிறந்தபோது இருந்தநிலை) வாழ்வானேயானால் - குழந்தையின் அழுகை ஒலியில் இருந்து அனைத் தையும் அவன் மறுபடி வாழ்ந்தால் அப்போது பலவகைப் பிரச்சினைகள் தீர்ந்து விடுகின்றன, நோய்கள் நீங்கி விடுகின்றன பல நோயாளிகளிடம் பணியில் ஈடுபட்டிருந்தபோது தான் இந்த உண்மை அவருக்குத் தட்டுப்பட்டது. இதனை அவர் தன்னிடமே முயன்று பார்த்ததில்லை.

ஃப்ராய்டு பேராவல் கொண்டவராயிருந்தார். உலகின் மிகப்பெரிய இயக்கமொன்றைத் தொடங்கி வைத்த தீர்க்கதரிசியாய் தம்மை அவர் எண்ணிக் கொண்டார். பொறாமையும், சூழ்ச்சியும் கொண்ட அரசியல் வாதிகளைப்போல் அவர் பொறாமைப்பட்டார். தம்முடைய சீடர்களையும், உதவியாளர்களையும் உளவு பார்த்தார்.

தம்முடைய இயக்கத்தை யாரோ அழிக்கப்போவதாய் எண்ணி நடுங்கிக் கொண்டிருந்தார், அதைச் சுவாதீனப்படுத்தி அதன் தலைவராகி விடுவார்கள் என்று அஞ்சினார்.

ஜங்விஷயத்திலும் அதே கதைதான். நீங்கள் ஜங்கின் கண்களுக்குள் பார்த்தால்... ஜங்கின் படத்தை எப்படியாவது தேடிப் பிடியுங்கள், அதை ஆராய்ந்தறிவது தகுதியாயிருக்கும். கண்ணாடிக்குப் பின்னால் மறைந் திருக்கும் அந்தக் கண்கள் தந்திரமானவை, அவருடைய முகம் முழுக்கப் பரவிக்கிடக்கும் அகந்தை. ஜானவ் பேராவல் கொண்டவர், அவருடைய புத்தகங்களில் அவரது ஆவல் தெளிவாய் தெரியும். எதிர்பாராதவிதமாய் ஒரு செய்முறை அவருக்குத் தட்டுப்பட்டது. அது ஒரு முழுமையான அமைவு (system) அல்ல. அது உடைந்த சிறிய துண்டு அல்லது ஏதோவொன்றின் எஞ்சிய பகுதி போன்றது. ஆனால், அவரோ தாம் ஒரு பெரிய உண்மையை கண்டறிந்தது போல் நினைக்கிறார். அவர் நினைப்பது மூலாதார சிகிச்சை (primal therapy) ஒன்றே இப்போதைய தேவை என்பதும், எல்லாரும் பூர்வத்துக்கே திரும்புவார்கள் - நிர்வாணத்தை நோக்கிச் செல்வார்கள் என்பதுந்தான். இது முட்டாள் தனமானது, இதுவே பேராவல்.

மேலை நாட்டுச் சிந்தனையாளர்கள் பற்றி நினைவில் கொள்ள வேண்டிய இரண்டாவது சங்கதி, அவர்கள் உடல் நலம் குன்றியவர்களுடன் பணிபுரிந்து கொண்டிருந்தார்கள் என்பது. அவர்கள் முழுமையான

நலமுடன் திகழ்பவர்களைத் தங்கள் பணியில் சந்தித்தது கிடையாது. எனவே, அவர்களுடைய கண்டுபிடிப்புகள் எவையாயினும், நோய்க்கூறு இயலின் (Pathology) அடிப்படையிலேயே அவை அமைந்தன. நல்ல உடல் நலமுள்ள ஒருவன் உண்மையில் நோய்வாய்ப்பட்ட மனிதனிலிருந்து முற்றிலும் வேறுபட்டவன். ஃப்ராய்டு முழுமையான உடல் நலம் கொண்ட ஒரேயொரு நபரைக்கூட பரிசோதித்ததில்லை. முழுமையான ஆரோக்கியம் உள்ள ஒருவன் எதற்காக மருத்துவரிடம் செல்லப் போகிறான்? அதற்குத் தேவையேயில்லை. நோய் உள்ளவர்கள் தாம் மருத்துவர்களைத் தேடிச் செல்வார்கள். ஃப்ராய்டு, ஜங், அட்லர், ஜானவ் போன்றவர்கள் நோயுற்றவர்களை அடிப்படையாய்க் கொண்டே தங்கள் தத்துவங்களை உருவாக்கியது.

இந்தத் தத்துவங்கள் சமநிலை கொண்டிருக்கவில்லை. சமநிலையில் இல்லாததோடு அபாயகரமானதாயும் இருக்கின்றன. நோயுற்ற சிலர் மட்டும் எப்படி ஒட்டுமொத்த சமுதாயத்தின் பிரதிநிதியாக முடியும்? அவர்கள் நோயுற்றவர்கள். நீங்கள் ஒரு கண் மருத்துவர் என்பதால் பார்வைத்திறன் குன்றியவர்கள் உங்களிடம் வருவார்கள். அதனால் மனிதர்கள் கண்பார்வை யற்றவர்கள் என்று கருதிக் கொண்டு விடுவீர்களா? மன உபாதை உள்ளவர்களைச் சோதிக்கிற மருத்துவர் எல்லா மனிதர்களையும் அப்படி எண்ணிக் கொண்டுவிட முடியுமா? ஆரோக்கியமுள்ள மனிதர்கள்தாம் நோய்க்குள்ளாவது. ஆரோக்கியம் இல்லாமல் நோய் இல்லை.

மேலை நாட்டு உளவியல்கள் அனைத்துமே நோய் நாடி நோய் முதல் நாடும் அறிவியலையே (Pathology) அடிப்படையாய்க் கொண்டவை. ஆரோக்கியமான மனிதனை அடிப்படையாய்க் கொண்ட ஓர் உளவியல் - உண்மையான உளவியல் அவசியப்படுகிறது. புத்தரைப் போன்ற ஞானிகளை அடிப்படையாய் கொண்டால் இன்னும் முழுமையாக இருக்கும்.

ஆக, உளவியல் மூன்று வகைப்படும். ஒன்று - நோய்க்கூறுவியல் (Pathology) மேற்கத்திய உளவியல் யாவும் நோய்க்கூறுவியல் சார்ந்தவையே. ஆரோக்கியமானவர்களைப் பற்றிச் சிந்திக்கும் போக்குகள் வலுப்பெற்று வருகின்றன என்றாலும் அவை தொடக்க நிலையிலேயே உள்ளன. கிழக்கத்திய உளவியல் ஆரோக்கியமான மனதை அடிப்படை யாய்க் கொண்டது. இது இரண்டாவது வகை. புத்தக் கொள்கை ஆழ ஊடுருவிப் பார்க்கும் உளவியலாகும். பதஞ்சலி தமக்கே உரிய உளவியலைத் தந்திருக்கிறார். ஆரோக்கியமானவர் தம்முடைய ஆரோக்கி யத்தை மேலும் அபிவிருத்தி செய்து கொள்ள அவை உதவும். நோய்க்

கூறுவியல் சார்ந்த உளவியலோ நோயுற்றவர்களை ஆரோக்கிய முள்ளவராக்கி உதவுவது.

மூன்றாவது வகை குருட்ஜீவினுடையது. அவர் குறிப்பிடும் 'முடிவான உளவியல்' (Ultimate Psychology) இன்னும் அபிவிருத்தி அடையாமலே உள்ளது. அவ்வகை புத்தர்களையே சார்ந்திருப்பதாகும். அது இன்னும் வளர்ச்சி அடையவில்லை ஏனெனில் புத்தரைக் கற்றறிய எங்கே செல்வது? புத்தரை எப்படிக் கற்பது? ஒரே ஒரு புத்தரைமட்டும் கற்றறிய முடியாது, பல புத்தாக்கள் தேவைப்படுகிறார்கள். அதன் பிறகே நீங்கள் ஒரு தீர்மானத்துக்கு வரமுடியும். ஆனால் என்றாவதொரு நாள் அந்த உளவியல் நிகழும், கட்டாயம் தேவைப்படும். மனிதப் பிரக்ஞையை முழுமையாய் கண்டுணரும் திறனை அது மட்டுமே வழங்க முடியும். ஃப்ராய்டு, ஜங், ஜானவ் இவர்கள் எல்லாருமே சரி நுட்பம் இல்லாதவர்கள். அவர்கள் தங்களை பரிசோதனைக்குட்படுத்தி ஆராய்ந்ததில்லை. இருட்டில் இடறி, துழாவி தாங்கள் கண்டெடுத்த சில துண்டுகளை முழுமையான அமைவாக (system) அவர்கள் எண்ணிக் கொண்டனர். ஒரு பகுதியை முழுமையான அமைவாய் வலியுறுத்திக் கூறினால் அது பொய்தான். பகுதி எப்போதுமே பகுதி தான்.

கீழை நாட்டு உளவியல் ஆரோக்கியமானவர்கள் முழுமையான ஆரோக்கியம் பெற உதவுகிறது. புத்தர்களின் உளவியலை - மூன்றாவது வகை, செயல்படுத்துவதே என்னுடைய முயற்சியாயிருக்கும். மனித பிரக்ஞையை முழுமையாய் ஊடுருவக் கூடியது அது ஒன்றுதான்.

நோய்க்கூறுவியலை அடிப்படையாய் கொண்ட உளவியல்கள் தகுதியானவைதாம், அவை நோயுற்றவர்களுக்கு உதவும் ஆனால் அவையே முடிவான குறிக்கோளாகிவிடாது. ஒருவர் இயல்பாய் இருக்க அவை உதவும், அதற்குமேல் எதுவும் இல்லை. எல்லாரும் இயல்பாய் இருக்கிறபோது ஒருவரை இயல்பாக்குவது பெரிய விஷயமாகிவிடாது. இயல்பாயிருக்கும் மனிதர்கள் ஆயிரக்கணக்கான வழிகளில் துன்புறு கின்றனர். உண்மையில் இயல்பாய்க் கொள்ள வேண்டியது சமுதாயத்தில் உள்ளவர்களுடன் ஒத்துப்போக முடிவதைத்தான். ஆனால் சமுதாயமே இயல்பற்றதாகிவிடலாம், ஒட்டுமொத்த சமுதாயமும் நோய்வாய்ப்பட் டிருக்கலாம். சமுதாயத்தில் உள்ளவர்களின் மனோபாவம் சரியில்லாதிருக்க லாம். இயல்பாயிருப்பதால் பெரிய லாபம் கிடைத்து விடப்போவதில்லை. சமுதாய இயல்புகளுக்கு அப்பால் நீங்கள் செல்லவேண்டும். பித்துப்பிடித்த சமுதாயத்தைக் கடந்து செல்லுங்கள். அப்போதுதான் நீங்கள் நலமுடன் திகழ்வீர்கள் முதல் முறையாக.

கிழக்கத்திய உளவியல்கள்: யோகா, ஸென், சூ∴பிஸம் இவை ஆரோக்கியமானவர்களை மேலும் ஆரோக்கியமும், புனிதமும் உடையவர்களாக்கும். மூன்றாவது வகை உளவியல் உடனடியாய் தேவைப் படுகிறது. காரணம், அது இல்லாமல் அந்தக் குறிக்கோளை நீங்கள் பெற முடியாது. அது இறுதி நிலையைக் கண்டுணரும் குறிக்கோள். குருட்ஜீவ் முயன்றார், ஆனால், தமது முயற்சியில் அவர் வெற்றி பெறவில்லை. காலம் கனிந்திருக்கவில்லை. நான் அதற்கான முயற்சியை மீண்டும் மேற்கொண் டிருக்கிறேன். அதில் வெற்றிபெறுவது கடினம், ஆனால் சாத்தியமுண்டு, தொடர்ந்து முயற்சிக்க வேண்டும். குறையற்ற கடைசி வரை நிலைக்கக் கூடிய 'முடிவான உளவியல்' (Ultimate Psychology) மீது இன்னும் சிறிது வெளிச்சம் விழுந்தாலும் அது விரும்பத்தக்கதாய், உதவக் கூடிய தாயிருக்கும்.

○

# 7. விழிப்பு நிலை:
# கடந்த காலத்தை எரிக்கும் நெருப்பு

12

நிறைவேற்றப்படுவது நிகழ்காலத்திலாயினும், எதிர் காலத்திலாயினும் கர்மானுபவங்களின் வேர்களாயிருப்பவை ஐவகைத் துன்பங்களேயாகும்

13

வேர்கள் அங்கிருக்கும்வரை வகுப்பு **(class)**, வாழும் காலம், அனுபவங்களின் வகைகள் இவற்றின் மூலம் கர்மா மறுபிறப்பில் நிறைவேற்றப்படும்.

14

நல்லொழுக்கம் மகிழ்ச்சியைக் கொடுக்கும், தீயொழுக்கம் வருத்தத்தைக் கொண்டுவரும்.

மனிதன் நிகழ்காலத்தில் இருப்பதாய் தோன்றலாம், ஆனால், அது தோற்றம் மட்டுமே. அவன் கடந்த காலத்தில் வாழ்கிறான் நிகழ்காலத்தின் வழியே அவன் கடக்கிறான், ஆனால், கடந்தகாலத்தில் வேரூன்றியவனாய் இருக்கிறான். சாதாரண பிரக்ஞைக்கு இந்த நிகழ்காலம் உண்மையில் சரியான தருணமாகாது. சாதாரண பிரக்ஞைக்கு (Consciousness) கடந்த காலமே உண்மையான நேரமாகும்.

'கடந்தகாலத்துக்கும் எதிர் காலத்துக்கும் இடையிலான வழியே நிகழ்காலம்'

கணநேரப்பாதை அது.

எதிர்காலம் என்பது விரிவு செய்யப்பட்ட கடந்தகாலமேயாம். அது கடந்தகாலத்தைத் திரும்பத்திரும்ப முன்னிறுத்தும். கடந்தகாலம் உண்மை யாயிருக்கிறது, எதிர்காலமுந்தான், ஆனால், சாதாரண பிரக்ஞைக்கு நிகழ்காலம் உண்மையானதாய் இருக்காது.

நிகழ்காலம் என்பது இல்லாமல் இருப்பதுபோல் தோன்றும். நிகழ் காலத்தைப் பற்றி நீங்கள் எண்ணும் போது அதைக் காணமுடியாது. ஏனென்றால் நீங்கள் கண்டுணரும்போது அது கடந்தகாலமாய் மாறி விட்டிருக்கும். ஒரு கணம் முன்பு - நீங்கள் அதைக் காணாத போது அது எதிர்காலத்தில் இருந்தது. புத்தர் போன்று பிரக்ஞையுடன், ஞானவாழ்வு வாழ்வோர்க்கு இந்த நிகழ்காலம் மட்டுமே இருப்பது. சாதாரண பிரக்ஞை உள்ளவர்களுக்கும், எப்போதும் உறக்கநிலையில் இருப்பவர்களுக்கும் உண்மையாய் தெரிவது கடந்தகாலமும், எதிர் காலமுந்தான். இந்த நிகழ்காலம் அவர்களுக்கு உண்மையாய் தெரியாது. நிகழ்காலம் உண்மை யாய் இருக்கும் விழிப்புடையவர்களுக்கு மட்டுமே. அவர்களுக்குக் கடந்தகாலமும், எதிர்காலமும் உண்மையற்றதாகும்.

ஏனிப்படி ஆனது? நீங்கள் ஏன் கடந்த காலத்தில் வாழ்வது? காரணம், மனம் கடந்தகாலத்தின் குவியலன்றி வேறேயென்ன. மனம் என்பது நினைவாகும். நீங்கள் செய்து முடித்தவையும், கனவாய்க் கண்டவையும், செய்ய விரும்பியவையும், செய்ய முடியாமல் போனவையும், கடந்தகாலத்திய கற்பனைகளும் உங்கள் மனதில் இருக்கிறது. மனதின் செயலுண்மைநிலை (emtity) மரித்துப் போனதாகும். நீங்கள் மனிதன்

வழியே பார்த்தால் நிகழ்காலத்தை ஒருபோதும் கண்டுகொள்ள முடியாது. காரணம் நிகழ்காலம் உயிர்ச்சக்தி கொண்டது. உயிரோடிக்கிற ஒன்றை உயிரற்ற சாதனத்தின் மூலம் அணுகமுடியாது. வாழ்க்கையை ஒருபோதும் உயிரற்ற சாதனம் கொண்டு தொட முடியாது.

'மரணத்தின் வழியே வாழ்க்கையைத் தொட்டுணர முடியாது'

மனம் உயிரற்றது, செயலற்றது? கண்ணாடியில் படியும் தூசியாய் அது இருக்கிறது. தூசி அதிகரித்தால் கண்ணாடியின் பிரதிபலிப்பு குறையும். தூசி அடர்த்தியாகிவிட்டால் குறைந்தபட்ச பிரதிபலிப்பும் இருக்காது.

எல்லாருந்தான் தூசியைச் சேர்த்துக் கொள்கிறார்கள். நீங்கள் அதைச் சேர்த்துக் கொள்வதோடு, அதை ஒரு பொக்கிஷமாகவும் கருதிக் கொண்டு விடுகிறீர்கள். கடந்த காலம் போய்விட்டது, நீங்கள் ஏன் அதைப்பற்றிக் கொண்டிருப்பது? அது ஒன்றும் பொக்கிஷமல்லவே. நீங்கள் கடந்த காலத்தை பற்றிக் கொண்டு அதை ஒரு பொக்கிஷமாயும் கருதினால் உங்கள் மனம் எதிர்காலத்தில் அதை மீண்டும் மீண்டும் வாழவிரும்புகிறது என்பதே உண்மை. உங்கள் எதிர்காலம் என்பது கொஞ்சம் திருத்தியமைக்கப்பட்ட, கொஞ்சம் நேர்த்தி செய்யப்பட்ட, ஓரளவு அலங்கரிப்புடன் கூடிய கடந்தகாலமேயன்றி, வேறெதுவாயும் இருக்க முடியாது. ஆனால் அது முன்பிருந்தபடியேதான் இருக்கப் போகிறது காரணம் தானறிந்திராத ஒன்றை மனதால் சிந்திக்க முடியாது. மனம் தனக்கு நன்கு தெரிந்ததையே முன்னிறுத்தும்.

நீங்கள் ஒரு பெண்ணிடம் காதல் கொண்டீர்கள், அந்தப் பெண் இறந்து போகிறாள். தற்போது இன்னொரு பெண்ணை எப்படித் தேடிக் கொள் வீர்கள்? அந்தப் பெண் உங்கள் மனைவியின் திருத்திய மறுபதிப்பாய் இருக்க வேண்டும் என்பீர்கள். அதுதான் உங்களுக்குத் தெரிந்த ஒரேவழி. எதிர்காலத்தில் நீங்கள் எதைச் செய்தாலும் அது கடந்தகாலத்தின் தொடர்ச்சியாகவே இருக்கும். அங்கொன்றும் இங்கொன்றுமாய் சின்னச் சின்ன மாற்றங்களைச் செய்வீர்கள் ஆனால் பிரதான பகுதி மட்டும் அப்படியேதான் இருக்கும்.

முல்லா நஸ்ருத்தீன் மரணப்படுக்கையில் இருந்தபோது யாரோ கேட்டார்கள், 'உமக்கு மீண்டும் வாழச் சந்தர்ப்பம் கிடைத்தால் அதை எப்படி வாழ்வீர்? ஏதேனும் மாற்றம் செய்வீரா?' என்று. நஸ்ருத்தீன் யோசனை யுடன் கண்களைமூடி, தியானித்தார். பிறகு கண்களைத் திறந்தபடி சொன்னார் ''ஆமாம், எனக்கு மீண்டும் வாழ்க்கை கிடைத்தால் தலை முடியை நடுவகிடெடுத்து சீவிக்கொள்வேன். நான் எப்போதுமே அப்படி

தலைவாரிக் கொள்ள ஆசைப்பட்டேன், என்னுடைய தந்தையோ அது கூடாதென்று சொல்லிவிட்டார். என்னுடைய தந்தை இறந்த பிறகு, என் தலைமுடி மாறிவிட்டது என்னால் நடுவகிடு எடுக்க முடியவில்லை'' என்று.

இதைக் கேட்டுச் சிரிக்காதீர்கள். உங்களிடம், 'மீண்டும் வாழ்க்கை கிடைத்தால் என்ன செய்வீர்கள்?' என்ற கேள்வி கேட்கப்படுமாயின் சிறிய வேறுபாடுகளுடன் இத்தகைய பதிலைச் சொல்லியிருப்பீர்கள். கொஞ்சம் வேறுபட்ட மூக்கை உடைய கணவன், வேறு நிறமுடைய மனைவி ஒரு பெரிய அல்லது சிறிய வீடு இவைபோன்று இருக்கும். ஆனால், இவையும் தலைமுடியில் நடுவகிடு எடுப்பது போன்றதே, எல்லாம் அற்பமானவை களாய் இருக்கும், குறிப்பிடத்தக்கதாயிருக்காது. உங்கள் அடிப்படை வாழ்க்கை அப்படியேதான் இருக்கும். நான் உங்கள் கண்களைக் கூர்ந்து நோக்கி இதனைப் புரிந்து கொள்கிறேன். நீங்கள் எண்ணற்ற தடவைத் இதைச் செய்திருக்கிறீர்கள். உங்களுடைய அடிப்படை வாழ்க்கை அப்படியேதான் இருந்திருக்கிறது. பலமுறை உங்களுக்குப் பிறவி கிடைத்தது. நீங்கள் பலமுறை வாழ்ந்துவிட்டீர்கள். நீங்கள் ரொம்பவும் பழைய ஆசாமி. இந்தப் பூமிக்கு நீங்களொன்றும் புதியவரல்லர், பூமியைக் காட்டிலும் பழைமையானவர்தான். காரணம், மற்ற கிரகங்களிலும் நீங்கள் வாழ்ந்திருக்கிறீர்கள். இப்பிரபஞ்சத்தின் அளவு தொன்மையானவர் நீங்கள். ஆனால் திரும்பத்திரும்ப அதே விதமாகத்தான் செயல்படுகிறீர்கள்.

அதனால்தானே இந்துக்கள் அதை பிறப்பு இறப்புச் சக்கரம் என்பது. அது எப்போதும் மேலும் கீழுமாய் சுழன்று கொண்டே இருப்பதால் சக்கரம் எனப்பட்டது. அது செய்ததையே மீண்டும் செய்வதாகும். அதே கம்பிகள் தாம் மேலே வருகிறது, கீழே போகிறது மீண்டும் மேலே வருகிறது. மனம் கடந்த காலத்தியது எனவே உங்கள் எதிர்காலமும் கடந்த காலத்தினின்றும் வேறானதாய் இருக்கப் போவதில்லை.

கடந்த காலம் என்பது என்ன? கடந்த காலத்தில் நீங்கள் என்ன செய்தீர்கள்? அது, இது நல்லது கெட்டது என்று நீங்கள் எதைச் செய்திருந் தாலும் அது திரும்பவும் அதையே செய்யவைக்கும். அதுதான் கர்மாவின் கோட்பாடு. நீங்கள் நேற்றைக்கு முந்தைய நாள் கோபமாய் இருந்திருந்தால் கோபத்திற்கு ஒரு நிகழும் 'தன்மையை உருவாக்கியிருப்பீர்கள். அது உங்களை நேற்றும் கோபமுறச் செய்திருக்கும். அப்போது அந்தக் கோபம் ஆற்றலுடையதாகியிருக்கும். கோபத்தை வேரூன்றச் செய்ததோடு அதற்கு நீரூற்றியும் வந்திருக்கிறீர்கள். இன்று நீங்கள் அந்தக் கோபத்திற்கு மேலும் வலிமை சேர்த்திருப்பீர்கள். இன்று போலவே நாளையும் கோபத்துக்கு இரையாவீர்கள்.

நீங்கள் செய்யும் ஒவ்வொரு செயலும் அல்லது அவற்றைப் பற்றிய நினைவுகள் கூட திரும்பத்திரும்ப உங்களிடம் வர யத்தனித்துக் கொண்டிருக்கும். காரணம் உங்கள் இருப்புணர்வில் ஒரு போக்குவழியை அது உண்டு பண்ணும். உங்களிடமிருந்து சக்தியை அது உறிஞ்சத் தொடங்கும். உங்களுக்குக் கோபம் வந்தது பிறகு அந்த மனநிலை போய்விட்டது. இனி கோபம் இல்லை என்று நீங்கள் எண்ணிக் கொள்கிறீர்கள். அப்போது ஒரு விஷயத்தை நீங்கள் தவறவிட்டீர்கள். அந்த மனநிலை சென்ற போது எதுவும் நிகழவில்லை, சக்கரம் மட்டுமே சுழன்றது, மேலே இருந்த சக்கரத்தின் கம்பி கீழே வந்தது. மேற்பரப்பில் ஒரு சில நிமிடங்களுக்கு முன் தெரிந்த கோபம் இப்போது கீழே தன்னுணர்வற்ற நிலைக்கு (Unconscious)ச் சென்றுவிட்டது, உங்கள் இருப்புணர்வின் அடியாழத்துக்குச் சென்றுவிட்டது. அது மீண்டும் வரக்கூடிய நேரத்துக்காய் காத்திருக்கும். நீங்கள் அதற்கேற்ப செயல்பட்டால், அதைப் பலப்படுத்தியவராகிறீர்கள், அதன் மறுவாழ்விற்கு வாய்ப்பளிக்கிறீர்கள். அது மண்ணுக்குள்ளிருந்து வெளிவரத் துடிக்கும் விதைபோல் சரியான தருணத்திற்கு, உகந்த நேரத்துக்குக் காத்திருக்கும்.

ஒவ்வொரு செயலும் தானாகவே தொடரும், ஒவ்வொரு சிந்தனையும் அதுபோன்றே தொடர்ந்திருக்கும். ஒருமுறை நீங்கள் அதனுடன் ஒத்துழைத்தால் அதற்குச் சக்தியளிக்கிறீர்கள். சற்றுமுன் பின்னாக என்றாலும் அது வழக்கமான அமைப்பைப் பெற்றுவிடும். நீங்கள் அதைச் செய்வீர்கள், ஆனால், செயல்படுபவராய் இருக்கமாட்டீர்கள். அவ்வாறு நீங்கள் செய்வதற்குக் காரணம் அது உங்களது பழக்கத்தின் உந்துதலால் ஏற்பட்டது. மக்கள் பழக்கவழக்கங்களை இரண்டாவது இயற்கை என்கின்றனர். இது மிகைப்பாடல்ல. மாறாக, குறைத்து மதிப்பிடப்பட்டதேயாகும். உண்மையில், பழக்கம் முதல் இயற்கையாகவும் இயற்கை அவ்வளவு முக்கிய மற்றதாயும் ஆகிவிடுகிறது. இயற்கை ஒரு புத்தகத்தின் அனுபந்தம் அல்லது அடிக்குறிப்பு போலாகிவிடுகிறது, பழக்கம் புத்தகத்தின் பிரதான பகுதியாகிறது.

நீங்கள் பழக்கத்தின் வழியே வாழ்கிறீர்கள். அதன் பொருள் என்னவெனில் பழக்கம் உங்கள் வழியே வாழ்கிறது. அந்தப் பழக்கம் தானே தொடர்கிறது, தன்னளவில் ஆற்றல் கொண்டதாயிருக்கிறது. உண்மையில் அந்த ஆற்றலை அது உங்களிடமிருந்தே எடுத்துக் கொண்டது, அதுதான் உண்மை. கடந்தகாலத்தில் நீங்கள் ஒத்துழைத்தது போலவே தற்போதும் ஒத்துழைக்கிறீர்கள். காலப்போக்கில் பழக்கம் எஜமானனாகி நீங்கள் வேலைக்காரனாகி விடுகிறீர்கள், அதனுடைய நிழலாகிறீர்கள். அந்தப் பழக்கம் உங்களுக்கு உத்தரவு பிறப்பிக்கிறது,

தெய்விகக் கட்டளையிடுகிறது. நீங்கள் அவற்றைப் பணிவுடன் ஏற்கிற வேலைக் காரனாகிறீர்கள். நீங்கள் அதைப் பின்பற்றுவீர்கள்.

ஏக்நாத் என்கிற இந்து மறைஞானி புனிதயாத்திரை மேற்கொண்டார். அந்த யாத்திரை ஒருவருடம் நீடிக்கும்போலிருந்தது, காரணம் நாட்டிலுள்ள எல்லா புனிதத் தலங்களுக்கும் அவர் சென்று வரத்திட்டமிட்டிருந்தார். அவர் ஒரு பெரிய ஞானி என்பதால் அவருடன் நிறையபேர் பயணம் செய்தனர். அவருடன் செல்வதே அவர்களுக்குத் தனிச்சிறப்பு வாய்ந்ததுபோல் இருந்தது. அவ்வூரில் உள்ள திருடன் ஒருவனும் அந்த யாத்திரையில் பங்கு கொள்ள விரும்பினான். ''நான் ஒரு திருடன், தகுதி வாய்ந்த இக்குழுவில் சேர்ந்து கொள்ளும் தகுதி எனக்கில்லை. ஆனால் எனக்கும் ஒரு சந்தர்ப்பம் கொடுத்துப் பாருங்கள். நானும் புனித யாத்திரையில் கலந்து கொள்ள விரும்புகிறேன் என்று கேட்டான். ஏக்நாத் அவர்களோ, ''இது மிகவும் கடினமானது. இந்த யாத்திரை ஒரு வருடகாலம் நீடிக்கக் கூடியது. மக்களுடைய பொருள்களை நீ திருட ஆரம்பித்து விடுவாய். உன்னால் தொந்தரவுகள் உண்டாகும். அதனால் உன் எண்ணத்தைவிடு'' என்றார். ஆனால், அந்தத் திருடன் உறுதியாய் இருந்து தன்னையும் அழைத்துச் செல்லும்படி நிர்ப்பந்தித்தான்.

அவன் சொன்னான், ''ஓராண்டு காலத்துக்கு திருட்டுத் தொழிலை விட்டுவிடுகிறேன். ஆனால், நான் வந்தே ஆகவேண்டும். நான் உங்க ளுக்குப் பிரமாணம் செய்து தருகிறேன். இன்னும் ஓராண்டு காலம் யாரிடமிருந்தும் எதுவும் திருடமாட்டேன்'' என்று. ஏக்நாத் சம்மதித்தார்.

ஆனால், ஒரு வாரத்துக்குள்ளாகவே தொல்லைகள் ஆரம்பித்தன. ஆம், மக்களுடைய பொருள்கள் ஒவ்வொன்றால் மறைந்த வண்ணம் இருந்தன. அவர்களுடைய மூட்டை முடிச்சுகளில் இருந்து அவை காணாமல் போயின. அதில் என்ன அதிசயமென்றால் பொருள்களை யாரும் திருடவில்லை, பொருள்கள் மட்டும் மறைந்து கொண்டிருந்தன. ஆனால், சில நாட்கள் கழித்து மற்றவர் பைகளில் இருந்து அகப்பட்டுவிடும். அப்போது பைகளின் சொந்தக்காரர்கள் 'நான் எடுக்கவில்லை. அது மாதிரி செயலைச் செய்யவில்லை என்னுடைய பையில் இவை எப்படி வந்ததென்றே தெரியாது' எனக் கூறினர்.

ஏக்நாத்திற்கு சந்தேகம் வந்தது. அதனால் அவர் ஒருநாள் இரவு தூங்குவது போல் பாவனை செய்து கவனித்துக் கொண்டிருந்தார். நள்ளிரவில் திருடன் தோன்றினான். அவன் சிலருடைய பொருள்களை எடுத்து வேறு சிலருடைய பைகளில் மறைத்து வைத்தான். ஏக்நாத் அவனைக் கையும் களவுமாய் பிடித்தார். 'என்ன செய்கிறாய்? நீ செய்து கொடுத்த

சத்தியம் என்னவாயிற்று?' என்று கேட்டார். அதற்கு திருடன், ''நான் என்னுடைய சத்தியத்தைக் காப்பாற்றிக் கொண்டுதானிருக்கிறேன். இதுவரை யாருடைய பொருளையும் நான் திருடவில்லை. ஆனால் இது என்னுடைய பழைய பழக்கம். இரவில் இது மாதிரி குறும்பு செய்யாவிடில் எனக்கு தூக்கம் பிடிக்காது. ஒருவருடத்திற்கு தூங்காமல் இருந்தால் என்ன ஆவது? நீங்கள் இரக்ககுணம் வாய்ந்தவர். என்னிடம் இரக்கம் காட்டவேண்டும். நான் இப்போது திருடவில்லை. பொருள்கள் திரும்பக் கிடைத்து விடுகின்றன. அவை எங்கேயும் போவதில்லை. அவை இடம் மாறுகின்றன, அவ்வளவு தான். மேலும் நான் ஒரு வருடம் கழித்து தான் என்னுடைய திருட்டுத் தொழிலை மறுபடியும் ஆரம்பிக்க வேண்டும். அதனால், இது ஒரு நல்ல பயிற்சியாயிருக்குமே' என்றான்.

பழக்கவழக்கங்கள் சில செயல்களைச் செய்வதற்கு உங்களைக் கட்டாயப்படுத்தும். அதனால் நீங்கள் துன்பமடைகிறீர்கள். இந்துக்கள் கர்ம சட்டம் என்று கூறுவார்கள். நீங்கள் திரும்பச் செய்யும் ஒவ்வொரு செயலும் அல்லது சிந்தனையும் - சிந்தனை என்பதுகூட மனதின் ஒரு நுட்பமான செயலே - மிக மிக அதிகமான செயல்திறன் கொண்டதாகிறது. பின்பு, நீங்கள் அதன் பிடியில் இருப்பீர்கள். பழக்கத்தினுள் சிறை வைக்கப் படுவீர்கள். அதன் பிறகு சிறையில் வாடும் மனிதனைப்போல், ஓர் அடிமையைப்போல் வாழ்வீர்கள். இந்தச் சிறையடைப்பு என்பது சூட்சுமமானது. அது உங்கள் பழக்கவழக்கங்களால், நிர்ப்பந்தங்களால் ஏற்பட்டது. நீங்கள் செய்த செயல்களால் ஏற்பட்டது. அது உங்கள் உடல் முழுதும் சுற்றியுள்ளது. நீங்கள் அதன் சிக்கல்களில் சிக்குண்டிருக்கிறீர்கள். ஆனால், உங்களையே நீங்கள் முட்டாளாக்கிக் கொண்டிருப்பதாய் நினைத்துக் கொள்கிறீர்கள். நீங்கள் அதற்கான காரணத்தைச் சொல்லி நியாயப்படுத்துகிறீர்கள். அந்தச் சூழ்நிலையில் அவ்வாறு செய்யும்படி ஆயிற்று என்கிறீர்கள்:

'நான் கோபமாய் இருக்க வேண்டியதாயிற்று. இல்லையோ குழந்தை வழி தவறிச் சென்றிக்கும்.' நான் கோபப்பட்டிருக்காவிட்டால் பின்பு செயல்கள் எல்லாம் தவறாகிவிட்டிருக்கும். அலுவலகத்தில் பெரிய குழப்பம் நேர்ந்திருக்கும், 'வேலைக்காரர்கள் ஒழுங்காய் வேலை செய்யமாட்டார்கள்.' 'நான் நல்ல முறையில் நிர்வகிக்க கோபம் அவசிய மாகிறது.' குழந்தையை ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்கச் செய்ய அது தேவைப்பட்டது. மனைவியை உரிய இடத்தில் வைக்க நான் கோபித்தாக வேண்டியிருக்கிறது. இப்படி அறிவின் பாற்பட்டதாய் முன் வைக்கப்படும் சமாதானங்கள் அநேகம்.

'அகந்தை எண்ணிக் கொள்கிறது, உங்கள் செயல்களுக்கு நீங்களே எஜமான் என்று'

ஆனால், உண்மையான எஜமான் நீங்கள் இல்லை. கோபம் பழைய நடவடிக்கைகளினாலேயே வருகிறது. கடந்தகாலத்தில் இருந்த மாதிரி வருகிறது உங்களுக்குக் கோபம் வரும்போதெல்லாம் அதற்கொரு காரணத்தைக் கண்டுபிடித்துக் கொள்கிறீர்கள்.

உளவியல் நிபுணர்கள் இதனைப் பலமுறை சோதனை செய்து பார்த்துவிட்டனர். அவர்கள் ஒவ்வொரு முறையும் அதே உண்மைக்குத் தான் வர முடிந்தது. அந்த உண்மை கீழைநாட்டு உளவியலார் கண்ட உண்மையே. மனிதன் பழக்கத்துக்குப் பலியாகிறான். அவனது செயல்கள் அவனால் நடத்தப்படவில்லை. அவன் கட்டளையிடுபவனாக இல்லை என்பதே அது.

அந்த உளவியல் நிபுணர்கள் மனிதர்களைத் தனிமையில் இருக்கச் செய்தனர், சகல வசதிகளையும் அவர்களுக்குச் செய்து கொடுத்தனர். தேவைப்பட்ட எல்லாமும் கொடுக்கப்பட்டன. ஆனால், மற்றவர்களுடன் அவர்கள் தொடர்பு கொள்ள அனுமதிக்கப்படவில்லை. அவர்கள் குளிரூட்டப்பெற்ற அறையில் வசித்தனர். வேலை, இடையூறு, பிரச்சினை என்று எதுவும் கிடையாது, ஆனால், அதே பழக்கங்கள் தொடர்ந்தன. ஒருநாள் காலை எந்தவொரு காரணமுமில்லாமல் - ஏனெனில் எல்லாவசதிகளும் நிறைவாயிருந்தன, கவலைப்பட எதுவுமில்லை, கோபப்பட்ட ஒரு காரணமுமில்லாத நிலையில் அங்குள்ள மனிதனுக்குக் கோபம் எழுந்தது.

அது உங்களுக்குள் இருக்கிறது. திடீரென்று உரிய காரணம் ஏதுமின்றி துயரம் உங்களிடம் வந்து விடுகிறது. அது போல் சில சமயம் மகிழ்ச்சியும் வரும், காரணமேயில்லாமல். ஒரு மனிதனின் அத்தனை சமூகத் தொடர்புகளையும் துண்டித்து, தனிமையில் இருக்கச் செய்யுங்கள். எல்லா வசதிகளையும் செய்து கொடுங்கள், அவனுடைய தேவைகள் அனைத்தையும் பூர்த்தி செய்யுங்கள். ஆனால், உங்களைப் போலவே உறவுகள் பற்றிய மனநிலை அவருக்கும் இருக்கும்.

நீங்கள் நல்லவிதமாய் உணர்கிறீர்கள், மோசமாய் உணர்கிறீர்கள் இந்த உணர்வுகள். உங்களுடைய தன்னுணர்வற்ற மனதின் தளத்தில் இருந்தே குமிழிடுகின்றன. உங்களைத்தவிர வேறு யாரும் அதற்குப் பொறுப்பல்ல. யாரும் உங்களைக் கோபப்படுத்தவோ, மகிழ்ச்சிக்குள்ளாக்கவோ முடியாது. நீங்கள் சுயமாகவே கோபப்படுகிறீர்கள், சுயமாகவே மகிழ்ச்சி

அடைகிறீர்கள், துயருறுவதிலும் அப்படித்தான். இதனை நீங்கள் உணர்ந்து கொள்ளாதவரை அடிமையாகவே இருப்பீர்கள்.

'எனக்கு எது நடந்தாலும் அதற்கு நானே பொறுப்பு' என்று உணர்கிற போதுதான் ஒருவருடைய சுயம் திறமை உடையதாகிறது. தொடக்கத்தில் அது உங்களைச் சோகத்தில் ஆழ்த்தலாம், சோர்வடையச் செய்யலாம். காரணம், பொறுப்பை அடுத்தவர் தலையில் கட்டிவிட்டால் நீங்கள் தவறு செய்த உணர்வு உங்களுக்கு இருக்காது. மனைவி அப்படி அவருக்குத் தக்கவிதத்தில் நடந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்? கோபப்படுவீர்கள். ஆனால், மனைவி அப்படி நடந்து கொள்ள அவளுடைய உள்ளார்ந்த செய்நுட்பங்களே காரணம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவள் ஒன்றும் நீங்கள் அருவருக்கும் படியானவளல்லள். நீங்கள் இல்லாவிட்டால் குழந்தையிடமோ, குழந்தையில்லாவிட்டால் உணவு பரிமாறும் தட்டு களிடமோ தன்னுடைய கோபத்தை அவள் காட்டவே செய்வாள். அவள் தட்டுகளை தரையில் வீசியடிப்பாள். வானொலிப் பெட்டியை உடைப்பாள். அருவருப்புத் தன்மை மேலெழும்போது ஏதாவது செய்தாக வேண்டும். நீங்கள் அப்போது செய்தித்தாளில் மூழ்கிவிடுவது ஒத்த நிகழ்வு. தவறான இடத்தில் சரியான மனிதர் என்கிற நிலை ஒத்த நிகழ்வுதான்.

மனைவி அருவருக்கத்தக்கவிதத்தில் நடந்து கொண்டதற்காக நீங்கள் கோபப்படவில்லை. அப்படியொரு சூழ்நிலையை அவள் ஏற்படுத்தி விட்டாள் அவ்வளவுதான். கோபத்துக்கான சாத்தியத்தை அவள் உங்களுள் உருவாக்கியிருக்கலாம். கோபத்துக்கு ஒரு நொண்டிச்சாக்கு. ஆனால் உங்களுக்குள் கோபம் கொந்தளித்திருந்தது. மனைவி அங்கில்லா விட்டாலும் நீங்கள் அதே கோபத்தை வேறு எதனிடமாவது காட்டியிருப் பீர்கள். உங்களுடைய தன்னுணர்வற்ற தளத்திலிருந்தே அது வந்தது.

ஒவ்வொருவரும் தம்முடைய இருப்புணர்வு அல்லது நடத்தைக்குத் தாமேதான் பொறுப்பாவர். தொடக்கத்தில் அந்தப் பொறுப்பு உங்களை சோர்வுறச் செய்திருக்கும். காரணம் நாம் மகிழ்ச்சியாயிருக்க வேண்டும் என்றே நீங்கள் எப்போதும் எண்ணி வந்திருக்கிறீர்கள். அப்படியிருக்க மகிழ்ச்சியற்ற நிலைக்கு எப்படி நீங்கள் பொறுப்பேற்க முடியும்? நீங்கள் பரமசுகத்தில் திளைக்கவே விரும்பியிருந்தீர்கள் அப்படியிருக்க உங்கள் மீதே நீங்கள் எப்படி கோபப்படுவீர்கள்? இது காரணமாகவே நீங்கள் அடுத்தவரை பொறுப்பேற்கச் செய்துவிடுவது. நீங்கள் இப்படி அடுத்தவர் தலையிலேயே பொறுப்பைச் சுமத்திக் கொண்டிருந்தால் எப்போதும் அடிமையாய் இருக்க வேண்டியதுதான். காரணம், யாரும் அடுத்தவரை மாற்ற முடியாது. நீங்கள் எப்படி அடுத்தவரை மாற்ற முடியும்? யாரேனும்

இன்னொருவரை எப்போதாவது மாற்றியதுண்டா? உலகிலேயே நிறைவேறாத விருப்பம் என்று சொல்லக் கூடியவற்றுள் ஒன்று அடுத்தவரை மாற்றுவது. அதைச் செய்தவர் யாருமில்லை. தம்முடைய விருப்பம்போல் இயங்கும் உரிமை அடுத்தவருக்குண்டு, அவரை நீங்கள் மாற்றமுடியாது. நீங்கள் அடுத்தவர் மீது பொறுப்புகளைச் சுமத்திக் கொண்டே போனால் உங்களுக்கிருக்கும் அடிப்படைப் பொறுப்பை நீங்கள் ஒருபோதும் கண்டுகொள்ள மாட்டீர்கள். உங்களுக்குள் அடிப்படையில் ஒரு மாறுதல் தேவைப்படுகிறது.

நீங்கள் பொறியில் சிக்கிக் கொள்வது இப்படித்தான். உங்களுடைய மனநிலைகள் செயல்கள் இவற்றுக்கு நீங்கள் தாம் பொறுப்பு என்று உணரத்தொடங்குகிறபோது ஒரு மனச்சோர்வு மேற்கொள்ளப்படும். ஆனால் அந்தச் சோர்வு நிலையை உங்களால் கடக்க முடியுமெனில் விரைவிலேயே இலகுவாய் உணர்வீர்கள், இப்போது நீங்கள் அடுத்தவரிடமிருந்து விடுபட்டு உங்களுடைய சொந்தப் பொறுப்பில் இயங்கமுடிகிறதே.

நீங்கள் தடையற்றிருக்க முடிகிறது, மகிழ்ச்சியாயிருக்க முடிகிறது. ஒட்டுமொத்த உலகமே மகிழ்ச்சியற்று, சுதந்திரமின்றி இருந்தாலும் அது பெரிய வித்தியாசமாகிவிடாது. இல்லையேல் ஒரு புத்தர் எப்படி இருந்திருக்க முடியும்? ஒரு பதஞ்சலி எப்படி இருந்திருக்க முடியும்? நான்தான் எப்படி இருக்க முடியும்? உலகம் முழுதும் ஒரேமாதிரி. இந்த உலகம் எவ்வாறு நீங்கள் இருக்கிறீர்களோ, அவ்வாறே அதுவும் இருக்கிறது. ஆனால், கிருஷ்ணர் ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டும் சுதந்திரமா யிருக்கிறார். அடுத்தவர் தலையில் பொறுப்பைச் சுமத்தாதிருப்பதே முதல் சுதந்திரம், உங்கள் பொறுப்பை நீங்கள் உணர்ந்திருப்பதுதான் முதல் சுதந்திரம். அப்போது பலவற்றையும் உடனடியாய் நிகழ்த்த முடியும்.

கர்மாவின் முழு தத்துவமே நீங்கள் பொறுப்புடன் இருக்கிறீர்களே என்பதுதான்.

'கடந்தகாலத்தில் எதை நீங்கள் விதைத்தீர்களோ அதைத்தான் அறுவடை செய்கிறீர்கள்'

காரணத்துக்கும் (cause) விளைவு (effect)க்கும் உள்ள இணைப்பை நீங்கள் உணராதிருக்கலாம் ஆனால் விளைவு இருக்குமெனில், காரணம் உங்களுக்குள் எங்கோ இருக்கவே செய்யும்.

இதுவே பிரதி - ப்ரஸவ்வின் ஒட்டுமொத்த செயல்முறை ஆகும்; எப்படி விளைவில் இருந்து காரணத்துக்குச் செல்வது, எப்படிப்

பின்னோக்கிச் செல்வது, எங்கிருந்து அது வருகிறது என்ற காரணத்தைக் கண்டறிவது. நீங்கள் துயருற்றிருக்கும்போது, கண்களைமூடி, உங்கள் துயரத்தைக் கவனியுங்கள். நீங்கள் நீண்ட தூரம் பயணம் செய்யும்படி இருக்கலாம், காரணம் முழு வாழ்க்கையுமே அதில் சம்பந்தப்பட்டிருக்கிறது. உங்களைத் துன்புறுத்தும் காயங்கள் பலவற்றை நீங்கள் காண்பீர்கள். அந்தக் காயங்கள் காரணமாகவே துயர்ப்படுவீர்கள். இந்தக் காயங்கள் இன்னும் ஆறாமல் அப்படியே இருக்கின்றன. பிரதி-ப்ரஸவ் செயல்முறை, மூலத்துக்குத் திரும்பும் செய்முறை, விளைவில் இருந்து காரணத்துக்குச் செல்வது அவற்றைக் குணப்படுத்தும். அது எப்படி குணப்படுத்தும், ஏன் குணப்படுத்துகிறது? அதிலுள்ள சிறப்பு என்ன?

நீங்கள் எப்பொழுதெல்லாம் பின்னோக்கிச் செல்கிறீர்களோ அப்போதெல்லாம் விடுகிற முதல் காரியம் அடுத்தவர் தலையில் பொறுப்பைக் கட்டுவது, காரணம் பொறுப்பை மற்றவர்மீது சுமத்துகிற போதெல்லாம் நீங்கள் புறத்தே போய்விடுகிறீர்கள் அப்போது ஒட்டுமொத்த செயல்முறையும் தவறாகிவிடுகிறது. நீங்கள் காரணத்தை அடுத்தவரிடம் காண முயல்கிறீர்கள். மனைவி ஏன் அருவருக்கத் தக்கவிதத்தில் நடந்து கொண்டாள்? பிறகு அந்த 'ஏன்' மனைவி நடந்து கொள்ளும் முறையை ஊடுருவிப் பார்க்கத் தொடங்குகிறது. நீங்கள் முதல் நிலையிலேயே தவறவிட்டு விடுவதால் முழு செயல்முறையும் தவறாகி விடுகிறது. நான் மகிழ்ச்சியில்லாதிருப்பது ஏன்? நான் கோபப்படுவது ஏன்? கண்களை மூடி அதையே ஆழ்ந்த தியானமாக்குங்கள். தரைமீதுபடுத்து, கண்களைமூடி. உடம்பைத் தளர்வு நிலையில் வைத்து ஏன் கோபப்படுகிறீர்கள் என்பதை எண்ணிப் பாருங்கள். மனைவியை மறந்துவிடுங்கள் அது தப்பித்தலுக்கு ஒரு காரணம். உங்களுக்குள் ஆழச்சென்று கோபத்தை ஊடுருவுங்கள். கோபத்தை ஓர் ஆறு (நதி) போல் பயன்படுத்துங்கள். கோப ஓட்டத்தில் நீங்களும் செல்கிறீர்கள், அந்தக் கோபம் உங்களை உள்ளாகக் கொண்டு செல்கிறது. நீங்கள் நுட்பமான காயங்களை உங்களுக்குள் காண்பீர்கள்.

மனைவி அருவருப்பாய் தோன்றக் காரணம் அவள் உங்களுக் குள்ளிருக்கும் ஒரு நுட்பமான காயத்தை வலிதரக்கூடியதைத் தொட்டு விட்டாள். நீங்கள் அழகற்றவர் என்றும் உங்கள் முகம் அவலட்சணமானது என்றும் எப்போதுமே எண்ணிக் கொண்டிருந்தீர்கள், உள்ளுக்குள் அது கிரணத்தை ஏற்படுத்தியிருந்தது. உங்களிடம் அருவருப்பாய் நடந்து கொள்ள முற்படும் மனைவி உங்கள் முகத்தைப் பற்றிய உணர்வை உங்களிடம் ஏற்படுத்துவாள். 'போ, உன் முகத்தைக் கொஞ்சம் கண்ணாடியில் பாரேன்' என்பாள். நீங்கள் அவளிடம் விசுவாசமில்லாமல் நடந்து கொள்கிறபோது 'நீ அந்தப் பெண்ணிடம் ஏன் சிரித்துப் பேசிக்

கொண்டிருந்தாய், அவளுடன் சந்தோஷமாய் உட்கார்ந்திருந்தாயே' என்று சீண்டுவாள். அப்போது அந்தக் காயமும் சீண்டப்பட்டுவிடும். நீங்கள் உண்மையற்றவராகி, குற்றஉணர்வு கொள்கிறீர்கள், காயம் ஆறாமல் அப்படியே இருக்கிறது. நீங்கள் கண்களைமூடி கோபத்தை உணருங்கள். அது முழுமையாய் எழும்போது நீங்கள் அதை முற்றாய் காணமுடியும். பிறகு அந்த ஆற்றல் நீங்கள் கடந்தகாலத்தை நோக்கிச் செல்வதில் உதவும், ஏனெனில் கோபம் கடந்தகாலத்தில் இருந்தே வந்தது. அது எதிர்காலத்தில் இருந்து வரமுடியாது என்பது உண்மை. எதிர்காலம் உங்கள் இருப்புணர்விற்கு இன்னமும் வரவில்லை. அது நிகழ்காலத்தில் இருந்தும் வருவதில்லை.

இதுவே கர்மாவின் அணுகுமுறை. அது எதிர்காலத்தில் இருந்து வருவதல்ல, காரணம் எதிர்காலம் இன்னும் வந்துவிட்டிருக்கவில்லை. அது நிகழ்காலத்திலிருந்தும் வந்ததல்ல காரணம் அது என்னவென்பதை எவ்விதத்திலும் நீங்கள் அறிந்திருக்கவில்லை. நிகழ்காலம் விழிப்புற்றவர் களால் மட்டுமே அறியப்படுவது. நீங்கள் கடந்த காலத்திலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்பதால் அது கடந்தகாலத்தில் எங்கோ ஓரிடத்தி லிருந்து வந்திருக்க வேண்டும். இந்தக் காயங்கள் உங்கள் நினைவுகளில் எங்கோ இருப்பது. பின்னோக்கிச் செல்லுங்கள். ஒரு காயமல்ல பல காயங்கள், சிறியதும் பெரியதுமாய் இருக்கக் காண்பீர்கள். இன்னும் ஆழத்துக்குச் சென்று முதல் காயத்தை - அனைத்துக்கும் மூலமான கோபத்தைக் காணுங்கள். நீங்கள் முயன்றால் அதைக் காணமுடியும், காரணம் அது முன்பே அங்கிருக்கிறது. உங்களுடைய கடந்தகாலம் மொத்தமும் அங்கிருக்கிறது. அது பெட்டியில் சுருட்டிவைக்கப்பட்ட பிலிம் சுருள் மாதிரி. நீங்கள் அந்தச் சுருளைப் பிரித்து, பிலிமைப் பார்க்கத் தொடங்குங்கள். இதுதான் பிரதி ப்ரஸவ்வின் செயல்முறை. பின்னோக்கிச் சென்று மூலகாரணத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதே இதன் பொருள். நீங்கள் பிரக்ஞையுடன் பின்னோக்கிச் செல்ல முடிந்தால், ஒரு காயத்தைப் பிரக்ஞையுடன் உணரமுடியும் என்றால் அந்தக் காயம் உடனே குணப்படுத்தப்பட்டுவிடும். இந்தச் செயல்முறையின் நேர்த்தியே இதுதான்.

அது ஏன் குணப்படுத்தப்படுகிறது?- காரணம் ஒரு காயத்தை உண்டாக்கும் விழிப்புணர்வின்மையும், பிரக்ஞையற்ற தன்மையுந்தான். நீங்கள் உணர்வுடன் பின்னோக்கிச் சென்று காயத்தைக் கண்ணுறும் போது பிரக்ஞை (Consciousness)யே குணப்படுத்தும் சக்தியாகிறது. கடந்த காலத்தில், அந்தக் காயம் ஏற்பட்டபோது, அது உணர்வற்ற தன்மை (Unconsciousness)யில் ஏற்பட்டது. நீங்கள் கோபமாய் இருந்தீர்கள், கோபத்தின் பிடியில் இருந்தீர்கள், ஏதோ ஒன்றை நீங்கள் செய்தீர்கள்; ஒரு

ஆளைக் கொன்று, உலகத்திடமிருந்து அந்த உண்மையை மறைத்து விட்டீர்கள். நீங்கள் அதனைக் காவலர்களிடம் இருந்து மறைக்கக்கூடும், சட்டத்திடம் இருந்தும், வழக்கு மன்றத்திடம் இருந்தும் மறைக்கக்கூடும், ஆனால், உங்களிடமிருந்தே அதை நீங்கள் எப்படி மறைப்பீர்கள்? அது மனதைப் புண்படுத்தும் என்பது உங்களுக்குத் தெரியும். நீங்கள் கோப்படுகிற சந்தர்ப்பத்தை ஒருவர் ஏற்படுத்திக் கொடுத்தால் நீங்கள் அச்சப்படுவீர்கள், அது மீண்டும் நேரிடும் என்கிற அச்சம், உங்கள் மனைவியையே நீங்கள் கொன்றுவிடக்கூடும். பின்னோக்கிச் செல்லுங்கள், ஏனென்றால் ஒரு மனிதனைக் கொலை செய்து அந்தக் கணத்தில் நீங்கள் மிகவும் கோபத்துடன் பித்துப்பிடித்தாற்போல் நடந்து கொண்டிருப்பீர்கள், தன்னுணர்வற்றவராய் இருந்திருப்பீர்கள். இப்போது உணர்வுடன் செல்லுங்கள்.

பிரதி-ப்ரஸவ் (பின்னோக்கிச் செல்லுதல்) என்றாலே நீங்கள் தன்னுணர்வின்றி செய்த காரியங்களை நோக்கி உணர்வுடன் செல்வது என்றாகும். பின்னோக்கிச் செல்லுங்கள் பிரக்ஞையின் ஒளிபோதும் குணப்படுத்துவதற்கு. அது ஒரு குணப்படுத்தும் ச்க்தி. நீங்கள் பிரக்ஞைக்குக் கொண்டுவரக் கூடிய எதையும் குணப்படுத்திவிடலாம் பிறகு அது துன்புறுத்துவதாயிருக்காது.

பின்னோக்கிச் செல்கிற மனிதன் கடந்தகாலத்தை விடுவிக்கிறான். அதன் பிறகு கடந்தகாலம் செயல்படாது, அது அவனைத் தன்பிடிப்பில் வைத்துக் கொள்ள முடியாமல் போகும். கடந்தகாலம் ஒரேயடியாய் முடிந்து போய்விடும்.

இப்போதும் அவனுடைய இருப்புணர்வில் கடந்தகாலத்துக்கு இடமிருக்காது. உங்கள் இருப்புணர்வில் கடந்தகாலத்துக்கு இடமில்லை என்கிறபோது, இதற்கு முன் ஒரு போதும் இருந்திராத விதமாய், நிகழ்காலத்துக்குப் பயன்படுகிறவிதமாய் இருப்பீர்கள். உங்களுக்கு இடம் வேண்டும். கடந்தகாலம் தேவையற்ற, மதிப்பற்ற பொருள்களைக் குவித்து வைத்திருந்தது. நிகழ்காலம் பிரவேசிக்க இடமில்லாதுபோயிற்று. அந்தக் குப்பைமேடு எதிர்காலம் பற்றிக் கனவு கண்டது. அந்த இடம் பாதி நிரம்பியும் பாதி நிரம்பாமலும் கிடக்கிறது. எனவே-

'நிகழ்காலம் காத்திருக்கிறது வாசலுக்கு வெளியில்'

அதனால்தான் நிகழ்காலம் என்பது கடந்த காலத்திலிருந்து எதிர்காலத்துக்குச் செல்லும் ஒரு பாதையாய் மட்டுமே இருப்பது, கணநேரத்தில் கடக்கும் பாதை.

கடந்தகாலத்துக்கு முடிவு கட்டுங்கள். கடந்த காலத்துக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்காதவரை நீங்கள் ஓர் ஆவியின் வாழ்க்கையையே வாழ்ந்து கொண்டிருப்பீர்கள். உங்கள் வாழ்க்கை உண்மையானது. அதில் இருப்புத்தன்மை ஏது? கடந்தகாலம் உங்கள் மூலம் வாழ்கிறபோது உயிரற்ற ஒன்று உங்களை விட்டு நீங்காமல் தொல்லை கொடுக்கும்.

உங்களுக்கு வாய்ப்பு கிடைக்கிறபோதெல்லாம், உங்களுக்குள் ஏதோ ஒன்று நிகழ்கிறபோதெல்லாம் பின்னோக்கிச் செல்லுங்கள். அது மகிழ்ச்சி, மகிழ்ச்சியின்மை, துயரம், கோபம், பொறாமை இப்படி எது வாயிருந்தாலும் கண்களை மூடிக்கொண்டு பின்னோக்கிச் செல்லுங்கள். சீக்கிரமே நீங்கள் பின்னோக்கிச் செல்வதில் திறமை பெற்றுவிடுவீர்கள். சீக்கிரமே நீங்கள் உரிய நேரத்தில் பின்னோக்கிச் செல்வீர்கள். அப்போது, மூடியிருந்த பலகாயங்கள் திறந்து கொள்ளும். அவை திறந்து கொள்ளும்போது நீங்கள் எதுவும் செய்யவேண்டாம். எதையும் செய்யத் தேவையில்லை. அங்கே காயம் இருப்பதை கவனித்தபடி, ஊன்றிக் கவனித்தபடி இருந்தால் போதும். உங்களுடைய கவனிக்கும் ஆற்றலைக் காயத்தின்மீது செலுத்துங்கள், செலுத்தியபடி அதைக் கவனித்திருங்கள்.

எவ்வித கருத்தையும் உருவாக்கிக் கொள்ளாமல் கவனியுங்கள், 'இது ரொம்பவும் மோசமானது, இப்படியிருக்கக் கூடாது' என்று நீங்கள் தெரிவித்தால் அந்தக் காயம் திரும்பவும் மூடிக் கொள்ளும், பிறகு அது மறைந்து கொள்ளும். நீங்கள் குற்றத்தீர்ப்பளிக்கிற (Condemn) போதெல் லாம் மனம் விஷயங்களை மறைக்க முயலும். இல்லையேல் மனம் ஒன் றாகவே இருந்திருக்கும், பிரிவு (division)க்கு இடமிருக்காது. இவ்விதமாய் பிரக்ஞையும், உணர்வற்றத் தன்மையும் தோற்றுவிக்கப்பட்டன. நீங்கள் குற்றத்தீர்ப்பளிக்கிறபோது மனம் பல பிரிவுகளாய் பிரிந்து விஷயங்களை இருட்டில், அடித்தளத்தில் நீங்கள் பார்க்க முடியாதபடிக்கு வைத்துவிடும். பிறகு - குற்றத்தீர்ப்பளிக்கிற அவசியம் இருக்காது.

பழித்துச் சொல்லவும் வேண்டாம், பாராட்டவும் வேண்டாம். நீங்கள் வெறும் சாட்சியாய், எதிலும் சேராமல் கவனிப்பவராய் மட்டும் இருங்கள். மறுக்காதீர்கள், 'இது தகுதியானதல்ல' என்று சொல்லாதீர்கள் காரணம் அது மறுப்பதாகும், அதை நீங்கள் அடக்க முயல்வீர்கள். வெறுமனே கவனித்திருங்கள். பரிவுடன் பார்த்திருந்தாலே குணம் கிடைக்கும்.

அது ஏன் நிகழ்கிறது என்று என்னிடம் கேட்காதீர்கள், காரணம் அது ஓர் இயல்பான நடப்பு. அது நூறு டிகிரி வெப்பத்தில் நீர் ஆவியாதலைப் போன்றதாகும். 'ஏன் தொண்ணூற்று ஒன்பது டிகிரியில் ஆவியாகக் கூடாது?' என்று நீங்கள் ஒரு போதும் கேட்பதில்லை. யாரும் அதற்குப் பதில் கூற

முடியாது. நூறுடிகிரியில் நீர் ஆவியாதல் மிகையின்றி நடக்கிறது. எந்தக் கேள்வியும் இல்லை, கேள்வி பொருத்தமற்றதாய் தெரியும். அது தொண்ணூற்று ஒன்பது டிகிரியில் ஆவியானால் நீங்கள் ஏன் என்று கேட்பீர்கள் நூறுடிகிரியில் நீர் ஆவியாவது எவ்வித மிகைப்பாடுமற்ற இயல்பான விஷயம்.

உள்ளே இருக்கும் இயற்கையும் அதே அளவு உண்மையுடையது தான். ஒரு தொடர்பற்ற இரக்க உணர்வு காயமொன்றைத் தொடுகிறபோது அந்தக் காயம் மறைகிறது, ஆவியாகி மறைந்து விடுகிறது. அதில் ஏன் என்கிற கேள்விக்கு இடமில்லை. அது இயல்பாயிருக்கிறது அப்படித்தான் இருக்கிறது. அப்படித்தான் நடக்கிறது. நான் இதனைச் சொல்லும்போது என்னுடைய அனுபவத்தில் இருந்தே சொல்கிறேன். முயன்று பாருங்கள், அந்த அனுபவம் உங்களுக்கும் சாத்தியமாகிறதுதான். அதற்கு இதுவே வழி.

'பிரதி-ப்ரஸவ்' மூலம் ஒருவர் கர்மாவிலிருந்து விடுபடுகிறார். கர்மாக்கள் எதிர்காலத்தைக் கட்டாயப்படுத்தும். நீங்கள் கடந்த காலத்தை நோக்கிச் செல்ல அவை அனுமதிப்பதில்லை. 'எதிர்காலத்திற்குள் செல்வாயாக. கடந்தகாலத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வாய்? எங்கே போகிறாய்? நேரத்தை எதற்காக வீணடிப்பது? எதிர்காலம் குறித்து ஏதாவது செய்' என்று அவை கூறும். 'எதிர்காலத்துக்குள் சென்றுவிடு, அப்போதுதான் கடந்தகாலம் தன்னுணர்வற்ற தன்மையில் மறையும்' என்று கர்மாக்கள் வற்புறுத்தும். எதிர்ப்புறம் திரும்பும் (reverse) செயல் முறையை - பிரதிப்ரஸவ்வைத் தொடங்குங்கள். எதிர்காலத்திற்குள் நுழையச் சொல்லும் மனதைக் கண்டு கொள்ளாதீர்கள். கவனியுங்கள் - மனம் எப்போதுமே எதிர்காலம் பற்றி ஏதாவது சொல்லிக் கொண்டுதானிருக்கும். அது ஒரு போதும் உங்களை இங்கே இருக்கவிடாது. எதிர்காலத்தை நோக்கிச் செல்லும்படி உங்களைக் கட்டாயப்படுத்தும்.

கடந்தகாலத்திற்கு திரும்பிச் செல்லுங்கள். உங்களைக் கடந்த காலத்திற்குப் போகச் சொல்வதால், நீங்கள் கடந்தகாலத்தை நினைவுகூர வேண்டுமென்று நான் சொல்லவில்லை. நினைவுபடுத்திக் கொள்வது உதவாது. நினைவுபடுத்திக் கொள்வது வீர்யமற்ற செயல்முறை. இந்த வேறுபாடு கவனத்தில் கொள்ளப்பட வேண்டியது. நினைவுபடுத்திக் கொள்வதால் பயனில்லை, அது தீங்கு செய்வதாயிருக்கும். நினைவு படுத்திக் கொள்வதும் - மீண்டும் வாழ்வதும் வேறானவை. அவை ஒன்றுக் கொன்று முழுமையாய் வேறுபடுகிறவை. வேறுபாடு நுட்பமானது, அதைப் புரிந்து கொள்ளுங்கள்.

நீங்கள் ஏதோ ஒன்றை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். உங்களுடைய குழந்தைப் பருவத்தை நினைவுபடுத்திப் பாருங்கள். உங்கள்

குழந்தைப் பருவத்தை நினைவு கொள்ளும்போது நீங்கள் இங்கே, இந்த நேரத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் குழந்தையாக மாறிவிடுவதில்லை. உங்களால் நினைவுபடுத்திக் கொள்ளமுடியும். உங்கள் கண்களை மூடிக் கொள்ளுங்கள். நீங்கள் ஏழு வயது சிறுவனாக தோட்டத்தில் விளை யாடியதை நினைவில் கொண்டுவர முடியும். நீங்கள் அக்காட்சியைக் காண்கிறீர்கள். நீங்கள் இங்கிருந்தாலும் கடந்தகாலத்தை ஒரு திரைப்படம் போல் காண்பீர்கள். நீங்கள் ஓடுகிறீர்கள், வண்ணத்துப் பூச்சியைத் துரத்திக் கொண்டு குழந்தை ஓடுகிறது. நீங்கள் காண்பவராயும், குழந்தை காணப்படும் பொருளாயும் இருக்கிறது. இல்லை, இது சரியில்லை. இது நினைவுபடுத்திக் கொள்வதாகும். இது வீர்யமற்றது, பயன்படாது.

காயங்கள் ஆழமானவை. அவை நினைவுபடுத்திக் கொண்டால் மட்டும் வெளிப்பட்டுவிடாது. நினைவுபடுத்திக் கொள்வதென்பது பிரக்ஞை மனத்தின் (Conscious mind) ஒரு பகுதியாகும். மிகவும் முக்கியமானதே தன்னுணர்வற்ற தன்மையில் மறைந்திருக்கிறது. ஆக, ஒன்றுக்கும் உதவாதவற்றையே நீங்கள் நினைவு கொள்கிறீர்கள், அல்லது, உங்கள் மனம் ஏற்கக்கூடியவற்றை மட்டுமே நினைவு கொள்கிறீர்கள்.

அதனால்தான் ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய குழந்தைப் பருவம் சொர்க்கமாயிருந்தது என்று கூறுகிறான். ஏன் அப்படிக் கூறுவது? நீங்கள் மீண்டும் குழந்தையாக விரும்புவீர்கள், ஆனால், குழந்தைகளிடம் கேட்டுப்பாருங்கள். எந்தவொரு குழந்தையும் குழந்தையாயிருக்க விரும்பாது. ஒவ்வொரு குழந்தையும் பெரியவனாகிவிட விரும்பும், தான் எப்படிச் சீக்கிரமாய் வளரமுடியும் என்று எண்ணமிடும். குழந்தைப்பருவம் பற்றிய மகிழ்ச்சி எந்தக் குழந்தையிடமும் இல்லை. 'வளர்ந்தவர்கள் வலிமையோடிருக்கிறார்கள்' என்று அவன் சொல்கிறான். ஒவ்வொரு குழந்தையும் இயலாமையை உணர்கிறது, இயலாமை நல்ல உணர்வாய் இருக்க முடியாது.

ஒவ்வொரு குழந்தையிடமும் தாங்கள் அலைக்கழிக்கப்படுவதாய் ஓர் எண்ணம் உண்டு. தங்களுக்குச் சுதந்திரமில்லை என்று அவர்கள் எண்ணுகிறார்கள். குழந்தைப்பருவம் ஓர் அடிமைத்தனமாய் தெரிகிறது குழந்தைக்கு. அவனுக்கு ஐஸ்க்ரீம் தேவை என்றால் கெஞ்சிக் கேட்க வேண்டியிருக்கிறது. ஐஸ்க்ரீம் கெடுதல் என்று போதிக்க எல்லாரும் தயார். 'பிறகெதற்கு கடவுள் ஐஸ்க்ரீமைப் படைத்தார்?' என்று குழந்தை நினைக் கிறது. அவனுடைய பெற்றோர்கள் வற்புறுத்திக் திணிக்கிற எல்லாமே அவனுக்குக் கெடுதலாகவே தெரியும், அவனுக்கு அவற்றைப் பிடிக்காது. அவன் சாப்பிடவிரும்புகிற பொருள்கள் கெட்டதாய் தெரியும் அவனுடைய

பெற்றோர்களுக்கு. 'அவை தொல்லைதரும். உன் வயிறு கோளாறாகிவிடும்' என்று அவர்கள் சொல்வார்கள்.

நல்ல வைட்டமின்கள் தவறானவற்றில் வைக்கப்பட்டிருப்பதாயும், தவறானவை நல்லவைற்றில் இருப்பதாயும் குழந்தைக்குப்படும். குழந்தை எந்தவிதத்திலும் மகிழ்ச்சியாயிருக்கவில்லை, குறைந்தபட்ச மகிழ்ச்சியைக்கூட அவன் அனுபவிக்கவில்லை. இந்த அபத்தங்களை எல்லாம் ஒரு முடிவுக்குக் கொண்டுவரவே அவன் விரும்புவான். அவன் வளர்ந்து பெரியவனாகி சுதந்திரமாயிருக்க விரும்புவான். ஆனால் பிறகு அதே குழந்தைகள் தாம் குழந்தைப்பருவம் சொர்க்கமாயிருந்தது என்று சொல்வது. என்ன ஆயிற்று?

மோசமானவையும், அருவருக்கப்படுகிறவையும் உணர்வற்ற தன்மையில் தள்ளப்படும். அகந்தை அவற்றைக் காணவிரும்புவதில்லை.

'துயரங்கள் மறக்கப்படுகின்றன மகிழ்ச்சிக்குரியவை நினைக்கப் படுகின்றன'

நீங்கள் மகிழ்ச்சியான விஷயங்களைப் போற்றி வளர்க்கிறீர்கள், துயரமான சம்பவங்களை மறக்கப் பார்க்கிறீர்கள். இது ஒரு தேர்வு செய்யும் நிலையாயிருக்கிறது. அதனால்தான் பிற்பாடு ஒவ்வொருவரும் சொல்கி றார்கள் குழந்தைப்பருவம் சொர்க்கமாய் இருந்தது என்று. காரணம், தவறாகிப்போனவற்றையெல்லாம் நீங்கள் மறக்க முயல்கிறீர்கள். நீங்கள் நினைவுபடுத்திக் கொள்வதுபோல் உங்கள் குழந்தைப்பருவம் உண்மை யானதல்ல, அது கற்பனையானது. அகந்தை உருவாக்கிய கற்பனை. ஆக, நீங்கள் நினைவு கூர்ந்தால் மகிழ்ச்சியானவற்றையே நினைவு கூர்கிறீர்கள், மகிழ்ச்சியற்றவற்றை அல்ல. நீங்கள் மீண்டும் வாழ்ந்தால் மகிழ்ச்சி யானது, மகிழ்ச்சியற்றதுஎன்று எல்லாவற்றையும் வாழ்வீர்கள்.

மீண்டும் வாழ்வதென்பது என்ன? அது மறுபடியும் குழந்தையாகி வாழ்வதாகும். தோட்டத்தில் ஓடும் குழந்தையைப் பார்ப்பதல்ல அது, ஆனால் ஓடுகின்ற அந்தக் குழந்தையாகவே மாறிவிடுவது. வெறுமனே கவனிப்பவராய் இருக்காதீர்கள் - அந்த நிலையில் பொருந்திவிடுங்கள். அது சாத்தியந்தான், அந்தக் குழந்தை உங்களுக்குள் இன்னும் இருக்கிறது, அது உங்களில் ஒரு பகுதி. நீங்கள் வாழ்ந்தவையெல்லாம் உங்களுக்குள் அடுக்கடுக்காய் இருக்கின்றன.

ஒரு மரத்தின் கிளையை வெட்டிப் பாருங்கள், அதில் ஒவ்வோர் அடுக்கும் இருக்கும். ஆழத்தில் நடுப்பகுதியில் முதல் அடுக்கை நீங்கள் காண்பீர்கள்.

மரம் ஒரு செடியாய் இருந்தது

அதன் முதலடுக்கு அங்கே உள்ளது. இரண்டாம் அடுக்குந்தான். ஒவ்வோர் ஆண்டையும் ஒவ்வோர் அடுக்காய் சேர்த்து வைத்திருக்கிறது மரம். ஒரு மரத்தின் வயதை உங்களால் கணக்கிட முடியும். மரங்கள் மட்டுமல்ல, கற்கள் பாறைகள் இவையும் அடுக்குகளைக் கொண்டிருக்கும்.

எல்லாமும் சேர்த்து வைக்கப்பட்ட நடப்பு ஆகும்.

'உங்கள் தாயின் வயிற்றில் ஒருவிதையாய் நீங்கள் விழுந்தீர்கள்'

அது இன்னும் அங்கே இருக்கிறது. அதன் பிறகு இலட்சக் கணக்கான அடுக்குகள் ஒவ்வொரு நாளும் சேர்ந்து கொண்டே போனது. ஆயிரக் கணக்கான விஷயங்கள் நடந்துவிட்டன. அவை அனைத்தும் அங்கே அடுக்காய் சேர்ந்திருக்கின்றன. உங்களால் அவ்வாறு ஆக முடியும், காரணம் நீங்கள் அவ்வாறு இருந்திருக்கிறீர்கள். கொஞ்சம் பின்னால் காலடி எடுத்து வைக்கவேண்டும், அவ்வளவுதான்

பிரதி-ப்ரஸவ் என்பது கடந்தகாலத்தை மீண்டும் வாழ்வது. உங்கள் கண்களை மூடி, கீழேபடுங்கள். பின்னோக்கிச் செல்லுங்கள். நீங்கள் மிக எளிதான வழியில் அதைச் செய்யமுடியும். அதற்கான திறமையை அது உங்களுக்குக் கொடுக்கும். ஒவ்வோர் இரவும் நீங்கள் படுக்கையில் படுத்துக் கொண்டு காலையை நோக்கிப் பின்னால் செல்லவேண்டும். படுக்கையில் படுப்பது கடைசிச் செயலாய் இருக்கிறது. அதை முதலாவ தாக்குங்கள், பிறகு ஒவ்வொரு செய்கையாய் பின்னோக்கிச் செல்லுங்கள். ஒரு கோப்பை பாலைக் குடித்தீர்கள். மறுபடியும் அதை வாழ்ந்து பாருங்கள். உங்கள் மனைவியோடு சண்டைபோட்டது போன்று சண்டை போடுங்கள். அவற்றின் நியாயங்களைப் பார்க்காதீர்கள். அது நடந்துள்ளது. அது சரியானது அல்லது தவறானது என்று அதற்கு வர்ணம் பூச வேண்டாம். நடந்ததை அப்படியே திருப்பி வாழுங்கள்.

நீங்கள் இன்னும் பின்னால் செல்லுங்கள். அந்தக் கடிகார ஒலி உங்களை எழுப்பியதைக் கேளுங்கள். அன்று நடந்த எல்லாவற்றையும் ஒவ்வொன்றாய் ஒவ்வொரு கணமாய் திரும்பவும் வாழுங்கள். அப்படிச் செய்யும்போது வெகுவாய் புத்துணர்ச்சி பெறுவீர்கள். நீங்கள் மிகவும் அருமையான தூக்கத்தில் ஆழ்ந்து விடுவீர்கள். ஏனெனில் அந்த நாளை நீங்கள் முடித்துவிட்டீர்கள். அந்த நாள் இப்போது உங்களைத் தொற்றிக் கொண்டிருக்கவில்லை. நீங்கள் அதை உணர்வுடன் மறுவாழ்வாய் வாழ்ந்திருக்கிறீர்கள்.

பகலில் முழு உணர்வுடன் இருப்பது கடினம். நீங்கள் பலவித செயல்களில் ஈடுபட்டிருக்கிறீர்கள். கடைகளுக்குச் செல்லும்போது முழு உணர்வுடன் செல்வதில்லை. கோயிலுக்குச் சென்றால் சிலநொடிகள் மிகுந்த உணர்வுடன் இருந்திருப்பீர்கள். நீங்கள் தியானம் செய்தபோது உணர்வு நிலையில் இருந்திருக்கலாம். கடைகளுக்குச் செல்லும்போது அவ்வளவாய் இருந்திருக்காது. அது மாதிரியான இடங்களில் உங்களது உணர்வற்ற நிலையே மிகுந்திருக்கும். மறுபடியும் நீங்கள் தூக்கத்தில் நடப்பதுபோன்ற பழக்கத்தில் விழுந்து விடுவீர்கள். ஆனால், படுக்கையில் படுத்திருக்கும் போது நீங்கள் பிரக்ஞையுடன் இருக்கமுடியும். கவனித்திருங்கள், மறுபடியும் வாழுங்கள், நடந்தவையெல்லாம் மீண்டும் நடக்கட்டும். உண்மையில் அப்படித்தான் ஒரு புத்தருக்கு அது நிகழ்கிறது.

இரவில் பிரக்ஞையோடு மறுபடியும் வாழுங்கள். மனைவி என்னவோ சொன்னாள், நீங்கள் ஏதோ சொன்னீர்கள், அவள் அதற்கு எதிர்வினை புரிந்தார். பிறகு எப்படி அது நடந்தது? நீங்கள் எப்படிக் கோபமுற்று அவளைத் தாக்கினீர்கள், அவள் எப்படிக் கூவியழுதாள்?

அதன் பிறகு நீங்கள் அவளுடன் காதல் புரிந்திருப்பீர்கள். மிகச்சிறிய நுணுக்க விவரங்களையும் ஒன்றுவிடாமல் வாழுங்கள். கவனமாயிருங்கள். வேறெந்தச் செயலிலும் ஈடுபடாததால் அது உங்களுக்கு எளிதாயிருக்கும். உலகம் இனியும் அங்கே இல்லை. நீங்கள் கவனித்திருந்து மறுபடியும் அதை வாழுங்கள். காலையை அடைகிற தருணத்தில் நீங்கள் அமைதியாய் உணர்வீர்கள், உறக்கத்தின் மயக்கநிலை உங்கள் மீது இறங்கிக் கொண் டிருக்கும். அது உணர்வற்ற தன்மையாய் இருக்காது. வெல்வட்டைப்போல் அழகான இருளாய் இருக்கும். அதை நீங்கள் தொட்டுப்பார்க்கவும், உணரவும் முடியும். ஒரு தாயின் இதம் உங்களைச் சுற்றிக் கொள்ளும்.

நீங்கள் குறைவாகவே கனவு கண்டிருப்பீர்கள். காரணம், வாழ்ந்து பார்க்காத பொழுதில் தான் கனவுகள் உருவாகின்றன. இலட்சக்கணக்கில் நிகழ்வுகள் நடந்தேறும். நீங்கள் அத்தனையையும் வாழமுடியாது. நீங்கள் அவற்றை கனத்தோடு வாழமுடியாது. அவை தொக்கியிருப்பவை. கனவுகள் வாழாத நாளின் தொக்கிய விளைவு (hangover) எனலாம் அல்லது உணர்வின்றி வாழ்ந்த நாளினுடையது என்றும் கொள்ளலாம். இரண்டும் ஒன்றுதான். அரை மனதோடு வாழ்ந்த ஒருநாளில், குடிகாரனைப் போல் நீங்கள் இருந்த பொழுதில் கனவுகள் உருவாக்கப்பட்டன.

'பகலில் பூர்த்திசெய்யப்படாத செயல்முறையை கனவுகள் பூர்த்தி செய்கின்றன'

மனம் முழுநிறைவுக் கொள்கை உடையது. அதுவும் அரைகுறையா யிருப்பதை அது விரும்பாது. அது பூர்த்தி செய்யவே முயலும். அதனால்தான் இரவு முழுதும் நீங்கள் கனவு காண்பது. ஆனால், அந்த நாளை நீங்கள் மறுபடியும் வாழமுடிகிறபோது கனவுகள் வீழ்ந்துவிடும். கனவுகளே இல்லாமல் போய்விடுகிற ஒரு நாள் வரும். கனவுகள் இல்லையென்றாகிற போது முதல் முறையாய் உறக்கம் எத்தகையது என்று நீங்கள் அனுபவித்துணர்வீர்கள்.

பதஞ்சலி முனிவர் கூறுகிறார் சமாதி என்பது ஓர் உறக்கநிலை என்று. முடிவான பரவசம் உறக்கம் போன்றது. ஆனால் ஒரு வித்தியாசம், உறக்கம் தன்னுணர்வற்றது, சமாதி பிரக்ஞையோடு கூடியது. உறக்கம் ஒரு நேர்த்தியான நடப்பு. ஆனால் நீங்கள் ஒரு போதும் உறங்குவதில்லை, காரணம், நீங்கள் மாறாத கனவில் இருக்கிறீர்கள்.

இரவு முழுதிலும் கிட்டத்தட்ட எட்டு கனவுச் சுற்றுகள். ஒவ்வொரு சுற்றும் ஏறக்குறைய நாற்பது நிமிடங்கள் தொடர்கிறது. நீங்கள் எட்டு மணிநேரம் தூங்குகிறவரென்றால் எட்டு சுற்று கனவுகள், ஒவ்வொரு கனவுச் சுற்றுக்கும் நாற்பது நிமிடங்கள். இரண்டு கனவுகளுக்கிடையில் இருபது நிமிடங்கள் மட்டுமே உங்களுக்கிருக்கிறது. அதுவும் ஆழ்ந்த உறக்கம் என்று சொல்வதற்கில்லை, காரணம் இன்னொரு கனவு தயாராயிருக்கும். ஒரு கனவு முடிந்ததும் அந்த நடிகர்கள் திரைக்குப் பின்னால் சென்று விடுகிறார்கள். ஆனால் அங்கு அதிக அளவில் செயல், சுறுசுறுப்பு. காரணம் அவர்கள் முகத்தில் சாயம் பூசிக் கொண்டு, உடைகளை மாற்றிக் கொண்டு அடுத்த காட்சிக்கு தயாராக வேண்டியிருக்கிறது. அவர்கள் தயாரானதும் திரை உயர்த்தப்படும், அவர்கள் வெளிவருவார்கள்.

ஆக இரண்டு கனவுகளுக்கிடையிலான இருபது நிமிடம் உங்க ளுக்குக் கிடைக்கிறது. அதுவும் அத்தனை அமைதியாய் செல்லாது. அதற்கு அடியில் அடுத்த கனவுக்கான ஆயத்தங்கள் நடந்து கொண்டிருக்கும். அது இரண்டு யுத்தங்களுக்கிடையே உள்ள அமைதி போன்றது: முதலாம் உலகப் போர், இரண்டாம் உலகப்போர் இவற்றுக்கிடையிலான அமைதி. மக்கள் அவற்றை அமைதியான நாட்களாய் கணக்கில் கொள்கின்றனர். ஆனால் அவை அப்படியிருக்கவில்லை. அவை அப்படி இருக்க முடியாது. அவை அமைதியான நாட்களல்ல. இல்லையால் இரண்டாம் உலகப்போருக்கு எப்படி ஆயத்தம் நடந்திருக்க முடியும்? இப்போது அவர்கள் ஒரு சரியான வார்த்தையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். அது - பனிப்போர் (Coldwar). இரண்டு வெப்பமான போர்களுக்கிடையே நிகழ்வது ஒரு பனிப்போராகத் தானே இருக்கும். அது - திரைக்குப்பின்னால் நடக்கிற ஆயத்தம்.

இரண்டு கனவுச் சுற்றுகளுக்கிடையே ஓர் இருபது நிமிட இடைவெளி. அது ஓர் இடைவேளை போன்றது. எல்லாமும் ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறது, நீங்களும் ஆயத்தமாகிறீர்கள். அது இறுக்கமற்ற தாயில்லை, மிக இறுக்கமாகிறது, மனம் அமைதியின்றி அலைகிறது.

நாள் முழுவதையும் நீங்கள் மறுபடி வாழ்ந்து பார்க்கிறபோது கனவு காண்பது நின்றுவிடும். பின்பு, அடிப்பகுதியே இல்லாத ஆழத்தில் நீங்கள் விழுந்து விடுகிறீர்கள். ஓர் இறகானது படுகுழியில் விழுகிற மாதிரி விழுந்து கொண்டே இருக்கிறீர்கள். அது மிகப்பெரிய அழகைக் கொண்டிருக்கிறது. அது அந்த நாளுக்குள் நீங்கள் பின்னோக்கிச் செல்வதால் மட்டுமே நிகழ்வது. அதன் திறமையைக் கற்றுணர்வதற்காகவே இது. பிறகு, உங்கள் வாழ்க்கை நெடுகிலும் அதை நீங்கள் செயல்படுத்த முடியும். நீங்கள் வீறிட்டபடி இம்மண்ணில் பிறந்த அந்தத் தருணத்திற்கு பின்னோக்கிச் செல்லுங்கள். அது மீண்டும் வாழக்கூடியது (வெறுமனே ஞாபகப்படுத்திக் கொள்ளாமல்) என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஜானவ் மூலாதார வீறிடல் என்று அழைக்கும் அந்த வீறிடலை நீங்கள் மீண்டும் எழுப்ப முடியும். தாயின் கருவறை வாசல் வழியே மறுபடியும் பிறந்து வந்தது போல் நீங்கள் திரும்பவும் வீறிட முடியும். அது மிகவும் இடர்ப்பாடான வழி. ஒன்பது மாதம் சொர்க்கம் போன்ற அந்தக் கருவறையில் வாழ்ந்துவிட்டு போராடி வெளிவருவது வலியும் வேதனையும் அளிக்கத்தான் செய்யும்.

கருவறையைவிட அதிகவசதியுடன் கூடிய ஒன்றை நம்முடைய அறிவியலால் இன்னமும் உருவாக்க முடியவில்லை. அது முழுமையானது, எவ்வித குறைபாடுகளுமற்றது. முற்றாக எவ்வித கவலைகளும், பொறுப்பும் இல்லாமல் ரொட்டி வெண்ணெய் பற்றிய சிந்தனை இல்லாமல், ஏன் உலகம் பற்றியும் உறவுகள் பற்றியும்கூட எண்ணாமல் கவலைகளற்று குழந்தை வாழ்கிறது. காரணம் அங்கே வேறு யாரும் கிடையாது, உறவுகள் பற்றிய கேள்வி எழாது. சீரணிப்பது பற்றிய கவலையின்றி தன் தாயிடமிருந்து அது உணவைப் பெறுகிறது. தாய் சீரணித்துத் தருகிற உணவை குழந்தை எளிதாய் பெற்றுக் கொண்டு விடுகிறது. மூச்சு விடுவது பற்றிக்கூட கவலையில்லை. தாய் சுவாசிக்க குழந்தை பிராணவாயுவைப் பெற்றுத் தண்ணீரில் மிதக்கும்.

இந்துக்கள் விஷ்ணுவைப் பற்றி ஒரு கற்பனைச் சித்திரம் வைத்திருக்கிறார்கள். விஷ்ணு பாற்கடலில் மிதப்பதாய் அவர்கள் சொல்கிறார்கள். அந்தச் சித்திரத்தை நீங்கள் பார்க்க வேண்டும். பாம்புப் படுக்கையின் மீது அவர் வாசம் செய்கிறார். பாம்பின் பாதுகாப்பில் அவர் உறங்குகிறார். இந்தச் சித்திரம் உண்மையிலேயே கருவறைக்கான குறியீடு எனலாம். ஒவ்வொரு குழந்தையும் ஒரு விஷ்ணு - கடவுளின் அவதாரம், குறைந்த பட்சம் கருவறையில் என்று வைத்துக் கொள்ளுங்களேன். எல்லாமே

சரியாயிருக்கிறது எவ்வித குறைபாடுமில்லாமல். குழந்தை மிதக்கிற தண்ணீர் கடல் நீரைப்போன்றதாகும். அதே உப்பு அதே வேதியியல் பொருள்கள் கொண்டிருக்கும். அதனால் தானோ என்னவோ கர்ப்பிணிப் பெண் அதிகம் உப்பு சேர்த்த பண்டங்களை உண்ணத் தொடங்குவது. கடலில் உள்ள அதே வேதியியல் சார்ந்த சூழ்நிலை, அந்தக் கடலில் குழந்தை சுகமாய் மிதக்கிறது. வெப்ப நிலையும் மிகச் சரியாய் அதே அளவில் இருக்கிறது. வெளியில் குளிரடித்தாலும், புழுக்கமெடுத்தாலும் உள்ளே எந்த வேறுபாடும் இல்லை, தாயின் கருவறை குழந்தைக்காக ஒரே வெப்பநிலையில் இருக்கிறது. அவன் சொகுசாய் வாழ்கிறான். அந்தச் சொகுசைவிட்டு ஒரு குறுகிய இருண்ட பாதையில் வெளிப்படுவது குழந்தைக்கு வலிதருவதால் அது வீறிடுகிறது.

உங்களுடைய பிறப்பு அவதிக்கு மீண்டும் செல்கிறபோது நீங்கள் வீறிடுவீர்கள் மீண்டும் தங்கி வாழ்கையில் வீறிடுவீர்கள். உங்களைக் குழந்தையாய் உணர்கிற ஒரு தருணம் திரும்பவும் வரவே செய்யும்.

நீங்கள் பிறப்புக் கால்வாய் வழியே வருகிறீர்கள்; ஒரு வீறிடல் எழுகிறது. அந்தக்கத்தல் உங்களுடைய ஒட்டுமொத்த இருப்புணர்வை (being)யே அதிரச் செய்கிறது. உங்கள் இருப்புணர்வின் ஆதாரங்களில் இருந்தே அது வருகிறது. அந்த அலறல் பல விஷயங்களில் இருந்து உங்களை விடுவிக்கும். நீங்கள் மீண்டும் கள்ளம் கபடமற்ற குழந்தையாகி றீர்கள் - அது ஒரு மறுபிறவி. இதுவும் போதாது, காரணம் இது ஒரு வாழ்க்கைக்கு மட்டுமேயானது. ஒரு வாழ்க்கைக்காக பிறவிக்காக நீங்கள் அதைச் செய்யமுடிந்தால் மற்ற பிறவிகளிலும் நீங்கள் பிரவேசிக்க முடியும். நீங்கள் படைப்புக்குரிய அந்த முதல் நாளுக்குச் செல்லுங்கள். அல்லது, நீங்கள் ஒரு கிறிஸ்துவர் என்றால் ஆதாம் என்கிற சொல் தகுதியாயிருக்கும். நீங்கள் பூர்வத்துக்குத் திரும்புங்கள். மீண்டும் ஏடன் தோட்டத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் ஆதாமும் ஏவாளும் ஆகிறீர்கள். அப்போது உங்களுடைய கர்மாக்கள், பழக்கவழக்கங்கள், கட்டுப்பாடுகள் எல்லாம் மறைந்துவிடும், கழுவப்பட்டுவிடும். நீங்கள் திரும்பவும் சொர்க்கத்தில் பிரவேசித்தீர்கள். இதுதான் பிரதி-ப்ரஸவ்வின் செயல்முறை. இப்போது இந்தச் சூத்திரங்களில் நுழையுங்கள்.

> 'நிகழ்காலத்திலோ அல்லது எதிர்காலத்திலோ பூர்த்தி
> செய்யப் பட்டாலும் *கர்மானுபவங்களின் அடிப்படைகள்
> ஐவகைத் துன்பங்களியே இருக்கும்.'

---

* மனிதனின் விளைவுண்டு பண்ணக்கூடிய சொற்கள், இயக்கங்கள், எண்ணங்கள் ஆகிய உடல்மன நடவடிக்கைகள். இவை அடுத்த பிறவியில் அவனது பிறப்பு நிலையை முடிவு செய்யும் என்கிறது இந்துக்களின் ஊழ்வினைக் கொள்கை.

ஐந்து வகைக்கிலேசங்கள், துன்பங்கள், காரணங்கள் பற்றிப் பேசினோம். எல்லாச் செயல்களும் நிகழ்காலத்திலோ எதிர்காலத்திலோ பூர்த்தி செய்யப்பட்டாலும் கர்மானுபவங்கள் தங்கள் வேர்களை ஐவகைத் துன்பங்களிலேயே பெற்றிருக்கின்றன.

முதலாவது வேதனை (துன்பம்) அவித்யை ஆகும். இது விழிப்புணர்வின்மை, இதன் துணைப் பொருள்களே மற்ற நான்கும். கடைசியானது அபிநிர்வேஷ் - வாழ்விற்கான இச்சை. நீங்கள் செய்கிற அனைத்து கர்மங்களும் விழிப்புணர்வின்மையையே அடிப்படையாய் கொண்டவை.

இதன் பொருள் என்ன? புத்தர் நடப்பது, உண்பது, உறங்குவது இவை பற்றி என்ன சொல்வது? அவை கர்மங்களில்லை? இல்லை. அவை கர்மங்களாக மாட்டா. அவை எதிர்காலத்துக்கான எந்த விதையையும் தாங்கியிருக்கவில்லை. புத்தர் நடக்கிறார் என்பது நிகழ்காலத்துக்குரியது. கடந்த காலத்தில் நடந்ததுடன் அதற்குத் தொடர்பு இல்லை. அவர் நடப்பது கடந்த காலத்திலிருந்து வந்ததல்ல. இப்போது எப்படி நடக்கிறார் என்பதே முக்கியம். அது தானாகவே நிகழும் நிலை. புத்தர் பசியாய் உணர்ந்தால் உண்கிறார். ஆனால் அது தன்னால் நிகழ்வது. இடைவெளி புரிந்து கொள்ளப் படுகிறது இல்லையா.

கிழக்கின் இறைமையியல் (theology) சார்ந்த பிரச்சினைகளில் இதுவும் ஒன்று. புத்தர் ஞானம் பெற்றபின் நாற்பது ஆண்டுகள் வாழ்ந் திருக்கிறார். அந்த நாற்பதாண்டுகளில் அவருடைய செயல்கள் பற்றி என்ன சொல்வது? அவை விதைகள் என்றால் பிறகு அவர் மீண்டும் பிறந்திருக்க வேண்டுமே அல்லது அதில் மாறுபாடாய் எதுவும் உண்டா?

அவை விதைகளாகவில்லை, அவை ஆகவில்லை...

நீங்கள் தினமும் பகலில் ஒரு மணிக்குச் சாப்பிடுகிறீர்கள். அதை இரண்டு விதமாய் உட்கொள்ள முடியும். நீங்கள் கடிகாரத்தைப் பார்த்ததும் வயிற்றில் பசிவேதனை ஏற்படுவதை உணர்வது. இது கடந்ததிலிருந்து வரும் பசி. அது தானாய் நிகழ்வதல்ல காரணம். நீங்கள் தினமும் ஒரு மணிக்கு உண்பதை வழக்கமாய் கொண்டிருக்கிறீர்கள். கடிகாரத்தின் ஒரு மணி இது பசி நேரம் என்பதை ஞாபகப் படுத்துகிறது. அது ஞாபகப் படுத்துவதோடு ஒட்டுமொத்த உடம்பையும் துரிதப்படுத்துகிறது. உடம்பு முழுதிலும் பசியுணர்வு பரவத் தொடங்குகிறது. வெறுமனே ஞாபகப் படுத்துவதால் பசியுணர்வு வந்துவிடுமா என்று நீங்கள் கேட்பீர்கள் ரொம்ப சரி. ஆனால், உடல் எப்போதுமே மனதைப் பின்பற்றுவது. 'மணி ஒன்று' என ஞாபகப்படுத்தப்பட்டதும் உடல் 'நான் பசித்தாக வேண்டும்' என்கிறது.

வயிற்றில் பசியின் தீவிர சுழற்சியை நீங்கள் உணர்கிறீர்கள். இந்தப் பொய்ப் பசி கடந்த காலத்திலிருந்து உண்டு பண்ணப்பட்டது. கடிகாரம் பன்னிரண்டு காட்டும் போது (யாரேனும் ஒரு மணிநேரம் பின்னுக்குத் தள்ளி வைத்து) நீங்கள், ஓ, இன்னும் ஒரு மணிநேரம் இருக்கு. அதுவரைக்கும் வேலை யைத் தொடர்வோம் என்று சொல்லிக் கொள்வீர்கள். - பசி இல்லை.

நீங்கள் கடந்தகாலத்திலிருந்தும், பழக்க வழக்கங்களைக் கொண்டும் வாழ்கிறீர்கள். உங்கள் பசி ஒரு பழக்கம், உறவு ஒரு பழக்கம், தாகம், மகிழ்ச்சி, கோபம் என்று எல்லாமே பழக்கத்தில் வந்தவைகள்தாம். கடந்த காலத்திலிருந்து வாழ்கிறீர்கள். அதனால்தான் உங்கள் வாழ்க்கை அர்த்த மற்றதாய், முக்கியத்துவமற்றதாய் இருக்கிறது. ஒளியின்றி, சிறப்புத்தன்மை இல்லாமல் இருக்கிறது. அது சோலையற்ற வறண்ட பாலைவனத்தின் நடப்பு.

புத்தர் அந்தக் கணத்தின் தானாக நிகழும் நிலையில் (spontaniety) வாழ்கிறவர். அவருக்குப் பசியெடுத்தால் அது கடந்த காலத்தியதா யிருக்காது. இப்போது இக்கணத்தில் உணரப்படுகிற பசியாகவே இருக்கும். அவருடைய பசி உண்மையானது. இப்போது அவர் தாகமாய் உணர்கிறார். தாகமெடுக்கிறது. அது மனதால் தூண்டப்பட்டதல்ல. நீங்கள் மனத்தின் வழியே வாழ்பவர். புத்தரிடம் மனம் கிடையாது, அது சுத்தமாய் கழுவப் பட்டிருக்கிறது. அவர் தம்முடைய இருப்புணர்வின் வழியே வாழ்கிறார்.

அவர் -

எதை உணர்கிறாரோ அது நடக்கிறது எது நடக்கிறதோ அதை உணர்கிறார்'

அதனால்தான் புத்தரைப் போன்றவர்கள் 'இப்போது நான் மரண மடையப் போகிறேன்' என்கிறார்கள். உங்களால் அதைச் சொல்ல முடியாது. நீங்கள் எப்படிச் சொல்ல முடியும்? தானாக நிகழும் எதையும் நீங்கள் உணர்ந்ததில்லையே. காலத்தில் உங்களுக்குப் பசி எடுக்கிறது, பழக்கத்தில் உங்களுக்கு காதல் உணர்வு வருகிறது. காரணம் பழக்கத்தில் உண்டான அமைப்பு. மரணத்தை நீங்கள் கடந்த காலத்தில் அறிந்திருக்கவில்லை. அப்படியிருக்க மரணம் வரும்போது எப்படி இனம் காண்பீர்கள்? உங்களால் அதை இனம் காண முடியாது, மரணம் வரும். ஒரு புத்தரால் மரணத்தை இனம் காண முடியும்.

மரணம் வந்தபோது புத்தர் தம்முடைய சீடர்களிடம், 'நீங்கள் எதையாவது கேட்க வேண்டியிருந்தால் கேட்டு விடுங்கள், நான் சாகப் போகிறேன்' என்றார். உடம்புக்குப் பசியெடுத்தபோது பசியை உணர்ந்து, தாகமெடுத்த போது தாகத்தை உணர்ந்து புறத்தூண்டுதலன்றி வாழ முடிந்த

ஒருவரால் மட்டுமே உடம்புக்கு மரணம் வருகிறபோது அதை உணர முடியும். மனிதர்களின் மரணம் விசித்திரமானது. தாங்கள் செத்துக் கொண் டிருப்பதை அவர்களால் உணர முடிவதில்லை. அவர்கள் உணர்வற்று, 'ரோபோ' மாதிரி இயந்திரத்தனமாகி விடுகிறார்கள்.

மரணம் ஒரு சிறந்த நடப்பு. உங்களால் பசியை உணர முடிகிறபோது ஏன் மரணத்தை உணரமுடியவில்லை. உடம்புக்குத் தூக்கமாய் இருப்பதை நீங்கள் உணர முடிகிறபோது, அந்த உடம்பு இறக்கப் போவதை ஏன் உங்களால் உணரமுடியவில்லை. இல்லை, உங்களால் உணரமுடியாது. உங்களால் கடந்ததைக் கொண்டுதான் உணரமுடியும். கடந்தகாலத்தில் மரணம் நேர்ந்திருக்கவில்லை. எனவே அந்த அனுபவம் உங்களுக் கிருக்காது. அதனால்தான் மரணம் வருகிறபோது மனம் எந்தவொரு ஞாபகத்தையும் தாங்கியிருப்பதில்லை. அது வருகிறது, மனம் அறியா திருக்கிறது. 'நீங்கள் எதையேனும் கேட்கவேண்டியிருந்தால் இப்போது கேட்கலாம். காரணம், நான் சாகப்போகிறேன்' என்று புத்தர் சொன்னார். அதன் பிறகு ஒரு மரத்தடியில் அமர்ந்தபடி பிரக்ஞையுடன் உயிர்நீத்தார். மரணம் இயல்பாய் நிகழ்வது அருமையான விஷயம் அதில் போராட்டம் கிடையாது.

அறிநிலை உள்ள (aware) மனிதன் அந்தக்கணத்தில் வாழ்பவன், கடந்தகாலத்தைக் கொண்டு அவன் வாழ்வதில்லை. இதுதான் வேறுபாடு: நீங்கள் கடந்த காலத்தைக் கொண்டு வாழ்ந்தால் பிறகு எதிர்காலம் தோற்றுவிக்கப்பட்டு அதில் கர்மச் சக்கரம் சுழலும். நீங்கள் நிகழ்காலத்தைக் கொண்டு வாழ்ந்தால் கர்மாவின் சுழற்சி இருக்காது. நீங்கள் அதற்கு வெளியே இருக்கிறீர்கள், அதிலிருந்து நழுவி விடுகிறீர்கள். எதிர்காலம் தோற்றுவிக்கப்படுவதில்லை.

நிகழ்காலம் ஒருபோதும் எதிர்காலத்தைத் தோற்றுவிக்காது. கடந்த காலம் மட்டுமே எதிர்காலத்தைத் தோற்றுவிக்கிறது. அப்போது வாழ்க்கை கடந்தகாலத் தொடர்பின்றி கணங்களின் நிகழ்வாகிறது. நீங்கள் இந்தக் கணத்தில் வாழ்கிறீர்கள். இந்தக் கணம் போனால் இன்னொரு கணம் வருகிறது. நீங்கள் இன்னொரு கணத்தை வாழ்வது சென்ற கணத்தின் வழியே அல்ல. உங்கள் விழிப்புணர்வை, எச்சரிக்கை உணர்வை, இருப்புணர்வை (being) க் கொண்டு வாழ்கிறீர்கள். அப்போது எதிர்காலம் பற்றிய கனவோ, கற்பனையோ, கவலையோ இருக்காது. கடந்த காலத்தைச் சார்ந்திருப்பதும் கிடையாது. எடையற்றவராகி உங்களால் பறக்கவும் முடியும். புவியீர்ப்பு தத்துவம் பொருளற்றதாகிவிடும்.

'நீங்கள் பறவையாகி சிறகு கொண்டு வானில் பறக்க முடியும்'

தொடர்ந்து பறப்பீர்கள், திரும்புவதென்பதில்லை. என்ன செய்ய வேண்டும்? வளர்ந்து பெரிதான பழைய கர்மாக்களுடன் 'பிரதி - ப்ரஸவ்' திட்டத்தை நீங்கள் செயல்படுத்த வேண்டு. நீங்கள் பின்னோக்கிச் சென்று வாழ்வதில், மீண்டும் வாழ்தலில் அந்த ரணங்கள் ஆறும். உங்களுடைய கடந்தகாலம் தீரும்.

இரண்டாவது - பழங்கணக்கு தீர்க்கப்பட்டதும், நீங்களும் அத்துடன் முடிந்து விடுகிறீர்கள். எல்லா ஆவணங்களும் எரிக்கப்பட்டு விடுகின்றன. விதைகள் எரிக்கப்படுகின்றன. இதற்கு முன் நீங்கள் இருந்ததில்லை என்றாகி இக்கணத்தில் புதிதாய் பிறக்கிறீர்கள். அது அதிகாலைப் பனித்துளிகளைப் போல் புத்தம் புதிது. பிறகு விழிப்புணர்வுடன் வாழுங்கள். கடந்தகால நினைவுகளுடன் நீங்கள் எதைச் செய்திருந்தாலும் இப்போது நிகழ்கால நடப்புடன் அதையே செய்யுங்கள். ஒவ்வொரு கணத்தையும் பிரக்ஞையுடன் வாழுங்கள். ஒவ்வொரு கணத்தையும் நீங்கள் பிரக்ஞையுடன் (consciousness) வாழ்ந்தால் கர்மாக்களை நீங்கள் சேர்த்துக் கொள்வதில்லை, இரணங்களையுந்தான்.

உங்கள் -

வாழ்க்கை சுமையற்ற வாழ்க்கையாகும்.

இதுவே சந்நியாசத்தின் உண்மையான பொருள். சுமையற்று வாழ்தல். கண்ணாடி வாழ்க்கையை உள்ளபடி பிரதிபலிக்கிறது, அதை ஒவ்வொரு கணமும் துடைத்துக் கொண்டிருந்தால் அதில் தூசிபடியாது.

'ஈர்ப்பில்லாத வாழ்க்கையே சுமையற்ற வாழ்க்கை'

சுமையற்று வாழ, ஈர்ப்பின்றி வாழ, சிறகடித்துப் பறக்க, பரந்த வானில் வாழ்ந்து பார்க்க சந்நியாசியாயிருக்க வேண்டும். சந்நியாசியை - 'வானத்துப் பறவை' என்று பண்டைய நூல்கள் குறிப்பிடுகின்றன. அவன் அப்படித்தான். வானில் பறக்கும் பறவைகள் தங்கள் பாதையில் சுவடு களை விட்டுச் செல்வதில்லை, அவனும் சுவடுகளை விட்டுச் செல்ல மாட்டான். நீங்கள் தரையில் நடக்கும்போது சுவடுகள் பதியும். தெரிநிலை யற்ற (unaware) மனிதன் தரைமீது ஈரத்தரை மீது நடந்து தனது சுவடு களை - கடந்த காலம், விட்டுச் செல்கிறான். நீங்கள் பின்னோக்கிப் பார்த்தாலும் முன்னோக்கிப் பார்த்தாலும் ஆகாயம் இருக்கிறது - சுவடுகளில்லை, நினைவுகளில்லை.

நான் இதனைக் கூறும்போது ஒரு புத்தாவுக்கு உங்களைத் தெரிந்தாலும் உங்களை நினைவில் கொள்ளமாட்டார் என்ற கருத்தில் கூறவில்லை.

அவருக்கும் நினைவுகள் உண்டு. ஆனால் அவை உளவியல் சார்ந்த நினைவுகளாயிருக்காது. மனம் இயங்குகிறது. ஆனால் அது ஓர் இயந்திர நுட்பம் போல் பிரிவாய் இயங்குகிறது. அவர் தன்னை மனதுடன் அடையாளப் படுத்திக் கொள்வதில்லை. நீங்கள் புத்தரிடம் சென்று 'நான் இதற்குமுன் இங்கே இருந்திருக்கிறேன், என்னை உங்களுக்கு நினைவிருக்கிறதா? என்றால் அவர் உங்களை நினைவு கொள்வார். மற்றெவரையும் விட மிகச் சிறப்பாகவே நினைவு கூருவார், காரணம் அவர் சுமைகளில்லாதவர். அவருடைய மனம் கண்ணாடி போல் தெளிவானது, சுத்தமானது.

நீங்கள் இந்த வேறுபாட்டைப் புரிந்துகொள்ள வேண்டும், காரணம் ஒருவன் எச்சரிக்கையுடன் தெரிநிலையோடு, மனதை விட்டுவிட்டு இருக்கும்போது அவன் எல்லாவற்றையும் மறந்துவிடுவான் என்று சில நேரங்களில் மக்கள் நினைத்துக்கொண்டு விடுகிறார்கள். இல்லை, அவன் எதையும் சுமந்திருப்பதில்லை, அவன் நினைவு கொள்கிறான். இப்போது அவனுடைய இயக்கம் சிறப்பாக இருக்கிறது. மனம் கண்ணாடியைப் போல் மிகத் தெளிவாயிருக்கிறது. அவன் இருப்பு சார்ந்த நினைவுகளைப் பெற்றிருப்பான். ஆனால் உளவியல் சார்ந்த நினைவுகள் எதுவும் அவனிடம் இருக்காது. இந்த வேறுபாடு நுட்பமானது.

உதாரணமாய்: நீங்கள் நேற்று என்னிடம் வந்தீர்கள், அப்போது என்மீது கோபமாயிருந்தீர்கள் மீண்டும் இன்று நீங்கள் வருகிறீர்கள், நேற்று நீங்கள் வந்ததை வைத்து நான் உங்களை ஞாபகப்படுத்திக் கொள்கிறேன். உங்கள் முகத்தை நான் ஞாபகப்படுத்திக் கொள்கிறேன், உங்களை அடையாளம் காண்கிறேன், ஆனால் உங்கள் கோபம் ஏற்படுத்திய காயத்தை நான் சுமந்திருக்கவில்லை. நீங்கள் கோபமாயிருந்தது உங்களுக்கு நீங்களே செய்து கொண்ட ஏதோ ஒன்று, அதில் எனக்கென்ன இருக்கிறது? நான் அங்கே இருந்தது ஒத்த நிகழ்வு, அவ்வளவுதான். நான் காயப்பட்டிருக்கவில்லை. நேற்று நீங்கள் கோபமாயிருந்ததைக் கருத்தில் கொண்டு நான் நடக்க மாட்டேன். கோபம் உங்களுக்கும் எனக்கும் இடையேயானதல்ல. அந்தக் கோபம் தற்போதைய உறவில் தவறான கருத்தைக் கொடுக்க முடியாது. அப்படியொரு தவறான கருத்தை அது ஏற்படுத்தினால் அது உளவியல் சார்ந்த நினைவாகிவிடும், காயத்தைச் சுமந்து நிற்கும்படியாகும்.

உளவியல் சார்ந்த நினைவு என்பது ஏமாற்றும் செயல் முறையாகும். நீங்கள் மன்னிப்புக் கோரி வரும்போது நான் அந்தக் காயத்தைச் சுமந்திருந்தால், நடந்து போனதை எண்ணி வருந்தும் உங்களுடைய தற்போதைய முகத்தைப் பார்க்க மாட்டேன்.

நான் நேற்றைய முகத்தைப் பார்த்தால் அந்தக் கண்களில் இன்னமும் கோபத்தைக் காண்பேன், உங்களுக்குள் ஒரு பகைவனைக் காண்பேன். நீங்கள் தவறுக்கு வருந்துகிறபோது பகைவனாயிருக்க மாட்டீர்கள். இரவு முழுதும் உங்களால் தூங்க முடிந்திருக்காது. நீங்கள் மன்னிப்பு கோரி வருகிறீர்கள். நான் நேற்றைய பொழுதை உங்கள் முகத்திரையில் கண்டால் அப்படித்தன் நடந்து கொள்வேன். 'நேற்று' என்பது புதிதாய் ஒன்று பிறக்கும் சாத்தியத்தை அழித்துவிடும். உங்களுடைய பாவமன்னிப்பை (repentance) நான் ஏற்கமாட்டேன். உங்கள் வருத்தத்தைக் கண்டுகொள்ள மாட்டேன். நீங்கள் ஏமாற்றுக்காரர் என்றே எண்ணிக் கொள்வேன். உங்களுக்கும் எனக்கும் இடையே கோபம், கோபக்காரனின் முகம் இருப்பதால் ஏதோ ஒன்று அதன் பின்னால் இருப்பதாய் எண்ணிக் கொள்வேன்.

அதை நான் பெரிது படுத்திப் பார்க்கிறபோது உங்களுக்கு வருத்தம் தெரிவிப்பதற்கான சாத்தியம் இல்லாதுபோகும். அல்லது அதை நான் கடுமையாய் வெளிக்காட்டவும், நீங்கள் மன்னிப்புக் கேட்க வந்ததையே மறந்து போவீர்கள். என்னுடைய நடத்தை நீங்கள் மீண்டும் கோபப்படும் சூழ்நிலையை ஏற்படுத்திவிடும். இது உளவியல் சார்ந்த நினைவு.

இருப்பு சார்ந்த நினைவு சரியானது. புத்தர் தமது சீடர்களை நினைவில் கொள்வார். ஆனந்தன் ஆனந்தனாகவும் சாரிபுத்ரன் சாரிபுத்ரனாகவும் இருப்பார்கள். யார் ஆனந்தன் யார் சாரிபுத்ரன் என்பதில் அவருக்குக் குழப்பம் இருக்காது. அவர் நினைவைச் சுமந்திருப்பது அவருடைய மூளையின் இயக்க நுட்பத்தில் ஒரு பகுதியாகும். அது உங்கள் பையில் கம்ப்யூட்டரையும், கம்ப்யூட்டர் தன்னுள் நினைவுப் பதிப்பி (memory) யையும் வைத்திருக்கிற மாதிரி. புத்தரின் மூளை உங்கள் பையில் வைத்திருக்கும் கம்ப்யூட்டர் மாதிரி தனியான ஒன்று. அது அவருடைய தொடர்புகளில் வருவதில்லை. அவர் அதனை எப்போதும் சுமந்து செல்வதில்லை. தேவைப்படும் போது பயன்படுத்துவார், அவர் ஒரு போதும் அதை வைத்து அடையாளம் காணப்படுவதில்லை.

ஒருவன் முழு விழிப்புணர்வுடன் நிகழ்காலத்தில் வாழ்கிறபோது அதைத் தவிர வேறெங்கும் முழு விழிப்புணர்வோடு நீங்கள் வாழ முடியாது. நீங்கள் உணர்வுடன் இருக்கும் போது அங்கே நிகழ்காலம் மட்டுந்தான் இருக்கும்; கடந்த காலமோ எதிர்காலமோ இருக்காது. ஒட்டு மொத்த வாழ்வும் நிகழ்கால நடப்பாகிவிடும். அப்போது கர்மா இல்லை, கர்மாவின் விதைகள் சேர்வதுமில்லை.

உங்கள் பிணைப்பிலிருந்து, உங்களால் தோற்றுவித்துக் கொள்ளப் பட்ட பிணைப்பிலிருந்து நீங்கள் விடுபடுகிறீர்கள்.

*நீங்கள் சுதந்திரமாய் இயங்க முடியும். உலகம் விடுவிக்கப்படும் வரை நீங்கள் காத்திருக்க வேண்டியதில்லை. நீங்கள் பேரின்பத்தில் தியானிக்க முடியும். நீங்கள் காத்திருந்தால், அது பயனற்றது - அது நடக்கப் போகிறதில்லை.*

*இது உள்ளார்ந்த ஒரு நடப்பு.தளையில் இருந்து விடுபடுவது தளைப்பட்ட சமூகத்தில் நீங்கள் தளையற்றவராய் வாழ முடியும். நீங்கள் முழுமையான சுதந்திரத்துடன் வாழ முடியும். ஒரு சிறைச்சாலையில் கூட அது எந்த வேறுபாட்டையும் உண்டு பண்ணாது. காரணம் அது ஒரு உள்ளார்ந்த மனோபாவம். உங்களுடைய உள்ளார்ந்த விதைகள் உடைந்து நொறுங்கிவிட்டால் நீங்கள் தளையற்றவர்தாம். புத்தரை நீங்கள் ஓர் கைதியாக்க முடியாது. அவரை நீங்கள் சிறையிலிட்டாலும் அவர் கைதியாக மாட்டார். அவர் அங்கே வாழ்ந்து கொண்டிருப்பார், முழுமையான விழிப்புணர்வுடன் வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டிருப்பார். நீங்கள் முழுமையான விழிப்புணர்வுடன் இருக்க முடிந்தால் அதுவே மோட்சம், அதுவே சுதந்திரம்.*

*'விழிப்புணர்வு சுதந்திரம், விழிப்புணர்வற்ற நிலையோ சிறைவாசம்'*

**அடிப்படைக் காரணங்கள் அப்படியே இருக்கும் பட்சத்தில் கர்மாவானது தரம், வாழும் காலம், அனுபவங்களின் வகைகள் இவற்றின் வழியே மறுபிறவியில் பூர்த்தி செய்யப்படும்.**

*கர்மாவின் விதைகளை நீங்கள் தாங்கியிருந்தால், அந்த விதைகள் இலட்சோபலட்சம் வழிகளில் மீண்டும் மீண்டும் பூர்த்தி செய்யப்படும். உங்களுடைய கர்மாக்கள் பூர்த்தி செய்யப்பட்ட சூழ்நிலைகளை, சந்தர்ப்பங்களை நீங்கள் மீண்டும் காண்பீர்கள்.*

*உதாரணம்: பல வளங்களைப் பெற்ற செல்வந்தர் நீங்கள். நீங்கள் செல்வந்தராயிருந்தாலும் உங்கள் கருமித்தனத்தால் ஓர் ஏழையைப் போல் வாழ்கிறீர்கள் - இது கர்மா. முந்தைய பிறவிகளில் ஓர் ஏழையின் வாழ்க்கையை நீங்கள் வாழ்ந்திருப்பீர்கள். இப்போது உங்களிடம் செல்வங்கள் இருந்தாலும் அவற்றை அனுபவிக்க முடிவதில்லை. நீங்கள் பகுத்தறிவுக்கு ஏற்றவாறு விளக்கம் தர முற்படலாம். உலகமே ஏழ்மையில் இருப்பதால் நீங்களும் ஓர் ஏழையைப் போல் வாழ்கிறீர்கள். ஆனால், உங்களுடைய செல்வங்களை ஏழைகளுக்குக் கொடுக்க மாட்டீர்கள்.*

*ஓர் ஏழையைப் போல் நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்க உங்கள் பணம் வங்கியில் கிடக்கும். அல்லது, ஏழ்மையில் வாழ்வது சமயம் சார்ந்த*

வாழ்க்கை என்று நீங்கள் எண்ணியிருக்கலாம். இது ஒரு கர்மா, வறுமையின் விதை. உனக்கு செல்வம் இருக்கலாம் ஆனால் நீ அதை அனுபவிக்க முடியாது. விதை அதை அனுமதிக்காது.

நீ ஒரு பிச்சைக்காரனாக இருக்கலாம், நீ ஒரு வளமான வாழ்வை வாழ முடியும். நீ ஒரு பிச்சைக்காரனாகவும் இருக்கக்கூடும். சில சமயங்களில் பணக்காரர்களை விட பிச்சைக்காரர்கள் செல்வந்தர்களாக இருக்கிறார்கள். அவர்கள் சுதந்திரமாக வாழ்கின்றனர். அவர்கள் என்ன நடக்கப் போகிறது என்பதைப் பற்றி கவலைப்படுவதில்லை. அவர்களிடம் இழப்பதற்க்கு ஒன்றுமில்லை. அதனால் அவர்களிடம் இருப்பது எதுவோ அதை அவர்கள் அனுபவிக்கின்றனர். அது என்னவாக இருந்தாலும் அதைவிட குறைவு என்பதாக இருக்க முடியாது. எனவே அதை அனுபவிக்கின்றனர். ஓர் ஏழை ஒரு பணக்கார வாழ்வின் விதையை தன்னுள் சுமந்து கொண்டிருந்தால் அவன் வளமான வாழ்வை வாழ்வான். அந்த கர்மா நிறைவுக்கான வழிகளை சாத்தியக் கூறுகளை எப்போதும் கண்டு பிடித்துவிடும். நீ எங்கே இருக்கிறாய் என்பது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. நீ உன்னுடைய கடந்த காலத்தை வாழ்ந்தே தீர வேண்டும்.

*'நல்லொழுக்கம் மகிழ்ச்சியைத் தரும்; தீயொழுக்கம் வேதனையைத் தரும்'*

நீங்கள் நற்பண்போடு கூடிய கர்மங்களைச் செய்திருந்தால் நற்காரியங்களைச் செய்திருந்தால் பெருமளவு மகிழ்ச்சி உங்களைச் சுற்றியிருக்கும். உங்களைச் சுற்றி எதுவுமே இல்லையென்றாலும் கூட வாழ்வு குறித்து இனியதொரு மனோபாவத்தையேனும் கொண்டிருப்பீர்கள்.

**'இருண்ட மேகங்களினூடே வெளிச்ச மின்னல்களை உங்களால் காண முடியும்'**

மிகச் சிறியனவற்றையும், எளியனவற்றையும் அனுபவித்து மகிழ்வீர்கள். அவை செல்வங்களிலெல்லாம் சிறந்த செல்வமாகும். ஒரு பிச்சைக்காரனின் உடையில் இருந்தாலும் பேரரசனைப் போல் நடந்து செல்வீர்கள். நீங்கள் நேர்மையான கர்மாக்களைச் செய்திருந்தால் சந்தோஷம் உங்களைத் தொடர்ந்திருக்கும். நீங்கள் தவறுகளை - மூர்க்கத்தனத்துடன், வலுச்சண்டையிட்டு மற்றவர்களுக்குத் தீங்கிழைத்திருந்தால் (தீய கர்மாக்கள்) பிறகு வேதனைதான் தொடரும். அது ஒரு விளைவு, இயற்கையான விளைவு என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

நீங்கள் ஒழுக்க வகையில் கண்டிக்கத் தக்கவற்றைச் செய்வதால் கடவுள் உங்களைத் தண்டிக்கிறார் என்று கிறிஸ்துவர்களும், யூதர்களும்,

முகமதியர்களும் நினைக்கிறார்கள் நீங்கள் நல்லவற்றைச் செய்கிற போது கடவுள் உங்களைப் பாராட்டுகிறார், உங்களுக்கு வெகுமதிகளை வழங்குகிறார், மனதுக்கு உவகையளிக்கும் பரிசுகளையும் தருகிறார். இந்துக்கள் மிகவும் விஞ்ஞான பூர்வமானவர்கள். அவர்கள் கடவுளை இதிலெல்லாம் கொண்டு வருவதில்லை. 'இது சட்டம்' என்று அவர்கள் சாதாரணமாய் சொல்லிவிடுவார்கள், இது புவியீர்ப்பு விதி என்கிற மாதிரி. நீங்கள் சம நிலையில் நடந்தால் விழ மாட்டீர்கள், நடப்பதில் மகிழ்வீர்கள், குடிகாரனைப் போல் தள்ளாடி நடந்தால் நீங்கள் விழுந்து, எலும்பு முறியும். அது கடவுள் உங்களைத் தண்டிப்பதாகாது, காரணம் அது உங்கள் தவறு.

ஒரு 'புவியீர்ப்பு விதி' மாதிரிதான். நீங்கள் நல்ல உணவை உண்டால் ஆரோக்கியமாயிருப்பீர்கள், தவறானதை உண்டு வைத்தால் நோய் வரும். யாரும் உங்களைத் தண்டித்துக் கொண்டிருக்கவில்லை. உங்களைத் தண்டிக்க யாரும் கிடையாது, சட்டம், இயற்கை தவிர. - இது தாவோ, ரிட்.

கர்ம சட்டம் ரொம்பவும் எளிமையானது. நீங்கள் கடவுளை இதில் கொண்டு வந்தால் பிறகு விஷயங்கள் சிக்கலாகிவிடும். சில சமயங்களில் தீயவன் ஒருவன் வாழ்க்கையை மகிழ்ச்சியோடு அனுபவித்துக் கொண் டிருப்பான், சில சமயங்களில் நல்லவன் ஒருவன் துன்புறுவதையும் நாம் காண்போம். ஆக கடவுள் என்னதான் செய்து கொண்டிருக்கிறார் என்ற கேள்வி எழும். அவர் நியாயமற்ற முறையில் நடந்து கொள்பவராய் தெரிவார். அவர் நியாயமானவராய் இருந்தால் தீயவன் துன்புற வேண்டும், நல்லவன் மகிழ்ச்சியோடு வாழ்க்கையை அனுபவிக்க வேண்டுமல்லவா.

பிரச்சினை இதுதான்: கடவுள் முற்றிலும் நியாயமானவர் என்றால் நடுநிலை தவறாதவர் என்றால் அவரை இரக்கம் காட்டுபவராய் நீங்கள் மாற்ற முடியாது. ஒரு நிலையாய் நடக்கிற கடவுள் இரக்கம் காட்ட முடியாது. இரக்கம் என்பது தவறு செய்த ஒருவர் மன்றாடவும் நீங்கள் அவரை மன்னிப்பதாகும். அனைத்து மதங்களிலும் பிரார்த்தனை முக்கியத்துவம் பெறுகிறது.

'பிரார்த்தியுங்கள், நீங்கள் கடவுளிடம் மனமுருகி வேண்டினால் அவர் உங்களை மன்னிப்பார். இரக்கமே வடிவானவர் அவர். அவர் நேர்மை யற்றும் இருப்பார் என்பதுதான் இதன் பொருள். ஒருவன் பிரார்த்தனை செய்யாதவனாயும், இறையானை மீறியவனாயும் (sinner) இருந்தால் அவன் தண்டிக்கப்பட்டு நரகத்தில் தள்ளப்படுவான். ஒருவன் பிரார்த்தனை செய்துகொண்டு, பெரிய பாவியாய் இருந்தாலும் சொர்க்கத்தில் பிரவேசிப்பான். இது நியாயமற்ற காரியம் அல்லவா. பிரார்த்தனை அவனைத் தாங்கி நிறுத்துகிறதா? பிரார்த்தனை என்பது என்ன? அது

ஒருவகை இலஞ்சமா? பிரார்த்தனை என்பது என்ன, அது ஒருவகைப் பயன்படுத்தலா? நீங்கள் கடவுளைப் பயன்படுத்துகிறீர்கள்.

இந்துக்கள் சொல்கிறார்கள், 'இல்லை, கடவுளைக் கொண்டு வராதீர்கள், சிக்கலாகி விடும். ஒன்று அவர் நடுநிலையாய் இருப்பார். அப்போது அங்கே இரக்கத்துக்கு இடமிருக்காது. அல்லது அவர் இரக்கம் காட்டுவார். அப்போது அவர் நடு நிலையாயிருக்க மாட்டார்' என்று.

இதன் காரணமாகவே மக்கள் நல்லதோ கெட்டதோ ஏற்புடைய தாயிருக்காது, பிரார்த்தனை, ஒரு புனிதத்தலத்துக்கு யாத்திரை மட்டுமே பொருத்தமாயிருக்கும் என்று எண்ணுகிறீர்கள். இந்துக்கள் சொல்கிறார்கள் 'நீங்கள் தீயதைச் செய்தால் துன்புறுவீர்கள், இது இயற்கையின் விதி. இதில் பிரார்த்தனை உதவாது என்று. எனவே பிரார்த்தனையில் நேரத்தை வீணடிக்கிறீர்கள். நீங்கள் கெட்டதைச் செய்தால் துன்புறுவீர்கள், நல்லதைச் செய்தால் மகிழ்ச்சியடைவீர்கள்.

ஆனால், யாரும் இவற்றை உங்களுக்கு விநியோகிப்பதில்லை, உலகில் எந்தத் தனி மனிதனுடைய காரியமுமல்ல இது. சட்டம் தனி மனிதனைச் சுட்டிக் காட்டாது. இது அறிவியல் பூர்வமானது. குறைவான அளவில் சிக்கல்களைத் தோற்றுவிப்பது, அதிக அளவில் பிரச்சினைகளைத் தீர்ப்பது. இயற்கை விதி பற்றிய இந்துக்களின் கருத்தானது எந்த விதத்தில் பார்த்தாலும் அறிவியல் மனோபாவத்துக்கு ஏற்றதாகவே உள்ளது. நீங்கள் தீயதைச் செய்கிறீர்கள். அல்லது நல்லதைச் செய்கிறீர்கள். மகிழ்ச்சியோ வேதனையோ நிழலாய் தொடர்கிறது அது எப்படி வந்தது? என்ன செய்யப்பட வேண்டும்.

கிழக்கில் இரண்டு மனோபாவங்கள் உள்ளன. ஒன்று பதஞ்சலியி னுடையது, மற்றொன்று மகாவீரருடையது. மகாவீரர் சொல்கிறார், 'நீங்கள் தவறு செய்தால் பிறகு அதைச் சமன்படுத்த நல்லதைச் செய்யுங்கள். இல்லையேல் துன்பப்படும்படி ஆகும்' என்று. அது ரொம்பவும் அதீதமாய் தெரிகிறது காரணம் இலட்சோப லட்சம் காரியங்களை பல பிறவிகளால் செய்து கொண்டிருக்கிறீர்கள். அவற்றையெல்லாம் சீர் செய்ய வேண்டு மெனில் அதற்கு இலட்சோபலட்சம் பிறவிகள் எடுக்க வேண்டியிருக்கும். ஒன்றோடு இன்னொன்று என ஒவ்வொன்றும் வழி நடத்தும், ஒவ்வொன்றும் மற்றொன்றோடு பின்னிப் பிணைந்திருக்கும். அப்போது சுதந்திரமாய் செயல்படுவது நடவாத காரியமாகிவிடும்.

பதஞ்சலியின் மனோபாவம் வேறு மாதிரியானது. அது ஆழமாய் செல்வது. நல்லதைச் செய்து சமன்படுத்துவதல்ல பிரச்சினை. கடந்த காலம் குறித்து எதுவும் செய்வதற்கில்லை. கடந்த காலத்தில் ஒருவரைக்

கொன்றீர்கள் என்று வைத்துக் கொள்வோம். 'இப்போது உலகில் நல்லதைச் செய்துவிடு' என்பது மகாவீரரின் மனோபாவம். ஆனால் நீங்கள் நல்லதைச் செய்தாலும் செத்தவன் மீண்டும் உயிர் பெற்று வரமாட்டான். அவன் கொல்லப்பட்டுவிட்டான் எப்போதைக்குமாய். அந்தக் கொலை ஆறாத ரணமாய் உங்களுக்குள் என்றென்றும் இருந்து கொண்டிருக்கும்.

நான் பல கோயில்களைக் கட்டியிருக்கிறேன், தர்ம சாலைகளை நிறுவி யிருக்கிறேன். நீங்கள் வேண்டுமானால் உங்களைச் சமாதானப்படுத்திக் கொள்ளலாம். மக்களுக்கு இலட்சக்கணக்கில் நன்கொடையும் வழங்கி யிருப்பீர்கள். அதுவெல்லாம் வெறும் சமாதானந்தான், ஆனால் குற்றம் அப்படியே இருக்கும். ஒரு கொலையை எப்படிச் சரி செய்வீர்கள். அதைச் சரி செய்ய முடியாது. நீங்கள் கடந்த காலத்தைத் தலைகீழாய் மாற்றிவிட முடியாது. பதஞ்சலி சொல்கிறார், 'கடந்த காலம் என்பது வெறும் ஞாபகமே தவிர வேறில்லை. அது கனவில் நடப்பது, இன்னமும் இருக்காது. நீங்கள் 'பிரதி - ப்ரஸவ்'வில் நுழைவதன் மூலம் அதை மாற்றிவிட முடியும்.

நீங்கள் பின்னோக்கிச் செல்கிறீர்கள், அதை மீண்டும் வாழ்கிறீர்கள். அந்தக் காயத்தைத் திரும்பவும் உணர்கிறீர்கள். அந்த மனிதனைக் கொன்றபோது இந்த வேதனையை உணர்கிறீர்கள். ஒட்டு மொத்த துயரத்தையும் மீண்டும் வாழ்ந்து பார்க்கிறீர்கள், அந்தக் காயம் இவ்விதமாய் குணமடைகிறது, கடந்த காலம் பாவத்தினின்றும் நீக்கப்படுகிறது.

பதஞ்சலியைப் பொறுத்தவரை விடுதலை (liberation) சாத்தியம், மகாவீரரின் கருத்துப்படி அது சாத்தியமற்றதாய் தெரிகிறது. அதனால்தான் சமணமதம் பெரிய அளவில் பரவமுடியவில்லை. மோட்சம் சாத்திய மற்றதாயும், நம்ப முடியாததாயும் தெரிகிறது. பதஞ்சலி கிழக்கத்திய நம்பிக்கைகளில் - தேர்ந்தெடுக்கப்பட்ட அடித்தளங்களில் ஒன்றாயிருக் கிறார். மகாவீரர் விளிம்பில் - எல்லையில் இருக்கிறார். அவர் ஒரு போதும் மைய சக்தியாவதில்லை. அவர் செயல்களில் செயல்களின் நடைமுறையில் அதிக நம்பிக்கையுள்ளவர். பதஞ்சலி சொல்கிறார் 'செயல்கள் வெறும் கனவு மாதிரி. இந்த உலகம் ஒரு பெரிய நாடக மேடை, வாழ்க்கை ஒரு நாடகமன்றி வேறில்லை. நீங்கள் உணர்ந்திராத காரணத்தால் அதைச் செய்தீர்கள். நீங்கள் உணர்ந்திருந்தால் பிரச்சினையில்லை' என்று.

இப்போது விழிப்புடனிருங்கள், உங்கள் விழிப்புணர்வின் ஆற்ற லைக் கடந்த காலத்திற்குக் கொண்டு செல்லுங்கள். அது கடந்தவற்றை எரித்துவிடும். மகிழ்ச்சியும் வேதனையும் மறைந்துவிடும். நன்மை தீமை என்கிற இருமை (duality) யைக் கடக்கிற போது நீங்கள் விடுதலை பெற்று விடுவீர்கள். பிறகு மகிழ்ச்சியும் இருக்காது, வேதனையும் இருக்காது.

அப்போ ஒரு அமைதி வரும், ஆழ்ந்த அமைதி அது. அந்த அமைதியில் தோன்றும் ஒரு புதிய நடப்பு - சச்சிதானந்தம்.

அந்த அமைதியில் ஆழ்ந்த அமைதியில் உங்களுக்கு மெய்ம்மை நிகழும், பிரக்ஞை உண்டாகும், சுகத்தில் திளைப்பீர்கள். நான் பதஞ்சலியை ஆதரிப்பவன்.

அதனால் மகாவீரரின் நோக்கும் கோணம் மிகவும் ஒழுக்க முறை சார்ந்ததாயிருக்கிறது. சமண மதம் யோகாவை முற்றிலுமாய் மறந்து விட்டது. நீங்கள் யோகாபழகும் சமண முனிவரையோ, துறவியையோ ஒருபோதும் பார்க்க முடியாது. அவர்கள் தங்களுடைய செயல்களைச் சரி செய்து கொண்டிருப்பவர்கள். 'எப்படி இருப்பது' என்பதையே அவர்கள் மறந்துவிட்டார்கள். எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது, எதில் உறுதியாயிருப்பது, எதில் உறுதியாயிருக்க வேண்டியதில்லை என்று அவர்களுடைய நோக்கும் கோணம் செயல்களில் தொடர்புடையதா யிருக்கும். இரவில் நடக்கக் கூடாது, காரணம், சில பூச்சி வகைகள் நசிந்து விடும் அதனால் கர்மா உண்டாகும், இரவில் சாப்பிடக் கூடாது காரணம் இருட்டில் சில பூச்சிகள், ஈக்கள் உணவில் விழும். அவற்றை உண்கிறபோது அது கொலை பாதகமாகிவிடும். இதை உண்ணாதே, அதைச் செய்யாதே என்று பல. மழை பெய்கிற காலங்களில் நடக்கக் கூடாது, காரணம் தரை ஈரமாயிருக்கும், தரை மீது பல பூச்சிகள் ஊர்ந்து செல்லும், மழைக் காலத்தில் தான் பல பூச்சிகள் தோன்றும். அவர்கள் தொடர்ந்து கவலைப்பட்ட தெல்லாம் செயல்களை, கர்மாக்களை, எதைச் செய்யலாம் எதைச் செய்யக் கூடாது என்பது பற்றித்தான். அவர்களுடைய நோக்கும் கோணம் வெளிநடப்புகளோடு தொடர்வுடையதாகும். 'எப்படி இருக்க வேண்டும்' என்பதையே அவர்கள் முழுக்க முழுக்க மறந்துவிட்டார்கள். அவர்கள் யோகா பழகவில்லை, தியாணம் செய்யவில்லை. அவர்கள் செயல் சார்ந்தவர்கள். பதஞ்சலி விழிப்புணர்வு சார்ந்தவர்.

பதஞ்சலி யோக முறையின் மூலம் மேலும் பலர் நிர்வாண நிலையை அடைந்துவிட்டனர். மகாவீரர் மூலம் அந்நிலையை அடைந்தவர்கள் வெகு சிலரேயாவர். நோக்கும் கோணம் முழுவதுமே சாத்தியமற்றதாய் தெரிகிறது. ஆக பதஞ்சலியை நன்றாய் கவனியுங்கள். கவனிப்பதோடு மட்டுமல்லாது, ஆற்றலை உள்வாங்கிக் கொள்ளுங்கள். அவர் மூலம் நிறையவே நிகழ்த்த முடியும். உலகில் அகமுகப் பயணம் மேற்கொண்ட மிகச் சிறந்த அறிவியலறிஞர்களில் அவரும் ஒருவர்.

○

# 8. ‘புத்தர்களின் உளவியல்’

முதல் கேள்வி:

புத்தர்களின் உளவியல் என்கிற மூன்றாவது வகை உளவியலை வளர்க்க முயல்வதாய் தாங்கள் கூறினீர்கள். ஆனால், தங்கள் ஆய்வுக்கான புத்தர்களை எங்கே கண்டடைவீர்கள்?

செயலைத் தொடங்கிவைப்பதற்கு ஒருவர் ஏற்கனவே இங்கிருக்கிறார், சற்று முன்பாகவோ பின்பாகவோ உங்களில் பலரை புத்தாக்களாக அவர் மாற்றுவார். ஒன்று இருந்தால் அது பலவாக சாத்தியம் உண்டு காரணம் அந்த ஒன்று வினையூக்கி (Catalyst) யாய் வேலை செய்யும். அவர் ஏதாவது செய்வார் என்பதல்ல ஆனால் அவர் அங்கிருப்பதால் செயல்கள் தாமாகவே நடக்கத் தொடங்கிவிடும். ஒரு வினையூக்கியின் பொருள் அதுதான். கொஞ்சம் முன்பின்னாய் அடிப்படையில் ஒவ்வொருவரும் புத்தராக மாறிவிடுவீர்கள், ஏனெனில் நீங்கள் ஏற்கனவே புத்தாவாக இருப்பதுதான், அதை நீங்கள் அறிந்துகொள்ள எவ்வளவு காலம் ஆகிவிடப்போகிறது? நீங்கள் எவ்வளவு காலத்துக்கு அதைத் தள்ளிப்போட முடியும்? உங்களால் முடிந்த அளவு தள்ளிப் போடுவீர்கள், தாமதப்படுத்து வீர்கள், இலட்சோபலட்சம் தடைகளை ஏற்படுத்துவீர்கள். ஆனால் எவ்வளவு காலத்துக்கு நீங்கள் இதைச் செய்து கொண்டிருக்க முடியும்?

நான் ஏதோ ஒரு வகையில் உங்களை ஆழங்காணமுடியாத படுகுழியில் தள்ளிவிடப் போகிறேன். அங்கே நீங்கள் மரித்து புத்தர் பிறப்பது நிகழும். பிரச்சினையே ஒன்றைக் கண்டுபிடிப்பது பற்றியது தான். அடிப்படையை நிறைவு செய்யும் அந்த ஒன்று இருந்துவிட்டால் அடிப்படைத் தேவை பூர்த்தி செய்யப்பட்டுவிடும். பிறகு பலதும் உடனடி சாத்திய மாகிவிடும். அங்கே பலதும் இருந்தால் அவை பல்லாயிரமாகிற சாத்தியமும் உண்டு.

அந்த முதலில் உள்ளது ஒரு தீப்பொறியாய் செயல்படும்.

'ஒரு சின்னத்தீப்பொறி போதும் இந்த உலகையே சுட்டெரிப்பதற்கு'

கடந்த காலத்தில் இப்படித்தான் நடந்தது. ஒரு காலத்தில் கௌதமர் ஒரு புத்தரானார். காலப்போக்கில் ஆயிரமாயிரம் புத்தர்கள் தோன்றினர். புத்தாவாக மாறுவதில் ஒன்றும் பிரச்சினையில்லை. நீங்கள் முன்பே அதுவாகத் தான் இருக்கிறீர்கள். யாரோ ஒருவர் உங்களுக்கு நினைவுபடுத்த வேண்டியிருக்கிறது, அவ்வளவு தான்.

நான் முன்பொருநாளில் இராமகிருஷ்ணரின் நீதிக்கதைகளில் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தேன். நான் அதை விரும்பியதால் திரும்பத்

திரும்பப் படிப்பேன். ஒரு குருவானவர் வினையூக்கியாய் செயல்படும் கதை அது.

கதை: ஒரு பெண்புலி குட்டி போட்டதும் இறந்துவிட்டது. அந்தப் புலிக்குட்டியை ஆடுகள் எடுத்து வளர்த்துவந்தன. உண்மையில் புலி தன்னையும் ஒரு வெள்ளாடாகவே எண்ணிக் கொண்டது. அது ரொம்பவும் எளிமையான இயல்பான விஷயந்தான். ஆடுகளால் வளர்க்கப்பட்டு ஆடுகளுடன் வாழ்கிற நிலையில் தன்னையும் ஓர் ஆடாக அப்புலி நம்பிக் கொண்டது. அது புற்களை மென்று தின்கிற ஒரு சைவப் பிராணியாகவே இருந்து வந்தது. அது சுயமாய் எந்தக் கருத்தையும் உருவாக்கிக் கொள்ள வில்லை. தனது கனவுகளில் கூட தன்னை ஒரு புலியாய் அது கண்டதில்லை.

அவ்வேளையில் ஒருநாள் கிழட்டுப் புலியொன்று அந்த ஆட்டுமந்தையைக் கண்டது. ஆடுகளின் மத்தியில் ஓர் இளம் புலி இருக்குமென்று அது எதிர்பார்க்கவில்லை. தன்னுடைய கண்களையே நம்ப முடியாமல் வியந்து நின்றது. ஆடுகள் புலி பற்றிய அச்சமில்லாமல் இருப்பதையும், புலி ஆடுபோல் நடப்பதையும் அந்தக் கிழட்டுப் புலி பார்த்தது. அது எப்படியோ அந்த இளம் புலியைப் பற்றி நிறுத்தியது. இளம்புலி அதனிடமிருந்து தப்பிச் செல்ல முயன்றது, கத்திக் கூச்சலிட்டது. அதனுடைய உடம்பு அச்சத்தில் நடுங்கியது. ஆடுகள் தப்பியோடிவிட்டன. அந்தப் புலியும் ஓடப்பார்த்தது. ஆனால் கிழட்டுப்புலி தடுத்து நிறுத்தி, ஏரிப்பக்கம் இழுத்துச் சென்றது. ஆடுகளால் வளர்க்கப்பட்ட புலி முரண்டு பிடித்தது. நீங்கள் என்னிடம் முரண்டு பிடிக்கிற மாதிரி. புலி மரணத்தை பற்றிய பயத்தால் அழுது கதறி கூச்சலிட்டது. ஆனால் அந்த கிழட்டுப்புலி அதனை விடவில்லை. ஆனால் கிழட்டுப்புலி அதனை ஏரிப்பக்கம் இழுத்துச் சென்றுவிட்டது.

ஏரி ஒரு கண்ணாடியைப்போல் நிசப்தமாயிருந்தது, எவ்வித அசைவுமில்லை. இளம்புலியை ஏரித்தண்ணீரில் தன்னுடைய உருவத்தைப் பார்க்குமாறு கிழட்டுப்புலி நிர்ப்பந்தித்தது. தண்ணீரில் தன் உருவத்தைப் பார்த்த இளம்புலி தானும் அந்தக் கிழப்புலியைப் போல் இருப்பதைக் கண்டது. அப்போது ஒரு புதிய உணர்வு அதனுள் எழுந்தது. அதன் மனதிலிருந்த ஆடு மறைந்தது. இனியும் தான் ஆடு அல்ல என்பதை அறிந்து கொண்டாலும், தன்னுடைய அறியாமை நீங்கியதை அப்புலியால் நம்பவே முடியவில்லை. கொஞ்சம் நடுக்கம், பயம் இன்னும் இருக்கவே செய்தது.

'நான் கற்பனை செய்கிறனோ என்னவோ. ஓர் ஆடு எப்படி திடீரென்று புலியாக மாறிவிட முடியும்? அது நடவாத காரியம் ஒருபோதும் அப்படி நடந்ததில்லை. அவ்விதமாய் நடக்கிறதில்லை' என்று அது எண்ணமிட்டது.

தன்னுடைய கண்களையே நம்பமுடியாவிட்டாலும் அதனுடைய இருப்புணர்வில் (being) ஒளியின் முதல் பொறி, முதலாவது ஒளிக்கதிர் புகுந்தது. உண்மையில் இனியும் அது முன்போல் இருக்காது.

கிழப்புலி அந்த இளம்புலியைத் தன்னுடைய குகைக்குக் கூட்டிச் சென்றது. இப்போது இளம்புலியிடம் அத்தனை எதிர்ப்போ, தயக்கமோ, அச்சமோ இருக்கவில்லை. அது கொஞ்சம் கொஞ்சமாய் துணிவு பெற் றிருந்தது. பழைய புலி அதனிடம் இறைச்சி கொடுத்து உண்ணச் செய்தது. சைவமாயிருந்த புலிக்கு அதை விழுங்குவதில் சிரமம், வாந்தி வரும் போலிருந்தது. ஆனால் பழையபுலி அதை வலுக்கட்டாயமாய் உண்ணும் படி செய்தது. இளம்புலியின் நாசி இறைச்சியை முகர்ந்தபோது அந்த வாசனை அதன் இருப்புணர்வில் உறங்கிக் கொண்டிருந்த ஏதோ ஒன்றைத் தட்டியெழுப்பியது. அது இறைச்சியின் பால் ஈர்க்கப்பட்டு உண்ணத் தொடங்கியது. ஒருமுறை இறைச்சியை ருசி பார்த்ததும் அதனுள்ளிருந்து முழக்கம் பிறந்தது. அந்த முழக்கத்தில் ஆடு மறைந்து, கம்பீரமாய் புலி எழுந்தது.

இதுதான் ஒட்டுமொத்த செயல் முறை, ஓர் அனுபவம் வாய்ந்த புலி தேவைப்படுகிறது. அனுபவமுள்ள புலி இருக்கிறது, அதை எப்படியாவது போக்குகாட்டு ஏமாற்றிவிடவேண்டும் என்று நீங்கள் முயல்கிறீர்கள். அது நடவாத காரியம். நீங்கள் முரண்டு பிடிக்கிறவர்தாம், என்றாலும் உங்களை நான் ஏரிக்குக் கூட்டிச் செல்வேன். உங்கள் வாழ்க்கை நெடுகவும் நீங்கள் புற்களைத் தின்று கொண்டிருந்தீர்கள். இறைச்சியின் வாசனையை நீங்கள் முற்றாய் மறந்து போனீர்கள், என்றாலும் நான் வலுக்கட்டாயப்படுத்தி நீங்கள் அதை உண்ணும்படி செய்வேன். ஒருமுறை ருசித்துவிட்டால் உங்களுக்குள்ளிருந்து முழக்கம் திடீரெனத் தோன்றும், அந்தப் பேரொலி யில் ஆடுமறைந்து ஒரு புத்தர் தோன்றுவார். எனவே, ஆய்வுக்காக பல புலிகளை நான் எங்கிருந்து பெறுவேன் என்பது குறித்து நீங்கள் கவலைப்படத் தேவையில்லை, நான் அவர்களை உற்பத்தி செய்வேன்.

இரண்டாவது கேள்வி:

> புத்தர்களின் உளவியல் என்றதன் மூலம் தாங்கள் கருத்தில் கொள்வது என்ன? கிழக்கில் ஆயிரக்கணக்கான புத்தர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அறிவுத் தெளிவு பெற்றவர்களைப் பற்றி ஓர் உளவியலை உருவாக்கவில்லையா? கபில், கனத், பதஞ்சலி போன்ற சிறந்த அறிஞர் பெருமக்கள் அந்த இன்னோர் உளவியலை நிறுவமுற்படவில்லையா?

இல்லை. இதுவரையிலும் இல்லை. அதில் பல பிரச்சினைகள் உள்ளன. மூன்றாவது உளவியலை நிறுவவேண்டுமென்றால் முதல்

இரண்டும் பூர்த்தி செய்யப்பட வேண்டும். நீங்கள் மூன்றடுக்கு மாளிகை கட்டுகிறீர்கள் என்கிற போது முதல் இரண்டு அடுக்குகளையும் கட்டிமுடிக்க வேண்டும் அல்லவா. அதன் பிறகுதானே மூன்றாவது தளத்தைக் கட்ட முடியும். கடந்த காலத்தில் நோய்குறிசார்ந்த மனிதனின் (pathological man) உளவியல் இருந்திருக்கவில்லை. மன உபாதை என்கிற பரப்பெல்லையில் நுழைய யாரும், குறிப்பாக கிழக்கத்தியர்கள் அக்கறை காட்டவில்லை. அதில் யாரும் அக்கறை காட்டாடதற்குக் காரணம் அதை ஆராய்ந்து பார்க்காமலே அதிலிருந்து விடுபட முடியும் என்ப தால்தான். அதை நுணுகி ஆராயவோ, நோய்க்குறிசார்ந்த மனதினுள் பயணம் மேற்கொள்ளவோ அவசியமில்லை. அது தொடர்பாய் எதுவும் செய்யப்பட வேண்டியது மில்லை. சில உத்திகள் இருந்தன அவை இன்னும் இருக்கின்றன. நீங்கள் அதை ஏற்றுக் கொள்ளாமல் இருக்க முடியும்.

உதாரணமாய், ஜப்பானில் யாருக்காவது பைத்தியம் பிடித்துவிட்டால் யாராவது நரம்புக் கோளாறுகளுக்குள்ளாகிவிட்டால் அவரை 'ஸென்' மடாலயத்துக்குக் கொண்டு செல்வார்கள், அல்லது நகரத்திலுள்ள மதநம்பக்கையுள்ளவர்களிடம் அழைத்துச் செல்வார்கள். இது மிகவும் பழைய முறை - மத ஈடுபாடுள்ளவரிடம் கொண்டு செல்வது. மடாலயத்தில் என்ன செய்வார்கள்? ஒன்றும் செய்வதில்லை. ஆம், உண்மையில் எதுவுமே செய்யப்படுவதில்லை. மடாலயத்திற்குக் கொண்டு வரப்படும் பைத்தியக் காரனை அவர்கள் பகுப்பாய்வு செய்வதோ, நோய் நிர்ணயம் செய்வதோ கிடையாது. அது என்னநோய் என்று சிந்திக்குமளவிற்குக் கூட அவர்கள் அக்கறை கொள்வதில்லை. அவர்கள் அந்தப் பைத்தியக்காரனை மடத்தின் ஒரு மூலையிலோ, பின்புறத்திலோ உள்ள அறையொன்றில் வைப்பார்கள். அவனுடைய தேவைகள் பூர்த்தி செய்யப்படும். உணவும், தேவைப்படுகிற எதுவும் வழங்கப்படும். ஆனால், யாரும் அவனைப் பற்றிப் பேச மாட்டார்கள். அவனுடைய சித்தப்பிரமையில் எவ்விதத்திலும் கவனம் செலுத்த மாட்டார்கள். கிழக்கில் உள்ளவர்கள் அறிவார்கள் நீங்கள் எத்தனைக்குக் கவனம் செலுத்துகிறீர்களோ அத்தனைக்கு சித்தப்பிரமையை ஊட்டி வளர்த்ததாகிவிடும் என்பதை, மடாலயம் முழுதுமே யாரும் புதிதாய் வந்துவிடவில்லை என்பதுபோல் அக்கறையற்று இருந்துவிடும்.

அக்கறையற்றிருப்பதென்பது ஓர் உத்தி, காரணம் உண்மையிலேயே ஒரு பைத்தியக் காரனுக்கு அதிகக் கவனிப்பு தேவைப்படும். கவனிப்பைப் பெறுவதற்காகவே அவன் பைத்தியமாகி இருக்கலாம். அதனால்தான் உணர்வுகளின் பகுப்பாய்வு அதிக அளவில் உதவாது என்பது காரணம், உணர்வுகளின் பகுப்பாய்வு செய்பவர் பைத்தியத்திடம் கூடுதல் கவனம் செலுத்துவார்.

நரம்புத் தளர்ச்சி நோய் (neurotic) உள்ளவர்கள் தங்களிடம் கவனம் வைக்கும்படி மற்றவர்களை நிர்ப்பந்திப்பதை நீங்கள் கண்டிருப்பீர்கள். அடுத்தவருடைய கவனிப்பைப் பெறுவதற்காக அவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்வார்கள். 'ஸென்' மடாலயத்தில் அவர்கள் எவ்விதத்திலும் கவனம் செலுத்தாமல் பாராமுகமாய் இருந்துவிடுவார்கள். அவனுக்குப் பைத்தியம் பிடித்திருப்பதாய் யாரும் எண்ணிக் கொள்வதோ, தங்களைத் தொல்லைக்குள்ளாக்கிக் கொள்வதோ இல்லை. காரணம், அங்குள்ளவர்கள் ஒட்டுமொத்தமாய் அவனைப் பைத்தியமென்று எண்ணத் தொடங்கிவிட்டால் அந்தச் சிந்தனை ஏற்படுத்தும் அதிர்வுகள் (Vibrations) அவனைப் பைத்தியமாகவே தொடர்ந்து இருக்கச் செய்வதுவிடும். மூன்று நான்கு வாரங்களுக்கு அவன் தனித்திருக்கும்படி விடப்படுவான். அவனுடைய தேவைகள் பூர்த்தி செய்யப்படுமேயன்றி அவன் மீது எவ்விதத்திலும் கவனம் செலுத்தப்படுவதில்லை. யாரும் அவனைப் பைத்தியமாய் கருதமாட்டார்கள். மூன்று நான்கு வாரங்கள் தனித்துவிடப் பட்டவன் கொஞ்சம் கொஞ்சமாய் முன்னேற்றமடைவான். சித்தப்பிரமை மறைந்துவிடும்.

'ஸென்' மடாலயங்களில் இப்போதும் கூட அதே முறைதாய் மேற்கொள்ளப்படுகிறது. மேற்கத்திய உளவியல் நிபுணர்கள் அந்த உண்மையை உணர்ந்திருப்பதாய் தெரிகிறது. என்ன நிகழ்கிறது என்பதை அறிய பலரும் ஜப்பானுக்கு சென்று பார்க்கிறார்கள். அப்படியே வியப்பில் உறைந்து விடுகிறார்கள். பைத்தியம் பிடித்தவர்களுக்கு தனிப்படுத்தப்பட்ட நிலை அவசியம், அவர்களுக்கு ஓய்வு தேவை, விருப்பு வெறுப்பற்றிருத்தல் (indifference) தேவை. அப்போதுதான் அவர்கள் மனதில் ஓயாமல் அடித்துக் கொண்டிருக்கும் அலைகளும், இறுக்கங்களும் மறையும். நான்கு வாரங்களுக்குப் பிறகு மடத்தைவிட்டு வெளியேற அந்த ஆசாமி தயாராகி விடுவான். அங்குள்ள குருவிற்கும் மற்றவர்களுக்கும் நன்றி தெரிவித்து விட்டு அவன் புறப்படுவான். எல்லாவிதத்திலும் சரியாகி விட்டானே!

கிழக்கில் இந்தக் காரணத்தால்தான், இத்தகைய உத்திகளால் தான் முதல்வகை உளவியல் உருவாக்கப்பட வில்லை. முதல்வகை இருந்திரா விடில் இரண்டாம் வகைக்குச் சாத்தியம் இல்லாது போயிருக்கும். நோக்குறி காட்டும் மனம் அதன் நுட்பவிவரங்களுடன் அறிந்து கொள்ளப்பட வேண்டியது. பைத்தியக்காரனை சித்தப் பிரமையிலிருந்து வெளிக்கொண்டு வருவது ஒன்று. சித்தப்பிரமை பற்றிய உளவியலை உருவாக்குவது மற்றொன்று. விஞ்ஞான அணுகுமுறை அவசியம், விரிவாகப் பகுப்பாய்வு (analyse) செய்வதும் அவசியம். மேலைநாட்டினர் அதைச் செய்து விட்டார்கள், அங்கே முதல்வகை உளவியல் இருக்கிறது. நோய்க்குறிசார்ந்த

மனிதனுக்குரிய உளவியலை ஃப்ராய்டு, ஜங், ஆட்லர் மற்ற பிறரும் உருவாக்கிவிட்டார்கள். இடர்ப் பாட்டில் சிக்கியுள்ளவர்களுக்கு அது பெரிய அளவில் பயன்படா திருக்கலாம். ஆனால் வேறொரு தேவையை அவர்கள் பூர்த்தி செய்து விட்டார்கள். அந்தத் தேவை விஞ்ஞான பூர்வமானது. அவர்கள் முதல்வகை உளவியலை உருவாக்கிவிட்டார்கள். உடனே, இரண்டாவதும் சாத்தியமாகி விட்டது. இரண்டாவதுவகை ஆரோக்கிய முள்ள மனிதனுக்கானது.

இரண்டாம் வகையின் பகுதிகள் (frogments) கிழக்கில் எப்போதுமே இருந்து கொண்டிருப்பவைதாம். ஆனால் ஒருபோதும் பகுதிகள் கச்சித முழுமையைப் பெற்றிருக்காது. பகுதிகள் எதற்கு? காரணம், மதநம்பிக்கை உடையவர்கள் சாதாரண மனிதனை எப்படி கடந்த நிலைக்குக் கொண்டு செல்வது என்பதில் ஆர்வம் காட்டினர். ஆரோக்கியமான மனதில் காலூன்ற ஒரு இடம், குதிப்பதற்கு உதவும் ஒரு பலகை (jumping board) யைக் கண்டு பிடிப்பதில் மட்டுமே அவர்கள் ஆர்வமாயிருந்தனர். அங்கிருந்து தியானத்தில் இறங்குவதும், அதிலிருந்து முடிவான குறிக்கோளை அடைவதும் சாத்தியம் என்று அவர்கள் கருதினார்கள். அவர்களுடைய விருப்பம் வித்தியாசமானது. அவர்கள் ஒட்டுமொத்த நிலப்பகுதி பற்றிக் கவலைப்படவில்லை.

ஆற்றில் குதிக்கவிரும்புகிற ஒருவன் கரைகளை ஆராய்ந்து, அதன் நீள அகலங்களைக் கண்டறிய முற்படுவதில்லை. வெற்றாயுள்ள இடத்தில் ஒரு பாறையைக் காண்கிறான். அதன் மீதிருந்து நீரில் குதிக்கிறான். நிலப்பகுதி முழுவதையும் ஆராய்கிற அவசியமில்லை. இரண்டாவது உளவியலின் பகுதிகள் கிழக்கில் இருக்கின்றன. பதஞ்சலியில், புத்தரின், மகாவீரரில், மற்றவர்களில் - சில பகுதிகள், நிலத்தின் ஒருபகுதி இடம் பெற்றுள்ளன. ஒட்டுமொத்த அணுகுமுறையும் அறிவியல் சார்ந்ததல்ல, மதம் சார்ந்ததாகும். அதற்கு மேல் தேவைப்படவில்லை. எதற்காக அவர்கள் அது குறித்துத் தங்களைத் தொல்லைப்படுத்திக் கொள்ள வேண்டும்? ஒரு சிறிய நிலப்பகுதியைத் துப்புரவாக்குவதன் மூலம் அங்கிருந்து மேலெழும்பி எல்லையற்ற பெருவெளியை (இறைவன்) அடைய முடிகிறதே! அப்படியிருக்க வனாந்திரம் முழுவதையும் - மிகப்பெரிய வனாந்திரத்தை எதற்காக சுத்தம் செய்து கொண்டிருப்பது?

மனிதமனம் மிகப் பெரியது, தனிச்சிறப்புடையது. ஆரோக்கியமுள்ள மனம் நோய்குறியுடைய மனதைக் காட்டிலும் பெரிதாயிருக்கும். காரணம் நோக்குறியுள்ள மனம் ஆரோக்கியமான மனதின் ஒரு பகுதியேயன்றி முழுமையானதல்ல. யாரும் முழுமையான அளவில் பைத்தியமாகி விடுவதில்லை, யாராலும் முடியாது. ஒரு பகுதிதான் வெறி கொண்டு

விடுவது, பகுதியளவே நோய் வாய்ப்படுகிறது. சரீரவியலில் (physiology) உள்ளது போல்தான். யாருடைய உடம்பும் முற்றாக நோய்வாய்ப்பட்டு விடுவதில்லை. முற்றாக நோயற்ற உடம்பை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அது சாத்தியமில்லை, யாரும் அந்த அளவுக்குப் போய்விடுவதில்லை. ஒருவருக்குத் தலைவலி, ஒருவருக்கு வயிற்றுவலி வேறொருவருக்குக் காய்ச்சல் - இப்படி ஏதாவது ஒரு பகுதிதான் பாதிக்கப்படுகிறது. உடம்பு மிகப்பெரியது இப்பிரபஞ்சம் மாதிரி.

மனதைப் பற்றிய விதத்திலும் அதேயளவு உண்மைதான். இந்த மனம் ஒரு பிரபஞ்சம். ஒட்டுமொத்த மனதும் பித்துப் பிடித்துவிடாது. அதனால்தான் பித்துப்பிடித்தவர்களை நடைமுறைக்குக் கொண்டுவர முடிகிறது. முழுமனதும் பித்தாகிவிட்டால் நீங்கள் அதை மீட்டெடுக்க இயலாது, அதற்கான சாத்தியமில்லை. மனம் முழுதுமே பித்தாகிவிட்டால் அதைத் திரும்பவும் எங்கே கொண்டு சேர்ப்பீர்கள். ஒரு பகுதி வழிதவறினால் அதைச் சரிசெய்து வைக்க முடியும் மீண்டும் முழுமையில் பொருத்த முடியும்.

மேற்கில் தற்போது இரண்டாவது உளவியல் ஆபிரகாம்மாஸ்லோ, எரிக் ஃப்ராம், ஜானவ் இவர்களுடன் ஆரம்பவலிகளைக் கடந்து சென்று கொண்டிருக்கிறது. அது பகுதிகளை விட முழுமை பெரியது (holistic) என்ற அணுகுமுறையைக் கொண்டது. நோய் என்கிற நிலையில் அல்லாமல் ஆரோக்கிய நிலையில் வைத்து சிந்திப்பதாகும். அது நோய்க் கூற்றியலில் (pathology) கவனத்தை ஒருமுனைப்படுத்தாமல் மனித இனத்தின் ஆரோக்கிய அடிப்படையில் கவனத்ஹை ஒரு முனைப்படுத்தும். இரண் டாவது உளவியல் பிறந்து விட்டிருந்தாலும் இன்னும் அது முழுமை யடைந்தபாடில்லை. சற்று முன் பின்னாயினும் அது துரிதமாய் வளரத் தொடங்கிவிடும். அதன் பிறகே மூன்றாவது உளவியல் சாத்தியப்படும். அதனால்தான் நான் அது ஒரு போதும் இருந்ததில்லை என்கிறேன்.

இலட்சக்கணக்கில் புத்தர்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால் புத்தர்களின் உளவியல் என்று எதுவும் இருந்ததில்லை. காரணம், யாரும் விழிப்புற்ற மனதைக் கண்டுபிடித்து ஓர் அறிவியல் சார்ந்த ஒழுங்கு முறையைத் தோற்றுவிக்க முயலவில்லை. புத்தபிக்குகள் இருதார்கள். ஆனால் யாரும் புத்தப்பிராயத்தின் (Buddha - hood) சிறப்பை அறிந்து கொள்ள முயன்றதில்லை. அவர்கள் நடப்புகளை அறிவியல் பூர்வமாய் அறிந்து கொள்ளத் தவறிவிட்டார்கள்.

மனித வரலாற்றில் அவ்வகையில் முயன்ற முதல் ஆசாமி குருட்ஜீவ்தான். மூன்றாவது நடப்பு சாத்தியத்தின் முன்னோடி அவர்.

அறியப்படாத ஒன்றை ஊடுருவிச் செல்வது எத்தனை சிரமம் என்பதை முன்னோடிகள் அறிவார்கள். ஆனாலும் அவர் முயன்றார். இருட்டிலிருந்து சில பகுதிகளை (*fragments*) அவர் வெளிக்கொண்டு வந்தார். ஆனாலும் அவருடைய பிரதான சீடர் பி.டி.உஸ்பென்ஸ்கி அவருக்குத் துரோகமிழைத்துவிட்டார். அத்துடன் இன்னோர் இடர்ப்பாடும் இருந்தது. குருட்ஜீவ் தன்னளவில் ஒரு மறைஞானியே தவிர அறிவியல் உலகில் திறமைமிக்கவரல்லர். அவர் ஒரு ஞானி, புத்தா. பி.டி.உஸ்பென்ஸ்கி அறிவியல் சார்ந்தவர் என்பதால் முழு நடவடிக்கையும் அவரையே நம்பியிருந்தது. அவர் மிகச்சிறந்த கணிதவியல் நிபுணர், இந்த நூற்றாண்டின் ஆழ்ந்த அறிவுடைய சிந்தனையாளர்களில் அவரும் ஒருவர். குருட்ஜீவ் விதைக்கும் விதைகளிலிருந்து கோட்பாடுகளை உருவாக்கி, விஞ்ஞானக் கொள்கைகளை வெளிக்கொண்டு வரும் வேலை உஸ்பென்ஸ்கியி னுடையதாயிருந்தது. அதுகுரு சீடருக்கிடையிலான கூட்டுறவாய் இருந்தது. குருட்ஜீவினால் எண்ணங்களை விதைக்க முடியுமே தவிர அதை அறிவியல் சார்ந்த சொற்பாங்கில் ஒழுங்கு செய்ய முடியவில்லை. அவர் விஷயமறிந்தவர் ஆனால் மொழிநடையில் தான்சிக்கல்.

உஸ்பென்ஸ்கியோ சொல் வளம்மிக்கவர். அவருடைய குறைவற்ற எழுத்து நடையைக் கண்டால் அறிவியல் மேதை ஐன்ஸ்டீனே பொறாமைப் படுவார். நன்கு பயிற்றுவிக்கப்பட்ட, தத்துவார்த்த சிந்தனை உடையவர் அவர். அவருடைய நூல்களுள் ஒன்றான '*Tertium Organum*' நூலை நீங்கள் கட்டாயம் படிக்க வேண்டும். உஸ்பென்ஸ்கி அந்த நூலின் துவக்கத்தில் இப்படிக் குறிப்பிடுகிறார். உலகில் மூன்று நூல்கள் மட்டுமே உண்டு. ஒன்று அரிஸ்டாட்டில் எழுதிய '*organon*',சிந்தனையின் முதல் இசைக்கருவி (*organ*) அது. இரண்டாவது பேக்கனின் (*Bacon*) நூலான '*Novum Organum*' சிந்தனையின் இரண்டாவது கோட்பாடு அது. மூன்றாவது '*Tertium Organum*' சிந்தனையின் எழுச்சிதரும் வேதம் என்பதே அதன் பொருள். உஸ்பென்ஸ்கி இதனைக் கூறும்போது தற்பெருமையோ, அகந்தையோ கொண்டிருக்கவில்லை. 'இரண்டும் இடம் பெறுவதற்கு முன்பே மூன்றாவது இடம் பெற்றிருந்தது. அனைத்து அறிவுக்கும் மூலமானதை நான் கொண்டு வந்தேன்' என்று தம்முடைய நூலில் அவர் கூறுகிறார். அது தற்பெருமை ஆகாது. அந்நூல் உண்மையி லேயே மிகவும் அரியது.

குருட்ஜீவின் ஒட்டுமொத்த முயற்சியும் உஸ்பென்ஸ்கிக்கும் அவருக்கும் இடையிலான கூட்டுறவையே நம்பியிருந்தது. அவர் கருத்தைச் சொல்கிறவராயும் உஸ்பென்ஸ்கி அதை ஒழுங்குபடுத்துகிறவராயும், அதற்கு வடிவம் கொடுப்பவராயும் இருந்தார்கள். உயிர் குருட்ஜீவினுடைய தாய், உடல் உஸ்பென்ஸ்கியுடையதாய் இருந்தது. ஆனால் உஸ்பென்ஸ்கி

இடையில் துரோகம் செய்துவிட்டார். அவர் குருட்ஜீவை விட்டகன் றார். உஸ்பென்ஸ்கி அறிவுத்திறனை நடைமுறையில் பயன்படுத்துபவர் **(intellectual)**, குருட்ஜீவோ அதற்கு நேர் எதிரிடையானவர். அவர்க ளுடைய கூட்டுறவு தொடர்வது சாத்தியமில்லாமல் போயிற்று.

குருட்ஜீவ் முழுமையான கீழ்ப்படிதலை (சரணாகதி)க் கோருகிறவ ராயிருந்தார். குருமார்கள் எப்போதும் அதைத்தானே கோருவார்கள். உஸ்பென்ஸ்கியைப் பொறுத்தவரை அதுதான் இடர்ப்பாடு. எல்லா சீடர்களுக்கும் அதுவே பிரச்சினை. அதிலும் ஒரு சீடர் அறிவுத்திறன் மிக்கவராயிருந்துவிட்டால் ரொம்பக் கடினம். காலப்போக்கில் தாம் எல்லாம் அறிந்தவர் என்ற எண்ணம் வந்துவிட்டது அவருக்கு. அறிஞர்கள் எளிதாய் ஏமாற்றப்படும் நிலை அது. அவர் அத்தகைய அறிவாளியாய் எதையும் தெள்ளத் தெளிவாய் எடுத்துரைக்கக் கூடியவராயிருந்தார். தாம் எல்லாம் அறிந்தவர் என்று அவர் எண்ணத் தொடங்கியதில் வியப்பில்லை. கொஞ்சம் கொஞ்சமாய் விரிசல் ஏற்பட்டது.

குருட்ஜீவ் அறிவுக் கொவ்வாத காரியங்களைச் செய்யும்படி கோருபவர். உதாரணமாய் - உஸ்பென்ஸ்கி ஆயிரக் கணக்கான மைல்களுக்கப்பால் இருக்கும் போது, 'உடனே புறப்பட்டுவரவும்' என்று தந்தி அடித்தார் குருட்ஜீவ். உஸ்பென்ஸ்கி குடும்பக்கஷ்டம் பணக்கஷ்டம் என்று பல தொல்லைகளில் இருந்தார்.. அவரால் உடனே புறப்பட்டு வர முடியவில்லை. ஆனாலும் தன்னுடைய பொருள்களையெல்லாம் விற்று விட்டு, குடும்பத்தைக் கைவிட்டு குருவிடம் ஓடிவந்தார். அவர் வந்து சேர்ந்ததும் குருட்ஜீவ் முதல் காரியமாய் சொன்னது இதுதான், 'நீ போகவாம், திரும்பிப் போ' என்று இதுதான் அவர்களிடையே பிளவு ஏற்பட முதல் காரணமாய் இருந்தது. உஸ்பென்ஸ்கி அங்கிருந்து சென்றார், ஒருபோதும் திரும்பவில்லை. ஆனால், அவர் தவறு செய்துவிட்டார். அது முழுமையான சரணாகதி குறித்த சோதனை.

நீங்கள் முழுமையாய் கீழ்ப்படிகிறபோது 'ஏன்' என்று, நீங்கள் கேட்பதில்லை. குருவானவர் சொல்வார் 'வா' என்று, நீங்கள் வருவீர்கள். அவர் 'போ' என்பார், நீங்கள் போய் விடுவீர்கள். குருட்ஜீவ் அழைத்தபோது அநேக எதிர்பார்ப்புகளுடன் உஸ்பென்ஸ்கி புறப்பட்டு வந்திருக்க வேண்டும். தம்முடைய குடும்பம், நிதி விவகாரம், பிரச்சினைகள், சேவை என்று பலவற்றையும் தியாகம் செய்து விட்டிருந்த நினைப்பில் அவர் இருந்தார். அவர் தம்மை ஒரு தியாகியாகக் கருதிக் கொண்டிருந்தார். அவர் வந்தபோது அவரை 'வா' என்று ஒருவார்த்தை கூட சொல்லாமல், 'இப்போது நீ திரும்பிப்போகலாம்' என்று குருட்ஜீவ் அவரை நோக்கிக் கூறினார். அது ரொம்ப அதிகம், அவரைப் போகவிட்டுவிட்டார்.

உஸ்பென்ஸ்கியை நழுவவிட்டதன் மூலம், உளவியலின் மூன்றாவது பரிமாணத்தை உருவாக்கும் முயற்சி நின்று போனது. குருட்ஜீவ் வேறொருவரைக் கண்டுபிடிப்பதற்கு ரொம்பவே முயன்றார். பலருடன் வேலை பார்த்தாலும் உஸ்பென்ஸ்கியின் செயல்திறனில் ஒன்றைக்கூட அவர் மற்றவர்களிடம் காணமுடியவில்லை. உஸ்பென்ஸ்கியின் வளர்ச்சி நின்றது. குருட்ஜீவின் மூன்றாவது உளவியல் வேலை நின்று போனது. அவர்கள் இணைந்து செயல்பட்ட போது அவர்களைக் கண்டு உலகம் வியந்தது. அவர்கள் விலகிய நிலையில் இருவருமே முடமாகிவிட்டார்கள். உஸ்பென்ஸ்கி அறிஞராகவும், குருட்ஜீவ் மறைஞானியாயும் எஞ்சி நின்றனர். அதுதான் தொல்லை. அதனால்தான் அது நடக்காமல் போயிற்று.

நான் மீண்டும் அந்த மூன்றாவது பரிமாணத்தில் செயல்பட முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். குருட்ஜீவைப்போல் நான் ஆபத்தான நிலைக்கு என்னை உட்படுத்திக் கொள்ளமாட்டேன். நான் யாரையும் சார்ந்திருப்பதில்லை. குருட்ஜீவும் உஸ்பென்ஸ்கியும் சேர்ந்த ஆசாமி நான். இரண்டு வெவ்வேறான பரிமாணங்களில் இருந்து கொண்டு செயல்படுவது கடினந்தான். ஆனால் எவ்வகையில் பார்த்தாலும் அது நல்லதே, காரணம், எனக்கு யாரும் துரோகம் செய்ய முடியாது, என்னுடைய வேலையை யாரும் நிறுத்த முடியாது. மனமற்ற உலகில் நான் தொடர்ந்து இயங்கிக் கொண்டிருப்பேன். பேச்சு, எழுத்து, பகுப்பாய்வு என்றும் அது தொடரும்.

குருட்ஜீவ் உழைப்பைப் பங்கிட்டுக் கொண்டவர். உஸ்பென்ஸ்கி நூலகத்திலும் அவர் தன்னுள்ளும் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். நான் இரண்டையும் செய்கிறவன், அதனால் திரும்பவும் அதே சமாசாரம் நிகழாது. நான் இரண்டு நிலைகளிலும் தொடர்ந்து வேலை பார்க்கிறவன், முயற்சி வெற்றியடைய அனைத்து சாத்தியமும் இருக்கிறது. நான் உங்களைக் கவனமாய் ஆராய்ந்து கொண்டிருக்கிறேன், கொஞ்சம் கொஞ்சமாய் நீங்கள் வளர்ந்து வருகிறீர்கள்.

புத்தநிலை என்பது திடீரென்று நிகழ்வது. ஒரு கணத்துக்கு முன்னால் நீங்கள் புத்தாவாக இருக்கவில்லை. ஒரு கணத்துக்குப் பிறகு புத்தாவாகி விடுகிறீர்கள். ஆராய்ந்து பார்க்க இடமேயில்லாமல் அது திடுதிப்பென்று நிகழ்ந்து விடுகிறது. உங்களை நான் நிதானமாய் ஆராய்கிறேன். நீங்கள் எத்தனைக்கு ஏமாற்றுகிறீர்களோ, எதிர்ப்பு காட்டுகிறீர்களோ அத்தனைக்கு உங்களை நான் ஆராய முடிகிறது. என்ன நிகழ்கிறது. அது எப்படி நிகழ்கிறது என்பதை நான் மிகப் பலரை ஆராய்ந்த பிறகே அது நிகழும். உளவியல் என்பது ஒரேயொரு நபரைச் சார்ந்திருக்க முடியாது காரணம் மனிதர்கள் மாறுபட்டவர்கள், சமமாய் இருப்பதில்லை. நான் புத்தராகலாம், நீங்கள் புத்தராகலாம். ஆனால் நான் தனித்தன்மையானவன், நீங்கள் தனித் தன்மையுடையவர்.

உலகில் ஏழுவகை மனிதர்கள் இருப்பார்கள் என்கிறார்கள். ஆக, ஏழு புத்தாக்களை ஆராய வேண்டும் குறைந்தபட்சம். அப்போதுதான் உளவியல் சாத்தியப்படும்.

உஸ்பென்ஸ்கி ஏழுவகை மனிதர்கள் பற்றிப் பேசுகிறார். அவர்களுடைய வகைகளும் வளர்ச்சியும் அறிந்து கொள்ளப்பட வேண்டியவை. எவ்வகையான தடைகளை அவர்கள் தோற்றுவித்தார்கள். எவ்வகையிலெல்லாம் வாழ்வின் கடின உண்மைகளை அவர்கள் மறைக்க முயன்றார்கள். அவர்கள் மறைத்தவையும் மறுத்தவையும் எப்படி முறியடிக்கப்பட்டன என்பவை. ஒவ்வொரு வகையும் வேறானது. ஏழு வகைகளையும் அறிந்தாலன்றி, ஒவ்வொரு நடவடிக்கையாய் ஒவ்வோர் அடுக்காய் 'அ'வில் இருந்து 'ஃ'வரை தொடக்கத்திலிருந்து ஆழ்ந்து ஆராயப்பட்டாலன்றி உளவியலை ஒழுங்கு செய்ய முடியாது. அது முன்பெப்போதும் இருந்திராது. ஆனால், எதிர்காலத்தில் இருக்கக் கூடியது.

**மூன்றாவது கேள்வி:**

> **தாங்கள் சொன்னது போல் என் வாழ்க்கை ஒரு துயரமாயிருந்தது. ஆனால், தங்களிடம் வந்ததிலிருந்து அத்துயரம் போய்விட்டது. என் வாழ்க்கை இதுவரை சுகமாயில்லை என்பதை நான் அறிந்திருந்தாலும், எனக்கு நிகழ்கிற ஒவ்வொன்றிலும் ஒரு திருப்தி இருக்கிறது. இதனால் தியானம் செய்வதில் ஒரு விருப்பமின்மை உருவாகியிருக்கிறது. எவ்வித நோக்கமுமின்றித் திரிவதில் நான் மகிழ்ச்சி காண்கிறேன். நான் சோம்பேறியாகிவிட்டேனா?**

தேடுகிற ஒவ்வொருவருக்கும் இந்தக் கணம் வரவே செய்கிறது. எதிர்மறையானது இனியும் இல்லை என்றாலும் நேர்மறையானது வந்து சேர்வதில்லை. துயரம் மறைந்துவிட்டது, ஆனால் சுகம் இன்னும் அடையவில்லை. இரவு முடிந்துவிட்டது ஆனால் சூரியன் இன்னும் உதயமாகவில்லை. நீ வளர்ந்து கொண்டு இருப்பது நல்ல அறிகுறிதான். மேலும் அப்போது உடனடியாக தளர்வாக, மிதப்பதாக உணர்வதும் ஒருவருக்கு நடக்க ஆரம்பிக்கும். ஒவ்வொன்றின் நிகழ்வே மிக அழகானதாக இருக்கும். மனம் "ஏன் அக்கறை கொள்ள வேண்டும்? ஏன் தியானம் செய்ய வேண்டும்?" என்று கூறும். நீ மனம் சொல்வதை கேட்டால், விரைவிலேயே இரவு திரும்பவும் வந்துவிடும், துயரம் திரும்பவும் நுழைந்துவிடும். மனம் சொல்வதை கவனிக்காதே.

தியானத்தை தொடர்ந்து செய், ஆனால் இப்போது ஒரு மாறுபட்ட மனப்பான்மையுடன் செய்: நீ அதில் மிதப்பதைப் போல செய். அதில்

மிகுந்த முயற்சியுடன் ஈடுபடாதே. அதுதான் இப்போது தேவை. முயற்சியின்றி தியானம் செய், ஆனால் தியானத்திரு. சோம்பேறியாக இராதே. சோம்பேறி தனத்தினால் பழைய பழக்கம் திரும்ப வந்துவிடும், ஏனெனில் சுகம் இன்னும் நிகழவில்லை. ஒரு முறை ஆனந்தம் நிகழ்ந்து விட்டால் - நீ நிறைவை உணர்ந்து விட்டால், நீ நிறைவை கூட மறந்துவிடும் ஒரு கணம் வந்துவிடும் போது, அது இயல்பானதாகும் போது - பிறகு மட்டுமே தியானம் கைவிட பட முடியும். அது தானாகவே கழன்று விடும்.

விட்டுவிடும் யோசனை இரண்டுவிதங்களில் வரும். முதல்விதம் இந்த கேள்வி கேட்டவர் இருக்கும் நிலை: இருள் மறைந்து, துயரம் இல்லாமல் போய், நீ நன்றாக உணரும் போது ஒரு விதம். இது துயரம் இல்லாமல் போன நிலை தான். துயரத்திலேயே இருந்த மனதிற்கு துயரம் இல்லையென்றால் அதுவே பரமசுகமானதாக, சந்தோஷமானதாக தோன்றும்.

தோற்றத்தினால் ஏமாந்து போகாதீர்கள்.

நீங்கள் நோக்கமின்றித் திரிந்தாலும் தியானத்தை விட்டுவிடாதீர்கள். இன்னும் நிகழவேண்டியது நிறையவே உள்ளது. பயணம் முடிந்துவிட வில்லை. குளிர்தரும் மர நிழலில் இளைப்பாறக் கூடிய இடத்துக்கு நீங்கள் வந்திருக்கலாம். ஆனால், ஒன்றை மறந்து விடாதீர்கள் இது ஓரிரவு மட்டுமேயான தங்கல் என்பதை. காலையில் நீங்கள் மீண்டும் நடக்க வேண்டியிருக்கும்.

'நீங்கள் முற்றாக மறைகிறவரை இந்தப் பயணம் தொடரப்பட வேண்டியது'

ஆனால், இப்போது தரத்தை மாற்றிக் கொண்டுவிடுங்கள். எவ்வித முயற்சியும் இன்றியே தியானத்தில் ஈடுபடுங்கள்.

ஆக, வேறுபாட்டை அறிந்து கொண்டீர்களா?

ஒருவர் ஆற்றில் நீந்த முயற்சி தேவைப்படுகிறது. ஆனால், அவர் மல்லாந்த நிலையில் மிதக்கும்போது நீந்த வேண்டியிருக்காது. மிதக்கிற போது ஆற்றின் நீரோட்டம் அவரைக் கொண்டு செல்கிறது. அவர் கடலை நோக்கி மிதந்து செல்கிறார். தியானத்தின் தொடக்க நிலையில் ஒருவர் நீந்த வேண்டியிருக்கும். காரணம், மனதின் மூலம் தோற்றுவிக்கப்பட்ட பல எதிர்ப்புகளுடன் நீங்கள் போராட வேண்டியிருக்கும்.

இரண்டாவது நிலையில் நீங்கள் ஆற்று நீரோடு மிதப்பது. மூன்றாவது நிலையில் நீங்களே ஆறாகி விடுகிறீர்கள் - அப்போது பிரச்சினை எதுவும்

*இல்லை. பிறகு நீங்கள் கைவிட முடியும். அது தானாகவே நிகழ்கிறது. தியானம் பூர்த்தியான நிலையில் அது தன்னால் நழுவிவிடுகிறது. நீங்கள் அது குறித்து கவலைப்பட வேண்டியதில்லை. அது பூர்த்தியடைந்த நிலையில் மரத்தில் பழுத்த பழம் நிலத்தில் விழுகிற மாதிரி விழுந்துவிடும்.*

*ஆனால், சோம்பேறியாய் இருந்து விடாதீர்கள். மனம் உங்களுடன் ஆட்டங்கள் ஆடும். நீங்கள் அடைந்ததையெல்லாம் அழித்துப் போடும். மிகுந்த முயற்சியுடன் சிறிதளவே அடைந்திருப்பீர்கள். மனம், 'இப்போது ஒன்றும் தேவையில்லை' என்று கூறி உங்களை ஏமாற்றும். நீங்கள் மிகவும் மகிழ்ச்சியாய் உணர முடிந்தால் அதற்குக் காரணம் தியானங்கள். நீங்கள் தியானங்களை விட்டுவிட்டால் நீங்கள் அனுபவித்துணர்ந்த மகிழ்ச்சி மறைந்து போகும் அதன் பிறகு மீண்டும் நீங்கள் துயரத்தில் இருப்பீர்கள்.*

நான்காவது கேள்வி:

> 'லெய்ங்'கின் கருத்துக்கிசைய, கருவுற்றதில் இருந்து முதல் ஒன்பது மாதங்கள் சுகமாய் இருக்குமென்பதில்லை. மேலும், ஜானவ்வின் ஆய்வு முடிவுகளும் ஃப்ராய்டின் 'வலியோடு கூடிய பிறப்பு' கொள்கையை உறுதி செய்யவில்லை. தாங்கள் இதுபற்றி மேலும் கூறுவீர்களா?

*என்னைப் பொறுத்தவரை ஃப்ராய்டு கூறுவது இன்னும் உண்மைதான் ஃப்ராய்டு மட்டுமல்ல புத்தர், மகாவீரர், பதஞ்சலி இவர்களும் சொல்லியிருக்கிறார்கள் பிறப்பு வேதனையளிப்பது என்று, அது உடல் ரீதியானதுதான். அடி, வேதியல் பொருள்களால் உண்டாகிற காயம் (trauma). ஆனால் ஓர் இறுதி முடிவுக்கு வருவதென்பது கடினம். ஒரு குழந்தை பிறக்கிறது. ஆனால், அது எப்படி உணர்கிறதென்பதை யாரும் அறியமாட்டார்கள். கருவில் அந்தக் குழந்தை சுகமாயிருக்கிறதா இல்லையா அல்லது பிறக்கும்போது பிறப்புக்குரிய குழாய் வழியே வந்து, அது இப்பரந்த உலகை வந்தடைகிறபோது, வீறிட்டழுகிறபோது வலியை உணர்கிறதா இல்லையா என்பதை அவர்கள் அறியமாட்டார்கள். யார் தீர்மானிப்பது?*

*தீர்மானிக்க இரண்டு வழிகள் உள்ளன:*

*ஒன்று நடைமுறைக்கு ஏற்றவிதத்தில் கூர்ந்து கவனித்தல் (objective observation) அதைத்தான் ஃப்ராய்டு செய்தார். லெய்ங், ஜானவ் இவர்களுடன் மற்றவர்களும் செய்தார்கள். என்ன நடக்கிறது என்பதை நீங்கள் கவனிக்க முடியும். ஆனால், கவனித்தல் வெளியிலேயே நின்று*

விடுகிறது. என்ன நடக்கிறது என்பதை நீங்கள் உண்மையில் அறிந்திருக்க வில்லை.

இந்த இரண்டு விளக்கங்களும் சாத்தியமானவைதாம்; கர்ப்பத்தில் குழந்தை சுகமாயிருக்கிறது. அங்கே கவலையில்லை, குழந்தை செய்யும்படி எதுவும் இல்லை. எல்லாமே வழங்கப்பட்டு விடுகிறது. குழந்தை அப்படியே ஓய்வில் இருக்கும் என்று நீங்கள் சொல்ல முடியும். அல்லது மற்றொரு விதமான விளக்கமும் அளிக்க முடியும். அந்தக் குழந்தை அடை பட்டிருக்கிறது, சிறைப்பட்டிருக்கிறது, தாயைப் பாதிப்பதெல்லாம் குழந்தையைப் பாதிக்கும், தாய்க்கு நோய் வந்தால் குழந்தையும் நோய் வாய்ப்படும் தாய் கீழே விழுந்து எலும்பை உடைத்துக் கொண்டால் அது குழந்தையின் உடலையும் காயப்படுத்தும். தன் வாழ்நாள் முழுக்க அந்த ஊனத்தை அது தாங்கும்படியாகும். தாய்க்குத் தலைவலி வந்தால் அது குழந்தையையும் பாதிக்கும். காரணம் குழந்தை இணைந் திருக்கிறது, தனியே இல்லை. தாய் உடல் வலியிலோ மனவேதனையிலோ துன்புற்றால் குழந்தையும் பாதிக்கப்படும். குழந்தை மென்மையானது. அதன் நுட்பமான நரம்பு மண்டலம் தாயின் நிகழ்வுகள், உணர்வுகள், மன நிலைகள் இவற்றால் தாக்கப்படும்.

குழந்தை கருவறையில் எப்படி மகிழ்ச்சியாய், சுகமாய் இருக்கு மென்று சொல்ல முடியும்? குழந்தை கருவறையில் இருக்கும் போது தாய் உடலுறவில் ஈடுபட்டால் அவளுக்குப் பிராணவாயு தேவைப்பட்டு, குழந்தைக்கு கிடைக்க வேண்டிய பிராணவாயு 'சப்ளை' தடைப்படும். அதனால் குழந்தை துன்பப்படும். ஆற்றல் குறைபாட்டில் குழந்தைக்கு மூச்சுத்திணறும்.

இதன் காரணமாய் ஒரு யூத விஞ்ஞானி அதை நிரூபிக்க முயன்றார். பெண் கருவுற்றிருக்கும் நிலையில் அவளுடன் உடலுறவு கொள்ளக் கூடாது என்பது யூதர்கள் வைத்திருந்த நம்பிக்கை. கர்ப்பிணிப் பெண்ணுடன் அந்த ஒன்பது மாத காலத்துக்குள் உறவு வைத்துக் கொண்டால் கருவிலிருக்கும் குழந்தை துன்பமும், வலியும் அனுபவிக்கும். இதற்கோர் உறுதியான காரணம் இருக்கிறது - தாயின் பிராணவாயு அவளுடைய உடம்புக்குத் தேவைப்படும். ஆணும் பெண்ணும் உடலுறவு கொள்ளும்போது சுவாசம் துரிதமாயும், ஆழ்ந்தும் இருக்கும். கூடுதல் பிராணவாயு தேவைப்படும் நிலையில் தாயானவள் காய்ச்சலுக்குள்ளாவாள். அவளுடைய உடம்பின் வெப்பநிலை உயரும், குழந்தைக்கு மூச்சுதிணறும். இவை வெளியில் இருந்து கண்டறியப்படுபவை.

ஃப்ராய்டுக்கும் லெய்ங்கிற்கும் இடையில் ஒருவர் முடிவெடுக்கும்படி இருந்தால் அந்த முடிவு முழுமையாயிருக்காது. காரணம், அவர்கள் புறத்தே

இருப்பவர்கள். ஆனால், நானோ உள்ளேயிருப்பவரின் நோக்கினை உடையவன். அதனால்தான் நான் சொல்கிறேன் ஃப்ராய்டு சரியானவ ராகவும் (right),லெய்ங் சரியற்றவராகவும் இருக்கிறார்கள் என்று. புத்தர் உள்ளார்ந்தவரின்(insider's) நோக்கினை உடையவர். புத்தரைப்போல் ஒரு மனிதன் தோன்றுகிற போது அவர் குறைவற்ற அறிநிலையோடு தான் தோன்றுவார். புத்தரைப் போன்ற ஒருவர் கருவறையில் இருக்கும்போது அறிநிலை (aware) யோடுதான் இருப்பார்.

இது எப்படி நேர்கிறது என்பது புரிந்து கொள்ளப்பட வேண்டும்.

ஒருவன் முழுமையான அறிநிலையோடு இறப்பாரெனில் அவ ருடைய மறுபிறவியும் குறைவற்ற அறிவுடையதாயிருக்கும். அறிநிலை யோடும், பிரக்ஞையோடும் இறக்கிற ஒருவர் மரணத்தின் ஒவ்வொரு கட்டத்தையும் காண்பார். உடல் செத்துக் கொண்டிருப்பதை, மனம் மறைந்து கொண்டிருப்பதை அவர் முழுமையான அறிநிலையோடு உணர்வார். திடீரென்று அந்த உடலில் தான் இல்லை என்பதையும், உடம்பிலிருந்து பிரக்ஞை விலகுவதையும் அவர் கண்டு கொள்வார். மரணித்து விழுந்து கிடக்கும் உடலையும், தான் அந்த உடலைச் சுற்றி மிதப்பதையும் அவரால் காணமுடியும்.

நீங்கள் மரணத்தறுவாயில் அறிநிலையோடு இருந்தால் பிறப்பில் அதுவும் ஒரு பகுதியாகும்.

இந்த நோக்கு முறை (aspect) யில் நீங்கள் உணர்வோடு இருந்தால் நீங்கள் கருவாய் தோன்றுகிற போதும் உணர்வோடிருப்பீர்கள். உடலுறவு கொள்ளும் ஒரு தம்பதியைச் சுற்றி நீங்கள் மிதப்பீர்கள், குறைவற்ற உணர்வோடுமிருப்பீர்கள். முழுமையான உணர்வுடன் கருவறைக்குள் பிரவேசிப்பீர்கள். குழந்தை கருத்தரிக்கப்படுகிறது. சிறு விதையாய் இருக்கும் போதே நிகழ்வுகளை நீங்கள் உணர்வீர்கள். தாயின் கருவறையில் ஒன்பது மாதங்களும் உணர்வுடன் இருப்பீர்கள்: புத்தரைப் போன்று ஒரு குழந்தை தாயின் கருவறையில் இருக்கும் போது, அந்தத் தாயின் பண்புத் திறம் மாறும். அவள் அதிக உணர்வுடன் இருப்பாள். உள்ளுக்குள் ஒளிவிடும் தீபம். வீடு எப்படி வெளிச்சமில்லாமல் இருக்க முடியும். தாய் தன்னுடைய பிரக்ஞையில் ஒரு மாற்றத்தைக் காண்பாள்.

புத்தரின் தாயாவதென்பது ஓர் அரிய வாய்ப்பு. அந்தத் தனிச் சிறப்பு தாயை மாறச் செய்யும். சாதாரண குழந்தையெனில் அது எதிரிடையா யிருக்கும் என்பது உண்மை. அந்தக் குழந்தை தாயின் உடல், மன, உணர்வின் எல்லைக்குட்படுத்தப்பட்டுவிடும் - அது ஒரு சிறைவாசம். புத்தர்

பிறக்கிற போது தாய் அவருடைய மகத்தான பிரக்ஞையின் ஒரு பகுதியாயிருந்தாள். புத்தர் அவரைச் சுற்றி ஒளிப்பிரபை (aura) யாய் பரவியிருந்தார். அவள் புத்தரைப் பற்றிக் கனவு கண்டாள்.

இத்தகைய தாய்மார்களின் கனவுகளை இந்தியர்களாகிய நாம் பதிவு செய்து வைத்திருக்கிறோம். புத்தரின் தாய், மகாவீரன் தாய், தீர்த்தங்கரரின் தாய் என்று பலரின் கனவுகள். உண்மையில் வேறெந்தக் கனவுகளைப் பற்றியும் நாம் கவலைப்பட மாட்டோம். புத்தரைப் போன்றவர்களின் தாயார்களுடைய கனவுகளையே நாம் பகுப்பாய்வு செய்திருக்கிறோம். அந்த ஒரு கனவுப் பகுப்பாய்வை மட்டுமே நாம் செய்திருக்கிறோம். அது மூன்றாவதுவகை உளவியலின் ஒரு பகுதியாகும்.

ஒரு புத்தர் பிறக்கவிருந்தபோது தாய் ஆயிரக்கணக்கான முறை கனவு கண்டிருப்பாள். திரும்பத்திரும்ப ஒரே கனவு - அதே கனவு வரும். தாயினுள்ளிருந்த புத்தரின் தன்னுணர்வு ஓர் அதிசயிக்கத் தக்கக் காட்சியை அவளுடைய மனதில் தோற்றுவித்திருக்கும். அவள் குறிப்பிட்ட பரிமாணத்தில் கனவு காணத் தொடங்கியிருப்பாள். உதாரணமாய் - புத்த மதத்தைப் பின் பற்றுபவர்கள் சொல்கிறார்கள் - புத்தர்களின் கர்ப்பத்தில் இருக்கும்போது, தாய் ஒரு வெள்ளை யானையைக் கனவில் கண்டாள் என்று, அது ஒரு குறியீடு, மிகவும் அரிதான ஒன்று பற்றிய குறியீடு. காரணம், வெள்ளை யானை என்பது-எளிதில் காணக்கிடைக்காத மிகச் சிறந்த ஒன்று, அரிதான் ஒன்று உள்ளிலிருப்பதையே அந்த வெள்ளை யானைக் குறியீடு சுட்டிக்காட்டும்.

'பிறப்பு துன்பமளிப்பது' என்று புத்தர் சொன்னார். அது உள்நோக்குகிறவரின் பார்வையில் சொல்லப்பட்டது. மகாவீரர் சொல்கிறார், பிறப்பு ஒரு துன்பம், வேதனை, வலி அளிப்பது என்று. பிறப்பும் இறப்பும் மிகப்பெரிய துன்பங்கள் என்று அவர்கள் இருவருமே சொல்கிறார்கள். ஃப்ராய்டு, லெய்ங்கின் வார்த்தைகள் தாங்கிவந்ததைவிட அவர்களுடைய வார்த்தைகள் பொருட் செறிவு மிக்கவை. ஆனால் ஃப்ராய்டின் நோக்கு (view) இதனுடன் ஒத்துப்போகிறது. இதுவே என்னுடைய அனுபவமு மாகும்.

தாயின் கருவறையில் இருக்கும் அந்த ஒன்பது மாதங்களும் சுகமானவை. உண்மையில் சில விதிவிலக்கான அனுபவங்களும் இருக்கும். அதைத்தவிர அந்தக் காலகட்டத்தில் மோசமான செய்தி எதுவும் இருக்காது. கிட்டத்தட்ட எதுவுமே நடப்பதில்லை. ஒரு வியக்கத்தக்க பரவசத்தில் மிதப்பதாகவே இருக்கும். ஆனால் பிறப்பு ஓர் அவதி, வலியளிப்பது. அது-ஒரு மரத்தை வேரோடு பிடுங்கினால் அந்த மரம் அனுபவிக்கிற அதே உணர்வாகும்.

ஒருமரம் வேரொடு பிடுங்கப்படுகிறபோது, அனுபவித்துணர்வதை அளவிட்டறிய நாம் சாதனங்களைப் பெற்றிருக்கிறோம். தாயிடமிருந்து வெளிவரும் குழந்தையும் அதே உணர்வை அடையும். தாய் ஒரு நிலம், குழந்தை தாயிடம் வேர் கொண்டிருக்கிறது. அதை வேருடன் பிடுங்கி வெளியே எறியும் போது வேதனை அதிகம் மரணத்தைவிடவும், பிறப்பு முதலாவது, இறப்பு இரண்டாவது. பிறப்புதான் இறப்பை சாத்திய மாக்குகிறது. உண்மையில் பிறப்பில் தொடங்கும் துன்பம் இறப்பில் முடிகிறது. ஒன்பது மாதம் ஓய்வில், இறைப்பாறலில் கவலையில்லாமல் இருந்து, பிறகு வெளியே தூக்கி எறியப்படுவதென்பது அதிர்ச்சிக்குரிய விஷயந்தான். ஒருபோதும் அத்தகைய அதிர்ச்சியை நரம்பு மண்டலம் அனுபவிக்கிறதில்லை. மற்ற வேதனைகள் அத்தனை முக்கியத்துவம் உள்ளவையல்ல.

நீங்கள் திவாலாகும் நிலையில் இருந்தால் அது அதிர்ச்சிக்குரிய விஷயந்தான். ஆனால் பிறப்பு அவதியுடன் ஒப்பிடும் போது அது ஒன்றுமேயில்லை.

உங்கள் மனைவி இறந்துவிடுகிறாள். நீங்கள் வருந்துகிறீர்கள், கதறி அழுது கண்ணீர் வடிக்கிறீர்கள். அந்தக் காயம் ஆறிப்போகிறது, நீங்கள் இன்னொரு பெண்ணை துரத்தத் தொடங்கி விடுகிறீர்கள். உங்கள் குழந்தை இறந்து போகிறது, நீங்கள் மிகவும் புண்படுகிறீர்கள். அந்தப் புண்ணின் வடுவாய் ஏதோ உன்று உங்கள் இருப்புணர்வில் எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறது. ஆனால் பிறப்பின் அவதியோடு ஒப்பிட்டுப் பார்க்கிற போது இவை ஒன்றுமேயில்லை.

'உங்கள் வாழ்நிலத்திலிருந்து
நீங்கள் வேரோடு பிடுங்கப்படுகிறீர்களே, அந்தவலி!'

இதனை நீங்கள் உணரக்கூடும் அப்போது மட்டுமே நான் சொல்வது அர்த்தமுள்ளதாகும்.

புற ஆய்வுகளில் இவை முரண்படும். நான் எதைச் சொன்னாலும் அது என்னுடைய சொந்தப் பிறப்பைப் பற்றியதாய் இருக்கும். நீங்கள் உண்மையிலேயே அறிய விரும்பினால் உங்களுடைய அறிநிலையை மேலும் மேலும் அதிகரித்துக் கொள்ளுங்கள் அப்போது தான் இம்முறை நீங்கள் இறக்கும்போது முழுமையான விழிப்புணர்வுடன் இறக்க முடியும். பிறகு நீங்கள் தானாகவே முழு விழிப்புணர்வுடன் பிறப்பீர்கள். நீங்கள் பிரக்ஞையற்றவராய் மடிந்தால் பிறக்கும் போதும் பிரக்ஞையிருக்காது. இறப்பில் நிகழ்வது எது வாயினும் பிறப்பிலும் அது நிகழ்கிறது.

'பிறப்பு இந்தப் பக்கம் என்றால்
மரணம் அந்தப் பக்கம்'

*அதே வாசல். நீங்கள் பிரக்ஞையுடன் வாசலுக்குள் நுழைந்தால் பிரக்ஞையுடன் அதைவிட்டு வெளிவருவீர்கள். கதவின் ஒரு பக்கம் மரணம், இன்னொரு பக்கம் பிறப்பு.*

ஐந்தாவது கேள்வி:

சமீபத்தில் மூலத்தில் திரும்புவதற்கென்று பல நுட்பங்களை மேற்கு உருவாக்கியது. இந்நுட்பங்கள் அனைத்தும் பொதுவாக ஒரு விஷயத்தைக் கொண்டிருப்பதாய் தெரிகிறது. ஒருவர் இந்தப் பிறப்பு அவதி அனுபவங்களுக்கு உண்மையாகவே திரும்ப முடியாது என்பதை அவர்கள் ஒத்துக் கொள்கிறார்கள். மனம் ரொம்பவும் சுற்றி வளைத்துச் செல்வது, தன் முனைப்பு ரொம்பவும் சிக்கலானது அதனால்தான் பகுப்பாய்வு கண்டுபிடிக்கப்பட்டது. ஆதாரம் பற்றிய சிகிச்சை, ஃபிஷர் ஹாஃப்மன், ஆப்பிரிக்காவின் கர்மானவ சுத்திகரிக்கும் சாதனங்கள் என்று சிலவற்றைக் குறிப்பிடலாம். அடிப்படை வாதத்தைக் கவனிக்கும்போது ஒருவர் பயணத்தைத் தனியே தொடரமுடியாது என்று தெரிகிறது. இன்னொன்று தேவை - வலிமைமிக்க ஒரு குழு அல்லது நியாயமான ஒருவழி - காட்டி. கடந்த காலத்தைப் பற்றிய பிரக்ஞையுடன் இருப்பது அவசியமா? ஒருவர் ஆழ்ந்த தியானத்தை மேற்கொள்ளும் போது அது தனக்குத்தானே சிக்கலைச் சீர்செய்து விடாதா?

*முதலாவது, கடந்த காலத்துக்குள் நுழைய வேண்டிய அவசியமே இல்லை. நீங்கள் உண்மையிலேயே தியானம் செய்தால் அது தானாகவே சீர் செய்யப்பட்டுவிடும். ஆனால் உங்களுடைய தியானம் நல்ல முறையில் அமையாவிடில் கடந்த காலத்தில் நுழைவது அப்போது பேருதவியா யிருக்கும். ஆக, கடந்த காலத்தில் நுழைவதற்கு முழுமையான அவசியம் ஏற்பட்டிருக்கவில்லை. நீங்கள் நல்லமுறையாய் செய்து வந்தால், அதைப் பற்றி மறந்துவிடுங்கள். நீங்கள் நல்ல முறையில் தியானிக்கவில்லை என்றால் தான் அது முக்கியத்துவம் பெறும். அப்போது அது நிரம்பவே உதவியாயிருக்கும். தியானத்திலுள்ள இடர்ப்பாடுகளை அது தீர்த்து வைக்கும். ஆனால் அது பூர்த்தி செய்கிற ஒரு துணை நிகழ்வாகவே இருக்கும்.*

*தியானத்தில் ப்ரதி-ப்ரஸவ் (கடந்த காலத்தில் நுழைதல்) ஒரு பூர்த்தி செய்கிற உத்தியாகும். முதலில் தியானத்தை முயன்று பாருங்கள், அது பல்னளித்தால் கடந்த காலத்தை மறந்து விடுங்கள். கடந்த காலத்துக்குள்*

நுழைகிற அவசியமில்லை. தியானம் வேலை செய்யவில்லை என்று நீங்கள் கருதினால் மேலும் முன்னேற முடியாத சூழ்நிலை - முட்டுக்கட்டை ஏற்பட்டிருக்கும். அத்தகைய தடை ஏற்படும் போது உங்களால் இப்படி அப்படி நகரமுடியாது. உங்கள் கடந்த காலம் பெரிய சுமையாகி விட்டிருக்கிறது, உங்களுக்கு 'ப்ரதி-ப்ரஸவ்' அவசியம் என்று அர்த்தம். தியானத்துக்காக முயலும் போதே நீங்கள் கடந்த காலத்தினுள்ளும் செல்ல வேண்டியிருக்கும். தியானம் நல்ல முறையில் அமைந்தால் உங்களுடைய கடந்த காலச்சுமை அதிகமில்லை என்று அர்த்தம். அப்போது தியானம் மட்டுமே போதுமானது. காரணம் கடந்த காலத்தில் தடை எதுவும் இல்லை. ஆனால் தடைகள் இருந்து, தியானம் பலனளிக்கவில்லை என்றால் கடந்த காலத்தில் நுழைவது மிகப்பெரிய அளவில் உதவியாயிருக்கும். ப்ரதி-ப்ரஸவ் வியப்பளிக்கும். அது உன்னைப் பொறுத்தது தான்.

அது உங்களைப் பொறுத்தது. முதலில் சிரத்தையுடன் தியானம் செய்யுங்கள். அது நிகழ்கிறதா இல்லையா என்று அறிய முயலுங்கள். அது சாத்தியமில்லை. எதுவும் நிகழவில்லை என்று உணர்ந்தால் அதன் பிறகே நீங்கள் 'ப்ரதி-ப்ரஸவ்'வை மேற்கொள்ள வேண்டும். அது ஒரு நல்ல செயல் முறை ஆனால் துணைநிலையில் இருப்பது, முதலிடம் பெறாது.

இரண்டாவது விஷயம், நீங்கள் மட்டும் தனியே செல்ல முடியாது, தனியே வளரமுடியாது என்பது. அது முற்றிலும் உண்மை. தனித்து ஒரு நிச்சயமான முடிவை எட்ட இலட்சோலட்சம் பிறவிகள் எடுக்கும்படி ஆகலாம். ஒரு குறிப்பிட்ட உயிர்ப்பை - இருப்புணர்வைப் பெறுவதும் சாத்தியமல்ல. பல காரணங்களால் அது சாத்தியப்படுவதில்லை. ஏனெனில் நீங்கள் எப்படியிருந்தாலும் அந்த அமைவு தன்னாட்சியும், தன்னிறைவும் பெற்றதாகவே இருக்கும். அது தன்னுடைய சொந்த முறையில் செயல்படும், கடந்த காலத்தில் வெகு ஆழமாய் வேரூன்றி இருக்கும். அந்த அமைவு திறமையும், போதிய அளவு தகுதியும் கொண்டது. வேறொருவரின் உதவி யில்லாமல் அந்த அமைவில் இருந்து நீங்கள் வெளி வருவது கடினம். ஒரு அதிர்வு, ஒரு விரிசல், உடைப்பு கொடுக்க ஒரு வெளிப் பொருள் தேவை. அது பல பிறவிகளாய் உறக்க நிலையில் இருப்பது போன்றது. சிறிதள வேனும் விழிப்படையாமல் எப்படித் துவங்குவீர்கள்? நீங்களோ முழுமை யான உறக்கத்தில் இருக்கிறீர்கள், 'கோமா' (coma) வில் இருக்கிறீர்கள். யார் வேலையைத் துவங்குகிறது? நீங்கள் எப்படி விழிப்பூட்டிக் கொள்வீர்கள். யாரானும் ஒருவர் தேவை, உங்களுக்கு அதிர்ச்சியளித்து உங்களை 'கோமா'வில் இருந்து மீட்டெடுக்கக் கூடிய ஒருவர். நீங்கள் வெளிவரு வதற்கு ஓர் அலாரம் கடிகாரம் கூட உதவியாயிருக்கும்.

ஓர் அணி (group) தேவைப்படும். காரணம், நீங்கள் விழிப்புற்ற நிலையில் கடந்த காலம் உங்களை மீண்டும் பிரக்ஞையற்ற நிலைக்குத்தள்ள

முயலும். நீங்கள் திரும்பத்திரும்ப உறக்கத்திலாழ்ந்து விடுவீர்கள். உங்களை வெளிக்கொண்டுவர மிகச் சரியான ஒரு குரு தேவைப்படுவார் அல்லது மக்களின் அணியொன்று தேவைப்படலாம். அந்த அணியில் உள்ளவர்கள் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளமுடியும்.

குருட்ஜீவ் சொல்வார், 'நீங்கள் காட்டில் இருக்கும்போது பயங்கர காட்டு மிருகங்களிடம் இருந்து உங்களை எப்படிப் பாதுகாத்துக் கொள்வீர்கள். குழுவாய் இருந்துவிட்டால் கவலையில், பத்து பேர் இருந்தால் ஒருவர் விழித்திருக்க மற்றவர்கள் உறங்கமுடியும். மிருகங்க ளாலோ, திருடர்களாலோ அபாயம் ஏற்படும்போது அவர் மற்றவர்களைத் தட்டியெழுப்புவார்.

எச்சரிக்கையோடு இருப்பது ஒருவர் என்றாலும் அது பாதுகாப்பு. தனக்கு உறக்கம் வருவது போல் தோன்றினால் அவர் மற்றவர்களை எழுப்பிவிடுவார். மிகச் சரியான ஒரு குரு கிடைத்துவிட்டால், ஒரு புத்தர் கிடைத்துவிட்டால் பிறகு கூட்டத்துடன் செயல்படும் அவசியமில்லை காரணம் அவர் இருபத்தி நான்கு மணிநேரமும் உணர்வுடன் இருப்பவர். அப்படியொருவர் இல்லையென்றால் கூட்டமாய் செயல்படுவதை இரண்டாவது சாத்தியமாய் கொள்ளலாம். சில சமயங்களில் ஒருவர் சிறிதளவு விழிப்புணர்வுடனிருப்பார். அவரால் உதவ முடியும். அவருக்கு உறக்கம் வரும்போது வேறொருவர் சிறிதளவு விழிப்புணர்வைப் பெறலாம். கூட்டத்தில் ஒருவருக்கொருவர் இப்படியாக உதவிக் கொள்ளமுடியும்.

அது நீங்கள் சிறைப்பட்டிருக்கும் நிலையைப் போன்றது. நீங்கள் தனியே வெளிவருவது கடினம், கடுமையான காவல் இருக்கும். ஆனால் எல்லாக் கைதிகளும் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டு முயற்சியை மேற் கொண்டால் காவலர்களால் சமாளிக்க முடியாது. ஆனால், வெளியில் இருந்து ஒருவர் உதவக் கூடும் என்கிற நிலையில் குழுவாக முயலும் அவசியமிருக்காது. வெளியில் உள்ள ஒருவரால் சூழ்நிலைகளை உருவாக்க முடியும். அவர் ஓர் ஏணியைக் கொண்டு வருவார், காவலருக்கு கையூட்டளிப்பார், காவலருக்கு மயக்க மருந்து கொடுத்து மயங்கி விழச்செய்வார், வெளியில் இருப்பவரால் இப்படி ஏதாவது செய்யமுடியும், காரணம் அவர் சுதந்திரமாய் இருக்கிறார். நீங்கள் வெளிவரக்கூடிய சூழ்நிலையை உருவாக்கும் வழிமுறைகளை அவர் கண்டறிவார். சரியான குரு சிறைச்சாலைக்கு வெளியில் இருக்கும் ஒருவரைப் போன்றவர். ஏதாவதொன்றைச் செய்யக்கூடிய சுதந்திரம் இருக்கிறது அவருக்கு. அவர் தடையற்றவராய் இருப்பதால் சாத்தியங்கள் அதிகம். சிறைச்சாலைக்கு வெளியே சுதந்திரமாய் உள்ள ஒரு குருவின் தொடர்பு இல்லாத நிலையில் தான் சககைதிகளை ஓர் அணியில் கொண்டு வரவேண்டிய அவசியம் ஏற்படும்.

மேற்கில் பல அணிகள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. அரிக்கா, குருட்ஜீவ் போன்றவர்களின் அணிகள். குழு உணர்விற்கு மேற்கில் அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. அது நல்லது தான். மகரிஷி மகேஷ் யோகியைவிட, பாலயோகேஸ்வரைவிட அது சிறப்பானது தான். காரணம் அங்கே குருமார்கள் இல்லை. நீங்கள் கூட்டத்தில் (group) இருக்கும்போது, வெளியில் இருக்கிறேன் என்று சொன்னாலும் வெளியில் இருப்பதில்லை, உள்ளேதான் இருப்பீர்கள்.

தனக்கு வெளியில் தொடர்புகள் இருப்பதாய் சொல்லிக் கொள்கிறவனுக்கு வெளியில் தொடர்புகள் இருக்காது. அவன் உங்களை ஏமாற்றிக் கொண்டிருப்பான். கிழக்கில் இருந்து ஒருவர் மட்டுமே மேற்கில் வந்தார், அவர் கிருஷ்ண மூர்த்தி. கிருஷ்ண மூர்த்தியுடன் நீங்கள் இருந்தால் அது உங்களுக்குப் பயன்படத் தக்கதாயிருக்கும், ஆனால் அவருடன் இருப்பது கடினம். தாங்கள் உதவி பெறுகிறோம் என்பதே உதவப்படுகிற வர்களுக்குத் தெரியாத அளவில் உதவ முயல்பவர் அவர். அவருடைய வழி மறைமுகமானது. அதில் இடர்ப்பாடு இருக்கிறது. மேற்கில் தங்களைக் குருவாகச் சொல்லிக் கொள்கிறவர்களெல்லாம் வெறும் விற்பனைப் பிரதிநிதிகளாய் இருக்கிறார்கள், கொஞ்சமும் தகுதியற்றவர்கள்.

ஒரு குருவை நீங்கள் கண்டுபிடித்துக் கொள்ள முடிந்தால் அது சிறப்பு, காரணம், ஒரு கூட்டத்தில் நீங்கள் எல்லாருமே, உறங்குகின்ற சிறைக் கைதிகள் மாதிரி. நீங்கள் முயற்சிக்கலாம் ஆனால், அதற்கு நீண்ட காலம் பிடிக்குடம். அல்லது குறைந்த பட்ச அளவிலும் நீங்கள் வெற்றி பெறாமல் போகலாம். காரணம், நீங்கள் ஒரே செயல்திறனுடன், பிரக்ஞையின் ஒரே தளத்தில் இருக்கிறீர்கள். ஏதோ ஒன்று நடக்கலாம் அல்லது நடக்காமலும் இருக்கலாம். ஒன்று மட்டும் உறுதி அங்கே எதுவும் உறுதியாயில்லை என்பது நம்பக்கூடிய தன்மை (probability) மட்டுமே உள்ளது.

அந்தோ குருட்ஜீவ் இல்லை. குருட்ஜீவின் அணியினர் உஸ்பென்ஸ் கியின் நூலாதிக்கத்துக்குட்பட்டிருந்தனர். உண்மையில் அவர்கள் குருட்ஜீவ் அணியினர் என்றாலும் சிநுட்பமாய் பார்த்தால் அப்படியில்லை என்றே சொல்ல வேண்டும்.

நீங்கள் கொள்கைகள் பற்றிப் பேசவும் ஒருவருக்கொருவர் விவரிக்கவும் முடியும். ஆனால், நீங்கள் பிரக்ஞையின் ஒரே தளத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தால் அதிக அளவில் விவாதிப்பதும் அதிக அளவில் அறிவதும் நிகழும். ஆனால் அறிந்து புரிந்து கொள்வதும் விழித்து கொள்வதும் நடக்காது. குருட்ஜீவ் இருந்தபோது முற்றிலும் வேறாயிருந்தது. அந்த குரு உங்களைச் சிறையில் இருந்து வெளியில் கொண்டு வருவார்.

முதல் காரியமாய் உங்களுக்கு உதவக்கூடிய ஒரு குருவைத் தேடிக் கண்டு பிடியுங்கள். அது சாத்தியமில்லாவிடில் ஓர் அணியை உருவாக்கிக்

கொண்டு கூட்டு முயற்சியில் ஈடுபடுங்கள். தனித்திருத்தல் கடைசி சாத்தியம். நீங்கள் தனியே செயல்படுவது, ஒரு கூட்டத்துடன் செயல் படுவது, அல்லது ஒரு குருவுடன் செயலில் ஈடுபடுவது என மூன்று வழிகள். குருவுடன் இருப்பது சிறந்தது. அடுத்தநிலையில் சிறப்பானது ஒரு கூட்டத்துடன் இருப்பது. மூன்றாவது தனித்திருப்பது. தனியாய் இருந்து உன்னத நிலையைப் பெற்றவர்கள் கூட பல பிறவிகளில் குருவோடும், கூட்டத்தோடும் செயல்பட்டு வந்திருக்கிறார்கள். எனவே, தோற்றத்தைக் கொண்டு ஏமாந்துவிடாதீர்கள். நீங்கள் பிறருடைய துணையின்றியே வெற்றி பெறமுடியும் என்று கிருஷ்ணமூர்த்திகூட தொடர்ந்து சொல்லி வந்திருக்கிறார். நீங்கள் தனியாகவே அடைய முடியும் என்று அவர் ஏன் வலியுறுத்திவந்தார்? காரணம் அவருடைய செயல் முறை மறைமுகமானது. தான் உதவிக் கொண்டிருப்பதை பிறர் அறிய அவர் இடமளிப்பதில்லை. 'என்னிடம் உன்னை ஒப்படைத்தக் கொண்டுவிடு' என்று அவர் சொல்ல மாட்டார். மேற்கில் தன் முனைப்பு அதிகம், அவர் காலம் முழுதும் மேற்கில் செயல்பட்டுக் கொண்டிருந்தவர். அவர் வந்து என்னிடம் சரணடைந்துவிடு." என்று சொல்ல முடியாது. மேற்கில் தன்முனைப்பு மிகவும் அதிகம்.

கிருஷ்ணர் அர்ஜீனனிடம் சொன்னார்; எல்லாவற்றையும் விட்டுவா, வந்து என்னைச் சரணடைந்துவிடு' என்று. அர்ஜீனன் முற்றிலும் வேறான உலகத்தை, எப்படிச் சரணடைவது என்பதை அறிந்திருந்த கிழக்கைச் சேர்ந்தவர். தன்முனைப்பின் அருவருப்பையும், சரணாகதியின் அழகையும் கிழக்கு அறிந்திருந்தது. தன்னளவில் எவ்வித அகந்தையும் இல்லாமல் கிருஷ்ணரால் இதைச் சொல்ல முடிந்தது. வலியுறுத்திப் பேசுவது (assertion) அகந்தையாய் தெரியலாம். 'வா, என்னிடம் சரணடை' என்பதில் உரிமை பாராட்டல் இருக்கிறதேயன்றி அகந்தை இல்லை. ஆனால், கிருஷ்ணரால் அதை இயல்பாய்ச் சொல்ல முடிந்தது. 'நீ ஏன் இதைச் சொல்கிறாய்? நான் உன்னிடம் எதற்காகச் சரணடைய வேண்டும்?' என்று அர்ஜீனன் ஒருபோதும் கேள்வி எழுப்பவில்லை. கிழக்கில், சரணாகதி என்பது அறிந்த வழியாய் இருந்தது. கடைசியில் ஒரு குருவிடம் சரணாகதி அடையும்படி இருக்கும் என்பதை எல்லாரும் அறிந்திருந்தார்கள். அது எளியதாய், தகுதியானதாய் இருந்தது.

கிருஷ்ணமூர்த்தி மேற்கில் செயல்பட்டவர். அவரும் குருமார்களால் உருவாக்கப்பட்டவர்தாம். மிகவும் நம்பத்தக்க வழியில் குருமார்களின் உதவியை அவர் பெற்றிருந்தார். அது தேர்ந்தெடுக்கப்பட்ட சிலருக்கு மாத்திரமே கிடைக்கக் கூடியது. தூலவடிவில் இருந்த குருமார்கள் மட்டுமின்றி சூக்குமவடிவில் இருந்தவர்களும் அவருக்கு உதவினர்.

'ஒரு பூ மலர்வதற்கு உதவும் காற்றைப்போல் அவருடைய முழுவளர்ச்சிக்கும் அவர்களுடைய உதவி இருந்தது' ஆனால், மேற்கில்

செயல்பட்டுக் கொண்டிருந்தபோது, தன்னை ஒப்படைத்துக் கொள்ள (surrender) மேற்கு தயாராயில்லை என்பதை அவர் உணர்ந்தார். அதனால்தான் கிருஷ்ணரைப்போல், 'வா, வந்து என்னைச் சரணடை' என்று அவரால் சொல்ல முடியவில்லை. மேற்கத்திய தன் முனைப்புக்குச் சிறந்தவழி உன்னுடைய சொந்த முயற்சியில் நீ அடைய முடியும் என்று விட்டுவிடுவதுதான்.

இது ஓர் உபாயம்: ஒரு குருவிடம் ஒப்புவித்துக் கொள்ள அவசியமில்லை. உன்னுடைய தன் முனைப்பை விட வேண்டிய அவசிய மில்லை - நீ நீயாகவே இரு இதுவே உங்களை ஈர்ப்பதில் முதன்மையான பகுதியாய் இருக்கும். சரணடையத் தேவையில்லை, உங்கள் தன் முனைப்பை விடத்தேவையில்லை. நீங்கள் நீங்களாகவே இருங்கள். இந்த சூழ்ச்சித்திரம் அவர்களை ஒரு பொறியில் சிக்க வைத்துவிடும். தாங்கள் சரணடையத் தேவையில்லை என்று அவர்கள் நினைத்தார்கள். தாங்கள் இருக்கிறபடியே இருக்க முடியும், அடுத்தவரிடமிருந்து எதையும் அறிந்து கொள்கிற அவசியம் இல்லை என்று அவர்கள் நினைத்தார்கள். ஒருவருக்குத் தேவைப்படுவது அவருடைய சொந்த முயற்சி மட்டுமே என்று எண்ணிக் கொண்டனர்.

அவர்கள் தொடர்ந்து, ஆண்டுக் கணக்கில் கிருஷ்ணமூர்த்தியிடம் போய்க் கொண்டிருந்தார்கள். எதற்காக? கற்பதற்காகவா? 'நீங்கள் தனியாகவே வெற்றிபெற முடியும்' என்று அவர் சொல்வதைக் கேட்டவுடன் நீங்கள் ஒரு முடிவுக்கு வந்திருக்க வேண்டும். ஆனால், நீங்கள் அவரைப் பின்பற்றுகிறவராகி விடுகிறீர்கள். உங்களை அறியாமலே பொறியில் சிக்கிச் கொள்கிறீர்கள். அடியாழத்தில் சரணாகதி நேர்ந்து விடுகிறது. அவர் உங்களுடைய மேற்பரப்பிலுள்ள தன்முனைப்பைக் காப்பாற்றி, அடி யாழத்தில் உங்களைக் கொன்று போடுகிறார். அவருடைய வழி மறை முகமானது.

ஆனால் யாரும் தனித்து நின்று வெற்றி காண்பதில்லை. நான் பல குருமார்களுடன் செய்யப்பட்டிருக்கிறேன், குழுக்களுடன் செயல்பட்டிருக்கி றேன், தனியாகவும் செயல்பட்டிருக்கிறேன்.

ஆனால் நான் சொல்வேன் அடுக்கடுக்கான விளைவுகளே இறுதிக்காட்சியை அமைக்கிறது என்று. தனியாக செயல்படுவதும், குருவுடன் செயல்படுவதும், கூட்டமாய் செயல்படுவதும் படிப்படியாய் விளைவுகளை ஏற்படுத்தும். தனியே செல்லும்படி வற்புறுத்தாதீர்கள். காரணம், அந்த வற்புறுத்தலே ஒரு தடைச் சுவராகிவிடும். கூட்டத்தை நாடிச் செல்லுங்கள். உங்களால் ஒரு குருவைக் கண்டுபிடித்துக் கொள்ள முடிந்தால் நீங்கள் அதிர்ஷ்டக் காரர்தான். அந்த வாய்ப்பைத் தவறவிடாதீர்கள்.

ஆறாவது கேள்வி:

**'ப்ரதி ப்ரஸவ்' என்கிற பின்னோக்கிச் செல்லும் செயல்முறை மீண்டும் வாழ்வதற்குப் பதிலாய் மறப்பதன்பாற்பட்டதா?**

இரண்டுமே ஒன்று தான். நீங்கள் மறுமுறை வாழ்வதென்பது நினைவில் இருந்து அகற்றுவதன் செயல்முறைதான். எதை நீ மறுமுறை வாழ்ந்தாலும் அது உன்னிடமிருந்து மறைந்து போகிறது. அது மறக்கப்பட்ட தாய், எவ்வித அடையாளக் குறியும் இல்லாமல், சுத்தமான கரும்பலகை போல் இருக்கிறது. நீ அதை மறக்கப்பட்டதாக அழைக்கலாம், இரண்டும் ஒன்று தான்.

ஏழாவது கேள்வி:

**பதஞ்சலியின் கருத்துக்கிசைய நல்லதும் கெட்டதும் கனவுகளைப் போன்றது என்றால், பிறகு கர்மாக்கள் எப்படி உளதாய் இருக்கின்றன?**

காரணம் நீங்கள் கனவில் நம்பிக்கை வைக்கிறீர்கள், அவை உண்மையானவை என்று நம்புகிறீர்கள். உங்களுடைய நம்பிக்கையின் காரணமாகவே கர்மாக்கள் இருக்கின்றன. உதாணமாய்: இரவில் ஒரு கெட்ட கனவை நீங்கள் காண்கிறீர்கள். யாரோ ஒருவர் கையில் ஒருவாளை வைத்துக் கொண்டு உங்கள் உடம்பின் மீது உட்கார்ந்திருக்கிறார். நீங்கள் கொல்லப்பட்டதாய் எண்ணிக் கொள்கிறீர்கள். அந்தச் சூழ்நிலையில் இருந்து தப்பிக்க முயல்கிறீர்கள், ஆனால், அது கடினமாயிருக்கிறது. அச்சத்தினால் கண் விழிக்கிறீர்கள். இப்போது அது ஒரு கனவென்று உங்களுக்குத் தெரிகிறது. ஆனாலும் உங்களுடைய உடம்பு தொடர்ந்து நடுங்கிக் கொண்டிருக்கிறது, வியர்வை வழிந்தோடுகிறது. இது ஒரு கனவென்று தெரியவந்தும் உங்கள் அச்சம் குறைந்தபாடில்லை. மூச்சு விடுவது எளிதாயில்லை. அது இன்னும் இயல்புக்கு வரவில்லை. சிலநிமிடங்களாகும். என்ன நேர்ந்தது? கெட்ட கனவை நிஜம் என்று நீங்கள் எண்ணிவிட்டீர்கள்.

'நீங்கள் உண்மையென்று நம்புகிற போது, அதுவும் உண்மைபோல் உங்களைப் பாதிக்கிறது'

கர்மாக்கள் கனவு போன்றவை. கடந்த காலத்தில் யாரோ ஒருவரை நீங்கள் கொன்று விடுகிறீர்கள், அது ஒரு கனவு. கிழக்கில் ஒட்டுமொத்த வாழ்க்கையும் - நல்லதோ கெட்டதோ எல்லாமும் ஒரு கனவாய்க் கொள்ளப் படுகிறது. ஆனால் நீங்கள் அதை உண்மையென்று நம்பித் துன்புறுகிறீர்கள். நடந்ததெல்லாம் ஒரு கனவென்று உங்களால் இப்போது புரிந்து கொள்ள முடிந்தால், நடப்பதெல்லாம் கனவென்றும், நடக்கப் போவதும் கன வென்றும், உங்கள் பிரக்ஞையே உண்மை, அதைத்தவிர மற்றெல்லாம் கனவென்றும், பார்ப்பது கனவு பார்க்கிறவர் உண்மை என்றும் நீங்கள்

புரிந்து கொள்ள முடிந்தால் உடனே கர்மாக்கள் நீங்கப் பெற்றுவிடும். அதன் பிறகு 'ப்ரதி-ப்ரஸவ்' என்கிற செயல் முறையில் நுழைய வேண்டிய தில்லை, அதை ஆராய்கிற அவசியமும் இருக்காது. அவை அப்படியே கழுவப் பட்டுவிடும். திடீரென்று, நீங்கள் அவற்றில் இருந்து வெளியேறி விடுகிறீர்கள். இது வேதாந்த செயல்முறை, 'வாழ்க்கையே ஒரு கனவு' என்று சங்கராச்சாரியர் வற்புறுத்திக் கூறுவது. அந்த வற்புறுத்தல் அவர் ஒரு தத்துவஞானி என்பதால் அல்ல, அப்படி இல்லாததால் தான்.

அவர் இவ்வுலகத்தை 'மாயை' என்று சொல்கிறபோது அது தத்துவ மாகாது, உண்மை அறிவு இவற்றை ஆராயும் இயற்கை அறிவியலுமாகாது (*metaphysics*). அது ஒரு செயல் முறை, அது ஒரு புரிதல். நீங்கள் எதிலாவது நம்பிக்கை வைத்தால் அது உங்களை உண்மையாகவே போல் பாதிக்கிறது. அது உண்மையல்ல என்று நீங்கள் நினைத்தல் அது உங்களைப் பாதிக்க முடியாது. உங்கள் நம்பிக்கை அதை உண்மையாக்குகிறது. அது உண்மையாகவே இருந்தாலும்கூட உங்களைப் பாதித்துவிட முடியாது.

உதாரணமாய், ஓர் இருட்டறையில் நீங்கள் அமர்ந்திருக்கிறீர்கள், திடீரென்று அந்த அறையில் எதையோ பார்க்கிறீர்கள். அதை ஒரு பாம்பாய் உணர்கிறீர்கள். அச்சம், திகில். நீங்கள் விளக்கைப் பொருத்துகிறீர்கள். ஆனால் அங்கே எதுவும் இல்லை. மென்காற்றில் அசைகிறது கிழிந்துபோன ஒரு செய்தித்தாளின் துண்டு. ஒரு பாம்பு அசைவதைப் போல் நீங்கள் உணர்கிறீர்கள். என்ன ஆயிற்று? அது உண்மையென்று நீங்கள் நம்பினீர்கள், உங்கள் நம்புதல் அதை உண்மையாக்கிற்று. அதனால் பாதிக்கப்பட்டீர்கள். அதற்கு எதிரிடையான ஒரு நிகழ்வை எடுத்துக் கொள்ளுங்கள். அடுத்தநாள் இரவு நீங்கள் இருட்டில் அமர்ந்திருக்கிறீர்கள். ஓர் உண்மையான பாம்பு வந்துவிடுகிறது. எதுவோ அசைவதைப் பார்க்கிறீர்கள். அது காகிதத் துண்டாய் இருக்குமென்று எண்ணிக் கொள்கிறீர்கள். நீங்கள் அச்சப்பட வில்லை, அச்சத்தால் பாதிக்கப்படவில்லை. அங்கே எதுவும் இல்லை என்பதுபோல் அமர்ந்திருக்கிறீர்கள்.

உண்மைநிலை (*reality*) உங்களைப் பாதிக்கவில்லை. உண்மைநிலை பிரச்சினையல்ல. நம்புதல் ஒன்றை உண்மையாக்குகிறது. அந்த நம்புதல் (*belief*) உங்களைப் பாதிக்கிறது. நீங்கள் எத்தனைக்கு அறிநிலை மிக்கவராகிறீர்களோ அத்தனைக்கு வாழ்க்கை ஒரு கனவைப் போலவே காட்சிதரும். பிறகு - உங்களை எதுவும் பாதிக்காது.

அதனால்தான் பகவத் கீதையில் கிருஷ்ணர் அர்ஜீனனை நோக்கிக் கூறுகிறார், 'நீ ஏன் கவலைப்படுவது, கொன்று விடு. இதுவெல்லாம் ஒரு கனவன்றி வேறில்லை' என்று. அர்ஜீனன் அஞ்சி நடுங்குவதற்குக் காரணம் அவனுடைய கண்ணெதிரில் அணிவகுத்துநின்ற பகைவர்கள் அவனுக்கு உண்மையானவர்களாய் தெரிந்ததுதான். 'அவர்களைக் கொல்வது பாவம்,

இலட்சக் கணக்கில் வந்து நிற்கும் அவர்களைக் கொன்றால் தான் எவ்வளவு பாவத்தைச் சுமக்க வேண்டியிருக்கும். அதனை எப்படி நன்மைகளுடன் சமநிலைப்படுத்துவது? அது சாத்தியமில்லை' என்று அவன் எண்ணினான். அவன் கிருஷ்ணரிடம் சொன்னான்; ''நான் காட்டிற்கு தப்பி சென்று விடலாமா என்று பார்க்கிறேன். இந்தப் போர் எனக்கேற்றது அல்ல. இதனால் பெரும்பாவம் சம்பவிக்கும் என்று தெரிகிறது.''

கிருஷ்ணர் தொடர்ந்து வற்புறுத்தலானார்; ''நீ கவலைப்படத் தேவையில்லை. யாரும் மரிப்பதில்லை, ஆன்மா இறவாத்தன்மை உடையது. உடல் மட்டுமே மரிக்கிறது அதுவும் முன்பே மரத்துவிட்டது. எனவே, நீ அமைதி குலைய வேண்டாம். எல்லாம் ஒரு கனவு மாதிரி. நீ அவர்களைக் கொல்லாவிட்டாலும் அவர்கள் இறக்கத்தான் போகிறார்கள். அவர்களுடைய மரணத்தறுவாய் நெருங்கிவிட்டது, நீ உதவப்போகிறாய் அவ்வளவுதான். நீ அவர்களைக் கொல்லவில்லை. பூரணவஸ்துவே அவர்களை உன் மூலம், கொல்லப்போகிறது. நீ அதனைக் கனவாய்க் கொள், உண்மையாய்க் கொள்ள வேண்டியதில்லை.''

இது தான் வேதாந்த மனப்பாங்கு. வாழ்வின் கனவுத் தன்மையை நீங்கள் அறிய உதவும் செயல்முறையே வேதாந்தம். இந்த உணர்வுடன் நீங்கள் பொருந்திவிடுகிற போது எல்லாம் கனவாகும். கர்மாக்கள் முடிந்துவிடும். நீங்கள் கனவில் கொள்ளைக் காரராகவோ கொலைகார ராகவோ இருக்கலாம் அல்லது ஒரு துறவியாய் மகானாய் இருக்கலாம். காலையில் அது எந்த வித்தியாசத்தையும் உண்டுபண்ணிவிடாது. கனவில் கொலைகாரனாய் வருவதால் நீங்கள் பாவச் செயல் புரிபவராகவோ, மகானாய் வந்ததால் புனிதச் செயல் புரிபவராகவோ கருதப்படுவதில்லை. நீங்கள் எதைச் செய்திருந்தாலும் அது பகுத்தறிவிற்கு ஏற்றதாயிருக்காது. கனவுகள் கனவுகள் தாம். பாவியாக வந்தாலும் மகானாக வந்தாலும் இரண்டுமே கனவுகள். காலையில் இரண்டும் கரைந்து காணாமல் போகும். ஒரு நல்ல கனவுக்கும், கெட்ட கனவுக்கும் இடையில் பெரிதாய் என்ன வேறுபாட்டை நீங்கள் ஏற்படுத்திவிடப் போகிறீர்கள். ஒரு பொருள் நல்லதாயிருப்பதற்கும் கெட்டதாயிருப்பதற்கும் முன்னால் அது உண்மையாயிருக்க வேண்டும். காண்பவர் நிஜம், காணப்படுவது கனவு.

'இந்த உலகம் மறைந்துவிடும், நீங்கள் அதை உணர்ந்து கொள்கிறபோது'

இங்குள்ள மரங்கள் மறைந்துவிடுமென்பதில்லை, நீங்களோ நானோ மறைந்து விடுவோமென்பதில்லை ஆனால் நீங்கள் அறிந்து வைத்திருந்த உலகம் மறைந்து போகிறது. முற்றிலும் வேறான ஒரு மெய்ம்மை (reality) வெளிப்படுகிறது. அந்த மெய்ம்மையே - பிரமன்.

O

# 9. காணப்படுவதல்ல காண்பவர்

15

ஒவ்வொன்றும் துன்பத்தை நோக்கியே இட்டுச் செல்லும். அதற்குக் காரணம் மாற்றம், வருத்தம், கடந்த கால அனுபவம் மனதின் மூன்று பண்புகளுக்கும் ஐந்து மாறுதல்களுக்கும் இடையே எழும் மோதல் இவைதாம் என்பதைப் பகுத்தறியக் கூடியவர் தெளிவாய் புரிந்து கொள்வார்.

16

எதிர்காலத் துன்பம் தவிர்க்கப்படக் கூடியது

17

காண்பவருக்கும் காணப்படுவதற்கும் உள்ள இணைப்பே துன்பத்தைத் தருவது. அது தகர்த்தெறியப்பட வேண்டியது.

**வா**ழ்க்கை ஒரு புதிர். வாழ்க்கையைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்ள முடியாத முதல் விஷயம் நீங்கள் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள். ஆனால், வாழ்க்கையைப் பெற்றிருக்க மாட்டீர்கள் என்பதுதான். பிறந்ததால் மட்டும் வாழ்க்கையைப் பெற்றுவிட முடியாது. பிறந்திருப்பது ஒரு வாய்ப்பு. வாழ்க்கையை அடைவதற்கு நீங்கள் அதைப் பயன்படுத்த முடியும், அதை நீங்கள் தவறவிடவும் கூடும். அப்போது அந்த வாழ்க்கை செயலற்ற தாயிருக்கும். அது பார்ப்பதற்கு வேண்டுமானால் வாழ்க்கையைப் போல்தெரியலாம், ஆனால் ஆழ்ந்து நோக்குகிற போது உங்களுக்குள் உயிரோட்டம் இருக்காது.

வாழ்க்கை அடையக்கூடியதே, அதை அடைவதற்கு உழைக்க வேண்டும். அது உங்களுக்குள் ஒரு விதை மாதிரி. மண் - சரியான மண், கவனிப்பு, அன்பு, விழிப்புணர்வு இவற்றுடன் அதிகபட்ச உழைப்பும் தேவைப்படும். அதன் பிறகே அந்த விதை முளைக்கும். அதன் பிறகு தான் என்றோ ஒரு நாள் அந்த மரம் பூக்கும், கனிகொடுக்கும். மலர்ச்சிக் கட்டத்தை (மிகச் சிறந்த பகுதி) நீங்கள் அடையாதவரை பெயரளவில் தான் நீங்கள் வாழ்வது. ஆனால் வாய்ப்பை தவற விட்டிருப்பீர்கள்.

'வாழ்க்கை ஒரு கொண்டாட்டமாகாத வரை அது எவ்வகையிலும் வாழ்க்கையே அல்ல'

பரவசம், நிர்வாணம், அறிவுத்தெளிவு என்று நீங்கள் எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் அதுவே மலர்ச்சியென்பது. நீங்கள் துயருற்றுக் காணப்பட்டால் நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கவில்லை, உங்களுடைய காலடி வைப்பைத் தவறவிட்டீர்கள் என்பதையே அது காட்டும். கூடு கடினமானது, வாழ்க்கை அதிலிருந்து வெளிப்படப் போராடிக் கொண்டிருக் கிறது என்பதையே துன்பம் சுட்டிக்காட்டுகிறது. விதையின் தோல்பகுதி (shell) அது வெளிவர இடமளிப்பதில்லை. அகந்தை மிகவாகிறபோது கதவு மூடிக் கொள்கிறது. துன்பம் என்பது வாழ்வின் போராட்டமன்றி வேறேயென்ன. அது வெடித்துச் சிதறி இலட்சக் கணக்கான வண்ணங் களைக் காட்டவும், எண்ணற்ற வானவிற்களாய் எழிற்கோலமிடவும், கோடிப்பூக்களை கோடானு கோடி பாடல்களை வழங்கிச் செல்லவும் தானே அது போராடுகிறது.

துன்பம் என்பது எதிர்மறை நிலை. உண்மையில் அது பரவச மின்மையைத் தவிர வேறில்லை. இதனை நீங்கள் ஆழமாய் புரிந்து கொள்ள வேண்டும், இல்லையேல் துன்பத்துடன் நீங்கள் போரிடத் துவங்கி விடுவீர்கள். யாரும் இல்லாத ஒன்றுடன் போரிட முடியாது. அது இருட்டு மாதிரி. இருட்டுடன் எப்படிச் சண்டையிடுவீர்கள்? நீங்கள் அதனுடன் சண்டையிட்டால் நீங்கள் முட்டாள்தான். ஒரு மெழுகுவர்த்தியை நீங்கள் ஏற்றிவைத்தால் இருட்டு மறைந்துவிடும். அது ஒன்றும் நீங்கள் தாக்கியழிக்கக் கூடியது அல்ல. இருட்டை நீங்கள் எதுவும் செய்யமுடியாது. ஏதாவது செய்தால் உங்களுடைய ஆற்றல்தான் வீணாகும். அந்த இருட்டு எவ்வித பாதிப்புமின்றி இருந்தபடி இருக்கும். இருட்டின் இடத்துக்கு வெளிச்சத்தைக் கொண்டு வாருங்கள், ஒரு மெழுகு வர்த்தியை ஏற்றுங்கள். திடீரென அங்கு இருட்டு இல்லாமல் போய் விட்டதை காண்பீர்கள். அதுதான் நீங்கள் செய்யக்கூடியது.

துன்பம் இருட்டுமாதிரி, அது உயிருள்ள ஒன்றல்ல. நீங்கள் துன்பத்துடன் போரிடத் தொடங்கினால், தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டேயிருக்க வேண்டியதுதான். ஆனால் துன்பம் இன்னும் அதிக அளவில் தோற்றுவிக்கப்படும். வாழ்க்கை இங்கே பிறந்துவிடத் துடிப்பதையே அது உங்கள் இருப்புணர்வுக்கு (being) சுட்டிக் காட்டும். மெழுகுவர்த்தியை இன்னும் ஏற்றி வைத்த பாடில்லை அதனால் தான் துன்பம். பரவசம் இல்லாத நிலையே துன்பம், ஏதாவது செய்து பரவசத்தைப் பெற வேண்டும். ஆனால், துன்பத்துடன் செய்யக் கூடியது எதுவுமில்லை. நீங்கள் துன்புற்றுக் காணப்படுகிறீர்கள், அதைத் தோற்கடிக்க முயல்கிறீர்கள்.

இங்கே தான், மதநம்பிக்கையுள்ளவனின் பாதையும், மதநம்பிக்கை யற்ற மனிதனின் பாதையும் தனித்தனியே விலகிச் செல்லும். மதநம்பிக்கை யற்ற மனிதன் தான் துன்பமில்லாமல் இருக்கக்கூடிய சூழ்நிலைகளை உருவாக்க முயல்கிறான், தன்னுடைய பார்வையிலிருந்து வெகு தூரத்துக்கப் பால் துன்பத்தைத் துரத்தியடிக்க முயற்சி செய்கிறான். மதநம்பிக்கை யுள்ளவனோ பரவசத்தை நாடிச் செல்கிறான். பரமசுகத்தைக் கண்டு பிடிக்கத் தொடங்குகிறான், சச்சிதானந்தத்தை - நீங்கள் கடவுள் என்பது, எவ்வாறேனும் அடைய முயல்கிறான்.

மதநம்பிக்கையற்றவன் இருட்டுடன் போரிடுகிறான்.

மதநம்பிக்கையுள்ளவனோ வெளிச்சத்தை (மெய்யறிவு)க் கொண்டு வர முயல்கிறான்.

இந்தப் பாதைகள் முழுக்கவும் எதிரிடையானவை, எவ்விடத்திலும் அவை சந்திப்பதில்லை. அவை பல காதங்களுக்கு இணையாகவே ஓடிக்

கொண்டிருக்கும் ஆனால் ஓரிடத்திலும் பொருந்துவதில்லை. மத நம்பிக்கையற்றவன் இரண்டு பாதைகளும் பிரிந்து தனித்தனியே விலகிச் செல்லும் முனைப்பகுதிக்குத் திரும்பவருகிறான். இருட்டுடனும் துன்பத்துடனும் போரிடுவது எத்தனை அபத்தம் என்பதைப் புரிந்து கொள்கிறான்.

'இருட்டுடன் போராடுவதை விட்டு ஒளியைப் பெற முயற்சி செய்யலாம்'

ஒளி வந்துவிட்டால் நீங்கள் எதுவும் செய்யத் தேவையில்லை, துன்பம் மறைந்துவிடும்.

வாழ்க்கை ஒரு சாத்தியமாய் (நிகழுந்தன்மை) மட்டுமே இருக்கிறது. நீங்கள்தான் அதைச் செயல்படுத்த வேண்டும். நீங்கள் தான் அதைச் செயல்பூர்வமான வாழ் நிலைக்குக் கொண்டுவர வேண்டும். யாரும் வாழ்வுடன் பிறந்துவிடவில்லை, வாழ்வதற்கான சாத்தியத்துடன் மட்டுமே பிறக்கிறார்கள். யாரும் கண்களுடன் பிறந்துவிடவில்லை. பார்ப்பதற்கான சாத்தியத்துடன் மட்டுமே பிறக்கிறார்கள்.

இயேசு தமது சீடர்களிடம் கூறுவார்: 'உங்களுக்குக் காதுகள் இருந்தால் கேளுங்கள், உங்களுக்குக் கண்கள் இருந்தால் பாருங்கள்' என்று. உங்களைப் போலவேதான் அந்தச் சீடர்களும் இருந்தனர். அவர்கள் கண்களையும், காதுகளையும் பெற்றிருந்தனர். அவர்கள் குருடர்களாகவோ, செவிடர்களாகவோ இருக்கவில்லை. இயேசு எதற்காக கண்களுள்ளவர்கள் பார்க்கட்டும், காதுள்ளவர்கள் கேட்கட்டும் என்றது? கிறிஸ்துவைப் பார்க்கும் திறன் பற்றியே அவர் சொன்னது. கிறிஸ்துவின் வார்த்தைகளைக் கேட்கும் திறன் பற்றியே அவர் கூறியது.

உங்களுக்குள் இருந்து ஒலிக்கும் குரலை நீங்கள் கேட்க முடியவில்லை என்றால் இயேசுவின் வார்த்தையை எப்படிக் கேட்பீர்கள்? உங்களையே நீங்கள் பார்க்க முடியவில்லை என்றால் நீங்கள் இயேசுவை எப்படிப் பார்ப்பீர்கள்? கிறிஸ்து என்பது உங்களுடைய உன்னதம் பெற்ற, முழுமையான மலர்ச்சியுற்ற சுயமன்றி வேறேயென்ன?

நீங்கள். ஒரு விதையைப்போல் வாழ்கிறீர்கள். ஒருவர் ஏன் விதையைப்போல் வாழ்கிறார், தொண்ணூற்று ஒன்பது, சதவிகிதத்தினர் ஏன் விதைகளைப் போல் வாழ்கிறார்கள் என்பதற்குச் சில காரணங்கள் உள்ளன. அதில் ஏதோ இருக்கவேண்டும். ஒரு விதையைப் போல் வாழ்வது சுகமளிக்க கூடியது. அபாயகரமாய் தெரியும் வாழ்க்கையில் விதையைப் போன்றிருப்பது பாதுகாப்பாய் உணரச் செய்யும். தன்னைச் சுற்றிலும் ஒரு

பாதுகாப்பை அது பெற்றிருக்கிறது. விதை எளிதில் ஊறுபடத் தக்கதல்ல. முளைத்த பின்போ அது ஊறுபாடுகளுக்குள்ளாகிறது, அது தாக்கப்படும், தாக்கி அழிக்கப்படும். விலங்குக் இருக்கின்றன, குழந்தைகள் இருக்கின்றன, மனிதர்கள் இருக்கிறார்கள். செடியாய் முளைத்ததும் ஊறுபடத்தக்கதாகிறது. பத்திரத்தன்மை இல்லாது போகிறது, ஆபத்துகள் தொடங்கிவிடுகின்றன.

வாழ்க்கை மிகப்பெரிய சாகசம். விதையில்,, விதையினுள் ம்றைந்து கொண்டிருக்கும்போது நீங்கள் பத்திரமாய், பாதுகாக்கப் பட்டவரா யிருக்கிறீர்கள். உங்களை யாரும் அழிப்பதில்லை. உயிரோடில்லை என்கிறபோது எப்படி அழிக்கப்படுவது? நீங்கள் உயிர் வாழ்கிற போதுதான் ஊறுபாட்டுக்குள்ளாவது.

'எத்தனைக்கு இயக்க முள்ளவராயிருக்கிறீர்களோ அத்தனைக்கு ஆபத்தும் உங்களைச் சுற்றியிருக்கும்'

எனவேதான் மக்கள் பாதுகாக்கப்பட்ட, பத்திரத் தன்மையுள்ள விதைகளைப் போல் வாழ்கிறார்கள்.

வாழ்க்கை இயல்பில் பாதுகாப்பற்றிருப்பதை நினைவில் கொள்ளுங்கள். இங்கே பாதுகாப்பான வாழ்க்கை கிடைக்காது, பாது காப்பான மரணம் கிடைக்கும். எல்லா காப்பீடுகளும் (inburances) மரணத்துக்குத்தான். எதுவும் வாழ்வதற்கான காப்பீடு அல்ல. வாழ்க்கை அபாயகரமானது, இலட்சோபலட்சம் ஆபத்துகள் அதைச் சுற்றிச் சூழ்ந்திருக்கின்றன. அதனால்தான் தொண்ணூற்று ஒன்பது சதவிகித மக்கள் விதையாய் இருப்பதே அனுகூலமென்று தீர்மானிக்கிறார்கள். ஆனால் நீங்கள் எதைப் பாதுகாக்கிறீர்கள்? பாதுகாப்பதற்கு எதுவுமில்லை. பாதையில் கிடக்கும் கூழாங்கல் மாதிரி விதை செயலற்றுக் கிடக்கிறது. அது விதையாகவே இருந்துவிட்டால் துன்பந்தான். காரணம் அது அப்படி இருந்துவிட வேண்டுமென்பது இயற்கையின் நோக்கமல்ல. அதன் விதி விதையாகவே இருக்க வேண்டும் என்பதல்ல. ஆனால் அதிலிருந்து வெளிவந்தாக வேண்டும்.

'அபாய மேகங்கள் சூழ்ந்த ஆகாயம், அங்கே எதுவும் சாத்தியமாகும் ஆனால் தனது முட்டை ஓட்டைத் தகர்த்துக் கொண்டு பறவை வெளியே வந்தாக வேண்டும்'

எல்லா சாத்தியங்களுடன் மரணமும் இருக்கிறது. வாழ்க்கை மரணமென்கிற ஆபத்தை எதிர் கொள்ளும். மரணம் வாழ்க்கைக்கு எதிரிடையானது அல்ல. மரணம் என்கிற பின்னணியோடு வாழ்க்கை

மலர்கிறது. மரணம் வாழ்விலிருந்து வேறுபட்டதல்ல. நீங்கள் வெள்ளை சாக்பீஸ் கொண்டு கரும்பலகையில் எழுதுகிற மாதிரிதான் அதுவும், வெண்ணிறச் சுவரில் எழுத முடிந்தாலும் வார்த்தைகள் வெளிப்பாடாய் தெரியாது. கரும்பலகையில் சாக்பீஸ் கொண்டு நீங்கள் எழுதுகிற எதுவும் பளிச்சென்று தெரியும். மரணம் கரும்பலகை மாதிரி, வாழ்வென்னும் வெண்ணிறக் கோடுகள் அதில் தோற்றம் பெறும். அது எதிரிடையானதல்ல, அதுவே பின்புலமாயிருக்கிறது.

வாழ விரும்புகிறவர்கள் ஒன்றைத் தீர்மானித்துக் கொள்ள வேண்டும், அது மரணத்தை ஏற்றுக் கொள்கிற தீர்மானம். மரணத்தை ஏற்றாக வேண்டும் என்பது மட்டுமல்ல, அவர்கள் அதை வரவேற்கவும் வேண்டும். ஒவ்வொரு கணத்திலும் அதற்குத் தயாராயிருக்க வேண்டும். நீங்கள் மரணத்தை ஏற்காவிடில் தொடக்கத்திலிருந்தே மரித்துப் போனவர்தாம். பாதுகாப்பான ஒரேவழி விதையாய் இருந்து விடுவது. முட்டையில் பறவை மரித்து விடுகிறது. பல பறவைகள் முட்டையினுள்ளேயே மரித்து விடுகின்றன.

நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள். என்னுடைய உதவி உங்களுக்குத் தேவைப்பட்டால், நான் உங்கள் முட்டையை உடைக்க விடுங்கள்: உங்களுடைய பாதுகாப்புகள், வங்கி இருப்புகள், ஆயுள் காப்பீட்டுத் தொகைகள் என்று சகலத்தையும், சேர்த்து உடைத்து உங்களை வெளிக் கொணருவேன். ஊறுவிளைவிக்கப்படாதிருக்க வேண்டுமென்றால் நீங்கள் முட்டைக் குள்ளாகவே இருந்து, அழுகிப்போகலாம். தொடக்கத்தில் அது பாதுகாப்பாய் தெரியும். வெளியே வரமுடியாத அளவுக்கு மென்மையாய் இருக்கும்போதுதான் அப்படி. ஆனால், நீங்கள் ஆயத்த நிலையை அடைந்துவிட்டால் முட்டை உடைய வேண்டியதுதான். முட்டையிலிருந்து வெளிப்பட ஒரு நிமிடம் தாமதமானாலும் நீங்கள் வாழ்வதற்கான சாத்தியத்தை இழந்து விடுவீர்கள். நீங்கள் உயிரோடு வாழ்கிற, வானத்தில் பறந்து செல்கிற வாய்ப்பை இழக்க நேரிடும்.

'ஆபத்துகள் இருப்பது உண்மை, ஆனால் அழகானவை ஆபத்துகள்'

ஆபத்துகளில்லாத வாழ்க்கை அருவருப்பானது, அது தீய தன்மை உடையதாகி தொந்தரவைத்தரும். ஆபத்துகளில்லாத வாழ்க்கை உயிரோட்ட முடையதாயிருக்க முடியாது.

ஆணோ பெண்ணோ ஒவ்வொருவரின் அடியாழத்திலும் ஆபத்தான வாழ்க்கையை வாழும் உள்ளக் கிளர்ச்சி இருக்கிறது. அதுதான் வாழ்வுக் கான உந்துதல். அதனால்தான் நீங்கள் மலைகளை நோக்கிச் செல்கிறீர்கள், முன்பு எப்போதுமே அறிந்திராத இடங்களுக்குப் பயணம் மேற்

கொள்கிறீர்கள். மனிதன் நிலவுக்குச் செல்ல முயல்வதும், சிலர் எவரஸ்ட் சிகரத்தில் காலடி பதிக்க முயல்வதும், சிறிய நாட்டுப்படகில் தொலைதூரக் கடற்பயணம் செய்வதும் அதனால்தான். ஆபத்தை எதிர் கொள்ளும் உள்ளக் கிளர்ச்சியில் வாழ்வதற்கான உந்துதல் இருக்கிறது. அதைக் கொன்று விடாதீர்கள், பிறகு நீங்கள் இருப்பீர்கள் ஆனால் வாழ்க்கை இருக்காது.

நீங்கள் என்னை நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள் நான் உங்களை ஒரு சந்நியாசியாக்குகிற போது, உங்களுக்கு சந்நியாச தீட்சை அளிக்கிறபோது பாதுகாப்பற்ற ஊறுபடத்தக்க வாழ்விற்கு உங்களை அறிமுகம் செய்து வைக்கிறேன். சந்நியாசம் என்பது அகந்தை என்கிற முட்டையில் இருந்து வெளியே தாவிக்குதிப்பது. முட்டை ஒரு பாதுகாப்பு. அகந்தை உங்களைச் சுற்றியிருக்கும் நுட்பமான சுவர். அதனால்தான் அகந்தை எளிதில் சினம் கொள்வதாயிருக்கிறது. யாராவது ஒருவர் உங்களைப் பார்த்து எதையேனும் சொன்னாலும், யாராவது ஒருவர் உங்களைப் பார்த்துச் சிரித்தாலும் அது உங்களைப் புண்படுத்துகிறது. நீங்கள் உங்களைப் பாதுகாத்துக் கொள்ள முனைகிறீர்கள், சண்டையிடவும் தயாராகிறீர்கள். ஆபத்தாய் தெரிகிற எதனுடனும் சண்டையிட அகந்தை தயாராகிறது. வாழ்க்கையில் ஆபத்துகள் நிறைந்திருப்பதால் அகந்தை மாறாத போரில் ஈடுபட்டுவிடுகிறது. வாழ்க்கை எங்கிருந்து உங்களை அடைய முயன்றாலும் அகந்தை அங்கே பாறையாகி உங்களைப் பாதுகாக்கிறது. அந்தப் பாறையின் மீது ஏறுங்கள். அகந்தை என்கிற முட்டையை உடைத்துக் கொண்டு வெளியே வாருங்கள்.

ஆபத்துகள் நிறைந்தது ஆகாயம். அது ஆபத்தற்றது என்று நான் எப்படிச் சொல்வேன். அங்கே அடுக்கடுக்காய் ஆபத்துகள் உள்ளன. ஆனால் ஆபத்தை உணவாய்க் கொண்டுதான் வாழ்க்கை வளப்படுகிறது. வாழ்க்கைக்கு மிகப் பொருத்தமான உணவு, பொருத்தமான இரத்தம், பொருத்தமான உயிர்க்காற்று (oxygen) என்றே ஆபத்தைச் சொல்ல வேண்டும். ஆபத்து வாழ்க்கைக்கு எதிரானதல்ல, வாழ்வதற்கு அவசியப் படுவது.

ஆபத்தில் வாழுங்கள் அதுதான் சந்நியாசத்தின் பொருள். உங்களுக்கு நன்கு தெரிந்த, பரிச்சயமான கடந்த காலம் உங்களைப் பாதுகாக்கிறது. எதிர்காலமோ நீங்கள் அறிந்திராததாய், பரிச்சயமற்றதாய் இருக்கிறது. அது முன் பின் தெரிந்திராத மனிதரைப்போல் கதவைத் தட்டும்.

'எதிர்காலத்துக்கான வாசலை எப்போதும் திறந்து வைத்திருங்கள்'

உண்மையில் கடந்த காலத்தைப் போலவே எதிர்காலமும் இருக்க வேண்டும் என்று தான் நீங்கள் விரும்புவீர்கள். இதில் அச்சம் இருக்கிறது. நீங்கள் மரணத்தைப் பற்றிய பயத்தில் இருப்பதாய் எப்போதும் எண்ணிக்

கொள்கிறீர்கள். ஆனால், அது மரணம் பற்றிய பயம் அல்ல, வாழ்க்கை பற்றிய அச்சமாகும்.

அடிப்படையில் மரணபயமே வாழ்வின் பயமாகவும் இருக்கிறது. உங்களிடம் மரணத்தைப் பற்றிய அச்சம் இருந்தால் வாழ்வைப் பற்றிய அச்சமும் இருக்கும்.

'உங்களுக்கு விழுவதில் அச்சம் இருந்தால் எழுவதிலும் அச்சம் இருக்கும்'

காரணம் எழுகிற அலைதான் விழுகிறது. நாம் புறக்கணிக்கப் படுவோம் என்று நீங்கள் அஞ்சினால் யாரையும் அணுகவே அச்சப் படுவீர்கள். புறக்கணிக்கப்படுவோம் என்கிற அச்சம் உங்களை அன்பு செய்யத் திறனற்றவராக்கி விடுகிறது. மரணத்தைப் பற்றிய அச்சம் உங்களுடைய வாழும் திறனைப் பறித்துக் கொண்டு விடுகிறது. பிறகு - துன்பமும், கவலையும், இருளும் உங்களைச் சுற்றி வளைத்துக் கொண்டுவிட நீங்கள் வாழ்கிறீர்கள் பெயரளவில்.

பிறந்திருப்பது அவசியம், ஆனால் அதுவே போதுமானதல்ல. நீங்கள் இருமுறை பிறக்கிறீர்கள். இந்துக்கள் இதனை 'த்விஜ்' என்கிறார்கள். ஒரு பிறப்பு - உங்கள் பெற்றோர்களிடத்திலிருந்து நீங்கள் பிறப்பது சாத்திய முள்ள நடப்பு, புலன்களால் அறியக்கூடிய எனினும் காரணகாரியத் தொடர்புக் கடங்காத நடப்பு. இன்னொரு பிறப்பும் அவசியப்படுகிறது. இயேசு அதனை மீட்டெழுதல் (resurrection) என்கிறார். அதனைப் புத்துயிர் பெறுதல், புதிய வாழ்க்கை, மறுமலர்ச்சி எனலாம். மீட்டெழு கிறபோது நீங்கள் முட்டைகளை ஓடுகளை உடைத்தெறிகிறீர்கள், அத்தனை அகந்தைகளையும், நீங்கள் அறிந்த உங்களுக்குப் பரிச்சயமான கடந்த காலங்களையும் தான். முன்பு அறிந்திராத, முற்றிலும் புதுமையான ஆபத்துகள் நிறைந்த பிரபஞ்ச இருப்பினுள் அடியெடுத்து வைக்கிறீர்கள்.

ஒவ்வொரு கணத்திலும் மரண சாத்தியம் இருக்கிறது. அந்த மரணத்துக்கான சாத்தியத்தோடுதான் ஒவ்வொரு கணத்திலும் அதிக சுறுசுறுப்புடன் இயங்குகிறீர்கள்.

வாழ்க்கை ஒருபோதும் செயல்படாமல் நின்றுவிடுகிறதில்லை. ஆனால், வாழ்க்கை இன்னதென்று அறிந்தவர்க்கு அது ஓர் அனுபவம். முட்டை ஓட்டை உடைத்துக் கொண்டு வெளியே வருவதற்கான துணிச்சலை நீங்கள் ஒருபோதும் சேகரித்திருக்கவில்லை. வாழ்க்கை

இன்னதென்றும், அது மரணமற்றதென்றும் நீங்கள் எப்படி அறிவீர்கள். நீங்கள் இறப்பீர்கள், ஆனால், வாழ்க்கை இறப்பதில்லை. நீங்கள் துன்பத்தில் வாழக்காரணம் வாழ்க்கையில் நீங்கள் செல்லுபடியாகவில்லை என்பதால் தான். அதன் பின்னணியில் அகந்தையிருக்கிறது.

*'அகந்தையை மறுத்துவிடுங்கள் வாழ்க்கை வந்துவிடும்'*

இயேசு, புத்தர், முகமது, மகாவீரர், ஜராதுஷ்ட்ரர், லாவோட்சு இவர்கள் ஒரு விஷயத்தை அழுத்தமாய் கூறுகிறார்கள். அது - 'அகந்தையை விடுங்கள், வாழ்க்கை வளம் பெறும்' என்பதாகும். ஆனால், நீங்கள் அகந்தையை இறுகப்பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். அகந்தையைப் பற்றிக் கொண்டிருப்பது துன்பத்தை, அறியாமையைப் பற்றிக் கொண்டிருப்ப தாகும். இந்தச் சூத்திரங்கள் மிகவும் அருமையானவை, இவற்றை அறிந்து கொள்ளப்பாருங்கள்.

**'ஒவ்வொன்றும் துன்பத்தை நோக்கி இட்டுச் செல்வதற்குக் காரணம் வருத்தம். மாற்றம், கடந்தகால அனுபவம், மனதின் மூன்று பண்புகளுக்கும் ஐந்து மாறுதல்களுக்கும் இடையிலான மோதல் என்று பகுத்தறியக் கூடியவன் தெளிவாய் புரிந்து கொள்கிறான்'**

'நீங்கள் அறிந்த வரைக்கும் வாழ்க்கை துன்பகரமானது, நான் அறிந்தவரையில் அதுவே பரம சுகம். வாழ்க்கை எப்படி உங்களுக்குத் துன்பமாயும் எனக்குச் சுகமாயும் தெரிகிறது? நாம் வெவ்வேறான பல விஷயங்கள் பற்றி விவாதிக்க வேண்டியிருக்கிறது. நாம் ஒரே விஷயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கவில்லை. வாழ்க்கையைப் பற்றிப் பேசும் போது விதையினுள் இருக்கும் வாழ்க்கையை, நம்பிக்கையில் இருக்கும் வாழ்க்கையை, கனவுகள் கற்பனைகள் இவற்றின் வாழ்க்கையைப் பற்றிப் பேசுகிறோம். ஆனால் உண்மையில் அது உண்மையில் நம்பக் கூடியதாய் இருப்பதில்லை. விருப்பமுள்ள, அதே சமயம் அறிதலற்ற வாழ்க்கையைப் பற்றிப் பேசுகிறீர்கள், ஆசைப்படுகிற, ஒரு போதும் அடையப்படாத வாழ்க்கையைப் பற்றியே பேசுகிறீர்கள். மூச்சுத் திணறுவதுபோல் உணர்கிற வாழ்க்கை அந்த மூச்சுத்திணறலையே சுகமாய் எண்ணிக் கொள்கிறது.

'இந்த நரகம் சொர்க்கமாகிவிடும் என்று நம்புகிறோம் நரகத்தில் இருந்துகொண்டு'

நரகத்தில் இருந்து சொர்க்கம் எப்படித் தோன்ற முடியும்? மகிழ்ச்சியற்ற நிலையில் இருந்து பரவசம் எப்படித் தோன்றும்? இல்லை, துன்பகரமான வாழ்க்கையில் இருந்து மேலும் மேலும் துன்பங்களே தோன்றும். ஒரு கிழவனைப் போல் குழந்தை மகிழ்ச்சியற்றுக் காணப்படுவ தில்லை. அது அவனுக்கு நேர் எதிரிடையாகவே இருக்க வேண்டும். காரணம் முதியவன் வாழ்க்கையை அதிகபட்ச அளவில் வாழ்ந்து கழித்தவன். அனுபவங்களின் உச்சம் அவனுக்குக் கைக்கெட்டும் தொலைவில், ஆனால், அவன் எட்டிப்பிடிக்கவில்லை. சொர்க்கத்தை அடைவதற்குப் பதிலாய் ஆழப்படுகுழியான நரகத்திலன்றோ அவன் சரிந்து விழுகிறான்.

குழந்தை முதியவனைவிட மிகுந்த இறைத்தன்மை (heavenly) உடையதாய் தெரிகிறது. அது சுத்த அபத்தம், அறிவுக்கு ஏற்புடைமை அற்றது. இயல்புக்கு மாறானது. குழந்தை ஒரு விதை மாதிரி. வயதில் முதிர்ந்தவன் வலுவான கருவாலி (oak) மரம் போல் இருக்க வேண்டும், ஆனால், அவன் அப்படியில்லை. அவன் நரகத்தின் இருண்ட பகுதி களிலன்றோ அலைந்து கொண்டிருக்கின்றான். நாம் மேலும் மேலும் இருட்டில் வீழ்கிறோமேயன்றி சூரியத்திசையில் எழுவதில்லை.

ஒரு முதியவனுக்கு என்ன நேரிடுகிறது? குழந்தை மகிழ்ச்சியற் றிருக்கிறது, முதியவனும் மகிழ்ச்சியற்றிருக்கிறான். இருவரும் செல்வது ஒரே பாதையில்தான். குழந்தை இப்போதுதான் பயணத்தைத் தொடங்கு கிறது. முதியவனோ பயணத்தின் ஒட்டுமொத்த துன்பங்களையும் ஒரு சேரத்திரட்டிக் கொண்டவன்.

'நரகத்திலிருந்து ஒருபோதும் சொர்க்கம் பிறப்பதில்லை'

இன்று நீங்கள் துன்பத்தில் இருப்பீர்களானால் நாளை மகிழ்ச்சியாய் சுகப்பட் முடியுமென்று எப்படி எண்ணிக் கொள்வது? நாளை என்பது உங்களிலிருந்து வந்தாக வேண்டும்? பிறகு வேறு எங்கிருந்து அது வரமுடியும். நாளை என்பது நாட்காட்டியிலிருந்து வருவதில்லை, நம்மில் இருந்தே வருகிறது.

உங்களுடைய அத்தனை நேற்றைய பொழுதுகளும், இன்றைய பொழுதும் சேர்ந்துதான் நாளைய பொழுதாகப் போகிறது. அது எளிதான கணக்கு: இன்று நீங்கள் மகிழ்ச்சியற்றவராய், துன்பமுடன் இருக்கிறீர்கள். பிறகெப்படி நாளை மட்டும் மகிழ்ச்சியானதாய், சுகமளிப்பதாய் இருக்கப் போகிறது? இருக்க முடியாது. நீங்கள் மரணிக்கிறவரை அது சாத்தியமற்றது தான். காரணம், உங்கள் மரணத்துடன் அத்தனை நேற்றைய பொழுதுகளும் மடிந்து விடுகின்றன. பிறகு, அது உங்களுடைய துன்பத்திலிருந்து

வருவதில்லை. அது ஒரு புதிய நிகழ்வாய், முதல் தடவை நடப்பதாய் இருக்கும். அப்போது அது உங்கள் மனதில் இருந்து வெளிவருவதில்லை, உங்களுடைய் இருப்புணர்வில் இருந்தே வரும். நீங்கள் இருமுறை பிறந்தவராகிறீர்கள் (த்வஜ்).

துன்பத்தின் நடப்பைப் புரிந்து கொள்ளுங்கள். ஏன் நீங்கள் மகிழ்ச்சி யற்றவராயிருக்கிறீர்கள்? இத்தகைய மகிழ்ச்சியின்மையைத் தோற்று வித்தது எது? நான் உங்களைக் கவனிக்கிறேன், துன்பத்துக்குமேல் துன்பம், அடுக்கடுக்காய் துன்பங்கள், உங்களுக்குள் நான் காண்கிறேன். நீங்கள் எப்படித்தான் தொடர்ந்து வாழ முடிகிறது! அது உண்மையிலேயே ஒரு அற்புதம்.

'அனுபவத்திலும் வலியது நம்பிக்கை, நடைமுறையைக் காட்டிலும் வலுப்பெற்றது கனவு'

இல்லையேல், நீங்கள் எப்படி வாழ்க்கையைத் தொடர முடிகிறது? நாளை ஏதேனும் ஒன்று நடந்து எல்லாவற்றையும் மாற்றிவிடாதா என்ற நம்பிக்கையன்றி வாழ்வதற்கு வேறெதுவும் இல்லை உங்களிடம்.

'நாளை ஓர் அற்புதம், குறிப்பிடத்தக்கதாயிருக்கும்' என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். எண்ணற்ற பிறவிகளாய்.

இலட்சக்கணக்கான 'நாளை'கள் வந்தன. 'இன்று'களாயின. ஆனால், நம்பிக்கை மட்டுமே எஞ்சி நிற்கிறது. நம்பிக்கை தொடர்கிறது.

நீங்கள் வாழ்வது வாழ்க்கையைப் பெற்றிருப்பதால் அல்ல, நம்பிக்கையைப் பெற்றிருப்பதால். உமர்கயாம் தம்முடைய நூலில் எங்கோ ஓரிடத்தில் மனிதன் வாழ்ந்து கொண்டேயிருப்பது எதற்காக என்று பெரிய மருத்துவர்களிடமும், இறைமையியல் வல்லுனர்களிடமும் சமய குருமார்களிடமும், தத்துவமேதைகளிடமும் தாம் கேட்டதாய் சொல்கிறார். ஒருவராலும் பதிலளிக்க முடியவில்லை. அவர்கள் ஐயத்துடன் தங்கள் தோள்களை அசைத்துக் கொண்டனர். உமர்காயம் சொல்கிறார், 'தங்கள் புலமையாய் புகழ்பெற்ற பலரையும் நான் சென்றயடைந்தேன். ஆனால், எந்த வழியாய் சென்றேனோ அதே வழியில் தான் திரும்பி வந்தேன். பிறகு, யாரைக் கேட்பதென்று தெரியாமல் நம்பிக்கையிழந்தேன். ஒருநாள் இரவு வானத்தை நோக்கிக் குரலெடுத்துக் கதறினேன். 'நீ இங்கேதான் இருக்கிறாய். கடந்த காலத்தில் நேர்ந்த அத்தனை துன்பங்களையும் அறிவாய். இலட்சசோபலட்சம் துன்பங்கள். மக்கள் ஏன் தொடர்ந்து வாழ்கிறார்கள் என்பதைக் கட்டாயம் நீ அறிந்திருக்க வேண்டும்' என்று. வானத்திலிருந்து குரல் வந்தது 'அதற்கு நம்பிக்கையே காரணம்.'

நம்பிக்கை மட்டுமே உங்களுடைய வாழ்க்கையாயிருக்கிறது. நம்பிக்கை என்கிற நூலிழையில் அத்தனை துன்பங்களையும் நீங்கள் தாங்கிக் கொண்டு விடுகிறீர்கள்.

'சொர்க்கத்தைப் பற்றிய ஒரு கனவில், உங்களைச் சுற்றியிருக்கும் நரகத்தை மறந்து விடுகிறீர்கள்'

நீங்கள் கனவில் வாழ்கிறீர்கள். கனவுகள் உங்களை விழுந்து விடாமல் தாங்கில் பிடிக்கின்றன. நடைமுறையோ தீய தன்மை கொண்டதாயிருக்கிறது. இத்தனை துன்பங்கள் எதனால் நேர்கிறது, அது நேரிடுவது ஏன் என்று நீங்கள் அறியவில்லையே.

துன்பத்தின் காரணத்தை அறிய அதிலிருந்து தப்பி போவதை நிறுத்த வேண்டும். நீங்கள் ஒன்றைத் தவிர்த்துவிட்டால் பிறகு அதைப்பற்றி எப்படி அறியமுடியும்? நீங்கள் ஏதாவதொன்றை அறிந்து கொள்ள விரும்பினால் அதை நேருக்கு நேர் எதிர்கொள்ள வேண்டும். நீங்கள் துன்புற்ற வேளையிலெல்லாம் நம்பிக்கையூட்டிக் கொள்ளத் தொடங்குகிறீர்கள். அப்போது, இன்றையபொழுதைக் காட்டிலும் 'நாளை' முக்கியத்துவம் பெற்றுவிடுகிறது. இது தட்டிக்கழித்தல். நீங்கள் தப்பித்துக் கொண்ட நிலையில் நம்பிக்கை ஒரு போதைப் பொருளாய் செயல்படுகிறது. நீங்க துன்பப்படுகிறீர்கள், அதை மறப்பதற்குப் போதைப் பொருளைப் பயன்படுத்துகிறீர்கள். தற்போது நீங்கள் குடியில் மூழ்கியிருக்கிறீர்கள், நம்பிக்கை என்கிற குடியில். நம்பிக்கையைப் போல் போதை அளிக்கக்கூடியவஸ்து வேறெதுவும் இல்லை. மரியுவானா, எல்.எஸ்.டி என்று எதுவுமே ஒப்பிடக் கூடியதல்ல. நம்பிக்கையே இறுதியான எல்.எஸ்.டி. நம்பிக்கை காரணமாய் எல்லாவற்றையும் நீங்கள் சகித்துக் கொண்டு விடுவீர்கள். ஆயிரம் நரகங்களும் தூசி.

நம்பிக்கையின் இந்தச் செய்நுட்பம் எப்படி இயங்குகிறது? நீங்கள் துன்பத்தில், துயரத்தில், சோர்வில் இருக்கும்போதெல்லாம் உடனே அதிலிருந்து தப்பிவிடப் பார்க்கிறீர்கள், அதை மறக்க முயல்கிறீர்கள். அது அவ்விதமாய் தொடர்கிறது. அடுத்த முறை துன்புறும்போது - தப்பியோடு வதற்கு முயலவேண்டாம். என்னுடைய பேச்சிலும் ஒருவகை தப்பித்தல் இருக்கும். என் வார்த்தைகளைக் கவனித்துக் கேட்டால் உங்களையே நீங்கள் மறந்துவிடுவீர்கள். நான் சொல்வதைக் கருத்தோடு கேட்கிற நீங்கள், உங்களை நோக்கிப் பார்வையைத் திருப்பாமல் முதுகு காட்டி விடுகிறீர்கள். உங்களுடைய உண்மையான சூழ்நிலை என்ன வென்பதை நீங்கள் மறந்துவிடுகிறீர்கள். நான் பரமசுகத்தைப் பற்றிப் பேசினேன், பரவசத்தைப் பற்றிப் பேசினேன். எனக்கு உண்மையாய் தெரிகிற ஒன்று உங்களுக்கு

மட்டும் கனவாய் தெரிகிறது. நீங்கள் தியானித்தால் அது நம்பிக்கையாய் உருவெடுக்கும், நீங்கள் அதற்காக உழைத்தால் பிறகு அது உங்களுக்கும் நிகழக்கூடும். அதை ஒரு போதைப் பொருளாய்ப் பயன்படுத்தாதீர்கள். ஒரு குருவை நீங்கள் அப்படிப் பயன்படுத்தலாம், மயக்கம் கொள்ளலாம்.

என்னுடைய முழு முயற்சியும் உங்களை மேலும் உணர்வுடையவராகச் செய்வதுதான், எனவே, நீங்கள் துன்புறும் போதெல்லாம் தப்பியோட முயற்சிக்காதீர்கள். நம்பிக்கையே பகையாகும். நடை முறைக்கு மாறாய் நம்பிக்கை கொள்வதோ கனவு காண்பதோ வேண்டாம். நீங்கள் வருத்தத்தில் இருந்தால் அவ்வேளையில் வருத்தம் நிஜம். அதனுடன் இருங்கள், அதைவிட்டு நகராதீர்கள், அதில் கவனத்தை ஒருமுனைப்படுத்துங்கள். எதிர்கொள்ளுங்கள். நடக்கிறபடி நடக்கட்டும்.

அதன் எதிரினை (opposite) க்குப் போகாதீர்கள். தொடக்கத்தில் அது கசப்பான அனுபவமாய் இருக்கும், காரணம், துன்பத்தை நீங்கள் எதிர் கொள்ளும்போது அது எல்லா இடத்திலிருந்தும் உங்களைச் சூழ்ந்து கொண்டுவிடும். வருத்தமென்னும கடல்நடுவே நீங்கள் சிறியதொரு தீவாகி விடுவீர்கள். வருத்தத்தின் பேரலைகள் சீற்றத்துடன் மேலெழும். ஒருவர் அச்சத்தில் உறைந்துபோவார், ஒருவருக்கு உயிரே நடுங்கத் தொடங்கிவிடும். அஞ்சட்டும், நடுங்கட்டும். ஆனால் ஒன்றைமட்டும் செய்யக் கூடாது - தப்பி ஓடுவது. அதை இருக்க விடுங்கள், அதனுள் ஊடுருவுங்கள், அதன் அடியாழம் வரைக்கும். வெறுமனே கவனித்திருங்கள், சீர்தூக்கிப் பார்க்க வேண்டாம். கருத்துருவாக்கிக் கொள்கிற வேலையை எண்ணற்ற பிறவி களில் செய்துவிட்டீர்கள். வெறுமனே கவனித்திருங்கள், அதனுள் ஊடுருவுங்கள். சீக்கிரமே அந்தக் கசப்பான அனுபவம் அத்தனை கசப்பில்லாதாகி விடும். சீக்கிரமே, ஏற் றுக்கொள்ளவே கடினமான அந்த எதிர்கொள்ளல் நடைமுறைக்கு ஏற்றதாகிவிடும். சீக்கிரமே நீங்கள் அடியாழத்துக்கு ஊடுருவி உங்கள் துன்பத்துக்கு என்ன காரணம், நீங்கள் துன்புற்றிருப்பது ஏன் என்பதையெல்லாம் கண்டறிவீர்கள்.

வினைமுதல் (காரணம்) வெளியே இல்லை. அது உங்களுக்குள் இருக்கிறது, உங்களுடைய துன்பத்தில் மறைந்து கிடக்கிறது. துன்பம் புகைமாதிரி. உங்களுக்குள் எங்கோ தீ இருக்கிறது. புகையினூடே நுழைந்து பாருங்கள் தீயைக் கண்டறிவீர்கள். புகையை வெளியில் இருந்து யாரும் அணைக்க முடியாது, அது ஓர் இடைவிளைவுப் பொருள். ஆனால், நீங்கள் தீயை அணைத்தால் புகை தன்னால் மறைந்துவிடும். வினை முதலை (cause) க் கண்டுபிடி பிடியுங்க விளைவை மறையச் செய்யலாம்.

காரணத்தைக் கொண்டுதான் ஏதாவது செய்ய முடியும், விளைவை வைத்து கொண்டு எதுவும் செய்ய முடியாது என்பதை நினைவில்

கொள்ளுங்கள். நீங்கள் விளைவுடன் போரிட்டால், அந்தப் போர் பயனற்றதுதான். பதஞ்சலியினுடைய 'ப்ரதி-ப்ரஸவ்' செயல் முறையின் பொருள் அதுவே: காரணத்தை நோக்கிச் செல்லுங்கள், விளைவை ஊடுருவி காரணத்தை அடையப் பாருங்கள். காரணம் எங்காவது இருந்தே தீரும். விளைவென்பது உங்களைச் சூழ்கின்ற புகை மாதிரி. புகைமண்டிய நிலையில் நீங்கள் நம்பிக்கைக்குள் தப்பியோடுவீர்கள். புகையே இல்லாத நாட்களைக் குறித்துக் கனவு காண்பீர்கள். இதுவெல்லாம் முட்டாள்தன மாகும். முட்டாள் தனத்துடன் தற்கொலைக் கொப்பானதுமாகும் ஏனெனில், காரணத்தை அவ்விதமாய் தவறவிட்டுவிடுகிறீர்கள்.

'பகுத்தறியும் நபர்' பற்றிப் பதஞ்சலி பேசகிறார். 'விழிப்புணர்வு' என்பதை வடமொழியில் விவேகம் என்கிறார்கள். அதன் பொருள் பகுத்தறியும் ஆற்றல். விழிப்புணர்வின் மூலம் எது எப்படி என்று பகுத்தறிகிறீர்கள். எது உண்மை, எது பொய், எது காரணம், எது விளைவு என்பதை அறிந்து கொள்கிறீர்கள். எல்லாமும் துன்பத்தை நோக்கியே இட்டுச் செல்லும் என்பதை விழிப்புணர்வுடையவர் பகுத்தறிவின் மூலம் (விவேகம்) அறிகிறார்.

நீங்கள் இருப்பதுபோலவே இருந்தால் ஒவ்வொன்றும் உங்களைத் துன்பத்தை நோக்கியே வழிநடத்தும். பிரச்சினை சூழ்நிலையை மாற்றியாக வேண்டும் என்பதல்ல. உங்கள் அடியாழத்தில் வேரூன்றிருக்கும் ஒரு விஷயத்தைப் பற்றியது அது. உங்களுக்குள் இருக்கும் ஏதோ ஒன்று பரம சுகத்துக்கான சாத்தியத்தைத் தடைப்படுத்திவிடுகிறது (அல்லது தோல்வியடையச் செய்கிறது). உங்களுக்குள் இருக்கும் ஏதோ ஒன்று உங்கள் பேரின்ப மலர்ச்சிக்கெதிராய் செயல்படுகிறது. விழிப்புணர்வுள்ள மனிதன் அறிவான் எல்லாமும் துன்பத்தை நோக்கியே இட்டுச் செல்லும் என்பதை.

நீங்கள் ஒவ்வொன்றாய், எல்லாவற்றையும் செய்தீர்கள், ஆனால் அவை துன்பத்தை நோக்கி வலுக்கட்டாயமாய் உங்களை அழைத்துச் செல்வதைக் கவனித்தீர்களா? நீங்கள் வெறுத்தால் அது துன்பத்தை நோக்கி இட்டுச் செல்கிறது, நீங்கள் அன்பு செய்தாலும் அது துன்பத்தை நோக்கியே வழிநடக்கிறது. ஒரு சின்ன லாஜிக் (Logic) சொல்லிவிடும், வெறுப்பு துன்பத்தை நோக்கிச் செலுத்துமென்றால் அன்பு மகிழ்ச்சியை நோக்கிச் செலுத்த வேண்டும் என்பதை. அப்போது நீங்கள் மகிழ்ச்சியை எதிர்பார்த்து அன்பு செய்யமுற்படுகிறீர்கள், ஆனால், அன்பும் துன்பத்தை நோக்கியே இட்டுச் செல்கிறது. என்ன இது, வாழ்க்கையே நகைப்புக்கிடமானதா? தர்க்க நியாயமே இல்லாமல் போயிற்றா? நீங்கள் எதை விரும்பிச் செய்தாலும்

கடைசியில் துன்பம் தானே வருகிறது. துன்பம் ஒரு சாலையாகவும், எல்லாச் சாலைகளும் துன்பத்தை நோக்கியே செல்வதாகவும் அல்லவா தெரிகிறது!

நீங்கள் எந்த இடத்திலிருந்து தொடங்க விரும்பினாலும் தொடங்குகள். இடமிருந்தும், வலமிருந்தும், நடுவில் இருந்தும் நீங்கள் தொடங்க முடியும். எங்கிருந்து தொடங்கினாலும், இந்து, முகமதியர், கிறிஸ்துவர், சமணர், ஆண், பெண், அறிவு, அறியாமை, அன்பு, வெறுப்பு என்று எல்லாமும் துன்பத்தை நோக்கியே இட்டுச் செல்கிறது. நீங்கள் சினமுற்றால் அது துன்பத்தையே முடிவில் தரும். நீங்கள் சினமடையா விட்டாலும் அது துன்பமாகவே முடியும். அங்கே துன்பமிருப்பதாய் தெரிகிறது. நீங்கள் எதைச் செய்தாலும் அது பொருத்தமற்றதாகிவிடுகிறது. கடைசியில் நீங்கள் அதைத்தான் அடைகிறீர்கள்.

நான் கேட்டிருந்த ஒரு கதை, எனக்கு ரொம்பவும் பிடித்தமானது.

ஓர் உளநிலை உணர்வாய்வு மருத்துவர் (*Psycho-analyst*) மனநல மருத்துவமனை ஒன்றிற்குச் சென்றிருந்தார். அங்கே சித்த சுவாதீனமற்ற ஒருவன் கூச்சலிட்டு அழுதுகொண்டும் தலையைச் சுவரில் மோதிக் கொண்டும் இருந்ததைப் பற்றிக் கண்காணிப்பாளரிடம் அவர் கேட்டார். அவனுடைய கையில் அழகான பெண்ணொருத்தியின் படம் இருந்தது. 'இவனுக்கு என்ன ஆச்சு?' மருத்துவர் கேட்டார். கண்காணிப்பாளர், 'இந்த ஆள் அந்தப் பெண்ணை மூர்க்கமாய் காதலித்தான் ஆனால், அவனைக் கல்யாணம் செய்து கொள்ள அவள் மறுத்துவிட்டாள். அதனால் அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது' என்று சொன்னார். தர்க்க ரீதியாகப் பார்த்தாலும் எளிதில் விளங்குகிறதுதான். அவனுக்கு அடுத்த அறையில் இருந்தவனும் கூச்சலிட்டு அழுது, தலையை மோதிக் கொண்டிருந்தான். அதே பெண்ணின் படம் அவன் கையிலும் இருந்தது. அவன் படத்தின் மீது காறிஉமிழ்ந்து, நான் கெழுந்து வார்த்தைகளைப் பயன்படுத்தினான்.

'இவனுக்கு என்ன ஆச்சு? மருத்துவர் கேட்டார். விஷயம் என்னவாக இருக்கும், அதே படத்தை இவனும் கையில் வைத்திருக்கிறான்! கண்காணிப்பாளர் சொன்னார்; இந்த ஆளும் அவள் மீது கண்மூடித்தனமாய் காதல் கொண்டிருந்தான். அவளும் சம்மதித்து அவனைக் கல்யாணம் செய்து கொண்டாள். அதனால்தான் அவன் பைத்தியமாகி விட்டான்' என்று.

ஒருபெண் மறுக்கிறாள் அல்லது ஏற்கிறாள் என்பதால் பெரிதாய் எந்த வித்தியாசமும் ஏற்பட்டு விடுகிறதில்லை. நீங்கள் கல்யாணம் செய்து கொண்டாலும், செய்து கொள்ளாவிட்டாலும் அது வேறுபாட்டை உண்டு பண்ணிவிடுவதில்லை: நான் துன்புற்றிருக்கும் ஏழைகளைப்

பார்த்திருக்கிறேன், துன்பப்படுகிற பணக்காரர்களையும் பார்த்திருக்கிறேன். துன்பத்தில் தோற்றவர்களைப் பார்த்திருக்கிறேன், துன்பத்தில் வென்றவர்களையும் பார்த்திருக்கிறேன். நீங்கள் எதைச் செய்தாலும் இறுதியில் துன்பம் என்கிற முடிவையே அடைகிறீர்கள்.

எல்லாச் சாலைகளும் நரகத்தை நோக்கியே செல்கிறதா? தேர்வுசெய்ய வாய்ப்பிருப்பதாய் தெரியவில்லையே.

நீங்கள் தொடர்ந்து அப்படியே இருக்கும்பட்சத்தில் ஒவ்வொன்றும் துன்பத்தை நோக்கியே இட்டுச் செல்வதாயிருக்கும். நான் இன்னொன்றை உங்களுக்குச் சொல்கிறேன். நீங்கள் மாறினால் எல்லாமும் சொர்க்கத்துக்கு வழிகாட்டிச் செல்லும். நீங்கள் அப்படியே இருந்தால் துன்பத்துக்குக் காரணமாவது உங்களுடைய செயல்களல்ல, நீங்கள்தாம். உங்கள் செயல்கள் பொருத்த மற்றவையாய் தெரிந்தாலும் அடியாழத்தில் நீங்கள் இருக்கிறீர்கள். வெறுப்பதாயிருந்தால் நீங்கள் வெறுக்கிறீர்கள் நேசிப்பதாயிருந்தால் நீங்கள் நேசிக்கிறீர்கள் - இறுதியில் துன்பத்தையோ பரவசத்தையோ தோற்றுவிப்பது நீங்கள்தாம். நீங்கள் மாறாத வரை அப்படித்தான் ஆகும். வெறுப்பிலிருந்து அன்புக்கு ஒரு பெண்ணிடம் இருந்து இன்னொரு பெண்ணுக்கு இந்த வீட்டிலிருந்து வேறொரு வீட்டுக்கு என்று மாறுவது பலனிளிக்காது. உங்களுடைய நேரமம் ஆற்றலும் வீணாகும். உங்களை நீங்கள் மாற்றிக் கொள்ளுங்கள். ஏன் ஒவ்வொன்றும் துன்பத்தை நோக்கி இட்டுச் செல்லப்போகிறது? பதஞ்சலி கூறுகிறார்: **'ஒவ்வொன்றும் துன்பத்தை நோக்கியே இட்டுச் செல்வதற்குக் காரணம் வருத்தம், மாற்றம், கடந்தகால அனுபவம்... என்று பகுத்தறிபவன் தெளிவாய் புரிந்து கொள்வான்'**

இந்த வார்த்தைகள் புரிந்து கொள்ளப்பட வேண்டியவை. வாழ்க்கையில் ஒவ்வொன்றும் இடைவிடாமல் ஏற்படும் மாற்றத்துக்குள்ளாகிறவை (நிச்சயத்தன்மையற்றவை). அத்தகைய நிலையில் நீங்கள் எது குறித்தும் எதிர்பார்ப்புடன் இருக்க முடியாது. நீங்கள் எதிர்பார்த்தால் துன்பத்தில் விழுவீர்கள், காரணம் நிலையான, நிரநதரமான உலகில்தான் எதிர் பார்ப்புகள் சாத்தியப்படும். நிலைதடுமாறுகிற, நிச்சயமற்ற உலகில் எந்தவோர் எதிர்பார்ப்பும் சாத்தியமில்லை. நீங்கள் ஒரு பெண்ணை விரும்புகிறீர்கள். அவள் மிகுந்த மகிழ்ச்சியுடையவளாய் தெரிகிறாள், ஆனால் அடுத்தநாள் காலையில் அவள் அப்படியில்லை. அவளுடைய மகிழ்ச்சி காரணமாகவே நீங்கள் அவளை நேசித்தது. அவளுடைய புன்னகைக்காகவே நீங்கள் அவளை நேசித்தீர்கள். அவளது உற்சாகப் பண்புதான் உங்களை அவள் பால் ஈர்த்தது. ஆனால் மறுநாள் காலையில் அந்த உற்சாகம் மறைந்துவிட்டிருந்தது.

அவள் தன்னுடைய சுயத்திற்கு முற்றிலும் மாறாகவே இருந்தாள். அவள் துன்புற்றவளாய், சினம் கொண்டவளாய், வருத்தத்தில் தோய்ந்து காணப்படுகிறாள். சண்டைபிடிக்கிறாள். எப்போதும் குறை சொல்பவளாய் இருக்கிறாள். என்ன செய்வது. நீங்கள் எதிர்பார்க்க முடியாது. எல்லாமும் மாறுகின்றன. ஒவ்வொரு கணத்திலும் மாறிக் கொண்டே இருக்கின்றன. உங்களுடைய எதிர்பார்புகளனைத்தும் துன்பத்தை நோக்கியே வழிநடத்தும்.

ஓர் அழகிய பெண்ணை மணம் செய்து கொள்கிறீர்கள். ஆனால், அவள் நோயில் விழுந்து படுத்த படுக்கையாகிறாள். அவளுடைய அழகு மறைந்து விடுகிறது. அம்மை வடுக்கள் முகத்தைக் கெடுத்து விடுகிறது. பிறகு நீங்கள் என்ன செய்வீர்கள்?

ஒரு சமயம் முல்லா நஸ்ருத்தீனின் மனைவி அவரிடம் சொன்னாள்; நீங்கள் என்னை நேசிப்பதாய் எனக்குத் தோன்றவில்லை. என்னை எப்போதும் நேசித்துக் கொண்டிருப்பதாய் சமய குருவின் முன்னிலையில் சத்தியம் செய்தீர்களே, அது உங்களுக்கு நினைவிருக்கிறதா? மகிழ்ச்சி யிலும் மகிழ்ச்சியற்ற நிலையிலும் என்னை நேசிப்பதாய், எந்த நிலையிலும் எனக்குப் பக்கபலமாய் இருப்பதாக சத்தியம் செய்தீர்கள்' என்று. முல்லா நஸ்ருத்தீன் சொன்னார், 'ஆமாம், நான், வாக்குறுதி அளித்திருந்தேன். எனக்கு அது நன்றாய் நினைவிலிருக்கிறது. மகிழ்ச்சியிலிருந்தாலும், மகிழ்ச்சியற்றிருந்தாலும் நான் உன்னோடு இருப்பேன் என்று வாக்களித் திருந்தேன். ஆனால் நான் உன்னை உன்னுடைய முதுமையிலும் நேசிப்பதாய் அந்த குருவிடம் நான் கூறவில்லை. அந்த வாக்குறுதியில் அப்படியொரு பகுதி இல்லை' என்று.

ஆனால், முதுமை வருகிறது. பொருளும், கருத்தும், செயலும் மாறிவிடுகின்றன. அழகான முகம் அவலட்சணமாகி விடுகிறது, மகிழ்ச்சிமிக்கவன் மகிழ்ச்சியற்றவனாகிறான். மென்மையாயிருந்தவர் கடினமானவராகி விடுகிறார். பாடிக்கொண்டிருந்த காலம் மறைகிறது, சண்டை பிடிக்கிற மனோபாவம் தலையெடுக்கிறது. வாழ்க்கை நிச்சயத் தன்மையற்றது அதில் ஒவ்வொன்றும் மாறுகிறது. நீங்கள் எப்படி எதிர்பார்க்க முடியும். எதிர்பார்த்தால் துன்பந்தான்.

பதஞ்சலி கூறுகிறார், மாற்றத்தின் காரணமாய் துன்பம் வருகிறது என்று. வாழ்க்கை நிலையானதாயின் அங்கே மாற்றம் இருக்காது. ஒரு பெண்ணை நீங்கள் நேசிக்கிறீர்கள், அவள் எப்போதும் பதினாறு வயதிலேயே இருக்கிறாள். எப்போதும் பாடிக்கொண்டு, மகிழ்ச்சியாய், உற்சாகத்துடன் இருக்கிறாள். நீங்களும் அப்படியே இருக்கிறீர்கள்,

எல்லாமும் நிலையாக இருக்கின்றன. உண்மையில் அப்போது நீங்கள் மனிதர்களாய் இருக்க மாட்டீர்கள், உங்களுடைய வாழ்க்கையும் வாழ்க்கையாய் இருக்காது. சலிப்படைவீர்கள், துன்பம் உருவாகும். மாற்றம் இல்லையென்றால் சலிப்புதானே.

நிகழ்வுகள் மாறவில்லையெனில் நீங்கள் சலிப்புற்று விடுவீர்கள். மனைவி எப்போதுமே சிரித்துக் கொண்டிருந்தால் ஒவ்வொரு நாளும் சிரித்தபடி இருந்தால் சில நாட்களுக்குப் பிறகு நீங்கள் கவலைக் குள்ளாவீர்கள், 'இந்தப் பெண்ணுக்கு என்ன ஆச்சு? இவள் உண்மையி லேயே சிரிக்கிறாளா, சிரிக்கிற மாதிரி நடிக்கிறாளா?'

நடிக்கிறபோது நீங்கள் சிரித்தபடி இருப்பீர்கள். உங்கள் வாய்க்கு அப்படியொரு பயிற்சியைக் கொடுத்து விடுவீர்கள். உறக்கத்தில்கூட சிரித்தபடி இருப்பவரை நான் பார்த்திருக்கிறேன். அரசியல் வாதிகளும், அந்த மாதிரியான மனிதர்களும் தொடர்ந்து சிரித்தபடி இருப்பார்கள். அவர்க ளுடைய உதடுகள் அதை நிரந்தர வடிவமாக்கிக் கொண்டுவிடும். நீங்கள் அவர்களிடம் சிரிக்காதீர்கள் என்று சொன்னாலும் அவர்களால் எதுவும் செய்ய முடியாது. அவர்களுடைய சிரிப்பு நிரந்தர செய்முறை யாகிவிட்டது. ஆனால் அப்போது சலிப்பு தோன்றுகிறது, சலிப்புறும் நிலை துன்பமளிப்பதாகிறது.

சொர்க்கத்தில் எல்லாமும் நிரந்தரமாயிருக்கும், எதுவும் மாறுவ தில்லை. ஒவ்வொன்றும் இருக்கிறபடி இருக்கும் - ஒவ்வொன்றும் அழகாயிருக்கும். பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் தம்முடைய தன்வரலாற்றில் எழுதுகிறார் 'நான் சொர்க்கத்துக்குச் செல்வதை விரும்பமாட்டேன் காரணம் அது சலிப்பூட்டுவதாயிருக்கும்' என்று. ஆம், அது சலிப்பை ஏற்படுத்தும். சமய குருமார்களும், தீர்க்கதரிசிகளும், தீர்த்தங்கரர்களும், புத்தர்களும் குழுமியிருக்கும் ஓர் இடத்தைக் கற்பனை செய்து பாருங்கள். அங்கே எதுவும் மாறவில்லை, எல்லாம் இருக்கிறபடியே இருப்பதாய் வைத்துக் கொள்ளுங்கள். தீட்டிவைத்த ஓவியம் போலத்தானே தெரியும் அந்தக் காட்சி. அதில் உண்மையான வாழ்தல் இருக்காது. இயக்க மற்றநிலையில் எத்தனை காலம் வாழ்வீர்கள்? ரஸ்ஸலின் பார்வை ரொம்பசரி. ஒருவர் சலிப்படைவார், சாகுமளவிற்குச் சலிப்படைந்துவிடுவார். குறைந்தபட்சம் சில மாற்றங்களாவது இருக்க வேண்டும்.

நரகத்தில் ஒவ்வொன்றும் மாறிக்கொண்டே இருக்கிறது, அப்போது எந்த எதிர்பார்ப்பையும் பூர்த்தி செய்ய முடியாது. வாழ்க்கையின் நடப்பு நிலையானதாயிருந்தால் எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்ய முடியும். ஆனால், அது ஒருவர் சலிப்படையுமளவுக்குக் கொண்டு சென்றுவிடும்.

பிறகு அங்கே சுவையும் களிப்பும் இருக்காது. அது ஆர்வமற்ற அனுபவ மாகும். எல்லாமும் மந்த கதியை அடையும், மனக்கிளர்ச்சியிருக்காத தூண்டுதல் இருக்காது, புதிதாய் எதுவும் நிகழ்வதில்லை. நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் இவ்வாழ்க்கையில் மாற்றம் துன்பத்தையும், வருத்தத் தையும் தோற்றுவிக்கிறது. உங்களுக்குள் எப்போதும் வருத்தம் இருக்கிறது, நான் சொல்கிறேன் எப்போதும் என்று. நீங்கள் ஏழ்மையில் இருந்தால் வருத்தம் இருக்கும்: செல்வத்தை எப்படி அடைவது என்று. நீங்கள் செல்வந்தராகிவிட்டாலும் வருத்தம் இருக்கும், பெற்ற செல்வத்தை எப்படித் தக்கவைத்துக் கொள்வது என்று. திருடர்கள் கொள்ளைக்காரர்கள் பற்றியும், அரசாங்கம் பற்றியும் அச்சம் எப்போதும் இருந்து கொண்டேயிருக்கிறது. இல்லையென்றாலும் கவலை, இருந்தாலும் கவலை. அது தொடர்கிறது.

அன்றொருநாள் ஒரு தம்பதிகள் என்னிடம் வந்தனர். ஆடவன் சொன்னான், 'நான் ஒரு பெண்ணுடன் இருந்தால் கவலைதான், அது ஒரு தொடரும் யுத்தமாயிருக்கும். நான் மகிழ்ச்சியாயிருக்க மாட்டேன். நான் அந்தப் பெண்ணுடன் இல்லாவிட்டால் அது தொடரும் கவலையாகவே இருக்கும். நான் தனியாய் விடப்பட்டிருப்பேன். பெண்ணில்லாத நிலையில் தனிமை கவலையாய் உருவெடுக்கிறது. பெண் இருந்தாலோ பிரச்சினைகள் சேர்ந்து கொள்கிறது. இருவர் சந்திக்கும்போது பிரச்சினை இருமடங்கா வதில்லை அவை பல்கிப் பெருகிவிடுகின்றன.

'மனிதன் தனித்து வாழமுடியாது தனிமை துன்பத்தைத் தோற்றுவிக்கும்'

மனிதன் பெண்ணுடன் வாழ முடியாது, காரணம் பெண் கவலையைத் தோற்றுவிக்கிறாள். ஒரு பெண்ணுடைய விஷயத்திலும் அப்படித்தான். கவலைப்படுவது உங்கள் வாழ்க்கை முறையாகிவிடுகிறது. எது நடந்தாலும் கவலை மட்டும் இருந்தபடி இருக்கும்.

கடந்தகால அனுபவங்களும், சம்ஸ்காரங்களும் துன்பத்தைத் தோற்றுவிக்கும், காரணம் ஓர் அனுபவத்தை நீங்கள் கடக்கிறபோது அது ஒரு பள்ளத்தை உங்களுக்குள் ஏற்படுத்திவிடுகிறது. அந்த அனுபவம் மீண்டும் பலமுறை ஏற்படுகிறபோது அது ஏற்படுத்திய பள்ளம் மேலும் ஆழமானதாகிவிடுகிறது. அப்போது வாழ்க்கை தறிகெட்டதாகிவிடும். ஆற்றல் கடந்தகால அனுபவங்கள் என்னும் பள்ளத்தில் பாய்கிறதில்லை, நீங்கள் நிறைவற்றராய் உணர்வீர்கள். ஆனால், வாழ்க்கை அப்படியே தொடரும் போது ஆற்றல் பள்ளத்தை நோக்கிப் பாய்ந்து கொண்டே இருக்கும். அப்போது நீங்கள் சலிப்புற்று விடுவீர்கள். உங்களுக்கு எழுச்சி தேவைப்படும். எழுச்சியில்லாவிட்டால், 'இப்படி வாழ்வதில் என்ன பயன்?' என்று எண்ணமிடுவீர்கள்.

நீங்கள் ஒரே மாதிரி உணவை தினமும் உண்ணமுடியாது. நான் ஒரே உணவை உண்பேன், என்னைவிடுங்கள். உங்களால் தினமும் ஒரே மாதிரியான உணவை உண்ணமுடியாது. நீங்கள் அதே உணவை உண்டுவந்தால் விரக்தி அடைவீர்கள். காரணம் தினமும் அதேவகை உணவு என்கிற போது அது சுவையற்றதாகிவிடும், மனதில் தூண்டுதல் இருக்காது. தினமும் உணவை மாற்றிக் கொண்டிருந்தாலும் தொல்லைதான், காரணம் உணவுடன் ஒத்துப்போவதில் உடம்புக்கு சிரமம் இருக்கும். நீங்கள் தினமும் மாறிக் கொண்டிருந்தால் உடம்பின் வேதியியலும் (body chemistry) மாறும், உடம்பு அசவுகர்யத்தை உணரும். ஒரேவகை உணவை உண்கிறபோது உடம்பு சவுகர்யமாய் உணரும், ஆனால் மனம் அப்போது சவுகர்யமாய் உணராது.

கடந்த காலத்து வழக்கமான செயல்முறைகளின்படி வாழும்போது உங்கள் உடம்பு சுகமாய் உணரும், காரணம், உடம்பு இயந்திர நுட்பமானது. அது புதியவற்றுக்கு ஆசைப்படுவதில்லை, இருக்கிறபடிக்கு இருந்தால் போதும். உடம்புக்கு ஒரு நடை முறை ஒழுங்கு (routine) தேவைப்படுகிறது. மனதுக்கு எப்போதும் மாற்றம் தேவைப்படும் காரணம் மனமே தன்னளவில் மாறிக் கொண்டிருப்பதுதான். மனம் ஒரு கணமும் இருந்தபடி இருப்பதில்லை.

பைரன் பிரபு நூற்றுக் கணக்கான பெண்களுடன் வாழ்ந்ததாய் நான் கேள்விப் பட்டிருக்கிறேன். குறைந்தபட்சம் அறுபது பெண்கள் வரை நன்கறியப்பட்டவர்கள். அவர் அறுபது பெண்களைக் காதலித்ததற்கு ஆதாரம் இருக்கிறது. அவர் நீண்டகாலம் வாழ்ந்திருக்கவில்லை. ஆகவே, பெண்களை அவ்வப்போது மாற்றிக் கொண்டிருந்திருக்க வேண்டும். ஆனால், ஒரு பெண் அவரைப் பிடித்துக் கொண்டுவிட்டாள், தன்னைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி நிர்ப்பந்தித்தாள். தன்னை அவர் கல்யாணம் செய்து கொள்ளும்வரை அவள் விடவில்லை, அதுவரை தன் உடம்பையும் அவருக்குத் தரவில்லை. அவர் பல பெண்களிடம் தொடர்பு வைத்திருந்தது அவளுக்குத் தெரிந்ததுதான். அவர் ஒரு பெண்ணுடன் உடலுறவு கொண்டபின் அந்தப் பெண்ணை அத்தோடு மறந்துவிடுவார். புத்தார்வக் கற்பனை (romantic) யுள்ள கவிஞனின் மனம் அது. கவிஞர்கள் எப்போதுமே உறுதியானவர்களாயிருப்பதில்லை. அவர்களுடைய மனம் மாறிக் கொண்டேயிருக்கும் அவர்களது கவிதை மாதிரி. அது ஓர் ஊசலாட்ட நிகழ்வு. அவரை வற்புறுத்திக் கொண்டிருந்த பெண் ரொம்பவும் பிடிவாதமானவளாயிருந்தாள். எனவே பைரன் அவளுக்குப் பணியும் படியாயிற்று. அவர் அவளை மணந்து கொண்டார். அது அவருடைய தன்முனைப்பு (ego) சம்பந்தப்பட்ட பிரச்சினையானது.

அவர்கள் தேவாலயத்தில் இருந்து வெளியில் வந்து கொண்டு இருந்தபோது தேவாலய மணிகள் ஒலித்தன. விருந்தினர்கள் அவர்களை விட்டுச் சென்றனர். அவர்கள் படிகளில் இறங்கிக் கொண்டிருந்த போது பைரன் மணப் பெண்ணின் கையைப் பற்றியிருந்தார். தன்னுடைய காதலை அவளிடம் தெரிவித்திருக்கக் கூடமாட்டார். அப்போது சாலையைக் கடந்து கொண்டிருந்த ஒரு பெண்ணைப் பார்த்தவர் மணமகளை மறந்துவிட்டார். அவளிடம், ''ஆ, இது வியக்கத்தக்க விஷயம். அதோ போய்க் கொண்டிருக் கிறவளைப் பார்த்ததும் ஒரு கணம் உன்னை மறந்தே போனேன். நம் கல்யாணம் உட்பட எல்லாவற்றையும் மறந்துவிட்டேன். என் பிடியில் உன் கை இருந்ததே எனக்குத் தெரியவில்லை'' என்றார். அந்தப் பெண்ணும் அதைப்பார்க்கத்தான் செய்தாள். பெண்களை நீங்கள் ஏமாற்றிவிட முடியாது. உங்கள் பார்வை இன்னொரு பெண்மீது திரும்புவதற்கு முன்பே அவர்கள் புரிந்து கொள்வார்கள். உங்கள் மனதில் அந்த யோசனை 'மினுக்'கிடும் போதே அவர்கள் உளவறிந்து விடுவார்கள். அந்தப் பெண்ணும் அதைக் கண்டாள், 'எனக்குத் தெரியும்' என்றாள்.

இதுதான் மனம். அந்தப் பெண்ணிடம் அவருக்கிருந்த ஈடுபாடு முடிந்துவிட்டது. அவளைக் கல்யாணம் செய்ததுமே அடைந்த மாதிரிதான், அடைந்துவிட்டாலோ முடிந்த மாதிரிதான். இப்போது எந்தக் கிளர்ச்சியும் இல்லை. அவள் அவருடைய உடைமையாகிவிட்டாள். அறை கூவலாய் எதுவும் இல்லை.

அறைகூவல் கவலையைத் தரும் போரிட்டாக வேண்டுமே என்கிற கவலையை. 'எதற்காகப் போரிடுகிறீர்களோ அதை அடைந்து, சுவாதீனப் படுத்திக் கொண்டதும் அது இன்னொரு கவலையைத் தோற்றுவிக்கும், முடிந்து விட்டதே என்கிற கவலையை. விவகாரம் அதற்குமேல் இல்லை. அது முன்பே சலிப்பூட்டிக் கொண்டிருக்கிறது, சுவத்துப்போனது. கவலை கொள்ளும்நிலை எப்போதுமே இருக்கிறது, உங்கள் வாழும் முறையே அதைத் தோற்றுவிக்கிறது. கடந்தகால அனுபவங்கள், ஸம்ஸ்காரங்கள் மூலம் நீங்கள் ஒரு குறிப்பிட்ட நடப்பிற்குப் பொருந்துவதற்கு விடுகிறீர்கள்.

'மனம் சொல்கிறது கிளர்ச்சியுற வேண்டுமென்று - ஒரு மாற்றம் தேவையென்று'

அப்போது உடல் முழுதும் அமைதி குலைந்து அதுவும் கவலையைத் தோற்றுவிப்பதாகிறது.

> **'...மனதின் ஐந்து மாறுதல்களுக்கும் மூன்று பண்புகளுக்கும் இடையே மோதல் எழுகிறது'**

எவை உங்களுடைய இருப்புணர்வை (being) உண்டாக்கிற்று என்று இந்துக்கள் சொல்கிறார்களோ அவற்றுக்கிடையே தொடர்ந்து சண்டை நடக்கிறது. சத்துவம், ராஜஸம், தாமசம் இவை மூன்றும் மனித ஆளுமையின் கூறுகள் என்று அவர்கள் சொல்கிறார்கள். சத்துவம் தூய்மையானது, அனைத்து நன்மைகளுக்கும் அவசியமானது, உங்களுக்குள் இருக்கும் புனிதத்தன்மைக்கும் அதுவே அவசியமாகிறது. அடுத்து வருவது ராஜஸம். அது ஆற்றல், மனோசக்தி, வலிமை இவற்றின் அடிப்படையாகும். தாமசம் சோம்பல், மந்தத் தன்மை இவற்றுக்கு அடிப்படை. இவை மூன்றும் சேர்ந்து உங்கள் இருப்புணர்வை உருவாக்குகின்றன. இந்துக்கள் அதை உள்நோக்கி அறிகிறார்கள், இவை மூன்றுமே அணு ஆற்றலின் பகுதிப் பொருட்களாய் முக்கியம் பெறுபவை என்று இயற்பியல் துறை வல்லுநர்கள் தெரிவிக்கிறார்கள். அவர்கள் அதை எலக்ட்ரான், ப்ரோட்டான், ந்யூட்ரான் என்று அழைக்கிறார்கள். ஆனால் பெயர்களில் மட்டுமே வேறுபாடுகள். இந்துக்கள் சத்துவம், ராஜஸம், தாமசம் என்று அழைக்கிறார்கள். விஞ்ஞானிகள் பருப்பொருள் (malter) ஒன்றின் இயக்கத்துக்கு அவ்வகைப் பண்புகள் அவசியமென்று ஒப்புக்கொள்கிறார்கள். ஆளுமையின் இருப்புக்கு அவ்வகைப் பண்புகள் அவசியமென்று இந்துக்கள் சொல்கிறார்கள். ஆளுமைக்கு மட்டுமல்ல ஒட்டுமொத்தப் பிரபஞ்சமும் உளதாய் இருத்தலுக்கும் அவை இன்றியமையாதவை எனலாம்.

இம்மூன்றும் ஒன்றுக்கொன்று முற்றிலும் எதிரானவை அதுதான் தொல்லை என்கிறார் பதஞ்சலி. அவை மூன்றும் உங்களுக்குள் உள்ளன. சோம்பலுக்கான பகுதிப்பொருள் உங்களுள் இருப்பதால்தான் உங்களால் உறங்க முடிகிறது. மக்கள் உறக்கமின்மையில் அவதியுறுவதற்குக் காரணம் தாமசத்தின் அடிப்படைக் கூறு அவர்களுள் போதிய அளவில் இல்லை. அதனால்தான் அமைதி ஊக்கிகள் (tranquillizers) உதவுகின்றன, அது மந்தத் தன்மையை உண்டு பண்ணும் ஒரு வேதியியல் பொருள். அது உங்களுக்குள் மந்தத் தன்மையை, சோம்பலை உண்டாக்குகிறது. மக்கள் ரஜஸ்வத்தன்மை (கோபம்) அதிகம் உடையவர்களாயிரந்தால், ரொம்பவும் சுறுசுறுப்பு கொண்டுவிட்டிருந்தால் அவர்களால் உறங்க முடியாது. அதனால்தான் மேற்கத்திய உறக்கமின்மை (Insomnia) இப்போது உலகப் பிரச்சினையாகிவிட்டிருக்கிறது. மேற்கில் ஆற்றலின் அடிப்படைக் கூறாகிய ரஜஸ்தன்மை அதிகம். அதனால்தான் மேற்கத்தியர்கள் உலகத்தையே தங்கள் ஆளுகையின் கீழ்கொண்டுவர முடிந்தது. சரிபாதி உலகத்தை ஒரு சிறிய நாடான இங்கிலாந்து ஆட்சி செய்திருக்கிறது. அவர்களிடம் ரஜஸ்தன்மை கூடிய அளவில் இருந்திருக்க வேண்டும்.

அறுபது கோடிக்குமேல் மக்கள் தொகையைக் கொண்ட இந்தியா தற்போது வறுமையில் உள்ளது. இங்கே நிறையபேர் வேலை வெட்டி இல்லாதிருப்பவர்கள். அவர்கள் மேலும் மேலும் பெருஞ்சுமையாகிக் கொண்டிருக்கின்றனர்.

'அவர்கள் நாட்டின் சொத்துகளல்ல, அனாவசிய சுமைகள்'

இங்கே மந்தத்தன்மை, சோம்பல் அதிகம். சத்துவம் இரண்டுக்கும் நேர் எதிரிடையானது. இம்மூன்றும், உங்களை உருவாக்குகிறது. அவை வெவ்வேறான மூன்று பரிமாணங்கள். அவற்றின் எதிரிடைத்தன்மையி னாலேயே அவை தேவைப்படுகின்றன. காரணம் அவற்றின் இறுக்கமே உங்களை இருக்கச் செய்கிறது. அவற்றின் இறுக்கம் தொலைந்து அவை இணக்கமாகிவிட்டால் மரணம் சம்பவிக்கும். இம்மூன்று அடிப்படைக் கூறுகளும் இறுக்கத்தில் இருந்தால் தான் பிரபஞ்ச இருப்பு சாத்தியம், படைப்பு நிகழும் என்று இந்துக்கள் கூறுகிறார்கள். இம்மூன்றும் இணைக்கமாகிவிட்டால் இருப்புமறையும், பிரளயம் உண்டாகும், படைப்பு நிகழாது. உங்கள் உடம்பிலுள்ள இம்மூன்று பகுதிகளும் ஒன்றோடொன்று இணக்கமடைகிறபோது நீங்கள் மரணமடைகிறீர்கள். அவை இறுக்கமா யுள்ள வரைதான் வாழ்தல்.

இதுதான் பிரச்சினை - இந்த மூன்று இறுக்கங்களும் இல்லாவிட்டால் நீங்கள் மரணமடைகிறீர்கள். அவற்றுடன் வாழ்வதும் கடினமான விஷயம், காரணம் அவை ஒன்றுக்கொன்று எதிரிடையானவை, ஆளுக்கொருபக்கம் இழுக்கிறவை. பலமுறை வெவ்வேறு திசைகளில் இழுபடுகிற மாதிரி நீங்கள் உணர்ந்திருப்பீர்கள். உங்களில் ஒருபகுதி கூறும், 'உயர்ந்த நோக்கத்துடன் இரு' என்று. மற்றொரு பகுதி கூறும், 'உன்னுடைய பேராவல் கவலையைத் தான் தரும்' என்று 'அதைவிட நீ தியானம் வழிபாடு செய்து சன்னியாசி யாகிவிடலாமே' என்றும் அது கூறும். ஒரு பகுதி சொல்லும், 'அறமுறை விதியை மீறுவது (sin) அருமையான விஷயம். பாவம் ஈர்ப்புத்தன்மை கொண்டது, காந்த சக்தி அதற்கு உண்டு' என்று. 'மகிழ்ச்சியோடு இருங்கள், சற்று முன்பின்னாய் மரணம் பொறுப்பேற்றுக் கொண்டுவிடும். எல்லாம் தூசியாகி மறைந்துவிடும். மரணம் மேற்கொள்ளும் முன்பே அனுபவித்து விடுங்கள்.' உங்களில் ஒரு பகுதி இப்படிக் கூறும், இன்னொரு பகுதியோ' மரணம் நெருங்குகிறது, எல்லாமே பயனற்றதாகிவிடும்' என்று கூறும் ஒன்று 'தவறவிடாதே' என்கிறது. இன்னொன்று, 'அனுபவித்து என்ன ஆகப் போகிறது?' என்று கேட்கிறது. நீங்கள் பேசிக்கொண்டிருக்கும் அதே விஷயமல்ல இது. உங்களுக்குள் மூன்று பகுதிகள் உள்ளன. உண்மையில்

அவை மூன்று அகந்தைகள், உங்களுக்குள்ளிருக்கும். மூன்று பிரிவுகள் - தனித்தன்மை கொண்டவை.

மகாவீரர் சொல்வதுபோலவே பதஞ்சலி சொல்கிறார் மனிதன் பல ஆத்மாக்களைக் கொண்டவன் (Poly psychic) என்று. நீங்கள் மூன்று மனங்களைப் பெற்றிருக்கிறீர்கள், ஒரு தொகுதியில் உள்ளதைப் பல வகையில் மாற்றியமைப்பதன் மூலம் (Permutation) அவை மூவாயிர மாகும். உங்களுக்கு அநேக மனங்கள், அவை ஆளுக்கொருப் பக்கமாய் உங்களை இழுக்கும். நீங்கள் ஒரு திரளாய் இருக்கிறீர்கள். இது உண்மை, நீங்கள் எப்படி தொல்லை நீங்கி பரமசுகத்தில் இருக்கமுடியும்? பல எருதுகள் பூட்டிய மாட்டு வண்டி மாதிரி நீங்கள், ஒரு பிணைப்பு (Yoke) வடக்கேயும், இன்னொரு பிணைப்பு மேற்கேயும், மற்றொன்று தெற்கேயும் இழுக்கிறது ஒரே சமயத்தில். அது எங்கேயும் போவதற்கில்லை. பெருத்த ஒரே சமயத்தில். அது எங்கேயும் போவதற்கில்லை. பெருத்த ஓசையை எழுப்பிக் கொண்டு நொறுங்கிவிடும். அது எங்கேயும் போய்ச் சேருகிற தில்லை. அதனால்தான் உங்கள் வாழ்க்கை வெறுமையான (பொருளற்ற) வாழ்க்கையாயிருக்கிறது. இவை மூன்றும் மனதின் ஐந்து மாறுபாடுகளை விருத்திகளும் குணங்களுடன் முரண்படுகின்றன.

உதாரணமாய், சோம்பேறியான ஒருத்தனை நான் அறிவேன். 'எனக்கு ஒரு பெண்டாட்டி இல்லாவிட்டால் நான் அமைதியாயிருப்பேன். என்னிடம் போதிய பணம் இருக்கிறது, ஆனால் இந்தப் பெண்டாட்டிக்காரி என்னை வேலை செய்யும்படி வற்புறுத்துகிறாள். அவளுக்கு அது போதவே இல்லை' என்று சொல்லிக் கொண்டிருப்பான் அவன். பிறகு அவள் செத்துப் போனாள். நான் அவனிடம் சொன்னேன், 'நீ மகிழ்ச்சியாயிருக்க வேண்டுமே. எதற்காக அழுகிறாய். மகிழ்ச்சியோடிரு. உனக்குத்தான் இனிமேல் அவளுடைய பிரச்சினை இல்லையே. நீ அமைதியாயிருக்கலாம் அல்லவா' என்று. ஆனால் அவன் ஒரு குழந்தையைப்போல் அழுதான் 'அது பழகிப் போச்சு. இப்போ நான் தனியாகிவிட்டேனே' என்றான். கணவன் மனைவி என்பதெல்லாம் ஒருவரின் இயற்கையோடு இயைந்து போன பழக்கவழக்கங்கள்.

அவன் சொன்னான் 'அது பழக்கமாயிருச்சே. பக்கத்தில் ஒரு பெண் இல்லாம என்னால் தூங்கமுடியாது' என்று. நான் சொன்னேன், 'இதென்ன முட்டாள் தனமான பேச்சு. மறுமணம் செய்து கொள்ள முயலவேண்டாம், வாழ்க்கை நெடுகிலும் நீ அவதிப்பட்டாய். அவளைப் போல்தான் வரப் போகிறவளும் இருப்பாள். அவளும் உன்னைக் கட்டாயப் படுத்துவாள். திரும்பவும் உன் பணம் போதுமான தாயிருக்காது' என்று.

நான் ஒரு பணக்காரனைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தேன். அவரிடம் யாரோ கேட்டார்கள் 'இத்தனை செல்வத்தை எப்படிப் பெற்றீர்கள்? உங்களால் எப்படி அதை அடைய முடிந்தது? நீங்கள் எப்படி அத்தனை பேரார்வத்தைப் பெற்றீர்கள்?' என்று. அவர் ஏழையாகப் பிறந்தார், உலக அளவில் அறியப்பட்ட பெரும் பணக்காரர்களுள் ஒருவரானார். அவர் சொன்னார் எல்லாம் என்னுடைய மனைவியாய் வந்தது. என்னால் முடிந்த அளவு செல்வம் சேர்க்க நான் முயன்றதற்குக் காரணம் அவள் திருப்தியுற்றாளா இல்லையா என்பதை அறிவதற்குத்தான். நான் தோற்றுப் போனேன், அவளுக்கு மேலும் மேலும் பணம் வேண்டியிருந்தது. எங்க ளுக்குள் ஒரு போட்டியே நடந்தது. நான் நிறைய செல்வத்தைச் சேர்க்க முயன்றது ஒருநாள் அவள் 'போதும்' என்று செல்வத்தைக் கேட்கத்தான். அவள் ஒரு போதும் அதைச் சொல்லவில்லை. அந்தப் போட்டியில்தான் நான் தொடர்ந்து பொருளீட்டிக் கொண்டிருப்பது, வெறித்தனமாய் அந்தச் செயலில் ஈடுபட்டேன்.

இப்போது என்னிடம் பணம் ஏராளமாய் இருக்கிறது. இதை வைத்துக் கொண்டு என்ன செய்வதென்றே தெரியவில்லை. ஆனால், என் மனைவியோ இன்னும் திருப்தியற்றவளாய் காணப்படுகிறாள். ஒருநாள் நான் ஓய்வை விரும்பி, 'காலையில் படுக்கையிலிருந்து எழுந்து கொள்ளா விட்டாலும்', என்ன ஆச்சு, ஆபீஸுக்குப் போகப் போறதில்லையா? என்று கேட்கிறாள்.

நான் அவரிடம் சொன்னேன், 'மீண்டும் பொறியில் சிக்கிக் கொள்ளாதீர். உம்முடைய வாழ்க்கை நெடுகிலும் நீர் ஓய்வை விரும்பி யிருந்தீர். ஆனால் இன்னமும் அவள் தூண்டிக் கொண்டிருக்கிறாள்' என்று.

சோம்பேறி ஒருவன் ஓய்வாயிருக்க விரும்புகிறான், ஆனால் அவன் மனைவியோடு வாழ்கிறபோது மனதுக்குள் ஒரு மாறுதல் நிகழ்கிறது. அவனுடைய இருப்புணர்வில் (being) ஒரு பாதியாகிவிடுகிறாள் பெண்ணொருத்தி. அவள் தினமும் சண்டையிடுகிறாள், அவளுடன் வாழவே முடியாது போலாகிறது அவனுக்கு. ஆனாலும் அது பழக்கமாகிவிட்டது. அவன் வீட்டுக்கு வரும்போது சண்டையிட யாரும் இல்லையென்றால் அவனுக்கு வீட்டில் இருக்கிற உணர்வு கிட்டாது.

முல்லா நஸ்ருத்தீன் ஓர் உணவு விடுதிக்குச் சென்றார். 'உங்களுக்கு என்ன வேண்டும், நான் செய்யக் காத்திருக்கிறேன்' என்று கேட்டாள் பரிமாறுகிற பெண். அவர்தான் அன்றைய முதல் வாடிக்கையாளர், அவர் இருந்தது இந்தியாவில் முதல் வாடிக்கையாளரை விருந்தினரைப் போல்

வரவேற்று உபசரிப்பது வழக்கம், காரணம், அனறைய பொழுதை அவர்தானே தொடங்கி வைக்கிறார். 'என்னை வீட்டில் நடத்துகிற முறையில் நடத்து. தேவையானவற்றைக் கொண்டு வா' என்றார் நஸ்ருத்தீன் அந்தப் பணிப்பெண் அவர் கேட்டவற்றையெல்லாம் கொண்டு வந்தாள். பிறகு கேட்டாள் 'வேறு என்ன வேண்டும்?' என்று. முல்லா அவளிடம் 'இங்கே வந்து இப்படி உட்கார். என்னோடு சண்டைபிடி. எனக்கு வீட்டு நினைப்பு வந்திருச்சி' என்றாராம்.

மனைவி ஒவ்வொரு நாளும் சண்டையிட்டுக் கொண்டிருந்தாலும் அது பழகிவிடுகிறது. அதை உங்களால் விட முடியாது. எதையோ இழந்துவிட்ட மாதிரி இருக்கும். நான் அவரிடம் சொன்னேன், 'மீண்டும் உம்மைத் தொல்லைக் குள்ளாக்கிக் கொள்ள வேண்டாம். அது மனம் செய்து கொள்கிற மாறுதல் - பழக்கமாகிறது. நீர் சோம்பேறித்தனமானவராச்சே' என்று.

சோம்பேறிகளுக்குச் சிறந்தது பிரும்மச்சரியம் தான். அவர்கள் பிரும்மச்சாரிகளாய் இருந்துவிட வேண்டும். அப்போதுதான் அவர்கள் ஒய்வாய், அமைதியாய் இருந்து கொண்டு தாங்கள் செய்ய விரும்பிய வற்றைச் செய்ய முடியும். தங்களுடைய வேலைகளை அவர்கள் தாங்களே செய்து கொள்வார்கள், சண்டை பிடிக்க யாரும் இருக்க மாட்டார்கள். நான் சொல்வதை அவர் கவனித்துக் கேட்டார். சிரமந்தான், ஆனாலும், கேட்டுக் கொண்டிருந்தார். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அவர் வேலையிலிருந்து ஓய்வு பெற்றபோது நான் சொன்னேன், 'அது ரொம்ப சரி. நீர் இப்போது எவ்விதத் துன்பமுமின்றி நிம்மதியாயிருக்க முடியும்' என்று. அவர் சொன்னார் 'ஆனால் பாருங்கள் வேலை பழகிப்போச்சு, நாற்பது வருஷம் வேலை பார்த்திட்டு இப்போ என்னால் சும்மா இருக்க முடியாதே' என்று.

வேலையில் இருந்து ஒய்வு பெற்றவர்கள் தாங்கள் இயல்பாய் இறக்கவேண்டிய காலத்துக்கு பத்து ஆண்டுகள் முன்பாகவே இறந்து விடுகிறார்கள். ஒருவர் எண்பது வயதில் இறப்பார் என்றால் அவரை அறுபதில் ஓய்வு பெறச் செய்துவிடுங்கள், அவர் எழுபதிலேயே இறந்துவிடுவார். ஒரு வேலையிலும் இல்லாத நிலையில் என்ன செய்வது?- மெள்ள இறப்பதைத் தவிர.

பழக்கங்கள் உருவாகி விடுகிறபோது - மனம் மாறுதல்களை ஏற்கத் தயாராகி விடுகிறது. நீங்கள் சோம்பேறியாய் இருக்கிறீர்கள் ஆனால் வேலை செய்து கொண்டு இருந்தவர். எனவே மனம் வேலையைப் பழக்கப்படுத்திக் கொண்டது. வேலையில் இருந்து ஓய்வு பெற்றுவிட்டாலும் உங்களால் சும்மா உட்கார்ந்துவிட முடியாது.

தியானத்தில் ஈடுபடவோ, ஓய்வாய் இருந்துவிடவோ முடிவதில்லை தூங்கவும் முடியாது. மனிதர்கள் வேலை நாட்களைவிட விடுமுறை நாட்களில் அமைதியற்றவராய் தெரிவார்கள், நான் பார்த்திருக்கிறேன். ஞாயிற்றுக்கிழமைதான் ரொம்பக் கடினம், என்ன செய்வதென்று தெரியாமல் விழிப்பார்கள். இதில் வேடிக்கை என்னவெனில் ஆறு வேலை நாட்களிலும் அவர்கள் ஞாயிற்றுக்கிழமை எப்போது வருமென்று காத்திருப்பார்கள். 'இன்னம் ஒருநாள்தான், ஞாயிற்றுக்கிழமை வந்தாச்சுன்னா ஓய்வெடுக்க லாம்' என்று சொல்லிக் கொள்வார்கள். ஆனால் ஞாயிற்றுக்கிழமை காலையில் இருந்தே என்ன செய்வது என்று குழம்பி நிற்பார்கள்.

மேலைநாட்டினர் ஞாயிற்றுக்கிழமை அல்லது வாரக்கடைசியில் சிறுபயணம் மேற்கொள்வார்கள். கடற்கரை அல்லது மலைப்பிரதேசத்துக்குச் செல்வார்கள். மக்கள் வெறிபிடித்த மாதிரி பாய்ந்து கொண்டிருப்பார்கள். ஒவ்வொருவரும் எங்காவது ஓடிக்கொண்டிருக்கிற மாதிரி இருக்கும். கடைசியில் பார்த்தால் எல்லாரும் கடற்கரையில் திரண்டிருப்பார்கள். ஒட்டுமொத்த ஊரும் அங்கே இருக்கும். அவர்கள் அதைவிட வீட்டிலேயே இருந்திருக்கலாம்.

கடற்கரையில் இன்னொரு கடல்!

நீங்கள் தனித்திருக்கிறீர்கள், நகர முழுதுமே போய் விட்டிருக்கிறது. எல்லாரும் கடற்கரைக்குப் போயாயிற்று. விடுமுறை நாட்களில் தான் அதிக விபத்துகள், மக்கள் களைத்துப் போனார்கள் மிகவும். நூறுமைல் காரில் போய் நூறு மைல் திரும்பிவர வேண்டும். களைக்காமல் என்ன செய்வார்கள். சோர்ந்து போனவர்கள் தங்களைப் புதுப்பித்துக் கொள்ள மூன்று நாட்கள் தேவைப்படும். பிறகு - அடுத்த மூன்று நாட்களும் வரப்போகிற இன்னொரு ஞாயிறின் எதிர்பார்ப்பு. மீண்டும் ஞாயிறுவரும், சோர்வும் வரும்.

மக்களால் ஓய்வெடுக்க முடிவதில்லை காரணம் ஓய்வுக்குத் தேவை முற்றிலும் வேறான மனோபாவம். நீங்கள் சோம்பேறித்தனமாய் இருந்து, வேலை செய்யும் போது மனம் எதையாவது தோற்றுவிக்கும். நீங்கள் சோம்பேறித்தனமாய் இல்லாவிட்டாலும் மனம் எதையாவது தோற்று விக்கவே செய்யும். மனமும் உங்கள் குணங்களும் எப்போதும் முரண்படும், மோதிக்கொள்ளும். மக்கள் துன்பத்தில் இருப்பதற்கு இவையே காரணம் என்கிறார் பதஞ்சலி. ஆக என்ன செய்வது? இத்தகைய காரணங்களை நீங்கள் எப்படி மாற்றப் போகிறீர்கள்? அவை அப்படியேதான் இருக்கும், மாறப் போவதில்லை. நீங்கள் தாம் மாறும்படி இருக்கும்.

**எதிர்காலத் துன்பம், தவிர்க்கப்பட வேண்டியது.**

கடந்தகாலத்தைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்காதீர்கள். அது முடிந்து போனது. அதை நீங்கள் மீண்டும் கட்டவிழ்க்க முடியாது. ஆனால், எதிர்காலத் துன்பத்தைத் தவிர்க்க முடியும். அதை எப்படித்தவிர்ப்பது?

> **காண்பவருக்கும் காணப்படுவதற்கும் இடையே உள்ள இணைப்பு தான் துன்பத்தைத் தோற்றுவிக்கிறது. அது - தகர்த்தெறியப்படவேண்டியது.**

உங்களுடைய குணங்களுக்கும், பண்புகளுக்கும், மனதின் பொறிகளுக்கும் (traps), பழக்கங்களுக்கும், ஸம்ஸ்காரங்களுக்கும், கடந்த காலத்துக்கும், மாறுகின்ற சூழ்நிலைகளுக்கும், எதிர்பார்ப்புகளுக்கும் நீங்களே சாட்சியாய் இருங்கள். இவை அனைத்தையும் நீங்கள் உணர்ந்திருக்க வேண்டும். ஒன்றை மட்டும் நினைவில் கொள்ளுங்கள், 'காண்பவர் காணப்படுவதாய் இருப்பதில்லை' என்பதை.

*'நீங்கள் காண்பது எதுவாயினும் அது நீங்களல்ல'*

உங்களுடைய சோம்பேறித்தனத்தை உங்களால் பார்க்க முடிகிறதென்றால் அது நீங்கள் அல்ல. உங்களுடைய மாறாத (constant) வேலையை உங்களால் காணமுடியலாம், ஆனால், அது நீங்கள் அல்ல. உங்களுடைய கடந்தகால நடத்தைகளை உங்களால் காணமுடியும் என்றாலும் அந்த நடத்தைகள் (conditionings) நீங்கள் அல்ல. காண்பவர் ஒருபோதும் காணப்படுகிறதாவதில்லை. நீங்கள் விழிப்புணர்வாயிருக்கிறீர்கள், அந்த விழிப்புணர்வு தான் காண்கிற அனைத்தையும் கடந்து செல்வது. கவனிப்பவர் கவனிக்கப்படுவதற்கும் அப்பால் இருக்கிறார்.

நீங்கள் எல்லாவற்றையும்விட உயர்நிலையில் உள்ள பிரக்ஞை (consciousness) இதைத்தான் விவேகம் என்கிறார்கள் விழிப்புணர்வு என்கிறார்கள். இதுவே ஒரு புத்தர் அடைகிற, அடைந்துபின் எப்போதும் தொடர்கிற நிலையுமாகும். இதனை நீங்கள் நிலையாக அடைவது சாத்தியமில்லை, ஆனால், சில கணங்களே என்றாலும் கூட நீங்கள் காண்பவர் நிலைக்கு, காணப்படுவதற்கு அப்பால் உள்ள நிலைக்கு உயர்ந்து விடுகிறீர்கள், திடீரென்று துன்பம் மறைந்துவிடும்.

*'வானத்து மேகங்கள் காணாமல் போகும் கணநேரத்துக்கு நீலவானம் காட்சியாகும்'*

ஒரு சுதந்திரத்தையும், அதன் மூலம் பரமசுகத்தையும் நீங்கள் பெறுவீர்கள். தொடக்கத்தில் சில கணங்களுக்கு மட்டுமே அது சாத்தியம்.

ஆனால், காலப்போக்கில், அதில் நீங்கள் வளர்ச்சி காண்கிறபோது, அதை உணரத் தொடங்குகிறபோது, அதன் ஆற்றலை உள்வாங்கிக் கொள்கிற போது அது இன்னும் அதிகமாகும்.

'ஒற்றைமேகமும் அற்றுப்போகிற ஒரு நாள் வரும்'

காண்பவர் காணப்படுவதற்கும் அப்பால் சென்றுவிடுவார். இவ்விதமாய் எதிர்காலத் துன்பம் தவிர்க்கப்படும்.

கடந்தகாலத்தில் நீங்கள் துயரப்பட்டீர்கள், எதிர்காலத்தில் துயரப்பட அவசியமில்லை. நீங்கள் துயரத்துக்குள்ளானால் அதற்கு நீங்களே பொறுப்பு. இதுவே திறவுகோல், எல்லாப் பூட்டுக்களையும் திறக்கக் கூடியது. நீங்கள் எல்லைக்கு அப்பாற்பட்டவர் என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்கள் உடம்பை நீங்கள் காணக்கூடுமெனில், அப்போது நீங்கள் அந்த உடம்பல்ல. உங்கள் கண்களைமூடி, எண்ணங்களின் வழியே நீங்கள் பார்க்க முடியுமெனில் அப்போது நீங்கள் எண்ணங்களுமல்ல. காரணம் - காண்பவர் எப்படி காட்சியாக முடியும்? காண்பவர் எப்போதுமே கடந்தவர். அவர் எல்லைக்கு அப்பாலிருப்பவர், மேம்பட்டவர்.

O

## 10. கொண்டாட்டத்தின் இரசவாதம்

முதல் கேள்வி:

'நான் எந்த அளவு என்னைக் கவனிக்கிறேனோ அந்த அளவிற்கு என் அகந்தையின் உண்மையல்லாத தன்மையை அனுபவத்தில் அறிகிறேன். எது தவறாயிற்று என்பது தெரியாமல் எனக்கு நானே அந்நியமாய் உணரத் தொடங்கினேன். முன்பிருந்த நெறிமுறை எதையும் இப்போது பெற்றிருக்கவில்லை என்கிற அசவுகர்ய உணர்வை இது என்னிடம் விட்டுச் செல்கிறது.'

இது நடக்கிறது. இப்படி நடக்க வேண்டுமென்று நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. அது ஒரு நல்ல சுட்டிக்காட்டல். அது நடந்ததற்காக ஒருவர் மகிழவேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஒருவர் அகமுகப் பயணத்தை மேற்கொள்கிறபோது எல்லாமே தெளிவாய், நிலையானதாய் தெரிகிறது; காரணம், அகந்தை கட்டுப்பாட்டில் இருக்கிறது, மேலும், அகந்தை எல்லா வழிகாட்டல்களையும், வரைபடங்களையும் வைத்திருக் கிறது. அகந்தை எஜமானனாய் இருக்கிறது. பயணத்தில் நீங்கள் கொஞ்சம் முன்னோக்கிச் சென்றால் அகந்தை ஆவியாகி மறையத் தொடங்கும், அது தவறானது என்பது தெரிவது அதிகமாகும். அது ஏற்படுத்தும் உருவெளித் தோற்றம் (பிரமை) அதன் ஏமாற்று வேலைதான்.

ஒருவர் கனவில் இருந்து விழித்தெழத் தொடங்கும்போது வழிகாட்டல்கள் தொலைந்து போகும். பழையகுரு அதற்குப் பிறகும் குருவாயிருக்க மாட்டார், புதிய குருவும் தோன்றியிருக்கமாட்டார். அங்கே ஒரு குழப்பம், பெருங்குழப்பம் நிலவும்.

இது ஒரு நல்ல அறிகுறி. பாதிப்பயணம் முடிந்துவிட்டது, ஆனால் அங்கு ஒரு அசௌகரியமான உணர்வு, சங்கட உணர்வு இருக்கும். ஏனெனில் நீ உன்னை இழந்து விட்டாற்போல, உனக்கு நீயே அந்நியமாகி விட்டதைப் போல, நீ யாரென்றே உனக்கு தெரியாததைப் போன்ற உணர்வு அது. இதற்கு முன் நீ யாரென உனக்குத் தெரியும் - உனது பெயர், உருவம், முகவரி, வங்கி கணக்கு - எல்லாமும் தெரியும், அது தான் நீ. நீ உன்னுடைய அகம்பாவத்துடன் அடையாளப்படுத்திக் கொண்டிருந்தாய். இப்போது அந்த அகம்பாவம் ஆவியாகி விட்டது; பழையவீடு இடிந்து போய்விட்டது, இப்போது நீ யார், எங்கேயிருக்கிறாய் என்பதே உனக்கு தெரியாது. எல்லாமும் இருண்டு, தெளிவற்று தெரிகிறது. பழையனயாவும் உறுதியாக அழிந்து போயின.

இது நல்லது ஏனெனில் பழையன யாவும் தவறானவையே. அது உண்மையில் உறுதியானதல்ல. அடி ஆழத்தில் அது உறுதியற்றதே. அதனால்தான் ஆணவம் ஆவியானதும், நீ உறுதியற்றதாக உணர்கிறாய். இப்போது உன்னுடைய இருப்பின் ஆழமான அடுக்குகள் உனக்கு புலப்படுகின்றன. நீ உன்னை ஓர் அந்நியனாக உணர்கிறாய். நீ எப்போதும் அந்நியன் தான் - நீ யாரென்று உனக்குத் தெரியும் என்று உணர்வு பூர்வமாக

ஆணவம் உன்னை ஏமாற்றிக் கொண்டிருந்தது. கனவு, உண்மை போல தோன்றும் அளவு ஆழமாக இருந்தது. காலையில், நீ கனவை விட்டு வெளியே வரும்போது, நீ யார், எங்கேயிருக்கிறாய் என்று திடீரென உனக்கு புரியாமல் போகிறது. எப்போதாவது காலையில் நீ இப்படி உணர்ந்திருக்கிறாயா? - திடீரென கனவிலிருந்து விழித்து எழும்போது, ஒரு கணம் நாம் யார், எங்கிருக்கிறோம் என்ன நடக்கிறது என்பது தெரியாமல் போகும்.

ஒருவர் ஆணவம் என்ற கனவிலிருந்து வெளியே வரும் போது இதுவே நடக்கிறது. அசௌகரியம், சங்கடம், வேரிழந்த தன்மை உணரப்படுகிறது, ஆனால் இதைக் குறித்து சந்தோஷப்படவேண்டும். நீ இதை துயரமாக எடுத்துக் கொண்டால், நீ திரும்பவும் எல்லாமும் வரையறுக்கப்பட்ட, குறிக்கப்பட்ட நிலைக்கு, எல்லாமும் உறுதியானதாக தெரியும் நிலைக்கு, வழிகாட்டுதல் உள்ள நிலைக்கு, ஆசைகள் உள்ள பழைய நிலைக்கு விழுந்து விடுவாய்.

சங்கடத்தை விடு. அது அங்கே இருந்தால் கூட, அதனால் மிகவும் பாதிப்புக்குள்ளாகாதே. அது அங்கே இருக்கட்டும், கவனி, பின் அதுவும் போய் விடும். விரைவில் சங்கடம் மறைந்து விடும். அது அங்கே இருப்பதன் காரணம் உறுதி என்ற பழைய பழக்க வழக்கமே. நிலையற்ற பிரபஞ்சத்தில் எப்படி வாழ்வது என்று உனக்கு தெரியாது. பாதுகாப்பற்ற தன்மையில் வாழ்வது எப்படி என்று உனக்கு தெரியாது. அந்த பழைய பாதுகாப்பு உணர்வினால் தான் இந்த சங்கடம் எழுகிறது. அது ஒரு பழைய பழக்கம் தான், காலை குடிமயக்கம்தான். அது போய்விடும். காத்திரு, கவனித்திரு, தளர்வாக இரு, ஏதோவொன்று நிகழ்கிறது என்று மகிழ்ச்சி கொள். நான் சொல்கிறேன், அது ஒரு நல்ல அறிகுறி. பலர் சௌகரியமாக இருப்பதற்க்கு, நிம்மதியாக இருப்பதற்கு இந்த நிலையில் இருந்து திரும்பி வந்து விடுகிறார்கள். அவர்கள் தவற விட்டுவிடுகிறார்கள். அவர்கள் இலக்கிற்கு அருகே வந்து விட்டு, திரும்பிப் போய் விடுகிறார்கள். அதை செய்யாதே. முன்னேறு, நிலையற்ற நிலை நல்லது, அதில் தவறேதும் இல்லை. நீ இணக்கம் பெற வேண்டும், அவ்வளவு தான் .

தன் முனைப்பின் நிலையான தன்மையுடன், பாதுகாப்பான தன்மையுடன் இணக்கம் அடைந்திருக்கிறாய். மேலோட்டமாக என்ன தவறாக தெரிந்தாலும், எல்லாமும் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருப்பதாக தெரிகிறது. நிலையற்ற பிரபஞ்சத்துடன் நீ இணக்கம் சிறிதளவு பெற வேண்டும்.

பிரபஞ்சம் நிலையற்று, பாதுகாப்பற்றது, ஆபத்தானது. அது மாறுவது: விஷயங்கள் மாறும், மாற்றம் பெறும். அது ஒரு வித்தியாசமான உலகம் -

அதனுடன் பழக்கப்பட வேண்டும். சிறிது துணிவோடு, முன்னே பார் - பின்னே பார்க்காதே - விரைவில் இந்த நிலையற்ற தன்மையே அழகாக மாறிவிடும், இந்த பாதுகாப்பற்றது அழகானதாகத் தோன்றும்.

உண்மையில், பாதுகாப்பற்றது அழகானது, ஏனெனில் பாது காப்பற்றது வாழ்க்கை. பாதுகாப்பு அசிங்கமானது. அது இறப்பின் ஒரு பகுதி - அதனால் தான் அது பாதுகாப்பாக இருக்கிறது. வழிகாட்டுதல் இன்றி வாழும் வாழ்க்கைதான் வாழ்க்கை. வழிகாட்டுதலோடு வாழ்ந்தால் அது போலிவாழ்க்கை தேர்ந்த வழிகாட்டுதல் நெறிமுறைகள்.... உன் வாழ்வின் மேல் ஏதோ ஒன்றை நீ திணிக்கிறாய், உன் வாழ்வை வார்க்கிறாய்,, அது அப்படியே இருக்க நீ அனுமதிக்கவில்லை. நீ அதிலிருந்து வேறு எதையோ உருவாக்க முயற்சிக்கிறாய். வழிகாட்டுதல் முரட்டுத்தனமானது. எல்லா தேர்வுகளும் அசிங்கமானவை. அவற்றின் மூலம் நீ உன்னை தவற விடுகிறாய், நீ ஒரு போதும் உன் இருப்பை அடையப் போவதில்லை.

மாறுதல் ஒன்றும் இருப்பதல்ல. ஏதோ ஒன்றாக மாற முயற்சிக்கும். எல்லா பிரயத்தனங்களும் உன்மேல் வேறு எதையோ திணிப்பவையே. அது ஒரு முரட்டுத் தனமான முயற்சி. நீ துறவியாகலாம், உன் துறவு தனத்தில் அசிங்கமிருக்கும். நான் சொல்கிறேன், அழுத்தி சொல்கிறேன்: எந்த வழிகாட்டுதலும் இன்றி வாழ்ந்தால் தான் துறவு மனப்பான்மை சாத்தியமாகும். நீ ஒரு பாவியாக கூட மாறலாம்; ஆனால் உன் பாவத் தனத்தில் கூட நீ பாவியாக இருப்பதில் கூட ஒரு புனிதம், ஒரு துறவறம் இருக்கும்.

வாழ்க்கை புனிதமானது; நீ அதன் மேல் எதையும் திணிக்க வேண்டியதில்லை, நீ அதை வார்த்தெடுக்க வேண்டியதில்லை, நீ அதற்கு ஒரு வழிமுறை, நெறிமுறை, ஓர் ஒழுங்கு' கொடுக்க வேண்டியதில்லை. வாழ்க்கைக்கு அதற்கே உரிய ஒழுங்கு, நெறிமுறை உண்டு. அதனுடன் மிதந்து செல். நதியை தள்ள முயற்சிக்காதே. நதி ஓடுகிறது - அதனுடன் ஒன்றாகி விடு, அது உன்னை கடலுக்கு எடுத்து செல்லும். இதுதான் ஒரு சந்நியாசியின் வாழ்க்கை: நிகழும் வாழ்க்கை, நடத்தும் வாழ்க்கையல்ல. பிறகு மெதுமெதுவாக உன் இருப்பு உரசல்களை தாண்டி, மேகத்தைத் தாண்டி, கடந்து செல்லும். திடீரென நீ சுதந்திரமடைவாய். வாழ்வின் ஒழுக்கமற்றதில் ஒரு புதிய ஒழுங்கை நீ காண்பாய், ஆனால் இந்த ஒழுங்கின் குணாதிசியமே முற்றிலும் வேறானது...... அது உன்னால் திணிக்கப் பட்டதல்ல, அது வாழ்க்கையினுடையது.

மரங்கள், நதிகள், மலைகள் எல்லாவற்றிற்கும் ஓர் ஒழுங்கு உண்டு, ஆனால் அவை போதனையாளர்களால், புனிதர்களால் பாதிரியார்களால்

பதிக்கப்பட்டது அல்ல. அவை வழிகாட்டுதலுக்காக யாரிடமும் போவ தில்லை. ஒழுங்கு அதனுள்ளேயே இருக்கிறது; அது வாழ்க்கையிலேயே இருக்கிறது. அங்கு அலைக்கழிப்பதற்கோ, ஏமாற்றி சுரண்டவோ தன்முனைப்பு என்ற அகம்பாவம் அங்கு இல்லையெனில், - அதை செய், இதை செய்யாதே - என்ற சொல்ல ஆணவம் இல்லையெனில் ஓர் உள் ஒழுங்கு தானாகவே உனக்கு வந்து சேரும்.

அகந்தையிலிருந்து விடுபட்ட ஒரு நிறைவை, ஒழுங்கு முறையைப் பெறுவீர்கள். அது எந்தவொரு தூண்டலுமற்றதாயிருக்கும். எதையும் நாடிச் செல்வதாயிருக்காது, அது பாட்டுக்கு நடக்கும் சுவாசிக்கிறமாதிரி. பசித்தால் உண்பது, உறங்கத் தோன்றினால் படுத்துறங்குவது இப்படி. அது ஓர் உள்ளார்ந்த ஒழுங்கு, இயல்பானது. பத்திரமற்ற தன்மையுடன் நீங்கள் ஒத்துப் போகிறபோது, உங்களுடை புதுமையுடன், புரிதலின்மை (struangeness) யுடன் இசைவாகிற போது, உங்களுடைய அறிந்திராத இருப்புணர்வுடன் இணக்கமடைகிற போது இது வந்தடைகிறது.

'ஸென்' (zen) னில் மிகவும் நேர்த்தியானவர்க்கொன்றைச் சொல்கிறார்கள்.

மனிதன் உலகாயதமாய் வாழ்கிறபோது மலைகள் மலைகளாகவும், ஆறுகள் ஆறுகளாயும் இருக்கின்றன. அவன் தியானத்துக்குள் சென்று விட்டால் அதற்குமேல் மலைகளும் இருக்காது, ஆறுகளும் இருக்காது. ஒவ்வொன்றும் குழப்பமாய் பெருங்குழப்பமாய் இருக்கும். ஆனால் ஒருவன் * ஸடோரி (satori) யை அடைந்துவிட்டால், சமாதிநிலைக்குச் சென்றுவிட்டால் மீண்டும் ஆறுகள் ஆறுகளாகிவிடும், மலைகள் மலைகளாகிவிடும்.

மூன்று நிலைகள் உள்ளன: முதலாவது, அகந்தையுடன் (ego) தீர்மானமாயிருப்பது. இரண்டாவது அகந்தையின்மையில் (non-ego) தீர்மானமாயிருப்பது. இரண்டுக்குமிடையில் இருப்பது குழப்பம் - அகந்தை நிச்சயத்தன்மையற்று மறைவதால் ஏற்படுகிற, இன்னும் நிச்சயத்தன்மை பெற்றிராத வாழ்க்கையில் உண்டாகிற குழப்பம். இது மிகவும் ஆற்றல் கொண்ட, வளம் பொதிந்த தருணமாகும். நீங்கள் அச்சத்துடன் செயல் முறையை மாற்றினால் சாத்தியத்தைத் தவறவிடுவீர்கள்.

உண்மையான நிச்சயத்தன்மை முன்பே உள்ளது. அது நிச்சயமின்மை (uncertainity) க்கு எதிரானதல்ல. அது பெரிய அளவில் பாதுகாப்பானது. பாதுகாப்பின்மையையும் தன்னில் உள்ளடக்கிக் கொண்டிருக்கு மளவிற்கு,

---

* ஸடோரி - திடீரென்று ஏற்படும் ஞான உதயம்

பாதுகாப்பின்மை குறித்து அஞ்சாத அளவிற்கு. பாதுகாப்பற்றத் தன்மையை அது உள்வாங்கியிருக்கிறது, அத்தனை முரண்பாடுகளையும் அது உட்கொண்டிருக்கிறது. எனவே சிலர் அதனைப் பாதுகாப்பானது என்றும். சிலர் அதனைப் பாதுகாப்பற்றது என்றும் எண்ணுகிறார்கள். உண்மையில் அது இரண்டில் எதுவுமேயில்லை. உங்களுக்கு நீங்கள் அந்நியமாகி விட்டிருப்பதாய் உணர்ந்தால் அதைக் கொண்டாடுங்கள், இதமாய் உணருங்கள்.

*'இந்தக் கணம் மிக அரிதானது இதனை அனுபவித்து மகிழுங்கள்'*

நீங்கள் எந்த அளவு அனுபவிக்கிறீர்களோ அந்த அளவிற்கு நிச்சயத்தன்மை உங்களை நெருங்கிவரும் வேகவேகமாய். உங்களுடைய வியப்பிற்குரிய நிலையை, வேரோடு பிடுங்கியெறியப்பட்டிருக்கும் நிலையை, வீடற்ற நிலையை உங்களால் கொண்டாட முடிந்தால் விரைவிலேயே வீட்டில் இருப்பீர்கள் - மூன்றாவது நிலை வரப்பெறும்.

இரண்டாவது கேள்வி:

> மேற்கு ஆன்மாசார்ந்த விஷயங்களிலும்கூட அதீதத் தன்மையில் அவதிப்படுவதாய் தெரிகிறது. நூற்றுக்கணக் கான உணவுதான்யங்களில் எந்தத் தயாரிப்பு சிறந்தது என்று தீர்மானிக்க முயல்வதைப்போல் பல்வேறு தடுமாற்றங்கள் உள்ளன. 'இது சந்தையில் இன்னொரு மக்காச்சோளம் பெட்டி' என்று அவர்கள் எண்ணிவிடாதபடிக்கு உங்கள் முக்கியத்துவத்தை மேற்கத்தியர்களுக்கு நாங்கள் எப்படித் தெரிவிப்பது?

உலகம் ஒரு விற்பனைச் சந்தை, அது சந்தையாயிருப்பதில் தவறேதுமில்லை. நீங்கள் ஏன் அதற்கு எதிர்ப்பாயிருக்கிறீர்கள்? சந்தை ஓர் அழகான இடம். நீங்கள் ஓய்வெடுப்பதற்காய் மலைப்பிரதேசங்களுக்குச் செல்வீர்கள், ஆனால் முடிவில் சந்தைக்குத் திரும்பி வருவீர்கள். சந்தை என்பது நிஜம். மலைகள் விடுமுறையைக் கழிக்கலாம் ஆனால் சந்தையைப் போல் மலைகள் அத்தனை நடைமுறைக்கேற்றதாயிருக்காது.

எருதுகள் மேய்க்கும் 'ஸென்' படங்கள் பத்தினை நீங்கள் பாத்திருப் பீர்கள். அவை அழகானவை. முதல் படத்தில் எருது தொலைந்து விட்டிருக்கும். இங்கே எருது சுயம் (self) பற்றிய குறியீடு ஆகும். எருதின் சொந்தக்காரர் அதைத் தேடிக் கொண்டிருப்பார். அவர் காட்டுக்குள் செல்வார், அந்த எருது எங்கே தப்பியோடிற்று என்பது அவருக்குத் தெரியாது, அது எங்கே மறைந்திருக்கிறது என்று தெரியாமல் அவர் தேடிக்

கொண்டேயிருப்பார். அடுத்த படத்தில் எருதின் காலடித் தடங்களை அவர் கண்டறிவார். மூன்றாவது படத்தில் சற்று தொலைவில் எருதின் பின்புறம் தெரியும் அதன் வாலையும் அவர் காண்பார். நான்காவது படத்தில் எருதின் முழுத்தோற்றத்தையும் அவரால் காண முடிகிறது அதன்வாலை அவர் பற்றி விடுகிறார். ஐந்தாவது படத்தில் அதைத் தனது கட்டுப்பாட்டில் கொண்டு வருகிறார். ஆறாவது படம் அவர் அந்த எருதின்மீது அமர்ந்து வீடு திரும்புவதைச் சித்திரிக்கும். கதை இவ்விதமாய் போய்க் கொண்டிருக்கும். ஏழாவது படத்தில் அந்த எருது கடந்து செல்லும். எட்டாவது படத்தில் எருதும் அதன் சொந்தக்காரரும் மறைந்து விட்டிருப்பார்கள். ஒன்பதாவது படத்தில் உலகம் மீண்டும் - மலைகள், மரங்கள், பூக்கள் என்று காட்சி யளிக்கத் தொடங்கும். ஆனால் எருதையோ அதன் சொந்தக்காரரையோ உங்களால் பார்க்க முடியாது. பத்தாவது படத்தில் எருதின் சொந்தக்காரர் சந்தையில் நின்று கொண்டிருப்பார். அவர் அங்கே நிற்பதோடு மது போத்தல் ஒன்றையும் வைத்துக் கொண்டிருப்பார்.

அந்தக் காலத்தில் எட்டு படங்கள் தாம் இருந்தன. எட்டாவது படம் வெற்றாய் எதுவுமில்லாமல் இருந்தது. தியானத்தின் உச்சநிலை அதுதான், அங்கே எல்லாம் மறைந்துவிடும். தேடுபவர், தேடப்படுவது உட்பட எல்லாமும் மறைந்து, வெறுமையே எஞ்சி நிற்கும். ஆனால் அப்போதும் அது பூர்த்தி செய்யப்படாமல் விடப்பட்டதென்று ஒரு ஸென் துறவி உணர்ந்தார். வட்டம் பூர்த்தியடைய வேண்டும் என்றால் ஒருவர் மீண்டும் உலகுக்கு வந்தாக வேண்டும். மலைகள் விரும்பத்தக்கவைதாம் ஆனால் நீங்கள் மலைகளிலேயே இருந்துவிட்டால் வட்டம் பூர்த்தியடையாது. சந்தைக்குத் திரும்பி வந்தாகவேண்டும். பிறகு அவர் மேலும் இரண்டு படங்களைச் சேர்த்தார், அவர் செய்தது முறையானதென்றே நான் எண்ணுகிறேன். இப்போது வட்டம் பூர்த்தியாகிவிட்டதே. நீங்கள் சந்தையில் இருந்து புறப்படுகிறீர்கள், சந்தைக்கே திரும்ப வருகிறீர்கள். அதே சந்தைதான் என்றாலும் நீங்கள் அதே ஆளாய் இருப்பதில்லை. உலகம் இருக்கிறபடி இருந்தாலும் நீங்கள் அப்படியே இல்லை. நீங்கள் அங்கே திரும்பி வந்துதானாக வேண்டும்.

எப்போதுமே அப்படித்தான் நடக்கிறது. மகாவீரர் காடுகளிலும் மலைகளிலும் மவுனியாய் பன்னிரண்டு ஆண்டுகளைக் கழித்தார். பிறகு - ஒருநாள் திடுதிப்பென்று திரும்பவும் சந்தைக்கு வந்துவிட்டார். புத்தர் ஆறு ஆண்டுகளைத் தனிமையில் கழித்தார். பிறகு ஒருநாள் தனக்கு என்ன நேர்ந்தது என்பதைச் சொல்வதற்காக மக்கள் திரண்டிருக்கும் சந்தைக்கு வந்தார். இயேசு நாற்பது நாட்களை மலைகளில் கழித்துவிட்டு வந்தார். ஆனால், நீங்கள் எப்போதைக்குமாய் மலைகளிலேயே எப்படி

இருப்பீர்கள்? வட்டம் அரைகுறையாய் நின்றுவிடும். நீங்கள் மலைகளில் அடைந்தது என்னவோ அது சந்தைக்கு திருப்பி கொடுத்தாக வேண்டும்.

முதல் விஷயம் இதுதான்: சந்தையிடம் எதிர்ப்பு கொண்டுவிடாதீர்கள். ஒட்டு மொத்த உலகமும் ஒரு சந்தைதான். எதிர்ப்பாய் இருப்பது நல்லதல்ல. மக்காச்சோளப் பெட்டியாயிருப்பதில் என்ன தவறு? மக்காச்சோளம் அற்புதமானது. உங்களைப் போலவே புத்தநிலையை அடையும் சாத்தியம் அதற்கும் உண்டு.

நான் சில குட்டிக் கதைகளை உங்களுக்குச் சொல்ல வேண்டும்.

லின் சி என்கிற 'ஸென்' குரு சணலை எடைபோட்டுக் கொண் டிருந்தார். தேடல் உள்ள ஒருவன் அவரிடம் வந்து, 'நான் ரொம்ப அவசரத்தில் இருக்கிறேன், என்னால் காத்திருக்க முடியாது. ஆனால் ஒரு கேள்வி கேட்டேயாக வேண்டியிருக்கிறது. புத்தநிலை என்றால் என்ன?' என்று கேட்டான். குரு அவன் பக்கம் திரும்பக்கூட செய்யவில்லை. 'ஒருபவுண்ட் சணல்' என்றார் தொடர்ந்து எடை போட்டபடி. 'ஒரு பவுண்ட் சணல்' என்பது 'ஸென்'னில் இரகசியக் குறியீட்டு மொழியாகிவிட்டது.

சணல்கூட புத்தநிலைக்கான சாத்தியத்தைக் கொண்டிருக்கிறது.

'ஒவ்வொன்றிலும் புனிதம் எல்லாவற்றிலும் தெய்வத்தன்மை'

நீங்கள் எதையேனும் பயன்படுவதற்குத் தகுதியற்றது என்று தீர்மானித்தால் உங்களிடம் ஏதோவொன்று தவறாகிவிட்டிருக்கும்.

ஒரு சமயம், லின்சி மரத்தடியில் அமர்ந்திருந்தார், அவரிடம் ஒருவன் கேட்டான், 'ஒரு நாய் புத்தராகும் சாத்தியம் இருக்கிறதா?' என்று. நாய் புத்தராக முடியுமா? லின்சி என்ன செய்தார் தெரியுமா? நாலுகால்களில் தாவி 'ஊஃப், ஊஃப்' என்று குலைத்தார். அவர் 'ஒரு நாயாகிவிடுவது எவ்வகையிலும் தவறாகாது' என்று சொன்னார்.

உண்மையில் இதுதான் சமய நம்பிக்கை கொண்ட ஒரு மனிதனின் மனோபாவம் ஆகும்.

'வாழ்க்கை தெய்விகமானது
எவ்வித நிபந்தனையுமற்றது'

சந்தையில் ஒருபெட்டி மக்காச் சோளமாயும் இருக்கலாம், தவறில்லை. எனவே மக்களிடம் என்னைப் பற்றிச் சொல்வதில் அச்சம் வேண்டாம். சந்தையைக் குறித்தும் அஞ்ச வேண்டியதில்லை. சந்தை எப்போதும் இருந்ததுதான், எப்போதும் இருக்கும். சந்தையில் எதுவும் விலைபோகும். சரியில்லாத பொருளும் விற்கப்பட்டுவிடும். அதை யாரும் தடுக்க முடியாது. அங்கே சரியான பொருளை விற்க வருபவர்கள் அதைக் கண்டு

அச்சமடைகிறார்கள். அவர்கள் எப்போதுமே அச்சத்துக்குள்ளாகிறவர்கள். 'மோசமானவற்றின் நடுவே வைத்து நல்லவற்றை எப்படி விற்பது?' என்று அவர்கள் எண்ணமிடுகிறார்கள். ஆனால் இது எந்த விதத்திலும் அவர்க ளுக்கு உதவப் போகிறதில்லை. உண்மையில் சரியில்லாதவற்றின் விற்பனைக்கே நீங்கள் உதவி செய்வதாகி விடுகிறது.

பொருளாதாரத்தில் ஒரு விதி சொல்கிறது, 'போலி நாணயங்கள் உண்மையான நாணயங்களை வெளியேற்றிவிடும்' என்று. உங்களிடம் ஒரு போலிநாணயமும் உண்மையான நாணயமும் இருந்தால் முதலில் போலி நாயணத்தைத் தான் புழக்கத்தில் விடப்பார்ப்பீர்கள். எப்படியாவது அதிலிருந்து விடுபட்டால் போதும் என்ற எண்ணத்தில் நீங்கள் அதைத் தள்ளிவிடவே விரும்புவீர்கள். இப்படித்தான் நிறைய போலி நாணயங்கள் புழக்கத்தில் இருப்பது. உண்மையான நாணயத்தை யாரேனும் சந்தைக்குக் கொண்டுவர வேண்டும். அப்போது உண்மை பலனளிப்பதாயிருக்கும்.

கொஞ்சம் கவனியுங்கள் - போலிகள் தொடரும் நிலையில் ஏன் உண்மையால் தொடர முடியாது? ஆனால், உண்மையான பொருளை வைத்திருப்பவர்கள் எப்போதுமே தேவையற்ற பிரச்சினைகளில் அஞ்சி நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். நிறையபேர் என்னைப் பற்றிப் பிறரிடம் பேசுவதற்கு அஞ்சிக் கொண்டிருப்பது எனக்குத் தெரியும். 'உரிய நேரம் வரட்டும், அப்போது பார்த்துக் கொள்வோம்' என்று அவர்கள் நினைக்கிறார்கள். அது எப்போது வருமென்று யாருக்குத் தெரியும்?

அவர்கள் நினைக்கிறார்கள், 'நான் எப்படிச் சொல்ல முடியும்? எனக்கு அதிக அனுபவமில்லை' என்று. என்னைப் பற்றிப் பேசினால் அது இன்னொரு விளம்பரமாகிவிடுமோ என்றும் அவர்கள் நினைக்கிறார்கள். நீங்கள் தொலைக்காட்சி அல்லது வானொலியில் பேசினால் அல்லது செய்தித்தாளில் கட்டுரைகள் எழுதினால் அது நீங்கள் எதையோ விற்க முனைவதாய் தெரியும். மலிவாய் தெரியும். ஆனால் போலிகளையும், மோசமானவற்றையும் விற்பவர்கள் அதுபற்றி அச்சமோ கவலையோ படுவதில்லை. பெட்டியில் மக்காச் சோளம் இருக்கிறதா இல்லையா என்பது குறித்து அவர்கள் அலட்டிக் கொள்வது கிடையாது. உள்ளே வெற்றா யிருந்தாலும் அழகான பெட்டிகளை அவர்கள் சுளுவாய் விற்று விடுவார்கள். அவர்கள் அச்சப்படுவதில்லை.

இப்படித்தான் கெட்டவர்கள் நேர்மையானவர்களைப் புழக்கத்தில் இல்லாமல் செய்து விடுவது. தரக்குறைவானதை அவர்கள் உரக்கக்கூவி விற்றுவிடுகிறார்கள். அதைக் காது கொடுத்துக் கேட்பவர்கள் நம்பி வாங்குகிறார்கள்.

அச்சப்படாதீர்கள். நீங்கள் அச்சப்பட்டால் சரியில்லாதவற்றைச் சந்தையில் இருந்து வெளியேற்ற முடியாது. அவற்றை வெளியேற்ற ஒரேவழி சரியானவற்றைச் சந்தைக்குக் கொண்டு வருவதுதான். உங்களிடம் சரியான பொருள் இருந்தால் கூரை மீது ஏறிநின்று உரக்கக் கூவுங்கள். கவலைப்படாதீர்கள். உங்களால் முடிந்த அளவு உரக்கக் கூவுங்கள். உலகத்தில் இப்படித்தான் கருத்துகள் வெற்றிபெறுகின்றன. செயல்கள் நடந்தேறுகின்றன, பொருட்கள் தள்ளிவிடப்படுகின்றன.

இயேசு தம்முடைய சீடர்களிடம் சொல்வார் 'உலகின் தொலைதூர மூலை முடுக்குகளுக்கெல்லாம் போங்கள். வீட்டுக் கூரை மீதிருந்து கூக்குரலிட்டு மக்களை மாற்றுங்கள். அப்போது தான் எல்லோராலும் கேட்க முடியும். அவ்வேளையில் எது உண்மை என்பதை அவர்கள் தெரிந்து கொள்வார்கள்' என்று.

புத்தர் தம்முடைய சீடர்களுக்குச் சொல்வார் 'போங்கள், ஒரே இடத்தில் நீண்டகாலம் தங்கிவிடாதீர்கள், காரணம் பூமி பெரியது.' புத்தரின் வார்த்தை 'மேலேபோ! மேலேபோ' (தொடர்ந்துசெல்) என்பதுதான். அந்த வார்த்தையைக் கேட்பதற்கு இன்னும் பலர் இருக்கிறார்கள். நிற்காதீர்கள், ஓய்வு கொள்ளாதீர்கள், போய்க் கொண்டே இருங்கள். தொடர்ந்து முன்னோக்கிச் செல்லுங்கள்

'ஒட்டுமொத்த உலகமும் காத்திருக்கிறது நீங்கள் கொண்டு செல்லும் செய்திருக்காக'

அஞ்சவேண்டாம். துணிவு பெறுங்கள். உங்களிடம் மக்களுக்கேற்ற தகுதியான மக்காச்சோளம் இருப்பதாய் நீங்கள் உணர்ந்தால் சந்தைக்குச் செல்லுங்கள். தயக்கம் வேண்டாம், துணிவைச் சேகரித்துக் கொள்ளுங்கள். வெற்றுப் பெட்டிகளெல்லாம் விற்பனைக்கு வரும்போது, நீங்கள் மக்காச்சோளம் நிரம்பிய பெட்டியை விற்பதன் மூலம் வெற்றுப் பெட்டிகளை புழக்கத்தில் இல்லாமல் செய்துவிடலாம். வேறு வழி இல்லை: அதில் தவறில்லை. சந்தையில் எது வேண்டுமானாலும் போட்டிபோடலாம், தடையேது.

'வெற்றிக்கான வாய்ப்பு மற்றவர்களைப் போல் உங்களுக்கும் இருக்கிறது'

மனிதர்களின் தயக்கத்துக்குக் காரணம் தாங்கள் ஏதேனும் சொன்னால் மற்றவர்கள் அதை மறுத்துவிடுவார்களோ என்பதுதான். யாருக்குத் தெரியும்? நல்லவர்கள் எப்போதுமே தயக்கம் காட்டுகிறவர்களாயும் கெட்டவர்கள் உறுதியும் தன்னிச்சையாய் செயல்படும் போக்கும்

உள்ளவர்களாயிருக்கிறார்கள். அதனால் தான் பெருமளவு உலகம் கெட்டவர்களின் பிடியில் சிக்கிக் கொண்டிருக்கிறது - நல்லவர்கள் சந்தைக்கு வெளியே நின்று கொண்டிருக்கிறார்கள். 'என்ன செய்யலாம், செய்யக் கூடாது' என்று அவர்கள் சிந்தித்துக் கொண்டிருக்கும் நேரத்தில் சந்தை முழுதும் போலியானவற்றால் நிரம்பிவழிகிறது.

மேற்கில் மனிதனுக்கு மனிதன் நெருங்கிவருவது சாத்தியமில்லாமல் போய்விட்டது. எல்லாவற்றுக்கும் தகவல் தொடர்பு ஊடகங்களையே நீங்கள் பயன்படுத்தும்படி இருக்கும். புத்தருடைய காலத்தில் அது முற்றிலும் வேறாயிருந்தது - புத்தரே மக்களைத் தேடிச் சென்று சந்தித்தார். அப்போது செய்தித்தாள் இல்லை, வானொலி தொலைக்காட்சி இருந்ததில்லை. ஆனால் இப்போது மக்களைத் தனிப்பட்ட முறையில் சந்திப்பது சாத்தியமற்றதாகிவிட்டது. குறிப்பாக மேற்கில் வெகுஜன ஊடகத்தைப் பயன்படுத்தினாலன்றி சாத்தியமே இல்லை. ஊடகப் பயன்பாடு தியானத்தை ஒரு வாணிபப் பொருளாக்கிவிட்டது என்றே சொல்ல வேண்டும். மக்கள் பயன்படுத்துகிற அதே சொற்களை அதே மொழியை நீங்களும் பயன்படுத்தி, அவர்கள் மற்ற காரியங்களுக்காக நயந்துபேசி நம்பவைக்கும் அதே முறையை நீங்களும் கையாள்வீர்கள். அனைத்து தியானங்களிலும் இதுவே உயர்ந்த தியானம் என்று நீங்கள் சொல்லும்போது அது ரொம்பவும் விளம்பரத்தனமாய் தெரியும், காரணம் பலபேர் இதையே சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் 'சோப்' (soap), புகளைப் பற்றிச் சொல்லும்போது 'இதுதான் 'சோப்பு'களில் உயர்ந்தது, நறுமணப் பொருள்களில் இதுவே உயர்ந்தது' என்கிறார்கள். 'எக்ஸ்டஸி' என்ற பெயரில் வாசனைப் பொருள் இருக்கிறது. கொஞ்சநாளில் யாராவது ஸடோரி (satori), ஸமாதி என்று வாசனைப் பொருளுக்குப் பெயர் வைப்பார்கள். நீங்கள் அதே சொற்களை அதே மொழியைப் பயன்படுத்தியாக வேண்டும். வேறுவழியில்லை. அதே செயல்முறை களைப் பயன்படுத்தும்படி இருக்கும், அதில் தவறேதுமில்லை.

நான் மலைகளில் இருந்தேன், சந்தைக்குத் திரும்பிவிட்டேன். என் கைகளில் மதுக்குப்பியை நீங்கள் பார்க்கவில்லையா? தற்போது நான் சந்தையில் இருக்கிறேன். நீங்கள் துணிவுடன் இருக்கவேண்டும். போங்கள், கிடைக்கிற அத்தனை ஊடகங்களையும் பயன்படுத்துங்கள். நீங்கள் ஒரு புத்தரைப் போலவோ, ஓர் இயேசுவைப் போலவோ அதைச் செய்ய முடியாது - அந்த நாட்கள் முடிந்துவிட்டன. நீங்கள் அதே முறையைக் கையாண்டால் உங்கள் செய்திகளைப் பரவச் செய்வதற்குப் பல இலட்சம் ஆண்டுகள் ஆகிவிடும். செய்திகள் மக்களைச் சென்றடையும் நேரத்தில் அது தனது ஆற்றலை இழந்துவிட்டிருக்கும். சோளம் புதிதாயிருக்கும்போதே மக்களைச் சென்றடைய வேண்டும், விரைந்து செயல்படுங்கள்.

மூன்றாவது கேள்வி:

கொண்டாட்டத்தைப் பற்றித் தாங்கள் இன்னும் கூடுதலாய் சொல்ல முடியுமா? துன்பத்தைக் கொண்டாடுவது சாத்தியமா?

கொண்டாட்டம் ஒரு மனோபாவம் என்பதால் அது சாத்தியமே. துன்பத்திலும் கூட நீங்கள் கொண்டாட்ட மனோபாவம் கொள்ள முடியும். உதாரணமாய் நீங்கள் துயரத்தில் இருக்கிறீர்கள் - ஆனால் துயரத்துடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள். ஒரு சாட்சியின் நிலையில் இருந்து துயரக்கணங்களை அனுபவியுங்கள். துயரத்திலும் ஓர் அழகு இருக்கத்தான் செய்கிறது. நீங்கள் ஒருபோதும் அதைக் கவனித்த தில்லை. ஒரு துயரமான தருணத்தின் அழகை ஊடுருவிப்பார்க்க முடியாத அளவுக்கு நீங்கள் அதனுடன் சம்பந்தப்பட்டு விடுகிறீர்கள். நீங்கள் கவனித்தால் எத்தகைய அருநிதியங்களைத் தவறவிட்டுக் கொண்டிருக்கி றீர்கள் என்பதறிந்து திகைத்துப்போவீர்கள். கவனியுங்கள் - நீங்கள் மகிழ்ச்சியில் இருக்கும்போது துயரத்தில் இருப்பதைப்போல் அத்தனை ஆழ்ந்து இருப்பதில்லை. துயரம் ஆழ்ந்த தன்மை கொண்டது. மகிழ்ச்சியோ மேலோட்டமானது. மகிழ்ச்சியாயிருப்பவர்களைக் கவனித்துப் பாருங்கள். மகிழ்ச்சிகுமிழிட், புன்னகைத்தபடி பையன்களும் பெண்களும் நாடகக் கொட்டகைகளிலும், நடனக் கூடங்களிலும் திரிவார்கள். அங்கே ஆழமற்ற மேலோட்டமான மகிழ்ச்சியை நீங்கள் காண்பீர்கள். தங்களை மகிழ்ச்சியா யிருப்பது போல் அவர்கள் காட்டிக் கொண்டாலும், அதில் ஆழம் இருக்காது.

மகிழ்ச்சி என்பது மேற்பரப்பில் தோன்றி மறையும் அலைகள், ஓர் ஆழமற்ற வாழ்க்கையை நீங்கள் வாழ்கிறீர்கள். ஆனால், துயரம் தனக்கென்று ஓர் ஆழத்தைப் பெற்றிருப்பது. நீங்கள் துயரத்தில் இருக்கும்போது அது மேற்பரப்பில் அடிக்கும் அலையாயிருக்காது, மைல் கணக்கில் ஆழமான பசிபிக் கடலைப் போன்றிருக்கும்.

ஆழத்துக்குச் சென்று, கவனியுங்கள். மகிழ்ச்சி இரைச்சலிடுவதாயும், துயரம் ஓசையற்றதாயும் இருக்கும். மகிழ்ச்சி பகலென்றால் துயரம் இரவு. மகிழ்ச்சி ஒளி என்றால் துயரம் இருட்டு. ஒளி வந்து போவது, இருள் நிரந்தரமானது. நீங்கள் துயரத்தில் இருக்கும்போது இதையெல்லாம் உணர்வீர்கள். திடீரென்று துயரம் ஒரு குறிக்கோளாகிவிட்டதுபோல் இருக்கும். நீங்கள் சாட்சிபாவத்தில் இருந்து அதைக் கவனிப்பதில் மகிழ்ச்சியை உணரத் தொடங்குவீர்கள். துயரம் அத்தனை அழகானது.

அது-

'இருளின் மடியில் பூத்த பூ, முடிவற்ற ஆழத்தில் பூத்தது'

அடித்தளமில்லாத பாதாளத்தை (abyss)ப்போல் அத்தனை நிசப்தமாய், இசையார்ந்திருப்பது (musical) அங்கே குறைந்தபட்ச ஓசையுமில்லை, இடர்ப்பாடுமில்லை. ஒருவர் அதில் மூழ்கித் திளைப்பதற்கு முடிவேயில்லை. அதிலிருந்து வெளிவரும்போது புத்துணர்ச்சியுடன் வரமுடியும். அது ஒரு ஓய்வு.

அது மனோபாவத்தைப் பொறுத்தது. நீங்கள் துயரடையும்போது விரும்பத்தகாத ஏதோ ஒன்று நடந்து விட்டதாய் எண்ணிக் கொள்கிறீர்கள். கெடுதலாய் எதுவோ நடந்து விட்டமாதிரி அதிலிருந்து தப்பிக்க முயல்கிறீர்கள். நீங்கள் அதுபற்றி ஆழ்ந்து எண்ணுவதில்லை. அப்போது - யாருடனாவது விருந்துக்கோ, விடுதிக்கோ செல்ல விரும்புவீர்கள். அல்லது தொலைக்காட்சியைப் பார்ப்பதில், வானொலி கேட்பதில் உங்களை ஈடுபடுத்திக் கொள்வீர்கள். அல்லது, செய்தித்தாளில் மூழ்கிவிடுவீர்கள். ஏதோ ஒன்றின் மூலம் மறக்கிற முயற்சி. துயரம் தவறானது என்று நீங்கள் எண்ணிக் கொண்டால் அதுதான் தவறு. அதில் சரியற்றது என்று சொல்லும்படியாய் எதுவும் இல்லை. அது வாழ்வின் இன்னொரு மாறுபட்டநிலை.

மகிழ்ச்சி ஒரு துருவம் என்றால் துயரம் மற்றொரு துருவம். சுகம் ஒரு துருவம், துன்பம் ஒரு துருவம். வாழ்க்கையில் இரண்டும் இருக்கிறது. அவற்றால் வாழ்க்கை ஒரு சடங்காகிவிட்டது. சுகத்தை மட்டுமே கொண்ட வாழ்க்கை விரிவடைந்து கொண்டே போகும், ஆனால், ஆழம் இருக்காது. துயரம் நிறைந்த வாழ்வோ ஆழத்தைக் கொண்டிருக்கும், ஆனால் விரிவு பெற்றிருக்காது. மகிழ்ச்சியும், துயரமும் கலந்த வாழ்க்கையே பல பரிமாணங்களைக் கொண்டதாயிருக்கும். அது பல பரிமாணங்களிலும் ஒருமித்து செயல்படும். புத்தரின் உருவச் சிலையைக் கவனியுங்கள் அல்லது எப்பொழுதாவது என்னுடைய கண்களுக்குள் கவனியுங்கள் - சுகத்தையும் துயரத்தையும் நீங்கள் ஒருங்கே காணமுடியும். சுகம் தன்னுள் துயரத்தைக் கொண்டிருப்பதை நீங்கள் காண்பீர்கள் காரணம் துயரம் அந்த ஆழத்தை ஏற்படுத்தியது. புத்தரின் உருவச் சிலையில் கவனியுங்கள் பரமசுகத்துடன் துயரமும் இருக்கும். 'துயரம்' என்ற வார்த்தை உங்களுக்கு தவறான உட்பொருளைத் தருகிறது. ஏதோ ஒன்று தவறாகிவிட்டதாய் நீங்கள் விளக்கப்படுத்திக் கொள்கிறீர்கள்.

வாழ்க்கை அதன் முழுமையில் விரும்பத்தக்கதாகவே இருக்கிறது. வாழ்க்கையை அதன் ஒட்டுமொத்த தன்மையோடு நீங்கள் புரிந்து கொண்டுவிட்டால் உங்களால் அதைக் கொண்டாட முடியும். கொண் டாட்டத்தின் பொருள்: நிகழ்வது எத்தனை பொருத்தமற்றதாயிருந்தாலும்

நான் கொண்டாடுவேன். கொண்டாட்டம் குறிப்பிட்ட சிலவற்றில் நிபந்தனையற்றதாகவே இருக்கும். 'நான் மகிழ்ச்சியாயிருந்தால் கொண் டாடுவேன், மகிழ்ச்சியற்றிருந்தால் கொண்டாட மாட்டேன்' என்கிறமாதிரி. கொண்டாட்டம் நிபந்தனையற்றது. நான் வாழ்க்கையைக் கொண்டாடு கிறேன். அது மகிழ்ச்சியின்மையைக் கொண்டு வருகிறதா - நல்லது, அதையும் நான் கொண்டாடுவேன், போற்றிப் புகழ்வேன். அது மகிழ்ச்சி யைக் கொண்டுவருமெனில் - நல்லது அதையும் நான் கொண்டாடுவேன்.

'வாழ்க்கை எதை வேண்டுமானாலும் கொண்டுவரட்டும், கொண்டாடுவது எனது மனோபாவம்'

ஆனால், நான் வார்த்தைகளைப் பயன்படுத்துகிறபோதெல்லாம் அந்த வார்த்தைகள் உங்கள் மனதில் வெளிப்படையான பொருளன்றி வேறு பொருளையும் (connotation) தந்துவிடுகிறது. நான் 'கொண்டாட்டம்' என்று சொல்கிறபோது ஒருவர் மகிழ்ச்சியாய் இருக்க வேண்டும் என்பதாய் எண்ணிக் கொள்கிறீர்கள். ஒருவர் துயரத்தில் இருக்கும்போது எப்படிக் கொண்டாட முடியும்? கொண்டாடுவதற்கு மகிழ்ச்சியாயிருக்க வேண்டு மென்று நான் சொல்லவில்லை. கொண்டாட்டம் என்பது வாழ்க்கை நமக்கு வழங்கியது எதுவாயினும் அதற்கு நன்றியுணர்வை வெளிப்படுத்துவது ஆகும். கடவுள் உங்களுக்கு அளித்தது எதுவாயினும், கொண்டாட்டம் ஒரு நன்றிக்கடன். அது பயன் பெற்றதற்கான நன்றி உணர்வு. நான் உங்களுக்கு முன்பே சொன்னதுதான், மீண்டும் சொல்கிறேன்...

ஒரு சுஃபி மறைஞானி ரொம்பவும் ஏழையாய், பசித்தவராய் ஒதுக்கப்பட்டவராயிருந்தார். பயணக்களைப்பு வேறு. அவர் ஒரு கிராமத்தில் நுழைந்தபோது இரவாகிவிட்டது. அந்தக் கிராமத்தினர் அவரை ஏற்க மறுத்துவிட்டனர். அவர்கள் பழைய மரபுகளைக் கடைப்பிடிக்கிற மூகமதியர்கள், அவர்களிடம் நம்பிக்கை ஏற்படுத்துவது சிரமமான காரியம். அவர் தங்குவதற்குக்கூட இடமளிக்க அவர்கள் மறுத்துவிட்டார்கள். இரவின் கடுங்குளிரில் அவர் களைப்போடும் பசியோடும் இருந்தார். போதிய உடைகளில்லாமல் அவருடைய உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. அவர் ஊருக்கு வெளியே ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்தார். அவருடைய சீடர்கள் மனச்சோர்வுடன் கோபத்தில் இருந்தனர். அப்போது அவர் கடவுளை நோக்கிப் பிரார்த்திக்கத் தொடங்கினார், 'அற்புதமானவரே! எமக்குத் தேவையானதை எப்போதும் நீர் வழங்குகின்றீர்' என்று பிரார்த்தித்தார். ஒரு சீடன் சொன்னான், 'இது ரொம்ப அதிகம், இதைவிட பொய்யான வார்த்தைகள் இருக்க முடியாது. நாம் பசியோடு களைத்திருக்கிறோம். சரியான உடைகள் இல்லை. இரவின் கடுங்குளிரோ கூடிக் கொண்டிருக்கிறது. நம்மைச் சுற்றிலும் கொடிய விலங்குகள், ஊர்

நம்மைப் புறக்கணித்து விட்டது, நாம் தங்க இடமில்லாமல் இருக்கிறோம். நீர் எதுபற்றி கடவுளுக்கு நன்றி சொல்லிக் கொண்டிருக்கிறீர்? 'எமக்குத் தேவையானதை எப்போதும் வழங்கிக் கொண்டிருக்கிறீர்' என்று எந்த அர்த்தத்தில் நீர் சொன்னது?' என்று.

ஞானி சொன்னார், 'ஆம், நான் அதையே மீண்டும் சொல்கிறேன். எமக்குத் தேவைப்படுகிற எதையும் கடவுள் வழங்கிக் கொண்டிருக்கிறார். இன்று இரவு எனக்கு வறுமை தேவைப்பட்டது? இன்று இரவு எனக்கு புறக்கணிப்பு தேவைப்பட்டது. பசியும், ஆபத்தும் தேவைப்பட்டது. இல்லாவிட்டால் அவர் எதற்கு இவற்றை எனக்குத் தந்தது? அது ஒரு தேவையாய் செய்யப்படவேண்டியதாய் இருந்திருக்கிறது. அது தேவைப்பட்டது என்கிறபோது நான் நன்றியுணர்வோடு இருக்கவேண்டு மல்லவா. அவர் எத்தனை அருமையாய் எனது தேவைகளைக் கவனித்துக் கொண்டார். அவர் உண்மையிலேயே வியக்கத்தக்கவர் தாம்''. அந்தச் சூழ்நிலைக்குச் சற்றும் தொடர்பில்லாத மனோபாவம் இது. சூழ்நிலை ஏற்றதாயில்லை.

எத்தகைய நிலையில் இருந்தாலும் கொண்டாடுங்கள். நீங்கள் துயரத்தில் இருந்தால் துயரத்தில் இருப்பதற்காய் கொண்டாடுங்கள். முயன்று பாருங்கள். அந்த முயற்சி உங்களை ஆச்சரியத்தில் ஆழ்த்திவிடும். துயரத்தில் இருக்கிறீர்களா, ஓசைப்படாமல் உணர்வில் பூத்த அந்த மலரை எண்ணி ஆடத்தொடங்குங்கள். ஆகா, துயரம் எத்தனை நேர்த்தியானது! நீங்கள் ஆடிமகிழும்போது விரைவில் உங்கள் துயரம் மறையக் காண்பீர்கள். கொஞ்சம் கொஞ்சமாய் துயரத்தை நீங்கள் மறந்துபோவீர்கள், கொண்டாடுவீர்கள் அந்த ஆற்றலை நீங்கள் உருமாற்றம் செய்துவிட்டீர்கள். இதுதான் இரசவாதம் என்பது: இரும்பைப் பொன்னாக்குகிற அறிவியல். துயரம், கோபம், பொறாமை போன்ற கீழான உலோகங்களை தங்கம் போல் தரத்தில் உயர்ந்ததாய் மாற்ற முடியும். காரணம் அவையும் அதே அடிப்படைக் கூறுகளைக் கொண்டவை. இரும்புக்கும் பொன்னுக்கும் இடையில் எந்த வித்தியாசமுமில்லை காரணம் அவை ஒரேமாதிரி பகுதிப் பொருள்களாலானவை, ஒரே மாதிரி *மின் அணுக்கள் (electrons). இவ்வுலகின் மிகச் சிறந்த வைரமும், கரித்துண்டும் ஒரேமாதிரியானவை என்பதை நீங்கள் எப்போதாவது எண்ணிப்பார்த்ததுண்டா? அவற்றுள் எந்த வேறுபாடும் இல்லை. இலட்சணக்கணக்கான ஆண்டுகளாய் பூமியின் அழுத்தத்துக்குள்ளான கரிதான் வைரமாகிறது. அழுத்தத்தில் தான் கொஞ்சம் வித்தியாசம், ஆனால் அவை ஒரே அடிப்படைக் கூறுகளை (Elements)க் கொண்டவை.

*மின் அணு (Eletron) - அணுவோடு பிணைத்த மின் சுமை கொண்ட பகுதி.

கீழானவற்றையும் உயர்தரமானதாக்கிவிட முடியும். கீழானதில் எதுவும் குறைபாடாயில்லை. மறு ஒழுங்கு தேவைப்படும் அவ்வளவுதான். அதுவே இரசவாதத்தின் நோக்கம். நீங்கள் துயரத்தில் இருக்கும்போது கொண்டாடுங்கள் அவ்விதமாய் துயரத்திற்கு ஒரு புதிய ஒழுங்கமைப்பைக் கொடுக்கிறீர்கள். அதை உருமாற்றம் செய்யக் கூடிய ஏதோ ஒன்றை நீங்கள் கொண்டு வருகிறீர்கள். கோபம் வருகிறதா? நேர்த்தியாய் ஆடுங்கள். தொடக்கத்தில் கோபம் இருக்குந்தான். நீங்கள் ஆடத்தொடங்கியதும் அந்த ஆட்டம் சினமும் சீற்றமும் கொண்டதாய், உணர்ச்சி வயப்பட்டதாய் இருக்கும். கொஞ்சம் கொஞ்சமாய் அது மென்மையுற்று சீக்கிரமே நீங்கள் கோபத்தை மறந்துவிடுவீர்கள். கோபத்தின் ஆற்றல் நடனமாய் மாறிப்போனது.

ஆனால், நீங்கள் கோபவசப்பட்ட நிலையில் நடனத்தைப் பற்றியே நினைக்க மாட்டீர்கள். நீங்கள் துயரத்துக்குள்ளான நிலையில் பாடுவது பற்றிச் சிந்திக்கமாட்டீர்கள்.

'ஏன் உங்கள் துயரத்தையே ஒரு பாடலாய்
நீங்கள் மாற்றக் கூடாது?'

உங்கள் புல்லாங்குழலில் அதை இசைத்து பாருங்கள். தொடக்கத்தில் இசைக்குறிப்புகள் (notes) துயரம் தோய்ந்ததாயிருக்கும், ஆனால் ஒரு துயரமான இசைக்குறிப்பில் தவறாய் எதுவுமில்லை. சில சமயம் நண்பகலின் பிற்பகுதியில் எல்லாமே சூடேறி, சுற்றிலும் நெருப்பாய் தகிக்கிறபோது திடீரென்று ஒரு மாமரத்தில் இருந்து குயிலோசை எழுவதை நீங்கள் கேட்க முடியும். தொடக்கத்தில் அந்த சுரம் (note) துயரத்தைக் கொண்டிருக்கும். அந்தக் குயில் தன் நேசத்துக்குரிய இணையை, காதலனை அழைக்கும். எல்லாமே கனல் கக்கிக் கொண்டிருக்கும் வேளையில் அது காதல் ஆசையில் கரைந்துபோகும். ஒரு சோகமான இசைக்குறிப்புதான் ஆனால் அது இனிமையானதுங்கூட. கொஞ்சம் கொஞ்சமாய் அந்தச் சோகம் மகிழ்ச்சியாய் மாறும். இன்னொரு தோப்பில் இருந்து இணைப் பறவை எற்றபதிலைக் கொடுக்கத் தொடங்கியதும் வெம்மை தணிந்து குளுமை நிறைகிறது இதயம் வரைக்கும். ஆம், காதலனின் குரலைக் கேட்டதும் எல்லாமே மாறிப்போகிறது. அது - ஒரு இரசவாத மாற்றம்.

நீங்கள் துயருற்றிருக்கிறீர்களா. பாடுங்கள், ஆடுங்கள், வழிபாடு செய்யுங்கள். நீங்கள் எதை வேண்டுமானாலும் செய்யலாம், செய்ய வேண்டும். கீழான உலோகம் தங்கமாகிவிடும். ஒருமுறை அந்த வழியை நீங்கள் புரிந்து கொண்டுவிட்டால் வாழ்க்கை ஒருபோதும் பழைய மாதிரி இருக்காது. எல்லாப்பூட்டுகளையும் திறக்கக்கூடிய சாவி இருக்கிறது. எந்தக் கதவையும் உங்களால் திறக்க முடியும். அந்தச் சாவி - எல்லாவற்றையும் கொண்டாடுவது.

நான் மூன்று மறைஞானிகளைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். அவர்களுடைய பெயர்கள் யாருக்கும் தெரியாது. அவர்கள் 'மூன்று சிரிக்கும் துறவிகள்' என்றே அறியப்பட்டனர். காரணம் அவர்கள் சிரிப்பதைத் தவிர வேறெதுவும் செய்வதில்லை. அவர்கள் சிரித்தபடி ஓர் ஊரில் இருந்து இன்னோர் ஊருக்குச் செல்வார்கள். அவர்கள் சந்தையில் நின்றபடி வயிறு குலுங்கச் சிரிப்பார்கள். சந்தை மொத்தமும் அவர்களைச் சூழ்ந்து கொள்ளும். எல்லாரும் வந்துவிடுவார்கள், கடைகள் அடைக்கப் பட்டுவிடும். தாங்கள் எதற்காக வந்தது என்பதையே வாடிக்கையாளர்கள் மறந்து விடுவார்கள். வயிறு குலுங்கச் சிரிக்கும் அந்த மூன்று பேருமே அருமையானவர்கள் தாம். சிரிப்பு அவர்களிடம் இருந்து மற்றவர்களிடமும் தொற்றிக் கொள்ள எல்லாரும் சிரிக்கத் தொடங்கி விடுவார்கள். பிறகு - சந்தை முழுதும் சிரிப்பொலி பரவி நிற்கும். அவர்கள் சந்தையின் இயல்பையே மாற்றிவிடுவார்கள்.

'எங்களுக்கு ஏதாவது சொல்லுங்களேன்' என்று யாராவது கேட்பார். 'நாங்கள் சொல்வதற்கு ஒன்றுமில்லை. சிரிப்பின் மூலம் தன்மை (quality) யை மாற்றுகிறோம்' என்பார்கள் அவர்கள். சில கணங்களுக்கு முன்பாய் பணத்தைப் பற்றி மட்டுமே மக்கள் எண்ணிக் கொண்டிருந்த, பணத்துக்கு ஆசைப்படுகிற, பேராசை கொண்ட சூழல் அங்கிருந்தது. திடீரென இம்மூன்று பித்தர்களும் வந்தார்கள், சிரித்தார்கள், சந்தையின் இயல்பையே மாற்றிவிட்டார்கள். அங்கே வாடிக்கையாளர் என்று யாருமில்லை. தாங்கள் விற்க வந்ததை, வாங்க வந்ததை அவர்கள் மறந்து விட்டார்கள். இம்மூன்று பித்தர்களையும் சுற்றி நின்று அவர்கள் ஆடிப்பாடிக் கொண்டிருந்தனர்.

'சில கணங்களுக்கு ஒரு புதிய உலகம்'

அவர்கள் கிராமம் கிராமமாய் சீன தேசம் முழுவதும் சென்று மக்களைச் சிரிக்க வைத்துக் கொண்டிருந்தார்கள். துயரப்படுகிறவர்கள், கோபமுற்றவர்கள், பேராசைக்காரர்கள், பொறாமைக் காரர்கள் என்று எல்லாரும் அவர்களுடன் சிரிக்கத் தொடங்கிவிட்டார்கள். எது முக்கிய வழி என்பது பலருக்கும் தெரிந்தது - 'நீங்கள் மாற முடியும், உங்களை மாற்றிக் கொள்ள முடியும்' என்பது தான் அது.

பிறகு - அம்மூவரில் ஒருவர் செத்துப்போனார். அவர்கள் சென்றிருந்த கிராமத்து மக்கள் திரண்டனர். 'இந்த இடர்ப்பாடான நேரத்தில் அவர்கள் எப்படிச் சிரிக்கிறார்கள் என்று பார்ப்போம். செத்துப் போனது அவர்க ளுடைய நண்பர். அவர்கள் அழவே செய்வார்கள்' என்று சொல்லிக் கொண்டனர். ஆனால் அவர்கள் அங்கே சென்றபோது இரண்டு துறவிகளும்

ஆடி, சிரித்தபடி மரணத்தைக் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். கிராமத்தவர்கள் 'ஆனாலும் இது ரொம்ப அதிகம். பண்பற்ற செயல். ஒரு மனிதன் இறந்துகிடக்கும்போது சிரிப்பதும் ஆடுவதும் அவமரியாதை செய்வதாகும்' என்றனர். துறவிகள் சொன்னார்கள், 'என்ன நடந்ததென்று நீங்கள் அறிய மாட்டீர்கள். எங்களில் யார் முதலில் சாகப் போகிறவர் என்று நாங்கள் மூவருமே எண்ணிக் கொண்டிருப்போம். இந்த மனிதர் ஜெயித்துவிட்டார், நாங்கள் தோற்றுப்போனோம். வாழ்க்கை நெடுகிலும் அவரோடு சிரித்துக் கொண்டிருந்துவிட்டு, இப்போது அவரை வேறு எப்படி வழியனுப்புவது? நாங்கள் சிரித்து, மகிழ்ந்து கொண்டாடுகிறோம். தம்முடைய வாழ்க்கை முழுதிலும் சிரித்துக் கொண்டிருந்த ஒருவருக்கு இப்படித்தான் இறுதி விடையளிக்க முடியும். நாங்கள் சிரிக்காவிட்டால், 'ஏ முட்டாள்களே! நீங்கள் திரும்பவும் பொறியில் அகப்பட்டுக் கொண் டீர்களா?' என்று நினைத்தபடி அவர்தான் எங்களை நோக்கிச் சிரிப்பார்.

'சிரிப்பு நிலைக்கிறபோது வாழ்க்கை நிலை பேறுடையதாகிறது கொண்டாட்டம் தொடர்கிறது'

நடிகர்கள் மாறுகிறார்கள் ஆனால் நாடகம் தொடரவே செய்கிறது. அலைகள் மாறினாலும் கடல் அப்படியே தொடர்கிறது. நீங்கள் சிரிக்கிறீர்கள், நீங்கள் மாறுகிறீர்கள், வேறு யாரோ சிரிக்கிறார்கள், சிரிப்பு தொடர்கிறது. நீங்கள் கொண்டாடுகிறீர்கள், வேறுயாரோ கொண்டாடுகி றார்கள் கொண்டாட்டம் தொடர்கிறது. பிரபஞ்ச இருப்பு (existence) தொடர்கிறது, அது ஒரு கொள்கலன். அதில் இடைவெளி என்பது கணநேரமும் இல்லை. ஆனால், அந்தக் கிராமத்து மக்களால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை, எனவே, அன்று அவர்களால் சிரிக்க முடியாமல் போயிற்று.

பிறகு, உடலை தகனம் செய்ய வேண்டியிருந்தது. கிராமத்துக்காரர்கள் சொன்னார்கள். 'சாத்திரச்சடங்குப்படி நாம் அவரைக் குளிப்பாட்டுவோம்' என்று. ஆனால், அந்த நண்பர்களிருவரும் 'வேண்டாம், எந்தச் சடங்கும் வேண்டாம் என்னைக் குளிப்பாட்டவோ, என்னுடைய உடைகளை மாற்றவோ செய்யாதீர்கள், இருக்கிறபடிக்கே தீயிலிடுங்கள் என்று எங்கள் நண்பர் தெரிவித்திருக்கிறார்? என்று சொல்லிவிட்டனர்.

அப்போது மகத்தான ஒன்று நடந்தேறியது. சிதையில் தம்முடைய உடல் வைக்கப்பட்டபோது அந்தக் கிழவர் தமது கடைசித் தந்திரத்தைக் கையாண்டுவிட்டார். அவர் தாம் அணிந்திருந்த உடைகளுக்குள்ளாகப் பட்டாசுகளை மறைத்து வைத்திருந்தார். திடீரென்று தீபாவளி! ஒட்டுமொத்த கிராமமும் 'ஹோ'வென்று சிரித்தது. நண்பர்கள் இருவரும் நடனமாடினர்,

கிராமம் முழுவதும் அவர்களுடன் சேர்ந்து ஆடியது. அது மரணமல்ல, புதிய வாழ்க்கை.

'மரணம் என்பது மரணமல்ல, ஒவ்வொரு மரணத்திலும் ஒரு புதிய வாசல் திறக்கிறது!'

அது ஒரு தொடக்கம். வாழ்விற்கு முடிவேயில்லை. ஒரு புதிய தொடக்கம், மறுமலர்ச்சி எப்போதுமே இருக்கிறது.

உங்களுடைய துயரத்தைக் கொண்டாட்டமாய் நீங்கள் மாற்ற முடிந்தால் உங்கள் மரணத்தையும் ஒரு புதிய வாழ்க்கையாய் நீங்கள் மாற்ற முடியும். இன்னும் அவகாசம் இருக்கும்போதே அந்தக் கலையைக் கற்றுக் கொண்டு விடுங்கள். கீழான உலோகங்களை உயர்தர உலோகமாக்கும் இரசவாத இரகசியத்தை நீங்கள் அறிந்து கொள்ளும் முன்பாய் மரணத்தை வர விடாதீர்கள். உங்களால் துயரத்தை மாற்ற முடியும் என்கிறபோது மரணத்தையும் மாற்றமுடியும். எந்தவொரு நிபந்தனையு மின்றி உங்களால் கொண்டாட முடியும் என்றால் மரணம் வரும்போது சிரிக்கவும் முடியும், மகிழ்ச்சியோடு அதைக் கொண்டாடவும் முடியுமே. உங்கள் கொண்டாட்டம் தொடரும்போது மரணத்தால் உங்களை அழிக்க முடியாது. உண்மையில் மரணத்தை நீங்கள் அழித்துப் போடுவீர்கள். தொடங்குங்கள், முயன்று பாருங்கள். இழப்பதற்கு எதுவுமில்லை. எதையுமே இழக்க மாட்டோம் என்றால்கூட யாரும் அதைச் சோதிக்க முற்படுவதில்லை, அத்தனை முட்டாள்தனம் இருக்கிறது மனிதர்களிடம். இழப்பதற்கு என்ன இருக்கிறது?

நான் சொல்வேன், நீங்கள் துயரத்தில் இருந்தால் ஆடிப்பாடுங்கள் என்று. நீங்கள் எதை இழக்கப்போகிறீர்கள்? பெரும்பாலும் துயரத்தையன்றி வேறெதையும் இழக்கப்போவதில்லை. ஆனால், அது சாத்தியமில்லை என்றே நீங்கள் நினைக்கிறீர்கள். சாத்தியமில்லை என்கிற எண்ணமே அதை நீங்கள் சோதித்துப் பார்க்க விடாமல் செய்கிறது. உலகிலேயே அதுதான் மிகவும் எளிதான காரியம் என்று நான் சொல்வேன், காரணம், ஆற்றல் நடுநிலையானது. அதே ஆற்றல்தான் துயரமாய் உருவெடுக்கிறது. அதே ஆற்றல்தான் கோபமாய் மாறுகிறது அதே ஆற்றல்தான் பாலுணர்வாய் (sexuality) பரிணமிக்கிறது. அதே ஆற்றல் இரக்க உணர்வாயும், தியானமாயும் இடம் பெறுகிறது. ஆற்றல் ஒன்றுதான், உங்களுடைய ஆற்றல்கள் பலவகைப்பட்டவை அல்ல. இது துயரம், அது மகிழ்ச்சி என்று முத்திரை குத்த உங்கள் ஆற்றல் தனித்தனி ஆதாரங்களைப் பெற்றிருக்க வில்லை. ஆற்றல்கள் சிறு அறைகள் பலவற்றைக் கொண்ட அலமாரி அல்ல, அவை தனித்தனியானவை அல்ல. உங்களுக்குள் தண்ணீர் புகமுடியாதபடி

தடுக்கப்பட்ட அறை எதுவும் கிடையாது. இருப்பது ஒன்றுதான். இந்த ஓர் ஆற்றல்தான் துயரமாவதும், கோபமாவதும், எல்லாம் உங்களைப் பொறுத்தது.

ஆற்றல்களை எப்படி உருமாற்றுவது என்கிற இரகசியத்தை கலையை ஒருவர் கற்றிருக்க வேண்டும். நீங்கள் வழிநடத்தவும் அதே ஆற்றல் செயல்படத் தொடங்குகிறது. கோபத்தை சுகமாய் மாற்றவும், பேராசையை பரிவாக மாற்றவும், பொறாமையை அன்பாக மாற்றவும் முடியும் என்கிறபோது... நீங்கள் எதை இழக்கிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியாது, எதைத் தவறவிடுகிறீர்கள் என்பதும் உங்களுக்குத் தெரியாது. இப்பிரபஞ்சத்தில் இருப்பதற்கான முக்கியக் கருத்தை, முழுமையான நோக்கத்தை நீங்கள் தவறவிடுகிறீர்கள். ஒருமுறை சோதித்துப் பார்த்துவிடுங்கள்.

நான்காவது கேள்வி:

> **உங்களுடைய உரைகளைத் தொடர்ந்து இரண்டு ஆண்டுகளாய் கவனித்துக் கேட்டதில், உங்கள் ஒவ்வொரு கூற்றிலும் நீங்கள் முரண்படுவதைக் காண்கிறேன். உண்மையில் கவனித்தலையும், காத்திருத்தலையும் தவிர ஒருவர் செய்யக்கூடியது வேறொன்றும் இல்லையா?**

ரொம்ப சரி. நான் ஒவ்வொரு பேச்சிலும், உச்சரிக்கும் ஒவ்வொரு வார்த்தையிலும் முரண்படுகிறேன். என்னிடம் எந்தக் கோட்பாடும் இல்லை போதிப்பதற்கு. ஒரு பிரபஞ்ச இருப்பை' நான் சுட்டிக்காட்டுகிறேன் என்பதுதான் உண்மை. இங்கே எந்தவொரு கொள்கையும் உங்களுக்குப் போதிக்கப்படுவதில்லை. நான் ஒன்றும் தத்துவமேதையல்ல. பிரபஞ்ச இருப்பைப் போலவே நானும் முரண்பாடானவன் தான். என்னிடம் தேர்வு செய்ய எதுவும் இல்லை. பிரபஞ்ச இருப்பு முற்றிலும் மாறானது. அது இரவு பகல், கோடை குளிர், பேய்த்தன்மை தெய்விகம் இப்படி சகலத்தையும் அது உள்ளடக்கியிருக்கிறது. நான் இப்பிரபஞ்ச வாழ்விற்கு ஒரு சன்னலாயிருக்கி றேன். நான் முரண்பாடானாவன்தான். நான் சொல்வதையெல்லாம் நீங்கள் சிந்தித்துப்பார்த்தால் பெருமளவில் குழப்பத்திற்குள்ளாவீர்கள்.

'என் சொற்களைக் கவனிக்க வேண்டாம், நான் எத்தகையவன் என்பதைக் கவனியுங்கள்'

என்னுடைய பேச்சுகளில் பலவும் முரண்பாடாய் தெரியலாம். நீங்கள் அதில் முரண்பாட்டைக் காணவில்லையென்றால் அதற்குக் காரணம் என்னை நீங்கள் நேசிப்பதாயிருக்கும். என் வார்த்தைகள் முரண்பா

டானவை, ஆனால் நான் முரண்பாடானவன் அல்லன். இரண்டுமே என்னுள் இருக்கின்றன, ஆனால், என்னுள் இணக்கமற்ற எண்ணமோ உணர்வோ (disharmony) கிடையாது அதைத்தான் நீங்கள் கண்டு கொள்ள வேண்டும், அதில்தான் நீங்கள் கவனம் வைக்க வேண்டும். ஆழ்ந்த இணக்கத்தன்மை என்னுள் இருக்கிறது, கருத்து வேற்றுமை கிடையாது. எனக்குள் கருத்து வேற்றுமை இருந்திருந்தால் நான் எப்போதோ முழுப்பைத்தியமாகி விட்டிருப்பேன். ஒருவர் எப்படி முரண்பாடுகள் பலவற்றைச் சுமந்து கொண்டுவாழ முடியும், மூச்சுவிட முடியும்?

அவை எனக்குள் எந்தக் கருத்து வேறுபாட்டையும் உண்டு பண்ணவில்லை. எல்லாமே இசைவாய் இருக்கிறது.அவை இணக்கத்துக்கு உதவுகின்றன, அதை மேலும் வளப்படுத்துகின்றன என்பதே உண்மை. நான் ஒற்றை இசைக்குறிப்பு உள்ள மனிதனாயிருந்தால் அதே இசைக்குறிப்பை திரும்பத்திரும்பத் தந்து கொண்டிருப்பேன். முரண்பாடில்லாதவனா யிருப்பேன். நீங்கள் ஒத்து போகிற நபரைத் தேடிக் கொண்டிருந்தால் ஜே.கிருஷ்ணமூர்த்தியிடம் போங்கள். அவர் முற்றிலும் ஒத்துப் போகிறவர். நாற்பது ஆண்டுகளில் அவர் ஒரே ஒருமுறை கூட முரண்பட்டதில்லை. ஆனால், வாழ்க்கை தனது வளங்களை வெகுவாய் இழந்துவிட்டது ஏன் என்பதை நான் காண்கிறேன். அவர் தர்க்கச் சார்புடையவர் (logical) நான் அதற்குப் பொருந்தாதவன், புறம்பானவன்.

அவர் நந்தவனம் மாதிரி: எல்லாம் ஒரே சீராய், ஊன்றப்பட்டதாய், தர்க்கச் சார்புடையதாய், அறிவுக்கு ஏற்புடையதாய் இருக்கிறது. நான் இயற்கையான காடாயிருக்கிறேன்; எதுவும் ஊன்றப்படவில்லை. நீங்கள் தர்க்கத்தைத் தேடுகிறவராயிருந்தால் என்னைக் காட்டிலும் கிருஷ்ண மூர்த்தியே தேர்வு செய்யத்தக்கவர். உங்களுக்குப் பண்படுத்தப்படாத நிலம் வேண்டுமென்றால் இயற்கைத் தன்மை வேண்டுமென்றால் என்னிடம் வாருங்கள், இசைவாய் பொருந்திக் கொள்ள முடியும்.

'வாழ்வு மறைத்து வைத்திருக்கும் சகலத்தையும் நான் வெளிப் படையாக்குவேன்'

நான் வார்த்தைகளைத் தேர்வு செய்வதில்லை, எதை போதிப்பதென்று முடிவு செய்வதில்லை. என்னிடம் தேர்வாற்றல் கிடையாது. அந்தக் கணத்தில் என்ன தோன்றுகிறதோ அதைத்தான் நான் சொல்கிறேன். அடுத்த வார்த்தை என்னவாயிருக்குமென்று எனக்குத் தெரியாது. எதைச் சொன்னாலும் உறுதியாய்ச் சொல்வேன். என்னிடம் முன்னுருவாக்க (pre-formulated) அமைப்பு இல்லை. நான் வாழ்க்கையைப் போலவே முன்னுக்குப்பின் முரணானவன். முரண் என்கிற போது எந்தவொரு

கொள்கையையும் குறிப்பாய் பற்றிக் கொண்டிருக்கும் நிலையிருக்காது. நான் ஒரே சீரில் இருந்தால் என்னை நீங்கள் பற்றிக் கொண்டுவிடுவீர்கள்.

கிருஷ்ண மூர்த்தியைப் பின்பற்றுகிறவர்கள் இருக்கிறார்கள். அவருடைய வார்த்தையை அவர்கள் கொள்கையாய் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். முப்பத்து நான்கு வருடங்களாய் அவர் சொல்வதைக் கவனமுடன் கேட்டுக் கொண்டிருக்கும் அறிவாளிகளை மிகப்பெரிய அறிவாளிகளை நான் பார்க்கிறேன். அவர்கள் என்னிடமிருந்து 'ஒன்றும் நிகழவில்லை. நாங்கள் கிருஷ்ண மூர்த்தி சொல்வதைக் கேட்டோம், அவர் சொல்வது எதுவாயினும் அதில் உண்மை இருக்கும். சரி நுட்பத்தன்மை இருக்கும், ஆனால் எதுவும் நிகழவில்லை. அறிவு ரீதியாய் அவரைப் புரிந்து கொள்கிறோம், ஆனால் எதுவும் நிகழ்ந்தபாடில்லை' என்கிறார்கள். நான் அவர்களிடம் சொல்கிறேன் 'நாற்பது ஆண்டுகளாய் அவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தோம், அறிவு சார்ந்த விதத்தில் எதையும் சரியாகச் சொல்கிறார் என்று தெரிகிறது ஆனால் எதுவும் நிகழவில்லை என்கிறீர்கள். அப்படியாயின் அந்த அறிவுத்திறனை விட்டுவிட்டு என்னிடம் வாருங்கள். பகுத்தறிவுக்குப் புறம்பானவனுடன் (irrational) இருங்கள். அறிவைப் பயன்படுத்துவதன் மூலம் எதுவும் நிகழவில்லையென்றால் அறிவுக்குப் புறம்பானதன் மூலம் அது நிகழக்கூடும்' என்று. உடனே அவர்கள் சொன்னார்கள் 'ஆனால் நீங்கள் முரண்பாடானவர். ஒரு நேரம் ஒன்றைச் சொல்கிறீர்கள் இன்னொரு நேரம் இன்னொன்றைச் சொல்கிறீர்கள், என்ன செய்வதன்றே எங்களுக்குத் தெரியவில்லை?

உண்மையில் நீங்கள் ஏதாவது செய்யவேண்டுமென்று நான் விரும்பவில்லை, இருந்தபடி இருங்கள். உங்களை அறிவாளிகளாக்க நான் விரும்பவில்லை. அறிவாளிகள் நிறைய பேர் இருக்கிறார்கள், உலகம் அவர்களால் நிரம்பி வழிகிறது. அவர்கள் துயர்மிக்க வாழ்க்கையை வாழ்கிறார்கள். அவர்கள் வாழும்போதே தற்கொலை செய்து கொள்கிறார்கள். அவர்களுடைய வாழ்க்கை தற்கொலைக் கொப்பானது, அர்த்தமற்றது. அர்த்தம் அறிவுக்குப் புறம்பானது. வாழ்வின் கவித்துவமே முரண்படுவதுதான். அதில் செய்யக்கூடியது எதுவுமில்லை. அதுவே வாழ்வின் இயல்பாயும், பிரபஞ்சத்தின் செயல் முறையாயும் இருக்கிறது.

சற்றும் யோசியாமல் ஓர் அணுகுமுறையைப் பின்பற்றும்படி நான் உங்களை வற்புறுத்தமாட்டேன். அதனால்தான் கிருஷ்ணமூர்த்தியைப் பற்றி என்னால் பேசமுடிகிறது. அவர் அவரும் சரியானவர்தான் ஆனால் ஒரேமாதிரி அணுகுமுறையைக் கொண்டவர். நான் உங்களிடம் குருட்ஜீவ் பற்றிச் சொல்லியிருக்கிறேன். அவரும் சரியானவர்தான். ஆனால் அவர்கள் இருவரும் தங்களுக்குள் முரண்படுகிறார்கள். குருட்ஜீவ் செயல்முறையில்,

அணியில் (group), கல்விக்கூடத்தில், வேலை முறைகளில், பயிற்சியில், ஒழுகுமுறையில் நம்பிக்கை வைப்பவர். கிருஷ்ணமூர்த்தி செயல் முறையில், அணியில், தியானத்தில், குருவில், சீடர் முறையில் நம்பிக்கை வைக்கவில்லை. இருவருமே சரியானவர்கள் ஆனால் பகுதியளவில் சரியானவர்கள். இருவரும் சேர்ந்தால் முழுமைகிட்டும்.

விரிந்து பரந்தது வாழ்க்கை, கிருஷ்ணமூர்த்தியோ குருட்ஜீவோ அதைச் சரிசெய்துவிட முடியாது. யாரும் பலவீனப்படுத்தவோ, பயன் படுத்தித்தீர்க்கவோ முடியாத அளவிற்கு மிகப்பெரியது வாழ்க்கை அதில் சகலவிதமான நோக்கு முறைகளும் (standpoints), எதிரிடையான நோக்குமுறைகளும் கூட இருக்கும், அவையும் உண்மையானவைதாம். செயல்முறைகள் மூலமும், குருமார்கள் மூலமும் பலனடைந்தவர்கள் உண்டு. செயல்முறைகளோ குருமார்களோ இல்லாமல் பலனடைந்த வர்களும் உண்டு.

குருமார்களாலும், செயல்முறைகளாலும் இடையூறுக்குள்ளானவர்கள் இருக்கிறார்கள். குருவோ, தியானமோ, செயல்முறையோ அவசியமில்லை என்ற போதனையால் இடையூறுக்குள்ளானவர்களும் இருக்கிறார்கள். மக்களில் பலவகை, அதுவும் நல்லதுதான் ஆக எந்தவொரு கோட்பாடும் உண்மையாகிவிடாது. சிலருக்கு உண்மையாய் இருப்பது மற்றவர்களுக்கு உண்மையற்றதாய் தெரியும். அதனால்தான் எண்ணற்ற கோட்பாடுகள், கொள்கைகள், போதனைகள் இவ்வுலகில் புத்தர் இருக்கிறார், இயேசு இருக்கிறார், முகமது இருக்கிறார். அவர்கள் முற்றிலும் தனித்தன்மை கொண்டவர்கள், நேர்மையும் சீர்மையும் நிரம்பப் பெற்றவர்கள்.

நான் முழுக்க முழுக்க புதியதொரு சோதனையை முயன்று பார்க்கிறேன். உங்கள் அனைவரையும் ஒன்று சேர்ப்பது. அது ஓர் ஒழுங்கு முறைக்கு உங்களைப் படியவைப்பதாயிருக்கும். நீங்கள் ஆண்டுக்கணக்கில் என்னுடைய வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்தால் முன்பே அந்தப் பயிற்சியைப் பெற்ற மாதிரிதான். அதுவே ஒரு தியானந்தான். நான் ஒரு நோக்கு முறையை உங்களுக்கு வழங்குகிறேன். பதஞ்சலி பற்றிப் பேசுவேன். அவ்விதமாய் ஒரு நோக்கு முறையைத் தந்து உங்களுக்குள் கட்டமைப்பை உருவாக்குவேன். அடுத்த நாளே திலோபா பற்றிப் பேசத்தொடங்கி அந்தக் கட்டமைப்பை நான் உடைத்தெறிவேன். நீங்கள் பற்றிக்கொள்ளத் தொடங்குவதால் அது உங்களுக்கு வேதனையளிப்பதாய் தெரியும். ஓர் அமைப்பை ஏற்படுத்திக் கொண்டதும் அதைப் பற்றிக் கொள்ளத் தொடங்குகிறீர்கள். நீங்கள் ஒரு கோட்பாட்டைப் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதைக் கண்டுபிடித்த கணத்திலேயே அதை உடைத்தெறிவதற்கு எதிரிடையான ஒன்றை நான் கொண்டு வருகிறேன்.

நீங்கள் ஒரு வீட்டைத் திரும்பத் திரும்பக் கட்டினாலும் நான் அதை இல்லாமல் செய்து விடுவேன். ஓர் ஒழுங்கு ஏற்பட்டிருப்பதாய் பலமுறை நீங்கள் உணர்ந்திருப்பீர்கள், அதை நான் மீண்டும் ஒழுங்கற்றதாக்கி விடுகிறேன். இதன் கருத்து என்ன? ஒருநாள் நீங்கள் அதை அறிந்து கொள்வீர்கள் என்பதுதான் கருத்து. நான் சொல்வதை நீங்கள் கேட்பீர்கள், ஆனால், ஓர் ஒழுங்கை ஏற்படுத்திக் கொள்ள மாட்டீர்கள், ஓர் அமைப்பை உருவாக்கிக் கொள்ளப் போவதில்லை. அடுத்தநாளே நான் அழித்து விடுகிறேன் என்கிறபோது அது முக்கியத்துவம் பெறப்போகிறது? வார்த்தைகளை, கொள்கைகளை, கோட்பாடுகளை எவ்விதத்திலும் பற்றாமல் வெறுமனே கேட்டுக் கொண்டிருந்தால் போதும். உங்களுக்குள் எந்தவோர் அமைப்பையும் உருவாக்கிக் கொள்ளாமல் உங்களால் என்னைக் கவனிக்க முடிகிற நாளில், அங்கே வெற்றிடந்தான் இருக்கிற தென்பதை நான் கண்டு கொள்கிறபோது அதை நிறைவேற்றியிருப்பேன்.

ஆண்டுகள் பலவாய் நீங்கள் என்னிடம் கேட்டுக் கொண்டிருந்த தெல்லாம் இறுதியில் அங்கே தான்கொண்டு சேர்க்கும். நீங்கள் ஓர் ஒழுங்கை, ஒழுங்குமுறையைக் கொண்டுவரத் தொடங்குவீர்கள் அது தயாராகிவிடும்போது நான் வந்து அதைத் தரைமட்டமாக்கி விடுவேன்.

மார்பா என்பவரைப் பற்றிய ஒரு திபெத்திய கதை. அவருடைய குரு ஒரு வீட்டை யாருடைய உதவியுமின்றி தனியாய் கட்டும்படிச் சொன்னார். கிராமத்தில் இருந்து கற்களையும், செங்கற்களையும் மடத்துக்குக் கொண்டுவருவது சிரமமாயிருந்தது. அது நாலைந்து மைல் தூரத்தில் இருந்தது. மார்பா ஒவ்வொன்றையும் தனியாளாகவே எடுத்துச் சென்றார். திபேத்திலேயே பெரிய மூன்றடுக்கு மாளிகையாய் அது அமையவிருந்தது. அவர் இரவும் பகலும் கடினமாய் உழைத்தார். எல்லாவற்றையும் அவர் தனியாகவே செய்ய வேண்டியிருந்தது. ஆண்டுகள் கடந்தன, வீடுதயாரா யிற்று, மார்பா மகிழ்ச்சியுடன் திரும்பிவந்தார். தமது குருவின் பாதங்களைப் பணிந்து, 'வீடு தயாராகிவிட்டது' என்றார். குரு சொன்னார் 'உடனே அந்த வீட்டுக்கு தீ வைத்துவிடு' என்று. மார்பா போய் அந்த வீட்டைத் தீக்கிரையாக்கினார். இரவு முழுதும், மறுநாள் முழுதும் அந்த வீடு எரிந்து கொண்டிருந்தது. மாலையில் எதுவும் எஞ்சியிருக்கவில்லை. மார்பா தன் குருவிடம் சென்று 'தாங்கள் உத்தரவிட்டபடி அந்த வீடு எரிக்கப்பட்டது' என்று பணிவுடன் தெரிவித்தார். குரு அவரை நோக்கி 'நாளைக் காலையில் மீண்டும் வேலையைத் தொடங்கு. ஒரு புதிய வீட்டைக் கட்டியாக வேண்டும்' என்றார். இப்படி ஏழுமுறை நடந்தது. செய்ததையே திரும்பத் திரும்பச் செய்து மார்பா அனுபவம் பெற்றுவிட்டார். அவர் வீடு கட்டுவதில் மிகவும் ஆற்றலுடையவராய், திறமையுடையவராயிருந்தார். காலப்

போக்கில் மிகவிரைவாய் குறைந்தகால அவகாசத்தில் அவரால் வீடுகட்ட முடிந்தது. ஒவ்வொருமுறை வீடு தயாரானதும் குரு சொல்வார் 'எரித்துவிடு' என்று. வீடு ஏழாவதுமுறை எரிக்கப்பட்டதும் குரு சொன்னார் 'இனி அவசியப்படாது' என்று.

இது ஒரு சிறிய நீதிக்கதை. அது நடவாதிருக்கலாம், ஆனால் இதைத்தான் நான் உங்களுக்குச் செய்து கொண்டிருக்கிறேன். என் வார்த்தைகளைக் காது கொடுத்துக் கேட்கத் தொடங்கியதுமே நீங்கள் ஒரு வீட்டை உங்களுக்குள் கட்டத் தொடங்கிவிடுகிறீர்கள்: கோட்பாடுகளின் அமைப்பாய், வாழ்விற்கான சித்தாந்தமாய், பின்பற்றிக்கூடிய கொள்கை யாய், ஒரு வரைபடமாய் அது இருக்கும். வீடு தயாராகிவிட்டதைக் கண்டதுமே நான் அதை இடிக்கத் தொடங்குகிறேன். நான் இதனை ஏழுமுறை தேவைப்பட்டால் எழுபது முறையும் செய்வேன். நீங்கள் கவனித்திருந்து, வார்த்தைகளைக் கொண்டு முடிவு செய்யாதிருக்கும் கணத்துக்குக் காத்திருக்கிறேன் என்னைக் கவனியுங்கள், நான் சொல்வதையல்ல.

பண்டத்தைப் பாருங்கள் பாண்டத்தை அல்ல.

வார்த்தைகளற்ற செய்திக்கு முக்கியத்துவம் கொடுங்கள், வார்த்தை களுக்கல்ல. கொஞ்சம் கொஞ்சமாய் இது நிகழத்தான் போகிறது. இடிக்கப் படும் என்பது நன்றாய் தெரிந்த பிறகு எத்தனை காலத்துக்கு வீடு கட்டும் வேலையை நீங்கள் மேற்கொள்வீர்கள்? என்னுடைய முரண்பாடுகளின் பொருள் அதுதான். கோட்பாடு எதுவும் தேவைப்படாது என்று சொல்கிற கிருஷ்ணமூர்த்திகூட ஒரு கோட்பாட்டை மக்களுக்குள் தோற்றுவிக்கவே செய்தார், காரணம் அவர் முரண்படாதவராயிருந்ததுதான். அவர் அவ்விதமாய் மக்களுக்குள் ஒரு கோட்பாட்டை ஆழமாய் வேரூன்றச் செய்தார். நான் பலவகையான மக்களைக் கண்டிருக்கிறேன் ஆனால், கிருஷ்ணமூர்த்தியைப் பின் பற்றுகிறவர்களைப் போல் கண்டதில்லை. அவர்கள் பற்றிக் கொண்டார்கள், அவர் சொன்னதை இறுகப் பற்றிக் கொண்டார்கள். காரணம் அவர் அந்த அளவிற்குக் கொள்கையிலும், செயல்முறையிலும் ஒரே சீராயிருந்தார். நாற்பதாண்டு காலம் அவர் சொன்னதையே திரும்பத்திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார். அவரைப் பின்பற்றியவர்கள் பல மாடிகள் கொண்ட வானளாவிய கட்டடங்களைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். நாற்பதாண்டுகளில் தொடர்ச்சியாய் அவர்களுடைய கட்டடங்கள் மேலே மேலே போய்க் கொண்டிருந்தன.

நீங்கள் அப்படிச் செய்ய நான் இடமளிக்க மாட்டேன். உங்களை வார்த்தைகளற்றவராய் வைத்திருக்கவே நான் விரும்புவேன். உங்களிடம் நான் உரையாற்றுவதன் முழுமையான நோக்கமும் அதுதான். நான்

பேசினாலும் உங்களுக்குள் எதையும் நீங்கள் உருவாக்கிக் கொண்டிருக்க வில்லை என்பதை ஒருநாள் தெளிவாய் புரிந்து கொள்வீர்கள். நான் சொல்வது எதுவாயினும் அதைநானே மறுதளிப்பேன், நீங்கள் பற்றிக் கொள்வதற்கில்லை. நீங்கள் பற்றிக் கொள்ளாமல் வெற்றாயிருந்தால் என்னை உங்களால் கவனிக்க முடியும், என் சொற்களை விட்டுவிட்டு என்னை நீங்கள் கவனிப்பீர்கள். என்னுடைய இருப்புணர்வை (*being*), பிரபஞ்ச இருப்பை (*existence*), இக்கணத்தில் நிகழ்வதைக் கவனிப்ப தென்பது முற்றிலும் வேறான ஒன்றாகும்.

நான் ஒரு சன்னலாயிருக்கிறேன். என் மூலம் வெளிப்படையான உலகை உலகத்துக்கப்பாற்பட்டதை நீங்கள் பார்க்க முடியும். சன்னலைப் பார்க்காதீர்கள், சன்னல் வழியே பாருங்கள். சன்னலின் சட்ட அமைப்பை (*frame*)ப் பார்க்காதீர்கள். என்னுடைய வார்த்தைகளெல்லாம் சட்ட அமைப்புகள்தாம், வார்த்தைகளினூடே பாருங்கள். வார்த்தைகளை, சட்ட அமைப்புகளை மறந்துவிடுங்கள்... அவற்றுக்கப்பால் இருக்கிறது ஆகாயம். நீங்கள் சட்டத்தைப் பற்றிக் கொண்டால் சிறகுகளை எப்படிப் பெறப்போகி றீர்கள்? அதனால்தான் நான் வார்த்தைகளைக் கவிழ்த்து விடுகிறேன். அப்போது தானே சட்டங்களைப்பற்ற மாட்டீர்கள். சிறகுகளைப் பெற்றிடுங்கள், என் வழியே, என்னில் இருந்து சென்றிடுங்கள். ஆனால், என்னை முற்றாய் மறந்து விடுங்கள். என் வழியே செல்லுங்கள், ஆனால், நீங்கள் திரும்பிப் பார்க்கவும் வேண்டாம். மிகப்பெரிய ஆகாயம் அது. நான் முரண்படுகிறபோது அதன் பிரும்மாண்டத்தில் சிறிதளவாயினும் உங்களை உணரச் செய்து விடுகிறேன். நான் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டு, ஒரே கோட்பாட்டை வற்புறுத்திக் கொண்டிருந்தால் அது உங்களுக்கு எளிதாய் தெரியும். நீங்களும் பெரிய அளவில் மகிழ்ந்திருப்பீர்கள், ஆனால், அந்த மகிழ்ச்சி முட்டாள்தனமானதாகும், காரணம் அப்போது நீங்கள் ஆகாயத்தில் சிறகடிக்க ஆயத்தமாயிருந்திருக்க மாட்டீர்கள்.

நீங்கள் வெறும் சட்ட அமைப்பை (*frame*)ப் பற்றிக் கொள்ள நான் இடமளிக்கமாட்டேன். அதை நான் அழித்துப் போடுவேன். இவ்விதமாய் உங்களை நான் இதுவரை அறிந்திராத ஒன்றை நோக்கித் தள்ளிச் செல்கிறேன். அறியப்பட்டதிலிருந்தே அனைத்து வார்த்தைகளும் வந்தன, அறியப்பட்டதிலிருந்தே அனைத்+துக் கோட்பாடுகளும் வந்தன. உண்மை அறியப்படாததாயிருக்கிறது. அதை வார்த்தைகளில் உரைக்க முடியாது. வார்த்தைகளில் சொல்லக்கூடிய எதுவும் மனப்பூர்வமானதாயிருக்காது.

○